## முன்னுரை

அஸ்ஸலாமு அலைக்கும்.

இஸ்லாம் கூறும் பொருளியல் எனும் தலைப்பில் ரமலான் மாதம்  தொடர் உரை நிகழ்த்தினேன். அந்த உரை சஹர் நேரத்தில் தனியார் தொலைக் காட்சியில் ஒளிபரப்பப்பட்டது.

அந்தத் தொடரை நூல் வடிவில் அளித்தால் தேடி எடுக்க எளிதாக இருக்கும் என்று பல சகோதரர்கள் அடிக்கடி ஆர்வமூட்டி வந்தனர்.

அவர்களின் கோரிக்கையை ஏற்று அந்த உரையை எழுத்து வடிவில் மாற்றி இஸ்லாத்தின் பார்வையில் பொருளாதாரம் என்ற தலைப்பில் தந்துள்ளேன்.

மேலும் அந்த உரையில் சொல்லாமல் விடுபட்ட பொருளாதாரம் தொடர்பான இன்னும் பல சட்டங்களையும் இதில் சேர்த்துள்ளேன்.

உரையில் சொன்ன விஷயங்களில் தேவையான திருத்தங்களையும் தேவைப்படும் இடங்களில் கூடுதல் விளக்கத்தையும் இதில் சேர்த்துள்ளேன்.

எல்லா ஆதாரங்களும் அரபு மூலத்துடன் இந்நூலில் வெளியிடப்பட்டுள்ளது.

அந்த உரையில் நான் குறிப்பிட்டதும் அதைவிட சற்று அதிகப்படுத்தி இந்நூலில் நான் சேர்த்திருப்பதும் இஸ்லாமியப் பொருளாதாரத்தில் சிறு பகுதி தான்.

ஜகாத்துடைய சட்டங்கள், வாரிசுரிமைச் சட்டங்கள், பொருளாதாரத்தைச் செலவிடுவது குறித்த சட்டங்கள் என இன்னும் பல விஷயங்களை இந்த நூலில் நான் குறிப்பிடவில்லை. அந்த தலைப்புகள் ஒவ்வொன்றும் தனி நூலாக எழுதும் அளவுக்கு விரிவானவை என்பதே இதற்குக் காரணம்.

அல்லாஹ் வாய்ப்பளித்தால் வாரிசுரிமைச் சட்டம், ஜகாத் சட்டம் ஆகியவற்றையும் தனிநூலாக வெளியிட எண்ணியுள்ளேன்.

இவற்றைத் தவிர்த்து விட்டு பார்க்கும் போது முஸ்லிம்கள் பொருளாதாரம் குறித்து கொண்டிருக்கும் அதிகமான சந்தேகங்களை நீக்கும் வகையில் இந்நூல் அமைந்துள்ளதாகக் கருதுகிறேன்.

இதில் காணும் குறைகளை எனக்குச் சுட்டிக் காட்டுமாறும், அடுத்த பதிப்புகளில் சேர்க்கப்பட வேண்டிய விஷயங்கள் ஏதும் உள்ளதாக உங்களுக்குத் தெரிந்தால் அதையும் என் கவனத்துக்கு கொண்டுவருமாறு கேட்டுக் கொள்கிறேன்.

அன்புடன்

பீ.ஜைனுல் ஆபிதீன்

## முரண்பட்ட இரு பார்வைகள்

பொருளாதாரத்தைக் குறித்து இரண்டு வகையான பார்வைகள் உலக மக்களிடம் உள்ளன.

சொத்துக்களைத் திரட்டுவதிலும், வசதி வாய்ப்புக்களைப் பெருக்கிக் கொள்வதிலும் ஒருவர் ஈடுபட்டால் அவர் ஆன்மிகத்தில் உயர்ந்த நிலையை அடைய முடியாது; கடவுளின் அன்பையும் அருளையும் பெற வேண்டுமென்றால் இவ்வுலகின் வசதி வாய்ப்புக்களைத் துறந்து விட வேண்டும்; இறைவனுக்காக வாழ வேண்டும். அதுதான் உயர்ந்த நிலையென்பது ஒரு பார்வை.

பொருளாதாரத்தைத் திரட்டுவதற்காக உழைக்காமல் பிச்சை எடுத்துப் பிழைப்பு நடத்தும் போலி ஆன்மிகவாதிகளின் பார்வை இவ்வாறு இருப்பது ஆச்சரியமானதல்ல. பொருள் திரட்டுவதில் ஈடுபடுவோர்கூட இந்தக் கருத்தில் இருக்கிறார்கள் என்பதுதான் ஆச்சரியமான உண்மை.

பொருளாதாரத்தைத் திரட்டுவதற்காக உழைக்காத ஆன்மிகவாதிகள் நம்மை விட உயர்ந்தவர்கள்; நாம் தாழ்ந்தவர்கள் என்று அதிகமான மக்கள் கருதிக் கொண்டு தம்மைத்தாமே தரம் தாழ்த்திக் கொள்கிறார்கள்.

நம்மால் கடைப்பிடிக்க முடியாவிட்டாலும் பொருளாதாரத்தை வேண்டாம் என்று உதறித் தள்ளியவர்கள் நம்மை விட உயர்ந்தவர்கள் என்று இவர்கள் நினைக்கின்றனர்.

இஸ்லாத்தின் பெயரைச் சொல்லி மக்களை ஏமாற்றும் சூஃபிகள் எனும் போலி ஆன்மிகவாதிகளும் இந்தக் கருத்தை முஸ்லிம்களிடம் விதைத்து மார்க்க அறிவு இல்லாத முஸ்லிம்களை நம்பச் செய்துள்ளனர். இதனால்தான் பொருளாதாரத்தை வெறுப்பதாகக் காட்டிக் கொள்ளும் நபர்களை மகான்கள் என்றும் ஞானிகள் என்றும் கருதி அவர்களை மதிக்கின்றனர்.

பொருளாதாரம் குறித்து ஒரு பார்வை இப்படி என்றால் இன்னொரு பார்வை இதை விட மோசமானதாக அமைந்துள்ளது.

வாழ்வு என்பது முழுக்க முழுக்கப் பொருளாதாரம்தான்; பொருளாதாரத்தை எவ்வளவு சேர்க்க முடியுமோ சேர்த்துக் கொள்ள வேண்டும். இதற்கு எந்த நெறிமுறைகளையும் பேணத் தேவை இல்லை. மானத்தை விற்றால்தான் பணம் கிடைக்கும் என்றால் அதையும் செய்யத் தயங்கக் கூடாது. பொருளாதாரம் திரட்டுவதற்கு நாம் தேர்ந்தெடுக்கும் வழிமுறையால் மற்றவர்களின் உரிமையும், நலனும் பாதிக்கப்பட்டால் அது பற்றி நாம் கவலைப்படத் தேவை இல்லை என்று இவர்கள் நினைக்கின்றனர்.

பொருளாதாரத்தைத் திரட்டுவதில் மட்டுமின்றி அதை அனுபவிப்பதிலும் எந்த நெறிமுறைகளையும் நாம் பார்க்க வேண்டியதில்லை. பொருளாதாரத்தைப் பயன்படுத்தி அனுபவிக்க முடிந்த அனைத்தையும் அனுபவித்து விட வேண்டும்; மற்றவர்களின் நலன் இதனால் பாதிக்கப்படுவது பற்றி நாம் கவலைப்படத் தேவை இல்லை என்றும் இவர்கள் நினைக்கின்றனர்.

முறைகேடாக பொருளாதாரத்தைச் செலவிடுவதால் தமது ஆரோக்கியமோ, நலனோ பாதிக்கப்படுவது பற்றியும் இவர்களுக்குக் கவலை இல்லை.

இந்தக் கருத்துடையவர்கள்தான் அதிக எண்ணிக்கையில் உள்ளனர். பொருளாதாரம் இல்லாதவர்களும்கூட மனதளவில் இந்த நிலைபாட்டில்தான் உள்ளனர்.

ஆனால் இஸ்லாம் பொருளாதாரத்தினால் விளையும் நன்மைகளையும் சொல்கிறது. அதனால் ஏற்படும் தீமைகளையும் சொல்கிறது. இரண்டையும் இணைத்து எவ்வாறு நடந்து கொள்வது சிறந்தது என்ற வழிகாட்டுதலையும் தெளிவாகச் சொல்கிறது.

## பொருளாதாரத்தால் விளையும் நன்மைகள்

இஸ்லாத்தின் ஏராளமான கடமைகள் பொருளாதாரம் இருந்தால்தான் நிறைவேற்ற முடியும் என்ற வகையில் அமைக்கப்பட்டுள்ளன.

ஜகாத் இஸ்லாத்தின் கடமைகளில் ஒன்றாகும். பொருளாதாரம் இருந்தால்தான் இந்தக் கடமையைச் செய்ய முடியும். செல்வத்தைச் தேடவோ, சேர்த்து வைக்கவோ கூடாது என்றால் இந்தக் கடமையை நிறைவேற்ற முடியாது.

இஸ்லாத்தின் மற்றொரு கடமை ஹஜ். இந்தக் கடமையைச் செய்ய மக்காவில் உள்ளவர்களுக்குப் பெரிய அளவில் பொருளாதாரம் தேவைப்படாது என்றாலும் மற்றவர்கள் ஹஜ் செய்வதாக இருந்தால் பொருள் வசதி அவசியம்.

முஸ்லிம்கள் மீது இஸ்லாம் சுமத்தியுள்ள இன்னும் பல பொறுப்புகளை நிறைவேற்ற பொருளாதாரம் அவசியமாக உள்ளது.

பெற்றோரையும், உறவினர்களையும் கவனிப்பதை இஸ்லாம் கடமையாக்கியிருக்கிறது. இந்தக் கடமையைப் பணம் இல்லாமல் செய்ய முடியாது.

திருமணம் செய்யும்போது மஹர் கொடுக்க வேண்டும் என்று இஸ்லாம் கூறுகிறது. திருமணத்துக்குப்பின் மனைவிக்கு உணவும், உடையும் அளிக்க வேண்டும் எனவும் இஸ்லாம் கட்டளையிடுகிறது. இந்தக் கடமையைச் செய்வதற்கும் பணம் தேவை.

குழந்தை பிறந்தால் அதற்காக அகீகா கொடுக்க வேண்டும். குழந்தைகளை நல்ல முறையில் வளர்த்து ஆளாக்க வேண்டும். இந்தக் கடமையைச் செய்யவும் பொருளாதாரம் தேவை.

வசதி படைத்தவர்கள் ஹஜ் பெருநாளின்போது குர்பானி கொடுக்க வேண்டும். நோன்புப் பெருநாளின்போது ஃபித்ரா எனும் தர்மத்தை அளிக்க வேண்டும். அதற்கும் பொருளாதாரம் அவசியமாக உள்ளது.

நோன்பு காலத்தில் நோன்பை முறித்து விட்டால் அதற்குப் பரிகாரமாக ஒரு அடிமையை விடுதலை செய்ய வேண்டும்; அல்லது அறுபது ஏழைகளுக்கு உணவளிக்க வேண்டும். இதைச் செய்வதற்கும் பொருளாதாரம் தேவை.

ஒரு காரியத்தைச் செய்வதாக அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்துவிட்டு அதைச் செய்ய இயலாமல் போனால், அல்லது அல்லாஹ்வுக்கு நேர்ச்சை செய்துவிட்டு அதை நிறவேற்ற முடியாவிட்டால் அதற்குப் பரிகாரமாக ஒரு அடிமையை விடுதலை செய்ய வேண்டும். அல்லது பத்து ஏழைகளுக்கு உடை அல்லது உணவு அளிக்க வேண்டும். பொருளாதாரம் இல்லாமல் இதைச் செய்ய முடியாது.

மனைவியின் மீது வெறுப்படைந்து இனி நீ என் தாய் போன்று ஆகிவிட்டாய் என்று ஒருவர் கூறிவிட்டால் அதற்குப் பரிகாரமாக ஒரு அடிமையை விடுதலை செய்ய வேண்டும். அல்லது ஏழைகளுக்கு உணவளிக்க வேண்டும் என்று குர்ஆன் கூறுகிறது. பொருளாதாரம் இல்லாமல் இதைச் செய்ய முடியாது.

நோய் வந்தால் சிகிச்சை பெற வேண்டும்; பசித்தால் உண்ண வேண்டும்; ஆடை அணிந்து மானத்தை மறைக்க வேண்டும்; தூய்மையாக இருக்க வேண்டும் என்றெல்லாம் பல கட்டளைகள் இஸ்லாத்தில் உள்ளன. இவை யாவும் பொருளாதாரம் இல்லாமல் சாத்தியமாகாது.

இப்படி இன்னும் எண்ணற்ற காரியங்களை இஸ்லாம் வலியுறுத்துகிறது. அவை பொருளாதாரம் என்ற அடித்தளத்தின் மீது அமைக்கப்பட்டுள்ளதைக் காண்கிறோம்.

பொருளாதாரம் ஓர் அருட்கொடை என்பதை 2:198, 3:174, 3:180, 4:32, 4:37, 4:73, 9:28, 9:59, 9:74, 9:75, 9:76, 16:14, 17:12, 17:66, 24:22, 24:32, 24:33, 28:73, 30:23, 30:46, 35:12, 45:12, 62:10, 73:20 ஆகிய வசனங்களில் இருந்து அறிந்து கொள்ளலாம்.

வியாபாரம் செய்வதையும், பொருள் திரட்டுவதையும் திருக்குர்ஆன் பல இடங்களில் ஊக்குவிப்பதை நாம் காணலாம்.

தொழுகை முடிக்கப்பட்டதும் பூமியில் அலைந்து அல்லாஹ்வின் அருளைத் தேடுங்கள்! அல்லாஹ்வை அதிகம் நினையுங்கள்! நீங்கள் வெற்றி பெறுவீர்கள்.

திருக்குர்ஆன் 62 : 10

நீங்கள் அமைதி பெறவும், அவனது அருளைத் தேடவும், நீங்கள் நன்றி செலுத்தவும் இரவு, பகலை ஏற்படுத்தியிருப்பது அவனது அருளில் உள்ளது.

திருக்குர்ஆன் 28:73

கடலிலிருந்து பசுமையான இறைச்சியை நீங்கள் உண்பதற்காகவும், அணிந்து கொள்ளும் நகையை நீங்கள் அதிலிருந்து வெளிப்படுத்திடவும், அவனது அருளைத் தேடவும், நீங்கள் நன்றி செலுத்திடவும் கடலை உங்களுக்கு அவனே பயன்படச் செய்தான். கப்பல்கள் அதைக் கிழித்துச் செல்வதை நீர் பார்க்கிறீர்.

திருக்குர்ஆன் 16:14

பொருளாதாரத்தின் மூலம் இவ்வளவு நன்மைகளை அடைய முடியும் என்பதால் பொருளாதாரம் இறைவனின் மகத்தான அருட்கொடை என்பதை நாம் அறிந்து கொள்கிறோம்.

## வாரிசுகளுக்கு செல்வத்தை விட்டுச் செல்லுதல்

நம்முடைய தேவைகளுக்கு மட்டுமின்றி நமது வாரிசுகளுக்காக பொருள் திரட்டும் கடமையும் நமக்கு இருக்கின்றது.

3936 - حدثنا يحيى بن قزعة، حدثنا إبراهيم، عن الزهري، عن عامر بن سعد بن مالك، عن أبيه، قال: عادني النبي صلى الله عليه وسلم عام حجة الوداع من مرض أشفيت منه على الموت، فقلت: يا رسول الله، بلغ بي من الوجع ما ترى، وأنا ذو مال، ولا يرثني إلا ابنة لي واحدة، أفأتصدق [ص:69] بثلثي مالي؟ قال: «لا»، قال: فأتصدق بشطره؟ قال: «الثلث يا سعد، والثلث كثير، إنك أن تذر ذريتك أغنياء، خير من أن تذرهم عالة يتكففون الناس ولست بنافق نفقة تبتغي بها وجه الله، إلا آجرك الله بها حتى اللقمة تجعلها في في امرأتك» قلت: يا رسول الله، أخلف بعد أصحابي؟ قال: «إنك لن تخلف، فتعمل عملا تبتغي بها وجه الله إلا ازددت به درجة ورفعة، ولعلك تخلف حتى ينتفع بك أقوام، ويضر بك آخرون، اللهم أمض لأصحابي هجرتهم، ولا تردهم على أعقابهم، لكن البائس سعد ابن خولة». يرثي له رسول الله صلى الله عليه وسلم أن توفي بمكة

விடை பெறும் ஹஜ்ஜின்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நோயுற்றிருந்த என்னை நலம்விசாரிக்க வந்தார்கள். அந்த நோயினால் நான் இறப்பின்

விளிம்புக்கே சென்றுவிட்டிருந்தேன். (நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைக் கண்டதும்) அல்லாஹ்வின் தூதரே! நான் ஒரு செல்வந்தன்; எனக்கு ஒரேயொரு மகளைத் தவிர வேறு எவரும் இல்லை. இந்நிலையில் நீங்கள் பார்க்கின்ற வேதனை என்னை வந்தடைந்து விட்டது. ஆகவே, நான் என் செல்வத்தில் மூன்றில் இரண்டு பங்கைத் தர்மம் செய்து விடட்டுமா? என்று கேட்டேன். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், வேண்டாம் என்று சொன்னார்கள். அப்படியென்றால் அதில் பாதியைத் தர்மம் செய்து விடட்டுமா? என்று நான் கேட்டேன். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், மூன்றிலொரு பங்கு (போதும்.) சஅதே! மூன்றிலொரு பங்கே அதிகம்தான். நீங்கள் உங்கள் வாரிசுகளை மக்களிடம் கையேந்தும் ஏழைகளாக விட்டுச் செல்வதை விடத் தன்னிறைவுடையவர்களாக விட்டுச் செல்வதே சிறந்ததாகும் என்று கூறினார்கள்.

நூல்: புகாரி 3936, 1296, 2742, 2744,

4409, 5354, 5659, 5668, 6373, 6733

## பொருளாதாரத்திற்காக பிரார்த்தனை செய்தல்

இறைவனிடம் பொருளாதாரத்தை வேண்டுவதை இஸ்லாம் ஊக்குவிக்கிறது. இறைவனின் அன்பைப் பெறுவதற்கு பொருளாதாரம் தடையாக அமையும் என்று இஸ்லாம் கருதி இருந்தால் பொருளாதார வசதியை இறைவனிடம் வேண்டுமாறு வழிகாட்டி இருக்காது.

صحيح البخاري 1982 - حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ المُثَنَّى، قَالَ: حَدَّثَنِي خَالِدٌ هُوَ ابْنُ الحَارِثِ، حَدَّثَنَا حُمَيْدٌ، عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ، دَخَلَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، عَلَى أُمِّ سُلَيْمٍ، فَأَتَتْهُ بِتَمْرٍ وَسَمْنٍ، قَالَ: «أَعِيدُوا سَمْنَكُمْ فِي سِقَائِهِ، وَتَمْرَكُمْ فِي وِعَائِهِ، فَإِنِّي صَائِمٌ» ثُمَّ قَامَ إِلَى نَاحِيَةٍ مِنَ البَيْتِ، فَصَلَّى غَيْرَ المَكْتُوبَةِ، فَدَعَا لِأُمِّ سُلَيْمٍ وَأَهْلِ بَيْتِهَا، فَقَالَتْ أُمُّ سُلَيْمٍ: يَا رَسُولَ اللَّهِ، إِنَّ لِي خُوَيْصَّةً، قَالَ: «مَا هِيَ؟»، قَالَتْ: خَادِمُكَ أَنَسٌ، فَمَا تَرَكَ خَيْرَ آخِرَةٍ وَلاَ دُنْيَا إِلَّا دَعَا لِي بِهِ، قَالَ: «اللَّهُمَّ ارْزُقْهُ مَالًا وَوَلَدًا، وَبَارِكْ لَهُ فِيهِ»، فَإِنِّي لَمِنْ أَكْثَرِ الأَنْصَارِ مَالًا

அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் (என் தாயார்) உம்மு சுலைம் (ரலி) அவர்களிடம் வந்தார்கள். என் தாயார் பேரீச்சம் பழங்களையும், நெய்யையும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் கொண்டு வந்தார்கள். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் "உங்கள் நெய்யை அதற்குரிய (தோல்) பாத்திரத்திலேயே ஊற்றுங்கள்; உங்கள் பேரீச்சம் பழங்களை அதற்குரிய பையில் போடுங்கள்; ஏனெனில், நான் நோன்பு நோற்றிருக்கிறேன்!" என்றார்கள். பிறகு வீட்டின் ஒரு மூலையில் நின்று கடமையல்லாத தொழுகையைத் தொழுதார்கள். உம்மு சுலைம் (ரலி) அவர்களுக்காகவும், அவர்களுடைய குடும்பத்தாருக்காகவும் பிரார்த்தித்தார்கள். அப்போது உம்மு சுலைம் (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் தூதரே! எனக்கு ஒரு விருப்பம் உள்ளது!" என்றார்கள். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "அது என்ன?" என்று கேட்டார்கள். "உங்கள் ஊழியர் அனஸ் தான்!" என்று உம்மு சுலைம் (ரலி) அவர்கள் கூறினார்கள். இம்மை மறுமையின் எந்த நன்மையையும் விட்டு விடாமல் (எல்லா நன்மைகளையும்) கேட்டு, எனக்காக நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பிரார்த்தித்தார்கள். "இறைவா! இவருக்குப் பொருட்செல்வத்தையும் குழந்தைச் செல்வத்தையும் வழங்குவாயாக! இவருக்கு பேரருள் (பரக்கத்) புரிவாயாக!" என்று பிரார்த்தித்தார்கள். இன்று நான் அன்ஸாரிகளிலேயே அதிகச் செல்வந்தனாக இருக்கிறேன்!

நூல் : புகாரி 1982, 6334, 6344, 6378, 6380

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமக்காகவும் செல்வத்தைக் கேட்டு பிரார்த்தனை செய்துள்ளார்கள்.

صحيح مسلم

7079 - حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ الْمُثَنَّى وَمُحَمَّدُ بْنُ بَشَّارٍ قَالاَ حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ جَعْفَرٍ حَدَّثَنَا شُعْبَةُ عَنْ أَبِى إِسْحَاقَ عَنْ أَبِى الأَحْوَصِ عَنْ عَبْدِ اللَّهِ عَنِ النَّبِىِّ -صلى الله عليه وسلم- أَنَّهُ كَانَ يَقُولُ « اللَّهُمَّ إِنِّى أَسْأَلُكَ الْهُدَى وَالتُّقَى وَالْعَفَافَ وَالْغِنَى ».

இறைவா! நல்வழியையும், இறையச்சத்தையும், சுயக் கட்டுப்பாட்டையும், பொருளாதாரத் தன்னிறைவையும் உன்னிடம் வேண்டுகிறேன் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பிரார்த்தித்து வந்தார்கள்.

நூல் : முஸ்லிம் 7079

என்னை ஏழையாக வாழச் செய்! ஏழையாகவே மரணிக்கச் செய் என்று அல்லாஹ்விடத்தில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பிரார்த்தனை செய்ததாகக் கூறப்படுவது ஆதாரமற்ற செய்தியாகும்.

## நல்ல செல்வந்தர்கள் சிறந்தவர்கள்

வசதியில்லாதவனை விட செல்வத்தைப் பெற்று அதை நல்வழியில் செலவிடுபவன் சிறந்தவன் என்று அல்லாஹ் திருக்குர்ஆனில் புகழ்ந்துரைக்கிறான்.

எதற்கும் சக்தி பெறாத, பிறருக்கு உடைமையான அடிமையையும், யாருக்கு நாம் அழகிய செல்வத்தை அளித்தோமோ அவனையும் அல்லாஹ் உதாரணமாகக் காட்டுகிறான். இவன் இரகசியமாகவும், வெளிப்படையாகவும் அதிலிருந்து (நல்வழியில்) செலவிடுகிறான். (இவ்விருவரும்) சமமாவார்களா? எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே. எனினும் அவர்களில் அதிகமானோர் அறியமாட்டார்கள்.

திருக்குர்ஆன் 16:75

பொதுவாக பொறாமை கொள்வது மார்க்கத்தில் வெறுக்கப்பட்டதாக இருந்தும் தர்மம் செய்யும் ஒருவரைப் பார்த்து பொறாமைப்படலாம் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்.

صحيح البخاري

73 - حدثنا الحميدي، قال: حدثنا سفيان، قال: حدثني إسماعيل بن أبي خالد، على غير ما حدثناه الزهري، قال: سمعت قيس بن أبي حازم، قال: سمعت عبد الله بن مسعود قال: قال النبي صلى الله عليه وسلم: " لا حسد إلا في اثنتين: رجل آتاه الله مالا فسلط على هلكته في الحق، ورجل آتاه الله الحكمة فهو يقضي بها ويعلمها "

அல்லாஹ் வழங்கிய செல்வத்தை நல்ல வழியில் செலவு செய்தவர், அல்லாஹ் வழங்கிய அறிவு ஞானத்தின் அடிப்படையில் தீர்ப்பு வழங்கிக் கற்றுக் கொடுப்பவர் ஆகிய இருவரைத் தவிர மற்றவர்கள் மீது பொறாமை கொள்ளக் கூடாது என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்..

நூல் : புகாரி 73, 1409, 7149, 7316

صحيح البخاري

843 - حدثنا محمد بن أبي بكر، قال: حدثنا معتمر، عن عبيد الله، عن سمي، عن أبي صالح، عن أبي هريرة رضي الله عنه، قال: جاء الفقراء إلى النبي صلى الله عليه وسلم، فقالوا: ذهب أهل الدثور من الأموال بالدرجات العلا، والنعيم المقيم يصلون كما نصلي، ويصومون كما نصوم، ولهم فضل من أموال يحجون بها، ويعتمرون، ويجاهدون، ويتصدقون، قال: «ألا أحدثكم إن أخذتم أدركتم من سبقكم ولم يدرككم أحد بعدكم، وكنتم خير من أنتم بين ظهرانيه إلا من عمل مثله تسبحون وتحمدون وتكبرون خلف كل صلاة ثلاثا وثلاثين»، فاختلفنا بيننا، فقال بعضنا: نسبح ثلاثا

وثلاثين، ونحمد ثلاثا وثلاثين، ونكبر أربعا وثلاثين، فرجعت إليه، فقال: تقول: «سبحان الله، والحمد لله، والله أكبر، حتى يكون منهن كلهن ثلاثا وثلاثين»

ஏழைகள் (சிலர்) நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்து, "செல்வச் சீமான்கள் உயர்வான பதவிகளையும், நிலையான இன்பங்களையும் (தட்டிக்) கொண்டு போய் விடுகின்றனர். நாங்கள் தொழுவது போன்றே அவர்களும் தொழுகின்றனர். நாங்கள் நோன்பு நோற்பது போன்றே அவர்களும் நோன்பு நோற்கின்றனர். ஆயினும் தங்களது அதிகப்படியான செல்வங்கள் மூலம் அவர்கள் ஹஜ் செய்கின்றனர்; உம்ராச் செய்கின்றனர்; அறப்போருக்காகச் செலவளிக்கின்றனர்; தானதர்மம் செய்கின்றனர். (ஏழைகளாகிய எங்களால் இவற்றைச் செய்ய முடிவதில்லையே)" என்று கூறினர். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "நான் உங்களுக்கு ஒன்றைத் தெரிவிக்கட்டுமா? அதை நீங்கள் கடைப்பிடித்தால் (இந்தச் சமுதாயத்தில்) உங்களை முந்திவிட்ட (செல்வர்)வர்களையும் நீங்கள் பிடித்துவிடலாம். உங்களுக்குப் பின்னால் வரும் எவராலும் உங்களைப் பிடிக்க இயலாது. நீங்கள் எந்த மக்களிடையே வாழ்கிறீர்களோ அவர்களில் சிறந்தவர்கள் ஆவீர்கள். உங்களைப் போன்று மற்றவரும் அதைச் செயல்படுத்தினால் தவிர. (அந்தக் காரியமாவது:) நீங்கள் ஒவ்வொரு தொழுகைக்குப் பின்பும் 33 தடவை ஸுப்ஹானல்லாஹ் என்று சொல்லுங்கள்; 33 தடவை அல்ஹம்துலில்லாஹ் என்று கூறுங்கள்; 33 தடவை அல்லாஹு அக்பர் என்று சொல்லுங்கள்" என்று கூறினார்கள். நாங்கள் இது தொடர்பாக கருத்து வேறுபாடு கொண்டோம். எங்களில் சிலர் சுப்ஹானல்லாஹ் 33 தடவை, அல்ஹம்துலில்லாஹ் 33 தடவை, அல்லாஹு அக்பர் 34 தடவை (ஒவ்வொன்றையும் தனித் தனியாகக்) கூற வேண்டும்" என்றனர். ஆகவே நான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடமே திரும்பி(ச் சென்று இது பற்றி வினவி)னேன். அதற்கு நபியவர்கள், "சுப்ஹானல்லாஹி வல்ஹம்துலில்லாஹி, வல்லாஹு அக்பர் என்று 33 தடவை சொல்! இதனால் அவற்றில் ஒவ்வொன்றும் 33 தடவை கூறியதாக அமையும்" என்று பதிலளித்தார்கள்.

நூல் : புகாரி 843, 6329

صحيح البخاري

660 - حدثنا محمد بن بشار بندار، قال: حدثنا يحيى، عن عبيد الله، قال: حدثني خبيب بن عبد الرحمن، عن حفص بن عاصم، عن أبي هريرة، عن النبي صلى الله عليه وسلم قال: " سبعة يظلهم الله في ظله، يوم لا ظل إلا ظله: الإمام

العادل، وشاب نشأ في عبادة ربه، ورجل قلبه معلق في المساجد، ورجلان تحابا في الله اجتمعا عليه وتفرقا عليه، ورجل طلبته امرأة ذات منصب وجمال، فقال: إني أخاف الله، ورجل تصدق، أخفى حتى لا تعلم شماله ما تنفق يمينه، ورجل ذكر الله خاليا ففاضت عيناه "

தனது (அரியணையின்) நிழலைத் தவிர வேறு நிழலே இல்லாத (மறுமை) நாளில் ஏழு பேருக்கு அல்லாஹ் நிழல் அளிப்பான் :

நீதி மிக்க ஆட்சியாளர். இறை வணக்கத்திலேயே வளர்ந்த இளைஞர். பள்ளிவாசல்களுடன் (எப்போதும்) உள்ளத்தால் தொடர்பு வைத்திருந்தவர். அல்லாஹ்வுக்காகவே நட்புக்கொண்டு அந்த நிலையிலேயே பிரிந்து சென்ற இருவர். தகுதியும், அழகும் உள்ள ஒரு பெண் தவறு செய்ய அழைத்தபோது "நான் அல்லாஹ்வுக்கு அஞ்சுகிறேன்" என்று கூறியவர். தன் வலக்கரம் செய்த தர்மத்தை இடக்கரம்கூட அறியாத வகையில் இரகசியமாகத் தர்மம் செய்தவர். தனிமையில் அல்லாஹ்வை நினைவு கூர்ந்து (அவனது அச்சத்தால்) கண்ணீர் வடித்தவர்
என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல் : புகாரி 660, 1423, 6806

பொருளாதாரத்தைச் செலவிடுவதன் மூலம் ஒரு முஸ்லிம் மறுமையில் மகத்தான தகுதிகளைப் பெற முடியும் என்பதை மேற்கண்ட நபிமொழிகளில் இருந்து நாம் அறிந்து கொள்ளலாம்.

## இஸ்லாம் வலியுறுத்தும் தானதர்மங்கள்

தானதர்மங்களால் மறுமையில் வெற்றி அடைய முடியுமென்று திருக்குர்ஆனிலும், நபிமொழிகளிலும் அதிகமான இடங்களில் கூறப்பட்டுள்ளது. பொருளாதாரத்தினால் நன்மை விளைவதை இதில் இருந்தும் நாம் அறியலாம்.

இது குறித்து திருக்குர்ஆன் பின்வருமாறு கூறுகிறது.

தமது செல்வங்களை அல்லாஹ்வின் பாதையில் செலவிடுவோருக்கு உதாரணம் ஒரு தானியம். அது ஏழு கதிர்களை முளைக்கச் செய்கிறது. ஒவ்வொரு கதிரிலும் நூறு தானியங்கள் உள்ளன. தான் நாடியோருக்கு அல்லாஹ் இன்னும் பன்மடங்காகக் கொடுக்கிறான். அல்லாஹ் தாராளமானவன்; அறிந்தவன்.

திருக்குர்ஆன் 2: 261

அல்லாஹ்வின் திருப்தியைப் பெறுவதற்காகவும், தமக்குள்ளே இருக்கும் உறுதியான நம்பிக்கைக்காகவும் தமது செல்வங்களை (நல்வழியில்) செலவிடுவோரின் உதாரணம், உயரமான இடத்தில் அமைந்த தோட்டம். பெருமழை விழுந்ததும் அத்தோட்டம் இரு மடங்காக அதன் உணவுப் பொருட்களை வழங்குகிறது. பெருமழை விழாவிட்டாலும் தூரல் (போதும்). நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் பார்ப்பவன்.

திருக்குர்ஆன் 2: 265

கொழுந்து விட்டு எரியும் நெருப்பை உங்களுக்கு எச்சரிக்கிறேன். துர்பாக்கியசாலியைத் தவிர வேறு யாரும் அதில் கருக மாட்டார்கள். அவன் பொய்யெனக் கருதி அலட்சியம் செய்தவன். இறையச்சமுடையவர் அதிலிருந்து விலக்கப்படுவார். அவர் தனது செல்வத்தை வழங்கி தூய்மையடைந்தவர்.

திருக்குர்ஆன் : 92 : 14, -18

صحيح البخاري

7512 - حدثنا علي بن حجر، أخبرنا عيسى بن يونس، عن الأعمش، عن خيثمة، عن عدي بن حاتم، قال: قال رسول الله صلى الله عليه وسلم: ما منكم أحد إلا سيكلمه ربه ليس بينه وبينه ترجمان، فينظر أيمن منه فلا يرى إلا ما قدم من عمله، وينظر أشأم منه فلا يرى إلا ما قدم، وينظر بين يديه فلا يرى إلا النار تلقاء وجهه، فاتقوا النار ولو بشق تمرة

(மறுமையில்) உங்களில் ஒவ்வொருவருடனும் அல்லாஹ் உரையாடுவான். அப்போது அவனுக்கும் உங்களுக்குமிடையே மொழிபெயர்ப்பாளர் எவரும் இருக்க மாட்டார். நீங்கள் உங்கள் வலப்பக்கம் பார்ப்பீர்கள். அங்கு நீங்கள் முன்பே செய்து அனுப்பிய செயல்களையே காண்பீர்கள். உங்கள் இடப்பக்கம் பார்ப்பீர்கள். அங்கும் நீங்கள் முன்பே செய்து அனுப்பிய செயல்களையே காண்பீர்கள். உங்கள் முன்னால் பார்ப்பீர்கள். உங்கள் முகத்துக்கு எதிரே நரகத்தையே காண்பீர்கள். ஆகவே, ஒரு பேரீச்சம் பழத்துண்டை (தர்மமாக)க் கொடுத்தாவது நரகத்திலிருந்து தப்பித்துக் கொள்ளுங்கள் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல் : புகாரி 7512

صحيح مسلم

5005 - حَدَّثَنَا إِسْحَاقُ بْنُ إِبْرَاهِيمَ الْحَنْظَلِىُّ أَخْبَرَنَا جَرِيرٌ عَنِ الأَعْمَشِ عَنْ أَبِى عَمْرٍو الشَّيْبَانِىِّ عَنْ أَبِى مَسْعُودٍ الأَنْصَارِىِّ قَالَ جَاءَ رَجُلٌ بِنَاقَةٍ مَخْطُومَةٍ فَقَالَ هَذِهِ فِى سَبِيلِ اللَّهِ. فَقَالَ رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- « لَكَ بِهَا يَوْمَ الْقِيَامَةِ سَبْعُمِائَةِ نَاقَةٍ كُلُّهَا مَخْطُومَةٌ ».

ஒரு மனிதர் கடிவாளமிடப்பட்ட ஒட்டகமொன்றைக் கொண்டு வந்து, "இது அல்லாஹ்வின் பாதையில் (தர்மமாகும்)" என்று சொன்னார். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "உமக்கு மறுமை நாளில் இதற்குப் பகரமாக எழுநூறு ஒட்டகங்கள் கிடைக்கும். அவற்றில் ஒவ்வொன்றும் கடிவாளமிடப்பட்டதாக இருக்கும்" என்று கூறினார்கள்.

நூல் : முஸ்லிம் 5005

صحيح البخاري

1410 - حدثنا عبد الله بن منير، سمع أبا النضر، حدثنا عبد الرحمن هو ابن عبد الله بن دينار، عن أبيه، عن أبي صالح، عن أبي هريرة رضي الله عنه، قال: قال رسول الله صلى الله عليه وسلم: «من تصدق بعدل تمرة من كسب طيب، ولا يقبل الله إلا الطيب، وإن الله يتقبلها بيمينه، ثم يربيها لصاحبه، كما يربي أحدكم فلوه، حتى تكون مثل الجبل»

யார் முறையான சம்பாத்தியத்தில் ஒரு பேரீச்சம் பழத்தின் மதிப்புக்குத் தர்மம் செய்தாரோ -அல்லாஹ் பரிசுத்தமானவற்றைத் தவிர வேறெதையும் ஏற்றுக் கொள்வதில்லை- அதை அல்லாஹ் தனது வலக்கரத்தால் ஏற்றுக் கொண்டு பிறகு நீங்கள் உங்களின் குதிரைக் குட்டியை வளர்ப்பது போன்று மலைபோல் உயரும் அளவுக்கு அதை வளர்த்து விடுவான்" என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல் : புகாரி 1410

صحيح البخاري

3798 - حدثنا مسدد، حدثنا عبد الله بن داود، عن فضيل بن غزوان، عن أبي حازم، عن أبي هريرة رضي الله عنه، أن رجلا أتى النبي صلى الله عليه وسلم، فبعث إلى نسائه فقلن: ما معنا إلا الماء، فقال رسول الله صلى الله عليه وسلم: «من يضم أو يضيف هذا»، فقال رجل من الأنصار: أنا، فانطلق به إلى امرأته، فقال: أكرمي ضيف رسول الله صلى الله عليه وسلم، فقالت: ما عندنا إلا قوت صبياني، فقال: هيئي طعامك، وأصبحي سراجك، ونومي صبيانك إذا أرادوا عشاء، فهيأت طعامها، وأصبحت سراجها، ونومت صبيانها، ثم قامت كأنها تصلح سراجها فأطفأته، فجعلا يريانه أنهما يأكلان، فباتا طاويين، فلما أصبح غدا إلى رسول الله صلى الله عليه وسلم، فقال: «ضحك الله الليلة، أو عجب، من فعالكما» فأنزل الله: {ويؤثرون على أنفسهم ولو كان بهم خصاصة ومن يوق شح نفسه فأولئك هم المفلحون} [الحشر: 9]

ஒரு மனிதர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்தார். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் (அவருக்கு உணவளிப்பதற்காகத்) தம் மனைவிமார்களிடம் சொல்லியனுப்பினார்கள். "எங்களிடம் தண்ணீரைத் தவிர வேறெதுவும் இல்லை" என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் மனைவியர் பதிலளித்தார்கள். ஆகவே, நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் (தம் தோழர்களை நோக்கி), "இவருக்கு விருந்தளிப்பவர் யார்?" என்று கேட்டார்கள். அப்போது அன்சாரிகளில் ஒருவர், "நான் (விருந்தளிக்கிறேன்)" என்று சொல்லி அவரை அழைத்துக் கொண்டு தன் மனைவியிடம் சென்று. "நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடைய விருந்தாளியைக் கண்ணியப்படுத்து" என்று சொன்னார். அதற்கு அவருடைய மனைவி, "நம்மிடம் நம் குழந்தைகளின் உணவைத் தவிர வேறெதுவுமில்லை" என்று சொன்னார். அதற்கு அந்த அன்சாரித் தோழர், "உன்னிடம் உள்ள உணவைத் தயாராக எடுத்து வைத்து விட்டு விளக்கை ஏற்றி (விடுவதைப் போல் பாவனை செய்து அணைத்து) விடு. உன் குழந்தைகள் உணவு உண்ண விரும்பினால் அவர்களைத் தூங்கச் செய்து விடு" என்று சொன்னார். அவ்வாறே அவருடைய மனைவியும் உணவைத் தயாராக எடுத்து வைத்து, விளக்கை ஏற்றி விட்டுத் தம் குழந்தைகளைத் தூங்கச் செய்து

விட்டார். பிறகு விளக்கைச் சரி செய்வது போல் நின்று (பாவனை செய்து கொண்டே) விளக்கை அணைத்து விட்டார். பிறகு அவரும் அவரின் மனைவியும் உண்பது போல் (விருந்தாளியான) அந்த மனிதருக்கு (பாவனை) காட்டலானார்கள். பிறகு இருவரும் (உணவு உண்ணாமல்) வயிறு ஒட்டியவர்களாக இரவைக் கழித்தனர். காலையானதும் அந்த நபித்தோழர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் சென்றார். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "நீங்கள் இருவரும் இன்றிரவு செய்ததைக் கண்டு அல்லாஹ் சிரித்தான்; அல்லது மகிழ்ந்தான்" என்று சொன்னார்கள். அப்போது "தமக்கே தேவை இருந்தும்கூட, தம்மைவிடப் பிறருக்கே அவர்கள் முன்னுரிமை வழங்குகிறார்கள். உண்மையில், எவர் தன் உள்ளத்தின் கருமித்தனத்திலிருந்து பாதுகாக்கப்பட்டு விட்டார்களோ அவர்கள்தாம் வெற்றியாளர்கள்" எனும் 59:9 வசனத்தை அல்லாஹ் அருளினான்.

நூல் : புகாரி 3798, 4889

## சொத்தைக் காக்கப் போரிடுதல்

சொத்தைக் காப்பாற்ற உயிரையும் தியாகம் செய்யலாம் என்ற அளவுக்குப் பொருளாதாரத்தின் முக்கியத்துவத்தை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வலியுறுத்தியுள்ளனர்.

صحيح مسلم

377 - حَدَّثَنِى أَبُو كُرَيْبٍ مُحَمَّدُ بْنُ الْعَلاَءِ حَدَّثَنَا خَالِدٌ - يَعْنِى ابْنَ مَخْلَدٍ - حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ جَعْفَرٍ عَنِ الْعَلاَءِ بْنِ عَبْدِ الرَّحْمَنِ عَنْ أَبِيهِ عَنْ أَبِى هُرَيْرَةَ قَالَ جَاءَ رَجُلٌ إِلَى رَسُولِ اللَّهِ -صلى الله عليه وسلم- فَقَالَ يَا رَسُولَ اللَّهِ أَرَأَيْتَ إِنْ جَاءَ رَجُلٌ يُرِيدُ أَخْذَ مَالِى قَالَ « فَلاَ تُعْطِهِ مَالَكَ ». قَالَ أَرَأَيْتَ إِنْ قَاتَلَنِى قَالَ « قَاتِلْهُ ». قَالَ أَرَأَيْتَ إِنْ قَتَلَنِى قَالَ « فَأَنْتَ شَهِيدٌ ». قَالَ أَرَأَيْتَ إِنْ قَتَلْتُهُ قَالَ « هُوَ فِى النَّارِ ».

ஒரு மனிதர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! ஒருவன் எனது செல்வத்தைப் பறிக்கும் நோக்கத்தில் வந்தால் (நான் என்ன செய்ய வேண்டும்) கூறுங்கள்? என்று கேட்டார். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், அவனுக்கு உமது செல்வத்தை விட்டுக் கொடுக்காதே என்று கூறினார்கள். அந்த மனிதர், அவன் என்னுடன் சண்டையிட்டால்...? என்று கேட்டார். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், நீரும் அவனுடன் சண்டையிடு! என்று கூறினார்கள். அந்தச் சண்டையில்) அவன் என்னைக் கொன்று விட்டால்? என்று அந்த மனிதர் கேட்டார். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், அப்போது நீர் உயிர்த் தியாகி (ஷஹீத்) ஆவீர் என்றார்கள். நான் அவனைக் கொன்று விட்டால்? என்று அவர் கேட்டார். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், அவன் நரகத்திற்குச் செல்வான் என்று பதிலளித்தார்கள்.

நூல் : முஸ்லிம் 377

صحيح البخاري

2480 - حدثنا عبد الله بن يزيد، حدثنا سعيد هو ابن أبي أيوب، قال: حدثني أبو الأسود، عن عكرمة، عن عبد الله بن عمرو رضي الله عنهما، قال: سمعت النبي صلى الله عليه وسلم يقول: «من قتل دون ماله فهو شهيد»

தன் செல்வத்தைப் பாதுகாப்பதற்காகப் போராடும் போது கொல்லப்பட்டவர் இறைவழியில் உயிர்த் தியாகம் செய்தவர் (ஷஹீத்) ஆவார் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

நூல் : புகாரி 2480

## பொருளாதாரத்தால் விளையும் கேடுகள்

பொருளாதாரத்தின் மூலம் ஏராளமான நன்மைகளை இவ்வுலகிலும் மறுமை வாழ்க்கையிலும் நாம் பெற்றுக் கொள்ள முடியும் என்றாலும் பொருளாதாரத்துக்கு இன்னொரு பக்கமும் உள்ளது. பொருளாதாரத்தினால் நன்மைகள் பல விளைவது போல் ஏராளமான தீமைகளும் ஏற்படுவதை நாம் காண்கிறோம்.

இதைப் பற்றியும் மனிதர்களை இஸ்லாம் தக்க முறையில் எச்சரிக்கத் தவறவில்லை.

مسند أحمد بن حنبل

17506 - حدثنا عبد الله حدثني أبي ثنا أبو العلاء الحسن بن سوار ثنا ليث بن سعد عن معاوية بن صالح عن عبد الرحمن بن جبير بن نفير عن أبيه عن كعب بن عياض قال سمعت رسول الله يقول : ان لكل أمة فتنة وان فتنة أمتي المال

ஒவ்வொரு சமுதாயத்திற்கும் சோதனைகள் இருக்கின்றன. என்னுடைய சமுதாயத்தின் சோதனை செல்வமாகும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்.

நூல் : அஹ்மத்

உங்களின் மக்கட்செல்வமும், பொருட்செல்வமும் சோதனை என்பதையும், அல்லாஹ்விடம் மகத்தான கூலி உண்டு என்பதையும் அறிந்து கொள்ளுங்கள்!

திருக்குர்ஆன் 8:28

செல்வமும், பிள்ளைகளும் இவ்வுலக வாழ்க்கையின் கவர்ச்சியாகும். நிலையான நல்லறங்களே உமது இறைவனிடம் கூலியில் சிறந்ததும், எதிர்பார்க்கப்படுவதில் சிறந்ததுமாகும்.

திருக்குர்ஆன் 18:46

பெண்கள், ஆண்மக்கள், திரட்டப்பட்ட தங்கம் மற்றும் வெள்ளியின் குவியல்கள், அழகிய குதிரைகள், கால்நடைகள், மற்றும் விளை நிலங்கள் ஆகிய மனவிருப்பம்

ஏற்படுத்தும் பொருட்களை நேசிப்பது மனிதர்களுக்குக் கவர்ச்சியாக்கப்பட்டுள்ளது. இவை இவ்வுலக வாழ்க்கையின் வசதிகள். அல்லாஹ்விடம் அழகிய புகலிடம் உள்ளது.

திருக்குர்ஆன் 3:14

மண்ணறைகளைச் சந்திக்கும் வரை அதிகமாகத் (செல்வத்தை) தேடுவது உங்கள் கவனத்தைத் திருப்பி விட்டது.

திருக்குர்ஆன் 102:1

குறை கூறிப் புறம் பேசும் ஒவ்வொருவனுக்கும் கேடுதான். அவன் செல்வத்தைத் திரட்டி அதைக் கணக்கிடுகிறான். தனது செல்வம் தன்னை நிலைத்திருக்கச் செய்யும் என்று எண்ணுகிறான். அவ்வாறில்லை! ஹுதமாவில் அவன் எறியப்படுவான். ஹுதமா என்பது என்னவென உமக்கு எப்படித் தெரியும்? மூட்டப்பட்ட அல்லாஹ்வின் நெருப்பு. அது உள்ளங்களைச் சென்றடையும். நீண்ட கம்பங்களில் அது அவர்களைச் சூழ்ந்திருக்கும்.

திருக்குர்ஆன் 104 வது அத்தியாயம்

صحيح البخاري

3158 - حدثنا أبو اليمان، أخبرنا شعيب، عن الزهري، قال: حدثني عروة بن الزبير، عن المسور بن مخرمة، أنه أخبره أن عمرو بن عوف الأنصاري وهو حليف لبني عامر بن لؤي، وكان شهد بدرا، أخبره: أن رسول الله صلى الله عليه وسلم بعث أبا عبيدة بن الجراح إلى البحرين يأتي بجزيتها، وكان رسول الله صلى الله عليه وسلم هو صالح أهل البحرين، وأمر عليهم العلاء بن الحضرمي، فقدم أبو عبيدة بمال من البحرين، فسمعت الأنصار بقدوم أبي عبيدة، فوافت صلاة الصبح مع النبي صلى الله عليه وسلم، فلما صلى بهم الفجر انصرف، فتعرضوا له، فتبسم رسول الله صلى الله عليه وسلم حين رآهم، وقال: «أظنكم قد سمعتم أن أبا عبيدة قد جاء بشيء؟»، قالوا: أجل يا رسول الله، قال: «فأبشروا [ص:97] وأملوا ما يسركم، فوالله لا الفقر أخشى عليكم، ولكن أخشى عليكم أن تبسط عليكم الدنيا كما بسطت على من كان قبلكم، فتنافسوها كما تنافسوها وتهلككم كما أهلكتهم»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பஹ்ரைன்வாசிகளுடன் சமாதான ஒப்பந்தம் செய்து கொண்டு அவர்களுக்கு அலா பின் ஹள்ரமீ (ரலி) அவர்களைத் தலைவராக ஆக்கியிருந்தார்கள். பஹ்ரைனிலிருந்து ஜிஸ்யா வரியை வசூலிக்க அபூஉபைதா பின் ஜர்ராஹ் (ரலி) அவர்களை அனுப்பினார்கள். அபூஉபைதா (ரலி) அவர்கள் பஹ்ரைனிலிருந்து நிதியுடன் வந்தார்கள். அபூஉபைதா (ரலி) அவர்கள்

வந்திருப்பதைக் கேள்விப்பட்டு அன்சாரிகள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் செல்ல, அது ஃபஜ்ருத் தொழுகையின் நேரமாக அமைந்து விட்டது. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மக்களுடன் தொழுது முடித்துத் திரும்பியபோது, அன்சாரிகள் நபியவர்களிடம் சைகையால் கேட்டார்கள். (ஆர்வத்துடனிருந்த) அவர்களைக் கண்டவுடன் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் புன்னகைத்து விட்டு, "அபூஉபைதா ஏதோ கொண்டு வந்திருக்கிறார் என்று நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்கள் என நான் நினைக்கிறேன்" என்று கூற, அன்சாரிகள், "ஆமாம், அல்லாஹ்வின் தூதரே!" என்று பதிலளித்தார்கள். "ஒரு மகிழ்ச்சியான செய்தி! உங்களுக்கு மகிழ்வைத் தரும் நிகழ்ச்சி நடக்குமென்று நம்புங்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களுக்கு வறுமை ஏற்பட்டு விடும் என்று நான் அஞ்சவில்லை. ஆயினும் உங்களுக்கு முன்னிருந்தவர்களுக்கு உலகச் செல்வம் அதிகமாகக் கொடுக்கப்பட்டதைப் போல் உங்களுக்கும் அதிகமாகக் கொடுக்கப்பட்டு, அவர்கள் அதற்காகப் போட்டியிட்டதைப் போல் நீங்களும் போட்டியிடும்போது, அவர்களை அது அழித்து விட்டதைப் போல் உங்களையும் அது அழித்து விடுமோ என்றுதான் நான் அஞ்சுகிறேன்" என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல் : புகாரி 3158, 4015, 6425

صحيح البخاري

3241 - حدثنا أبو الوليد، حدثنا سلم بن زرير، حدثنا أبو رجاء، عن عمران بن حصين، عن النبي صلى الله عليه وسلم، قال: «اطلعت في الجنة فرأيت أكثر أهلها الفقراء، واطلعت في النار فرأيت أكثر أهلها النساء»

நான் (விண்ணுலகப் பயணத்தின்போது) சொர்க்கத்தை எட்டிப் பார்த்தேன். அங்கு குடியிருப்போரில் ஏழைகளையே அதிகம் கண்டேன். நரகத்தையும் எட்டிப் பார்த்தேன். அதில் குடியிருப்போரில் பெண்களையே அதிகம் கண்டேன் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல் : புகாரி 3241, 5198, 6449, 6546

صحيح مسلم

7654 - قَالَ أَبُو عَبْدِ الرَّحْمَنِ وَجَاءَ ثَلاَثَةُ نَفَرٍ إِلَى عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ وَأَنَا عِنْدَهُ فَقَالُوا يَا أَبَا مُحَمَّدٍ إِنَّا وَاللَّهِ مَا نَقْدِرُ عَلَى شَىْءٍ لاَ نَفَقَةٍ وَلاَ دَابَّةٍ وَلاَ مَتَاعٍ. فَقَالَ لَهُمْ مَا شِئْتُمْ إِنْ شِئْتُمْ رَجَعْتُمْ إِلَيْنَا فَأَعْطَيْنَاكُمْ مَا يَسَّرَ اللَّهُ لَكُمْ وَإِنْ شِئْتُمْ

ذَكَرْنَا أَمْرَكُمْ لِلسُّلْطَانِ وَإِنْ شِئْتُمْ صَبَرْتُمْ فَإِنِّى سَمِعْتُ رَسُولَ اللَّهِ -صلى الله عليه وسلم- يَقُولُ « إِنَّ فُقَرَاءَ الْمُهَاجِرِينَ يَسْبِقُونَ الأَغْنِيَاءَ يَوْمَ الْقِيَامَةِ إِلَى الْجَنَّةِ بِأَرْبَعِينَ خَرِيفًا ». قَالُوا فَإِنَّا نَصْبِرُ لاَ نَسْأَلُ شَيْئًا.

"ஏழை முஹாஜிர்கள் செல்வந்தர்களை விட நாற்பதாண்டுகளுக்கு முன்பே மறுமை நாளில் சொர்க்கத்துக்குச் சென்று விடுவார்கள் என்று நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்கள்.

நூல் : முஸ்லிம் 7654

## இறை நினைவை மறக்கடித்தல்

செல்வம் குவியும் போது அது படைத்த இறைவனை மறக்கடிக்கச் செய்து விடும் என்பது பொருளாதாரத்தினால் ஏற்படும் மற்றொரு தீமையாகும்.

செல்வம் சேர்வதற்கு முன் இறைவனின் கடமைகளையும் வணக்க வழிபாடுகளையும் சரியாகச் செய்து வந்தவர்கள் செல்வம் சேர்ந்த பின் அல்லாஹ்வை மறந்து விடுவதை நாம் பார்க்கிறோம்.

இதைப்பற்றி அல்லாஹ் பின்வருமாறு எச்சரிக்கிறான்.

நம்பிக்கை கொண்டோரே! உங்களின் பொருட்செல்வமும், மக்கட்செல்வமும் அல்லாஹ்வின் நினைவை விட்டு உங்களைத் திசை திருப்பி விட வேண்டாம். இதைச் செய்வோரே நஷ்டமடைந்தவர்கள்.

திருக்குர்ஆன் : 63:9

நினைத்த பொருளை நினைத்த நேரத்தில் வாங்கும் நிலைமை நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் காலத்தில் இருக்கவில்லை. வாரம் ஒரு முறை நடக்கும் சந்தையிலும் வெளியூரில் இருந்து வணிகக் கூட்டம் வரும்போதும்தான் பொருட்களை வாங்கி வைத்துக் கொள்ள முடியும். எனவே வணிகக் கூட்டம் ஒரு ஊருக்கு வந்து விட்டால் அனைத்து வேலைகளையும் விட்டு விட்டு தேவையானவற்றை வாங்கச் செல்வது அன்றைய மக்களின் வழக்கமாக இருந்தது.

صحيح البخاري 4899 - حَدَّثَنِي حَفْصُ بْنُ عُمَرَ، حَدَّثَنَا خَالِدُ بْنُ عَبْدِ اللَّهِ، حَدَّثَنَا حُصَيْنٌ، عَنْ سَالِمِ بْنِ أَبِي الجَعْدِ، وَعَنْ أَبِي سُفْيَانَ، عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، قَالَ: " أَقْبَلَتْ عِيرٌ يَوْمَ الجُمُعَةِ، وَنَحْنُ مَعَ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَثَارَ النَّاسُ إِلَّا اثْنَيْ عَشَرَ رَجُلًا، فَأَنْزَلَ اللَّهُ: {وَإِذَا رَأَوْا تِجَارَةً أَوْ لَهْوًا انْفَضُّوا إِلَيْهَا وَتَرَكُوكَ قَائِمًا} [الجمعة: 11] "

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் காலத்தில் ஒரு வெள்ளிக்கிழமை தொழுகை நடந்து கொண்டிருக்கும்போது மதீனாவுக்கு வணிகக் கூட்டம் வந்து விட்டது. பதினேழு முஸ்லிம்களைத் தவிர மற்றவர்கள் தொழுகையை விட்டு விட்டு வணிகக் கூட்டத்தை நோக்கிச் சென்று விட்டனர். இதைக் கண்டித்து பின்வரும் 62:11 வசனத்தை அருளினான். "(முஹம்மதே) அவர்கள் வியாபாரத்தையோ,

வீணானதையோ கண்டால் நின்ற நிலையில் உம்மை விட்டுவிட்டு அதை நோக்கிச் சென்று விடுகின்றனர். அல்லாஹ்விடம் இருப்பது வீணானதையும், வியாபாரத்தையும் விட சிறந்தது அல்லாஹ் உணவளிப்போரில் சிறந்தவன்" எனக் கூறுவீராக!

நூல் : புகாரி 4899

பொருளாதாரம் முக்கியம் என்றாலும் வணக்க வழிபாடுகளுக்கு அடுத்த நிலையில்தான் அதை வைக்க வேண்டும் என்று இஸ்லாம் இதன் மூலம் வழிகாட்டுகிறது.

صحيح البخاري

6427 - حدثنا إسماعيل، قال: حدثني مالك، عن زيد بن أسلم، عن عطاء بن يسار، عن أبي سعيد الخدري، قال: قال رسول الله صلى الله عليه وسلم: «إن أكثر ما أخاف عليكم ما يخرج الله لكم من بركات الأرض» قيل: وما بركات الأرض؟ قال: «زهرة الدنيا» فقال له رجل: هل يأتي الخير بالشر؟ فصمت النبي صلى الله عليه وسلم حتى ظننا أنه ينزل عليه، ثم جعل يمسح عن جبينه، فقال: «أين السائل؟» قال: أنا - قال أبو سعيد: لقد حمدناه حين طلع ذلك - قال: «لا يأتي الخير إلا بالخير، إن هذا المال خضرة حلوة، وإن كل ما أنبت الربيع يقتل حبطا أو يلم، إلا آكلة الخضرة، أكلت حتى إذا امتدت خاصرتاها، استقبلت الشمس، فاجترت وثلطت وبالت، ثم عادت فأكلت. وإن هذا المال حلوة، من أخذه بحقه، ووضعه في حقه، فنعم المعونة هو، ومن أخذه بغير حقه كان كالذي يأكل ولا يشبع»

(ஒரு நாள்) நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடையில் நின்று "இறைவன் உங்களுக்காக வெளிப்படுத்தும் பூமியின் பரக்கத் எனும் அருளைத்தான் உங்கள் விஷயத்தில் நான் அதிகம் அஞ்சுகிறேன்" என்று சொன்னார்கள். "பூமியின் பரக்கத்கள் எவை?" என்று கேட்கப்பட்டது. அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் "(கனிமப் பொருட்கள், ஆடை அணிகலன்கள், பயிர் வகைகள் ஆகிய) இவ்வுலகக் கவர்ச்சிப் பொருட்கள் (தாம் அவை)" என்று பதிலளித்தார்கள். அப்போது ஒரு மனிதர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் "(செல்வம் எனும்) நன்மை தீமையை உருவாக்குமா?" என்று வினவினார். அதற்கு (பதிலளிக்காமல்) நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மௌனமாக இருந்தார்கள். எந்த அளவிற்கென்றால், அவர்களுக்கு வேத அறிவிப்பு (வஹீ) அருளப்படுகிறதோ என்று நாங்கள் நினைத்தோம். பிறகு, தமது நெற்றியைத் துடைக்கலானார்கள். பின்னர் "கேள்வி கேட்டவர் எங்கே?" என்று வினவினார்கள். அம்மனிதர் "(இதோ) நான் (இங்கிருக்கிறேன்)" என்று கூறினார். (அவர் கேள்வி கேட்டதையடுத்து மக்களுக்குப் பயனளிக்கும்) அந்தப் பதில்

வெளிப்பட்டதற்காக அவரை நாங்கள் மெச்சினோம். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள் : நன்மையால் நன்மையே விளையும். இந்த (உலகின்) செல்வம் பசுமையானதும் இனிமையானதுமாகும். வாய்க்கால் மூலம் விளைகின்ற (பயிர்கள்) ஒவ்வொன்றும் (கால்நடைகளை,) வயிறு புடைக்கத் தின்னவைத்துக் கொன்று விடுகின்றன; அல்லது கொல்லும் அளவுக்குச் சென்று விடுகின்றன. பசுமையான புல்லைத் தின்னும் கால்நடைகளைத் தவிர. (அவை மடிவதில்லை. ஏனெனில்,) அவை (புல்லைத்) தின்று வயிறு நிரம்பிவிடும்போது சூரியனை நோக்கி(ப் படுத்து)க் கொண்டு அசை போடுகின்றன. (இதனால் நன்கு சீரணமாகி) சாணமும் சிறுநீரும் வெளியேறுகின்றன. பின்னர் (வயிறு காலியானவுடன்) மறுபடியும் சென்று மேய்கின்றன. இந்த (உலகின்) செல்வம் இனிமையானதாகும். யார் இதை உரிய முறையில் சம்பாதித்து உரிய முறையில் செலவிடுகின்றாரோ அவருக்கு அது அருளாக அமையும். யார் இதை முறையற்ற வழிகளில் சம்பாதிக்கின்றாரோ அவர் உண்டும் வயிறு நிரம்பாதவரைப் போன்றவராவார்.

நூல் : புகாரி 6427

மற்றொரு அறிவிப்பில் பின்வருமாறு வருகிறது.

صحيح البخاري

2842 - حدثنا محمد بن سنان، حدثنا فليح، حدثنا هلال، عن عطاء بن يسار، عن أبي سعيد الخدري رضي الله عنه: أن رسول الله صلى الله عليه وسلم قام على المنبر، فقال: «إنما أخشى عليكم من بعدي ما يفتح عليكم من بركات الأرض»، ثم ذكر زهرة الدنيا، فبدأ بإحداهما، وثنى بالأخرى، فقام رجل فقال: يا رسول الله، أويأتي الخير بالشر؟ فسكت عنه النبي صلى الله عليه وسلم، قلنا: يوحى إليه، وسكت الناس كأن على رءوسهم الطير، ثم إنه مسح [ص:27] عن وجهه الرحضاء، فقال: «أين السائل آنفا، أوخير هو - ثلاثا - إن الخير لا يأتي إلا بالخير، وإنه كلما ينبت الربيع ما يقتل حبطا أو يلم إلا آكلة الخضر، كلما أكلت حتى إذا امتلأت خاصرتاها، استقبلت الشمس، فثلطت وبالت، ثم رتعت، وإن هذا المال خضرة حلوة، ونعم صاحب المسلم لمن أخذه بحقه، فجعله في سبيل الله، واليتامى والمساكين وابن السبيل، ومن لم يأخذه بحقه، فهو كالآكل الذي لا يشبع، ويكون عليه شهيدا يوم القيامة»

இந்தச் செல்வம் பசுமையானதும் இனிமையானதும் ஆகும். அதை முறைப்படி அடைந்து, அதை அல்லாஹ்வின் பாதையிலும், அனாதைகளுக்காகவும், ஏழை எளியவர்களுக்காகவும் செலவிட்ட முஸ்லிமுக்கு அந்தச் செல்வம் சிறந்த தோழனாகும். அதை முறைப்படி அடையாதவன் உண்டும் வயிறு நிரம்பாதவனைப்

போன்றவன் ஆவான். அச்செல்வம் மறுமை நாளில் அவனுக்கெதிராகச் சாட்சி சொல்லும்" என்று கூறினார்கள்.

நூல் : புகாரி 2842

பொருளாதாரத்தினால் ஏற்படும் கேடுகளை மேற்கண்ட ஆதாரங்களில் இருந்து நாம் அறிந்து கொள்ளலாம்.

இறையச்சம் இல்லாமல் மனம் போனபடி வாழ்பவர்களுக்கு எந்த அறிவுரையும் பயனளிக்காது. ஆனால் மார்க்கத்தில் பேணுதலாக இருப்பவர்களும் பொருளாதாரம் குறித்த எச்சரிக்கைகளைப் பொருட்படுத்துவதில்லை.

பொருளாதாரத்தைத் திரட்டுவதிலும் அதைச் செலவிடுவதிலும் மார்க்கத்தைப் பேணுவது சாத்தியமில்லை என்று இவர்கள் நினைக்கின்றனர். இந்த விஷயத்தில் மார்க்கத்தைப் பேணினால் உலகில் வாழ இயலாது என்றும் நினைக்கின்றனர்.

மற்ற விஷயங்களில் மார்க்கத்தைப் பேணுவது எப்படி எளிதானதாக உள்ளதோ அது போல் பொருளாதார விஷயத்திலும் மார்க்கத்தைப் பேணி நடப்பது எளிதானதுதான். பொருளாதாரம் குறித்த நம்முடைய பார்வையை இஸ்லாம் சொல்லக் கூடியவாறு மாற்றிக் கொண்டால் இது எளிதானதுதான்.

அது குறித்து விபரமாகப் பார்ப்போம்.

## வறுமையிலும் செம்மையாக வாழ

## வறுமையும் சோதனைதான் வசதிகளும் சோதனைதான்

ஒருவருக்கு இறைவன் பொருள் வசதியைக் கொடுத்தால் அவரை அதன் மூலம் சோதித்துப் பார்க்கிறான். அதுபோல் ஒருவருக்கு வறுமையை அல்லாஹ் வழங்கினால் அதன் மூலம் அல்லாஹ் அவரைச் சோதித்துப் பார்க்கிறான் என்று நம்புவது மனமாற்றத்துக்கான முதல் பயிற்சியாகும்.

பொருளாதாரத்தைத் திரட்டும்போதும் அதை அனுபவிக்கும்போதும் மனிதன் எல்லை மீறுவதற்குக் காரணம் பொருளாதாரமும், வறுமையும் நம்மைச் சோதித்துப் பார்ப்பதற்காக இறைவன் வைக்கும் பரீட்சையாகும் என்பதைப் புரிந்து கொள்ளாமல் இருப்பது தான்.

இதைப் புரிந்து கொள்ளும் ஒருவன் வறுமையின்போதும் செல்வச் செழிப்பின்போதும் தடம் புரளமாட்டான்.

வறுமை ஏற்படும்போது இறைவன் அநீதி இழைத்து விட்டான் என்ற எண்ணத்தை ஷைத்தான் ஏற்படுத்துவான். வறுமையைப் போக்கிட திருட்டு போன்ற தவறான வழிகளில் ஷைத்தான் நம்மை இழுத்துச் சென்று அதை நியாயமாக்கிக் காட்டுவான்.

வறுமை இந்த வகையில் சோதனையாக அமைந்து விடுகிறது.

மனிதனை அவனது இறைவன் மரியாதையுடன் வாழச் செய்து இன்பத்தையும் வழங்கி சோதிக்கும்போது "என் இறைவன் என்னைக் கண்ணியமாக நடத்தினான்" என்று கூறுகிறான். அவனது செல்வத்தை அளவுடன் வழங்கி சோதிக்கும்போது "என் இறைவன் என்னை அவமானப்படுத்தி விட்டான்" எனக் கூறுகிறான்.

திருக்குர்ஆன் 89 : 15, 16

صحيح البخاري

6368 - حدثنا معلى بن أسد، حدثنا وهيب، عن هشام بن عروة، عن أبيه، عن عائشة رضي الله عنها: أن النبي صلى الله عليه وسلم كان يقول: «اللهم إني أعوذ بك من الكسل والهرم، والمأثم والمغرم، ومن فتنة القبر، وعذاب القبر، ومن فتنة النار وعذاب النار، ومن شر فتنة الغنى، وأعوذ بك من فتنة الفقر، وأعوذ بك من فتنة المسيح الدجال، اللهم اغسل عني خطاياي بماء الثلج والبرد، ونق قلبي من الخطايا كما نقيت الثوب الأبيض من الدنس، وباعد بيني وبين خطاياي كما باعدت بين المشرق والمغرب»

இறைவா சோம்பலிலிருந்தும், தள்ளாமையிலிருந்தும், பாவத்திலிருந்தும், கடனிலிருந்தும், மண்ணறையின் சோதனையிலிருந்தும் அதன் வேதனையிலிருந்தும், நரகத்தின் சோதனையிலிருந்தும், அதன் வேதனையிலிருந்தும், செல்வத்தின் தீமைகளிலிருந்தும் உன்னிடம் நான் பாதுகாப்புக் கோருகிறேன். மேலும், வறுமையின் சோதனையிலிருந்தும் நான் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். (பெருங்குழப்பவாதியான) மஸீஹுத் தஜ்ஜாலின் சோதனையிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். இறைவா! பனிக்கட்டியாலும் ஆலங்கட்டியாலும் என் தவறுகளை என்னிலிருந்து கழுவுவாயாக! மேலும், அழுக்கிலிருந்து வெண்மையான ஆடையை நீ தூய்மைப்படுத்துவதைப் போன்று தவறுகளிலிருந்து என் உள்ளத்தைத் தூய்மைப்படுத்துவாயாக! கிழக்கிற்கும் மேற்கிற்கும் இடையே நீ ஏற்படுத்திய இடைவெளியைப் போன்று எனக்கும் என் தவறுகளுக்குமிடையே நீ இடைவெளியை ஏற்படுத்துவாயாக என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பிரார்த்தனை செய்தார்கள்.

நூல் : புகாரி : 6368, 3375, 6376, 6377

செல்வத்தைக் கொடுத்து அல்லாஹ் சோதிப்பது போல் செல்வத்தை எடுத்தும் சோதிப்பான் என்பதைப் பின்வரும் வசனத்தில் இருந்து அறியலாம்.

உங்களுக்கு முன் சென்றோருக்கு ஏற்பட்டது போல் உங்களுக்கும் ஏற்படாமல் சொர்க்கத்தில் நுழையலாம் என்று எண்ணிக் கொண்டிருக்கிறீர்களா? அவர்களுக்கு வறுமையும், துன்பமும் ஏற்பட்டன. "அல்லாஹ்வின் உதவி எப்போது?" என்று (இறைத்) தூதரும் அவருடன் உள்ள நம்பிக்கை கொண்டோரும் கூறுமளவுக்கு அலைக்கழிக்கப்பட்டனர். கவனத்தில் கொள்க! அல்லாஹ்வின் உதவி அருகிலேயே உள்ளது.

திருக்குர்ஆன் 2: 214

சோதித்துப் பார்ப்பதற்காகவே சிலருக்கு அல்லாஹ் செல்வத்தை வழங்குகிறான். சோதித்துப் பார்ப்பதற்காகவே சிலரை வறுமையில் வாடவிடுகிறான் என்பதை மேற்கண்ட ஆதாரங்கள் மூலம் நாம் அறிந்து கொள்கிறோம்.

கொடுத்தும், கொடுக்காமல் எடுத்தும் அல்லாஹ் சோதிக்கிறான் என்று ஒரு முஸ்லிம் உறுதியாக நம்பும்போது பொருளாதாரத்தைத் திரட்டுவதிலும் செலவிடுவதிலும் செய்யும் பல தவறுகளில் இருந்து அவன் விலகிக் கொள்ள முடியும்.

வறுமை வரும்போது இதன் மூலம் அல்லாஹ் நம்மைச் சோதிக்கிறான் என்று நம்பினால் பொருள் திரட்டுவதற்காக நெறிமுறைகளை நாம் மீற மாட்டோம். செல்வம் வழங்கப்பட்டால் இதுவும் நம்மைச் சோதிப்பதற்காகவே என்று நம்பினால் செல்வம் வந்து விட்டது என்பதற்காக நாம் ஆட்டம் போட மாட்டோம்.

## வறுமையும் செல்வமும் திறமையால் மட்டும் கிடைப்பதல்ல

ஒருவருக்கு வழங்கப்படும் செல்வம் அவரது திறமையினாலோ, அறிவினாலோ, கடின உழைப்பினாலோ மட்டும் கிடைப்பதல்ல என்ற உண்மையைப் புரிந்து கொள்வது செல்வத்தின் மீது வெறிபிடித்து அலைவதைக் கட்டுப்படுத்தும்.

திறமை மிக்கவர்களில் பெரும் செல்வந்தர்கள் இருப்பது போல் திறமையற்ற பலரும் செல்வந்தர்களாக இருப்பதை நாம் காண்கிறோம்.

கடினமாக உழைப்பவர்களில் செல்வந்தர்கள் இருப்பது போல் சராசரியாக உழைப்பவர்களிலும் செல்வந்தர்கள் உள்ளனர். அறவே உழைப்பு இல்லாத செல்வந்தர்களையும் நாம் காண்கிறோம்.

அறிவும் திறமையும் உள்ளவர்களில் அதிகமானோர் பரம ஏழைகளாக இருப்பதையும், அறிவும் திறமையும் இல்லாத பலர் செல்வந்தர்களாக இருப்பதையும் காண்கிறோம்.

அதுபோல் கடின உழைப்பாளிகளில் சிலர் செல்வந்தர்களாக இருப்பது போல் சோம்பேறிகளில் சிலரும் செல்வந்தர்களாக உள்ளனர்.

இந்த உண்மையை இஸ்லாம் நமக்கு நினைவுபடுத்தி நம்மை நெறிப்படுத்துகிறது.

தான் நாடியோருக்கு அல்லாஹ் செல்வத்தைத் தாராளமாக வழங்குகிறான். குறைத்தும் வழங்குகிறான். அவர்கள் இவ்வுலக வாழ்க்கையின் மூலம் மகிழ்ச்சியடைகின்றனர். மறுமையுடன் ஒப்பிடும்போது இவ்வுலக வாழ்க்கை அற்ப சுகம் தவிர வேறில்லை.

திருக்குர்ஆன் 13:26

தான் நாடியோருக்கு உமது இறைவன் செல்வத்தைத் தாராளமாக வழங்குகிறான். குறைத்தும் வழங்குகிறான். அவன் தனது அடியார்களை நன்கறிந்தவனாகவும், பார்ப்பவனாகவும் இருக்கிறான்.

திருக்குர்ஆன் 17:30

தான் நாடியோருக்குச் செல்வத்தை அல்லாஹ் தாராளமாகவும், குறைத்தும் வழங்குகிறான் என்பதை அவர்கள் பார்க்கவில்லையா? நம்பிக்கை கொள்ளும் சமுதாயத்துக்கு இதில் பல சான்றுகள் உள்ளன.

திருக்குர்ஆன் 30:37

செல்வத்தைத் திரட்டுவதற்காக நாம் நெறிமுறைகளைப் பேணாமல் நடந்தாலும் நமக்கு அல்லாஹ் எதை எழுதி வைத்துள்ளானோ அதுதான் கிடைக்கும். நெறிமுறைகளைப் பேணி நாம் நடந்தாலும் நமக்குக் கிடைக்க வேண்டியது கிடைத்து விடும்.

நமக்குக் கிடைக்க வேண்டும் என்று இறைவன் விதித்தது எப்படியும் கிடைத்து விடும் எனும்போது நாம் ஏன் நெறிமுறைகளை மீறி பாவத்தைக் கட்டிக் கொள்ள வேண்டும் என்ற உண்மையை மேற்கண்ட வசனங்கள் மூலம் அல்லாஹ் சொல்லித்தருகிறான்.

## செல்வம் நல்லோர் என்பதற்கான அடையாளம் அல்ல

செல்வம் வழங்கப்பட்டவர்கள் அனைவரும் நல்லவர்கள் பாக்கியவான்கள் என்றும் செல்வம் வழங்கப்படாதவர்கள் துர்பாக்கியசாலிகள் எனவும் மனிதன் நம்புகிறான். இந்த நம்பிக்கையின் காரணமாகவே வறுமையை அவனால் தாங்கிக் கொள்ள முடியாமல் நிம்மதியை இழந்து விடுகிறான். மனிதன் இதை மாற்றிக் கொள்ள வேண்டும். ஏனெனில் இதில் சிறிதளவும் உண்மை இல்லை. மனிதர்களின் வாழ்க்கையை உற்று நோக்கும் போது இதை அறிந்து கொள்ளலாம்.

செல்வம் கொடுக்கப்பட்ட அனைவரும் நல்லவர்கள் அல்லர். செல்வம் வழங்கப்படாதவர்கள் அனைவரும் கெட்டவர்களும் அல்லர் என்பது தான் உண்மை.

அதிகமான செல்வம் வழங்கப்பட்டவர்கள் அனைவரும் நல்லவர்களாக இல்லை. மகா கெட்டவர்களும் செல்வந்தர்களில் உள்ளனர்.

அது போல் ஏழைகள் அனைவரும் கெட்டவர்களாக இல்லை. அவர்களிலும் மிக நல்லவர்கள் அதிக அளவில் இருக்கிறார்கள்.

இந்த உண்மையை மனிதன் புரிந்து கொள்ளும் போது தனக்கு ஏற்பட்டுள்ள வறுமையால் மனநிம்மதி இழக்க மாட்டான். இதைப் புரிந்து கொள்வது பொருளீட்டுவதற்காக எப்படியும் நடந்து கொள்ளலாம் என்ற எண்ணத்தை மாற்றி அமைக்கும்.

கெட்டவர்களில் பலர் பெரும் செல்வந்தர்களாக இருந்ததையும் நல்லவர்களில் பலர் கஷ்டப்பட்டதையும் இதற்காகவே அல்லாஹ் நமக்கு எடுத்துக் காட்டுகிறான்.

## கெட்டவர்களுக்கும் செழிப்பான வாழ்க்கை

மூஸா (அலை) அவர்களின் சமுதாயத்தில் காரூன் என்ற கெட்டவனுக்குச் செல்வத்தைக் கொடுத்ததை அல்லாஹ் பின்வரும் வசனத்தில் சொல்லிக் காட்டுகிறான்.

காரூன், மூஸாவின் சமுதாயத்தில் ஒருவனாக இருந்தான். அவர்களுக்கு அநீதி இழைத்தான். அவனுக்குக் கருவூலங்களை வழங்கினோம். அவற்றின் சாவிகளைச் சுமப்பது வலிமை மிக்க கூட்டத்தினருக்குச் சிரமமாக இருக்கும்.

திருக்குர்ஆன் 28:76

தனது அலங்காரத்துடன் அவன் தனது சமுதாயத்திடம் சென்றான். "காரூனுக்குக் கொடுக்கப்பட்டது போன்று நமக்கும் கொடுக்கப்பட்டிருக்கக் கூடாதா? அவன் பெரும் பாக்கியமுடையவனாக இருக்கிறான்" என்று இவ்வுலக வாழ்க்கையை விரும்புவோர் கூறினர்.

திருக்குர்ஆன் 28:79

பொக்கிஷங்களைப் பூட்டிவைக்கும் அறைகளின் சாவிகளைச் சுமப்பதற்கு பெருங்கூட்டம் தேவை; அது அவர்களுக்குச் சிரமமாக இருக்கும் என்பதும் காரூனின் செல்வம் எந்த அளவுக்கு இருந்திருக்கும் என்பதை நம் கண் முன்னால் நிறுத்துகிறது.

மூஸா (அலை) சமுதாயத்தில் வாழ்ந்த கொடுங்கோலனாகிய ஃபிர்அவ்னுக்கு அளப்பரிய செல்வத்தை அல்லாஹ் வழங்கியிருந்தான் என்று கீழ்க்காணும் வசனம் கூறுகிறது.

"எங்கள் இறைவா! ஃபிர்அவ்னுக்கும், அவனது சபையோருக்கும் இவ்வுலக வாழ்க்கையில் அலங்காரத்தையும், செல்வங்களையும் அளித்திருக்கிறாய்! எங்கள் இறைவா! உன் பாதையிலிருந்து அவர்களை வழிகெடுக்கவே (இது பயன்படுகிறது). எங்கள் இறைவா! அவர்களின் செல்வங்களை அழித்து, அவர்களின் உள்ளங்களையும் கடினமாக்குவாயாக! துன்புறுத்தும் வேதனையைக் காணாமல் அவர்கள் நம்பிக்கை கொள்ள மாட்டார்கள்" என்று மூஸா கூறினார்.

திருக்குர்ஆன் 10:88

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் காலத்தில் இறைவனுக்கு இணைகற்பித்துக் கொண்டிருந்த குரைஷ் குலத்தாருக்குச் செல்வத்தை வாரி வழங்கியிருந்ததை அல்லாஹ் பின்வரும் வசனத்தில் நினைவூட்டுகிறான்.

குரைஷிகளை மகிழ்வித்ததற்காகவும், குளிர் மற்றும் கோடை காலப் பயணங்களில் அவர்களை மகிழ்வித்ததற்காகவும் இந்த ஆலயத்தின் இறைவனை அவர்கள் வணங்கட்டும். பசியின்போது அவர்களுக்கு அவன் உணவளித்தான். பயத்திலிருந்து அவர்களுக்கு அபயமளித்தான்.

திருக்குர்ஆன் 106வது அத்தியாயம்

சிலருக்கு செல்வத்தை அதிக அளவில் வழங்குவது அவர்களை ஆட்டம் போட வைத்து கடும் தண்டனை அளிப்பதற்காகத்தான் என்று அல்லாஹ் சொல்லிக் காட்டுகிறான்.

அவர்களின் மக்கட்செல்வமும், பொருட்செல்வமும் உம்மைக் கவர வேண்டாம். அவற்றின் மூலம் இவ்வுலக வாழ்க்கையில் அவர்களைத் தண்டிப்பதையும், அவர்கள் (ஏகஇறைவனை) மறுத்துக் கொண்டிருக்கும் நிலையில் அவர்களது உயிர்கள் பிரிவதையுமே அல்லாஹ் நாடுகிறான்.

திருக்குர்ஆன் 9:55

அவர்களுக்கு நாம் செல்வத்தையும், பிள்ளைகளையும் வழங்கியிருப்பது குறித்து "நல்லவற்றை விரைந்து வழங்குகிறோம்" என்று எண்ணுகிறார்களா? அவ்வாறில்லை! அவர்கள் உணர மாட்டார்கள்.

திருக்குர்ஆன் 23: 55.56

## நல்லவர்களுக்கும் செழிப்பான வாழ்க்கை

கெட்டவர்களுக்குச் செல்வம் வழங்கப்பட்டுள்ளது என்று திருக்குர்ஆன் கூறுவது போலவே நல்லவர்களுக்குச் செல்வம் வழங்கப்பட்டுள்ளதையும் கூறுகிறது.

சுலைமான் (அலை) அவர்களுக்கு வழங்கப்பட்ட செல்வச் செழிப்பைப் பின்வருமாறு திருக்குர்ஆன் எடுத்துக் காட்டுகிறது.

இம்மாளிகையில் நுழைவாயாக!" என்று அவளிடம் கூறப்பட்டது. அதை அவள் கண்டபோது தண்ணீர்த் தடாகம் என நினைத்து, தனது கீழாடையைக் கரண்டைக்கு மேல் உயர்த்தினாள். "இது பளிங்குகளால் பளபளப்பாக்கப்பட்ட மாளிகை" என்று அவள் கூறினாள். "நான் எனக்கே தீங்கு இழைத்து விட்டேன். சுலைமானுடன் சேர்ந்து அகிலத்தின் இறைவனுக்குக் கட்டுப்பட்டு விட்டேன்" என்று அவள் கூறினாள்.

திருக்குர்ஆன் - 27:44

தண்ணீர் என்று நினைக்கும் அளவுக்கு சுலைமான் நபியவர்களின் அரண்மனையின் தரைத்தளம் இருந்தது என்றால் எத்தகைய சொகுசான வசதியை அல்லாஹ் அவர்களுக்கு வழங்கியிருந்தான் என்பதை அறியலாம்.

தாவூதுக்கு சுலைமான் வாரிசானார். "மக்களே! பறவையின் மொழி எங்களுக்குக் கற்றுத் தரப்பட்டுள்ளது. அனைத்துப் பொருட்களும் எங்களுக்குத் தரப்பட்டுள்ளது. இதுவே தெளிவான அருட்கொடையாகும்" என்று அவர் கூறினார். ஜின்கள், மனிதர்கள், பறவைகள் ஆகியவற்றின் படைகள் சுலைமானுக்காகத் திரட்டப்பட்டு அவர்கள் அணி வகுக்கப்பட்டனர்.

திருக்குர்ஆன் 27:16,17

அவர் விரும்பிய மாளிகைகளையும், சிற்பங்களையும், தடாகங்களைப் போன்ற கொப்பரைகளையும், நகர்த்த முடியாத பாத்திரங்களையும், அவருக்காக அவை செய்தன. "தாவூதின் குடும்பத்தாரே! நன்றியுடன் செயல்படுங்கள்! எனது அடியார்களில் நன்றியுடையோர் குறைவாகவே உள்ளனர்" (என்று கூறினோம்.

திருக்குர்ஆன் 34:13

## நல்லவர்களுக்கும் வறுமை

சுலைமான் நபிக்கு ஏராளமான செல்வங்களை வழங்கிய இறைவன் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கும் ஆரம்பத்தில் நல்ல செல்வத்தை வழங்கி இருந்தான். நபியாக அவர்கள் நியமிக்கப்படுவதற்கு முன் அவர்கள் பெரிய செல்வந்தராக இருந்தார்கள்.

உம்மை வறுமையில் இருக்கக் கண்டு தன்னிறைவு பெற்றவராக்கினான்.

திருக்குர்ஆன் - 93:8

ஆனால் இறைத்தூதராக அவர்கள் நியமிக்கப்பட்டது முதல் அவர்களின் செல்வம் குறைந்து கொண்டே வந்து கற்பனை செய்து பார்க்க முடியாத வறுமையை அவர்கள் சந்தித்தார்கள்.

صحيح البخاري

2567 - حدثنا عبد العزيز بن عبد الله الأويسي، حدثنا ابن أبي حازم، عن أبيه، عن يزيد بن رومان، عن عروة، عن عائشة رضي الله عنها، أنها قالت لعروة: ابن أختي «إن كنا لننظر إلى الهلال، ثم الهلال، ثلاثة أهلة في شهرين، وما أوقدت في أبيات رسول الله صلى الله عليه وسلم نار»، فقلت يا خالة: ما كان يعيشكم؟ قالت: " الأسودان: التمر والماء، إلا أنه قد كان لرسول الله صلى الله عليه وسلم جيران من الأنصار، كانت لهم منائح، وكانوا يمنحون رسول الله صلى الله عليه وسلم من ألبانهم، فيسقينا "

உர்வா பின் ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது :

என்னிடம் ஆயிஷா (ரலி) அவர்கள், "என் சகோதரி மகனே! நாங்கள் பிறை பார்ப்போம்; மீண்டும் பிறை பார்ப்போம்; பிறகும் பிறை பார்ப்போம். இப்படி இரண்டு மாதங்களில் மூன்று முறை பிறை பார்ப்போம். அப்படியிருந்தும், அல்லாஹ்வின் தூதருடைய வீட்டில் (அடுப்பில்) நெருப்பு மூட்டப்படாது" என்று கூறினார்கள். நான், "என் சிற்றன்னையே! நீங்கள் எதைக் கொண்டுதான் வாழ்க்கை நடத்தினீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "இரு கருப்பான பொருள்கள் : (ஒன்று) பேரீச்சம் பழம்; (மற்றொன்று) தண்ணீர். மேலும் அல்லாஹ்வின் தூதருக்கு அன்சாரிகளான சில அண்டை வீட்டார் இருந்தார்கள். அவர்களிடம் குறிப்பிட்ட காலத்திற்கு இலவசமாகப் பயன்படுத்திக் கொள்ள மற்றவர்கள் வழங்கிய ஒட்டகங்கள் இருந்தன.

அவர்கள் (அவற்றிலிருந்து கிடைக்கின்ற) தமக்குரிய பாலை நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குக் கொடுப்பார்கள். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அதை எங்களுக்கு அருந்தக் கொடுப்பார்கள்" என்று கூறினார்கள்.

நூல் : புகாரி 2567

صحيح البخاري

5413 - حدثنا قتيبة بن سعيد، حدثنا يعقوب، عن أبي حازم، قال: سألت سهل بن سعد، فقلت: هل أكل رسول الله صلى الله عليه وسلم النقي؟ فقال سهل: «ما رأى رسول الله صلى الله عليه وسلم النقي، من حين ابتعثه الله حتى قبضه الله» قال: فقلت: هل كانت لكم في عهد رسول الله صلى الله عليه وسلم مناخل؟ قال: «ما رأى رسول الله صلى الله عليه وسلم منخلا، من حين ابتعثه الله حتى قبضه الله» قال: قلت: كيف كنتم تأكلون الشعير غير منخول؟ قال: كنا نطحنه وننفخه، فيطير ما طار، وما بقي ثريناه فأكلناه

அபூஹாஸிம் (ரஹ்) அவர்கள் கூறியதாவது :

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் (நன்கு சலித்து சுத்தம் செய்யப்பட்ட மாவில் தயாரிக்கப்பட்ட) வெள்ளை ரொட்டியைச் சாப்பிட்டதுண்டா? என்று சஹ்ல் பின் சஅத் (ரலி) அவர்களிடம் நான் கேட்டேன். அதற்கு சஹ்ல் (ரலி) அவர்கள், "நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை (தூதராக) அல்லாஹ் தேர்ந்தெடுத்ததிலிருந்து அவர்களுக்கு மரணத்தை அளிக்கும் வரை (சலித்து சுத்தமாக்கப்பட்ட மாவினாலான) வெள்ளை ரொட்டியைப் பார்த்ததேயில்லை" என்று பதிலளித்தார்கள். "நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் காலத்தில் உங்களிடம் சல்லடைகள் இருந்ததுண்டா?" என்று நான் கேட்டேன். அதற்கு அவர்கள், "நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை (தூதராக) அல்லாஹ் தேர்ந்தெடுத்ததிலிருந்து மரணிக்கச் செய்யும் வரை சல்லடையைக் கண்டதேயில்லை" என்றார்கள். "சலிக்காத கோதுமையை நீங்கள் எப்படிச் சாப்பிட்டு வந்தீர்கள்? என்று நான் கேட்டேன். அதற்கு அவர்கள், "நாங்கள் கோதுமையை அரைத்து, (உமியை நீக்கி) அதில் (வாயால்) ஊதுவோம். அதிலிருந்து (தவிடு, உமி போன்ற) பறப்பன பறந்து விடும். எஞ்சியதைத் தண்ணீர் கலந்து உண்போம்" என்றார்கள்.

நூல் : புகாரி 5413

صحيح البخاري

5416 - حَدَّثَنَا قُتَيْبَةُ، حَدَّثَنَا جَرِيرٌ، عَنْ مَنْصُورٍ، عَنْ إِبْرَاهِيمَ، عَنِ الأَسْوَدِ، عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا، قَالَتْ: «مَا شَبِعَ آلُ مُحَمَّدٍ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ مُنْذُ قَدِمَ المَدِينَةَ، مِنْ طَعَامِ البُرِّ ثَلاَثَ لَيَالٍ تِبَاعًا، حَتَّى قُبِضَ»

ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் :

முஹம்மத் (ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வந்ததிலிருந்து அவர்கள் இறக்கும் வரை அவர்களின் குடும்பத்தார் கோதுமை உணவைத் தொடர்ந்து மூன்று நாட்கள் வயிறு நிரம்ப உண்டதில்லை.

நூல் : புகாரி 5416, 5374

صحيح البخاري

5423 - حدثنا خلاد بن يحيى، حدثنا سفيان، عن عبد الرحمن بن عابس، عن أبيه، قال: قلت لعائشة: أنهى النبي صلى الله عليه وسلم أن تؤكل لحوم الأضاحي فوق ثلاث؟ قالت: «ما فعله إلا في عام جاع الناس فيه، فأراد أن يطعم الغني الفقير، وإن كنا لنرفع الكراع، فنأكله بعد خمس عشرة» قيل: ما اضطركم إليه؟ فضحكت، قالت: «ما شبع آل محمد صلى الله عليه وسلم من خبز بر مأدوم ثلاثة أيام حتى لحق بالله»

ஆபிஸ் பின் ரபீஆ அல்கூஃபீ (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள் :

"(ஹஜ் பெருநாளில் அறுக்கப்படும்) குர்பானி இறைச்சியை மூன்று நாட்களுக்கு மேல் வைத்துச் சாப்பிடுவதை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தடை செய்தார்களா?" என்று ஆயிஷா (ரலி) அவர்களிடம் நான் கேட்டேன். அதற்கு அவர்கள், "மக்கள் (பஞ்சத்தால்) பசி பட்டினியோடு இருந்த ஓர் ஆண்டில்தான் அவர்கள் அப்படி(த் தடை) செய்தார்கள். வசதி உள்ளவர், ஏழைக்கு உணவளிக்க வேண்டும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அப்போது விரும்பினார்கள். (பிறகு) நாங்கள் ஆட்டுக் காலை எடுத்து வைத்துப் பதினைந்து நாட்களுக்குப் பிறகும்கூட அதைச் சாப்பிட்டு வந்தோம்" என்று பதிலளித்தார்கள். "உங்களுக்கு இப்படிச் செய்ய வேண்டிய கட்டாயம் என்ன வந்தது?" என்று ஆயிஷா (ரலி) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள் சிரித்து விட்டு, "முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்விடம் சென்று சேரும் வரை அவர்களுடைய குடும்பத்தார் தொடர்ச்சியாக மூன்று நாட்கள் குழம்புடன் வெள்ளைக் கோதுமை ரொட்டியை வயிறு நிரம்பச் சாப்பிட்டதில்லை" என்று சொன்னார்கள்.

நூல் : புகாரி 5423

صحيح مسلم

5480 - حَدَّثَنِى زُهَيْرُ بْنُ حَرْبٍ حَدَّثَنَا جَرِيرُ بْنُ عَبْدِ الْحَمِيدِ عَنْ فُضَيْلِ بْنِ غَزْوَانَ عَنْ أَبِى حَازِمٍ الأَشْجَعِىِّ عَنْ أَبِى هُرَيْرَةَ قَالَ جَاءَ رَجُلٌ إِلَى رَسُولِ اللَّهِ -صلى الله عليه وسلم- فَقَالَ إِنِّى مَجْهُودٌ. فَأَرْسَلَ إِلَى بَعْضِ نِسَائِهِ فَقَالَتْ وَالَّذِى بَعَثَكَ بِالْحَقِّ مَا عِنْدِى إِلاَّ مَاءٌ. ثُمَّ أَرْسَلَ إِلَى أُخْرَى فَقَالَتْ مِثْلَ ذَلِكَ حَتَّى قُلْنَ كُلُّهُنَّ مِثْلَ ذَلِكَ لاَ وَالَّذِى بَعَثَكَ بِالْحَقِّ مَا عِنْدِى إِلاَّ مَاءٌ. فَقَالَ « مَنْ يُضِيفُ هَذَا اللَّيْلَةَ رَحِمَهُ اللَّهُ ». فَقَامَ رَجُلٌ مِنَ الأَنْصَارِ فَقَالَ أَنَا يَا رَسُولَ اللَّهِ. فَانْطَلَقَ بِهِ إِلَى رَحْلِهِ فَقَالَ لاِمْرَأَتِهِ هَلْ عِنْدَكِ شَىْءٌ. قَالَتْ لاَ إِلاَّ قُوتُ صِبْيَانِى. قَالَ فَعَلِّلِيهِمْ بِشَىْءٍ فَإِذَا دَخَلَ ضَيْفُنَا فَأَطْفِئِى السِّرَاجَ وَأَرِيهِ أَنَّا نَأْكُلُ فَإِذَا أَهْوَى لِيَأْكُلَ فَقُومِى إِلَى السِّرَاجِ حَتَّى تُطْفِئِيهِ. قَالَ فَقَعَدُوا وَأَكَلَ الضَّيْفُ. فَلَمَّا أَصْبَحَ غَدَا عَلَى النَّبِىِّ -صلى الله عليه وسلم- فَقَالَ « قَدْ عَجِبَ اللَّهُ مِنْ صَنِيعِكُمَا بِضَيْفِكُمَا اللَّيْلَةَ ».

ஒரு மனிதர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்து, "எனக்கு (கடுமையான பசி)த் துன்பம் ஏற்பட்டுள்ளது" என்று கூறினார். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தம் துணைவியரில் ஒருவரிடம் ஆளனுப்பி (அவர்களிடம் உணவு ஏதேனும் இருக்கிறதா என்று கேட்டு வரச் சொன்)னார்கள். அதற்கு அத்துணைவியார், "தங்களைச் சத்திய (மார்க்க)த்துடன் அனுப்பியவன் மீது ஆணையாக! என்னிடம் தண்ணீரைத் தவிர வேறெதுவும் இல்லை" என்று பதிலளித்தார். பிறகு (தம் துணைவியரில்) மற்றொருவரிடம் ஆளனுப்பியபோது, அவரும் அதைப் போன்றே பதிலளித்தார். முடிவில் ஒவ்வொரு துணைவியரிடமிருந்தும் அதே பதிலே வந்தது. "இல்லை; தங்களைச் சத்திய (மார்க்க)த்துடன் அனுப்பியவன் மீது ஆணையாக! என்னிடம் தண்ணீரைத் தவிர வேறெதுவும் இல்லை" என்றே கூறினர்.

நூல் : முஸ்லிம் 5480

صحيح مسلم

7634 - حَدَّثَنَا أَبُو بَكْرِ بْنُ أَبِى شَيْبَةَ وَأَبُو كُرَيْبٍ وَإِسْحَاقُ بْنُ إِبْرَاهِيمَ قَالَ إِسْحَاقُ أَخْبَرَنَا وَقَالَ الآخَرَانِ حَدَّثَنَا أَبُو مُعَاوِيَةَ عَنِ الأَعْمَشِ عَنْ إِبْرَاهِيمَ عَنِ الأَسْوَدِ عَنْ عَائِشَةَ قَالَتْ مَا شَبِعَ رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- ثَلاَثَةَ أَيَّامٍ تِبَاعًا مِنْ خُبْزِ بُرٍّ حَتَّى مَضَى لِسَبِيلِهِ.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், ஒரே நாளில் இரண்டு வேளை ரொட்டியும் ஆலிவ் எண்ணெயும் வயிறு நிரம்ப உண்ணாமலேயே இறந்தார்கள்.

நூல் : முஸ்லிம் 7634

صحيح البخاري

5421 - حدثنا هدبة بن خالد، حدثنا همام بن يحيى، عن قتادة، قال: كنا نأتي أنس بن مالك رضي الله عنه، وخبازه قائم، قال: كلوا، «فما أعلم النبي صلى الله عليه وسلم رأى رغيفا مرققا حتى لحق بالله، ولا رأى شاة سميطا بعينه قط»

கத்தாதா பின் திஆமா (ரஹ்) அவர்கள் கூறியதாவது :

நாங்கள் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடம் சென்று வருவோம். அவர்களுடன் அவர்களுக்காக ரொட்டி தயாரிப்பவர் ஒருவரும் இருப்பார். (ஒரு நாள்) அனஸ் (ரலி) அவர்கள், "சாப்பிடுங்கள்! (ஆனால்,) நான் அறிந்த வரை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அல்லாஹ்விடம் சென்று சேரும் வரை மிருதுவான ரொட்டியைப் பார்த்ததில்லை. வெந்நீரால் முடி களையப்பட்டு தோலுடன் சமைக்கப்பட்ட (இளம்) ஆட்டை அவர்கள் தமது கண்ணாலும் ஒருபோதும் கண்டதில்லை" என்று கூறினார்கள்.

நூல் : புகாரி 5421, 6457

صحيح البخاري

2069 - حدثنا مسلم، حدثنا هشام، حدثنا قتادة، عن أنس، ح حدثني محمد بن عبد الله بن حوشب، حدثنا أسباط أبو اليسع البصري [ص:57]، حدثنا هشام الدستوائي، عن قتادة، عن أنس رضي الله عنه: أنه مشى إلى النبي صلى الله عليه وسلم بخبز شعير، وإهالة سنخة، ولقد «رهن النبي صلى الله عليه وسلم درعا له بالمدينة عند يهودي، وأخذ منه شعيرا لأهله» ولقد سمعته يقول: «ما أمسى عند آل محمد صلى الله عليه وسلم صاع بر، ولا صاع حب، وإن عنده لتسع نسوة»

அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது :

நான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் தீட்டப்படாத கோதுமையில் தயாரிக்கப்பட்ட ரொட்டியையும் வாசனை நீங்கிய உருக்கப்பட்ட கொழுப்பையும் கொண்டு சென்றிருக்கிறேன். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது கவசத்தை மதீனாவில் உள்ள ஒரு யூதரிடம் அடைமானமாக வைத்து அவரிடமிருந்து தமது குடும்பத்தினருக்காகத் தீட்டப்படாத கோதுமையை வாங்கியிருந்தார்கள். முஹம்மத் (ஸல்) அவர்களின் குடும்பத்தாரிடம் தீட்டிய கோதுமையில் ஒரு ஸாஉ, மற்ற தானியத்தில் ஒரு ஸாஉ இருந்ததில்லை. அந்த நேரத்தில் நபியவர்களுக்கு ஒன்பது மனைவியர் இருந்தனர்.

நூல் : புகாரி 2069, 2508

ஸாவு என்பது சுமார் இரண்டு லிட்டர் அளவுடைய அளவையாகும்.

குறிப்பு : நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு ஏன் ஒன்பது மனைவியர் என்பது குறித்து அறிந்திட

"நபிகள் நாயகம் பல திருமணங்கள் செய்தது ஏன்'

என்ற நமது நூலை வாசிக்கவும்.

378 வது குறிப்பையும்

வாசிக்கவும்

صحيح مسلم

2770 - وَحَدَّثَنَا أَبُو كَامِلٍ فُضَيْلُ بْنُ حُسَيْنٍ حَدَّثَنَا عَبْدُ الْوَاحِدِ بْنُ زِيَادٍ حَدَّثَنَا طَلْحَةُ بْنُ يَحْيَى بْنِ عُبَيْدِ اللَّهِ حَدَّثَتْنِى عَائِشَةُ بِنْتُ طَلْحَةَ عَنْ عَائِشَةَ أُمِّ الْمُؤْمِنِينَ - رضى الله عنها - قَالَتْ قَالَ لِى رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- ذَاتَ يَوْمٍ « يَا عَائِشَةُ هَلْ عِنْدَكُمْ شَىْءٌ ». قَالَتْ فَقُلْتُ يَا رَسُولَ اللَّهِ مَا عِنْدَنَا شَىْءٌ. قَالَ « فَإِنِّى صَائِمٌ ». قَالَتْ فَخَرَجَ رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- فَأُهْدِيَتْ لَنَا هَدِيَّةٌ - أَوْ جَاءَنَا زَوْرٌ - قَالَتْ - فَلَمَّا رَجَعَ رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- قُلْتُ يَا رَسُولَ اللَّهِ أُهْدِيَتْ لَنَا هَدِيَّةٌ - أَوْ جَاءَنَا زَوْرٌ - وَقَدْ خَبَأْتُ لَكَ شَيْئًا. قَالَ « مَا هُوَ ». قُلْتُ حَيْسٌ. قَالَ « هَاتِيهِ ». فَجِئْتُ بِهِ فَأَكَلَ ثُمَّ قَالَ « قَدْ كُنْتُ أَصْبَحْتُ صَائِمًا ». قَالَ طَلْحَةُ فَحَدَّثْتُ مُجَاهِدًا بِهَذَا الْحَدِيثِ فَقَالَ ذَاكَ بِمَنْزِلَةِ الرَّجُلِ يُخْرِجُ الصَّدَقَةَ مِنْ مَالِهِ فَإِنْ شَاءَ أَمْضَاهَا وَإِنْ شَاءَ أَمْسَكَهَا.

அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது :

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஒரு நாள் என்னிடம் வந்து, "உங்களிடம் (உண்பதற்கு) ஏதேனும் இருக்கிறதா?" என்று கேட்டார்கள். நாங்கள் "இல்லை, என்றோம். "அப்படியானால் நான் (இன்று) நோன்பாளியாக இருந்து கொள்கிறேன்" என்றார்கள். பிறகு மற்றொரு நாள் அவர்கள் எம்மிடம் வந்தபோது, "அல்லாஹ்வின் தூதரே! நமக்கு ஹைஸ் எனும் பலகாரம் அன்பளிப்பாக வழங்கப்பட்டுள்ளது" என்றோம். அதற்கு அவர்கள், "எனக்கு அதைக் காட்டு. நான் இன்று காலை நோன்பு நோற்றிருந்தேன்" என்று கூறிவிட்டு, அதை (வாங்கி)ச் சாப்பிட்டார்கள்.

நூல் : முஸ்லிம் 2770

صحيح مسلم

5434 - حَدَّثَنَا أَبُو بَكْرِ بْنُ أَبِى شَيْبَةَ حَدَّثَنَا خَلَفُ بْنُ خَلِيفَةَ عَنْ يَزِيدَ بْنِ كَيْسَانَ عَنْ أَبِى حَازِمٍ عَنْ أَبِى هُرَيْرَةَ قَالَ خَرَجَ رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- ذَاتَ يَوْمٍ أَوْ لَيْلَةٍ فَإِذَا هُوَ بِأَبِى بَكْرٍ وَعُمَرَ فَقَالَ « مَا أَخْرَجَكُمَا مِنْ بُيُوتِكُمَا هَذِهِ السَّاعَةَ ». قَالاَ الْجُوعُ يَا رَسُولَ اللَّهِ. قَالَ « وَأَنَا وَالَّذِى نَفْسِى بِيَدِهِ لأَخْرَجَنِى الَّذِى أَخْرَجَكُمَا قُومُوا ». فَقَامُوا مَعَهُ فَأَتَى رَجُلاً مِنَ الأَنْصَارِ فَإِذَا هُوَ لَيْسَ فِى بَيْتِهِ فَلَمَّا رَأَتْهُ الْمَرْأَةُ قَالَتْ مَرْحَبًا وَأَهْلاً. فَقَالَ لَهَا رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- « أَيْنَ فُلاَنٌ ». قَالَتْ ذَهَبَ يَسْتَعْذِبُ لَنَا مِنَ الْمَاءِ. إِذْ جَاءَ الأَنْصَارِىُّ فَنَظَرَ إِلَى رَسُولِ اللَّهِ -صلى الله عليه وسلم- وَصَاحِبَيْهِ ثُمَّ قَالَ الْحَمْدُ لِلَّهِ مَا أَحَدٌ الْيَوْمَ أَكْرَمَ أَضْيَافًا مِنِّى - قَالَ - فَانْطَلَقَ فَجَاءَهُمْ بِعِذْقٍ فِيهِ بُسْرٌ وَتَمْرٌ وَرُطَبٌ فَقَالَ كُلُوا مِنْ هَذِهِ. وَأَخَذَ الْمُدْيَةَ فَقَالَ لَهُ رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- « إِيَّاكَ وَالْحَلُوبَ ». فَذَبَحَ لَهُمْ فَأَكَلُوا مِنَ الشَّاةِ وَمِنْ ذَلِكَ الْعِذْقِ وَشَرِبُوا

فَلَمَّا أَنْ شَبِعُوا وَرَوُوا قَالَ رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- لأَبِى بَكْرٍ وَعُمَرَ « وَالَّذِى نَفْسِى بِيَدِهِ لَتُسْأَلُنَّ عَنْ هَذَا النَّعِيمِ يَوْمَ الْقِيَامَةِ أَخْرَجَكُمْ مِنْ بُيُوتِكُمُ الْجُوعُ ثُمَّ لَمْ تَرْجِعُوا حَتَّى أَصَابَكُمْ هَذَا النَّعِيمُ ».

நபிகள் நாயகம் (ஸல்) ஒரு பகல் அல்லது ஓர் இரவு (தமது இல்லத்திலிருந்து) வெளியே புறப்பட்டு வந்தார்கள். அப்போது அபூபக்ர் (ரலி) அவர்களும் உமர் (ரலி) அவர்களும் வெளியே இருந்தனர். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "இந்த நேரத்தில் நீங்கள் இருவரும் உங்கள் வீடுகளிலிருந்து புறப்பட்டு வர என்ன காரணம்?" என்று கேட்டார்கள். அதற்கு, "பசிதான் (காரணம்), அல்லாஹ்வின் தூதரே!" என்று அவ்விருவரும் பதிலளித்தனர். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! நானும் (புறப்பட்டு வந்தது அதனால்)தான். உங்கள் இருவரையும் எது வெளியே வரச் செய்ததோ அதுதான் என்னையும் வெளியே வரச் செய்தது" என்று கூறினார்கள்.

நூல் : முஸ்லிம் 5434

صحيح مسلم

5476 - وَحَدَّثَنَا أَبُو بَكْرِ بْنُ أَبِى شَيْبَةَ حَدَّثَنَا يَزِيدُ بْنُ هَارُونَ أَخْبَرَنَا حَجَّاجُ بْنُ أَبِى زَيْنَبَ حَدَّثَنِى أَبُو سُفْيَانَ طَلْحَةُ بْنُ نَافِعٍ قَالَ سَمِعْتُ جَابِرَ بْنَ عَبْدِ اللَّهِ قَالَ كُنْتُ جَالِسًا فِى دَارِى فَمَرَّ بِى رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- فَأَشَارَ إِلَىَّ فَقُمْتُ إِلَيْهِ فَأَخَذَ بِيَدِى فَانْطَلَقْنَا حَتَّى أَتَى بَعْضَ حُجَرِ نِسَائِهِ فَدَخَلَ ثُمَّ أَذِنَ لِى فَدَخَلْتُ الْحِجَابَ عَلَيْهَا فَقَالَ « هَلْ مِنْ غَدَاءٍ ». فَقَالُوا نَعَمْ. فَأُتِىَ بِثَلاَثَةِ أَقْرِصَةٍ فَوُضِعْنَ عَلَى نَبِىٍّ فَأَخَذَ رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- قُرْصًا فَوَضَعَهُ بَيْنَ يَدَيْهِ وَأَخَذَ قُرْصًا آخَرَ فَوَضَعَهُ بَيْنَ يَدَىَّ ثُمَّ أَخَذَ الثَّالِثَ فَكَسَرَهُ بِاثْنَيْنِ فَجَعَلَ نِصْفَهُ بَيْنَ يَدَيْهِ وَنِصْفَهُ بَيْنَ يَدَىَّ ثُمَّ قَالَ « هَلْ مِنْ أُدُمٍ ». قَالُوا لاَ. إِلاَّ شَىْءٌ مِنْ خَلٍّ. قَالَ « هَاتُوهُ فَنِعْمَ الأُدُمُ هُوَ ».

ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது :

(ஒரு நாள்) நான் என் வீட்டில் அமர்ந்திருந்தேன். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் என்னைக் கடந்து சென்றார்கள். அப்போது (தம்மருகே வருமாறு) என்னை நோக்கி சைகை செய்தார்கள். நான் அவர்களிடம் எழுந்து சென்றேன். அவர்கள் எனது கையைப் பிடித்துக் கொண்டார்கள். பிறகு நாங்கள் இருவரும் நடந்தோம். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் துணைவியரில் ஒருவரது அறை வந்ததும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உள்ளே நுழைந்தார்கள். பிறகு எனக்கும் (உள்ளே வர) அனுமதியளித்தார்கள். நான் வீட்டாருக்காக இடப்பட்டிருந்த திரை வரை சென்றேன். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் "ஏதேனும் உணவு உள்ளதா?" என்று கேட்டார்கள். வீட்டார், ஆம் என்றனர். பிறகு மூன்று ரொட்டிகள் கொண்டு வரப்பட்டு,

அவர்களுக்கு முன்னால் வைக்கப்பட்டன. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஒரு ரொட்டியை எடுத்துத் தமக்கு முன்னால் வைத்தார்கள். பிறகு மற்றொரு ரொட்டியை எடுத்து எனக்கு முன்னால் வைத்தார்கள். பிறகு மூன்றாவது ரொட்டியை எடுத்து அதை (இரண்டாக)ப் பிட்டு, ஒரு பாதியைத் தமக்கு முன்னாலும் மற்றொரு பாதியை எனக்கு முன்னாலும் வைத்தார்கள். பிறகு (தம் வீட்டாரிடம்), "குழம்பேதும் இருக்கிறதா?" என்று கேட்டார்கள். வீட்டார், "இல்லை; சிறிதளவு காடியைத் தவிர வேறெதுவுமில்லை" என்று கூறினர். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "அதைக் கொண்டு வாருங்கள். குழம்புகளில் அருமையானது அதுவே" என்று சொன்னார்கள்.

நூல் : முஸ்லிம் 5476

صحيح البخاري

5386 - حدثنا علي بن عبد الله، حدثنا معاذ بن هشام، قال: حدثني أبي، عن يونس - قال علي: هو الإسكاف - عن قتادة، عن أنس رضي الله عنه، قال: «ما علمت النبي صلى الله عليه وسلم أكل على سكرجة قط، ولا خبز له مرقق قط، ولا أكل على خوان قط» قيل لقتادة: فعلام كانوا يأكلون؟ قال: «على السفر»

அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது :

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பெரிய வட்டிலில் (ஸஹனில்) வைத்து (உணவு) உண்டதை ஒருபோதும் நான் அறிந்ததில்லை. அவர்களுக்காக ஒருபோதும் மிருதுவான ரொட்டி தயாரிக்கப்பட்டதில்லை. மேலும், அவர்கள் உணவு மேசையில் (அமர்ந்து) ஒருபோதும் சாப்பிட்டதில்லை. இதன் அறிவிப்பாளரான கத்தாதா (ரஹ்) அவர்களிடம், "அப்படியென்றால், அவர்கள் எதில் அமர்ந்து உண்டு வந்தார்கள்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "உணவு விரிப்பில்" என்று பதிலளித்தார்கள்.

நூல் : புகாரி 5386, 5415

سنن الترمذي

2377 - حدثنا موسى بن عبد الرحمن الكندي حدثنا زيد بن حباب أخبرني المسعودي حدثنا عمرو بن مرة عن إبراهيم عن علقمة عن عبد الله قال : نام رسول الله صلى الله عليه و سلم على حصير فقام وقد أثر في جنبه فقلنا يا رسول الله لو اتخذنا لك وطاء فقال ما لي وما للدنيا ما أنا في الدنيا إلا كراكب استظل تحت شجرة ثم راح وتركها

நபியவர்கள் ஒரு ஈச்சம் பாயின் மீது தூங்கினார்கள். அதனுடைய வரிகள் அவர்களின் விலாப்புறத்தில் (நன்றாக) பதிந்திருந்தது. அல்லாஹ்வின் தூதரே

நாங்கள் உங்களுக்கு ஒரு விரிப்பை ஏற்பாடு செய்யட்டுமா? என்று கேட்டோம். அதற்கு நபியவர்கள் எனக்கும் இந்த உலகிற்கும் என்ன இருக்கிறது? ஒரு மரத்தின் கீழ் நிழலிற்காக ஒதுங்கி ஓய்வெடுத்து பிறகு அதை விட்டுச் செல்கின்றானே அந்தப் பயணியைப் போன்றுதான் இவ்வுலகத்தில் நான் என்று கூறினார்கள்.

நூல் : திர்மிதி 2299

صحيح البخاري

730 - حدثنا إبراهيم بن المنذر، قال: حدثنا ابن أبي فديك، قال: حدثنا ابن أبي ذئب، عن المقبري، عن أبي سلمة بن عبد الرحمن، عن عائشة رضي الله عنها، «أن النبي صلى الله عليه وسلم كان له حصير، يبسطه بالنهار، ويحتجره بالليل، فثاب إليه ناس، فصلوا وراءه»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் பாய் ஒன்று இருந்தது; பகலில் அதை விரித்துக் கொள்வார்கள். இரவில் அதையே அறை போன்று அமைத்துக் கொள்வார்கள். (அதற்குள் நின்று அவர்கள் தொழும்போது) மக்களில் சிலர் அவர்களிடம் திரண்டு (வந்து) அவர்களுக்குப் பின்னால் (நின்று அவர்களைப் பின்பற்றித்) தொழுவார்கள்.

நூல் : புகாரி 730

صحيح البخاري

382 - حدثنا إسماعيل، قال: حدثني مالك، عن أبي النضر مولى عمر بن عبيد الله، عن أبي سلمة بن عبد الرحمن، عن عائشة زوج النبي صلى الله عليه وسلم، أنها قالت: «كنت أنام بين يدي رسول الله صلى الله عليه وسلم ورجلاي، في قبلته فإذا سجد غمزني، فقبضت رجلي، فإذا قام بسطتهما»، قالت: والبيوت يومئذ ليس فيها مصابيح

ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது :

நான் (இரவில்) நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு முன்புறமாக(ப் படுத்து) உறங்கிக் கொண்டிருப்பேன். அப்போது எனது கால்கள் அவர்களது கிப்லாவில் (அவர்கள் ஸஜ்தா செய்யுமிடத்தில்) இருந்து கொண்டிருக்கும். அவர்கள் ஸஜ்தாவிற்கு வரும்போது என்னைத் தமது விரலால் தொட்டுணர்த்துவார்கள். உடனே நான் எனது கால்களை மடக்கிக் கொள்வேன். அவர்கள் நிலைக்குச் சென்று விட்டால் (மறுபடியும்) நான் கால்களை நீட்டிக் கொள்வேன். அந்த நாட்களில் (எங்கள்) வீடுகளில் விளக்குகள் இருக்கவில்லை.

நூல் : புகாரி 382, 513

صحيح البخاري

6456 - حدثني أحمد ابن أبي رجاء، حدثنا النضر، عن هشام، قال: أخبرني أبي، عن عائشة، قالت: «كان فراش رسول الله صلى الله عليه وسلم من أدم، وحشوه من ليف»

பேரீச்சம் நாரினால் நிரப்பப்பட்ட பதனிடப்பட்ட தோலே நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் படுக்கை விரிப்பாக இருந்தது.

நூல் : புகாரி 6456

صحيح البخاري

354 - حدثنا عبيد الله بن موسى، قال: حدثنا هشام بن عروة، عن أبيه، عن عمر بن أبي سلمة، «أن النبي صلى الله عليه وسلم صلى في ثوب واحد قد خالف بين طرفيه»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஒரே ஆடையை அணிந்து கொண்டு, அதன் ஒரு ஓரங்களையும் தமது தோள்கள் மீது மாற்றிப் போட்டுக் கொண்டு தொழுதார்கள்.

நூல் : புகாரி 354, 355, 356

صحيح البخاري

807 - حدثنا يحيى بن بكير، قال: حدثني بكر بن مضر، عن جعفر، عن ابن هرمز، عن عبد الله بن مالك ابن بحينة: «أن النبي صلى الله عليه وسلم كان إذا صلى فرج بين يديه حتى يبدو بياض إبطيه»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தொழும்போது (சஜ்தாவில்) தமது இரு அக்குள்களின் வெண்மை தென்படும் அளவுக்கு இரு கை (புஜங்)களையும் விரி(த்து வை)ப்பார்கள்.

நூல் : புகாரி 807

இரண்டு போர்வைதான் அவர்களின் ஆடையாக இருந்துள்ளது என்பதும் அது கூட முழுக்கைகளை மறைக்கும் அளவுக்கு இல்லாமல் ஸஜ்தாவின் போது அக்குளை வெளிப்படுத்தும் வகையில் இருந்தது என்பதும் அவர்களின் எல்லையற்ற வறுமைக்கு எடுத்துக் காட்டாக உள்ளது.

صحيح البخاري

2739 - حدثنا إبراهيم بن الحارث، حدثنا يحيى بن أبي بكير، حدثنا زهير بن معاوية الجعفي، حدثنا أبو إسحاق، عن عمرو بن الحارث ختن رسول الله صلى الله عليه وسلم أخي جويرية بنت الحارث، قال: «ما ترك رسول الله صلى الله

عليه وسلم عند موته درهما ولا دينارا ولا عبدا ولا أمة ولا شيئا، إلا بغلته [ص:3] البيضاء، وسلاحه وأرضا جعلها صدقة»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இறந்தபோது திர்ஹமையோ, தீனாரையோ (வெள்ளி நாணயத்தையோ, பொற்காசையோ), அடிமையையோ, அடிமைப் பெண்ணையோ, (வேறு எந்தச் செல்வத்தையுமோ) விட்டுச் செல்லவில்லை; "பைளா' எனும் தமது கோவேறு கழுதையையும், தம்முடைய ஆயுதங்களையும், வழிப்போக்கர்களுக்குத் தர்மமாக ஆக்கிய ஒரு நிலத்தையும் தவிர.

நூல் : புகாரி 2739

நமது உயிரினும் மேலாக மதிக்கும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் இந்த வறுமைக்கு நிகரான ஒரு வறுமையை அனுபவிப்பவர் உலகில் ஒரே ஒருவர்கூட இருக்க மாட்டார்.

நாம் வறுமையில் இருக்கிறோம் என்று கருதுபவர் தங்கள் வாழ்க்கைத் தரத்தை நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் வாழ்க்கைத் தரத்துடன் ஒப்பிட்டுப் பார்த்தால் அவர் தனது வாழ்க்கையே செழிப்பான வாழ்க்கை என்ற முடிவுக்குத்தான் வருவார்.

நம்மை விட நல்லவர்களே இவ்வளவு சிரமப்பட்டிருக்கும்போது நாம் எம்மாத்திரம் என்ற எண்ணத்தை வளர்த்துக் கொண்டால் வறுமை என்பது ஒரு பிரச்சனையே அல்ல என்ற நிலைக்கு நாம் பக்குவப்பட்டு விடுவோம்.

## பொருளாதாரம் மட்டும்தான் செல்வமா?

பொருளாதாரத்தைத் திரட்டுவதில் எந்த நெறிமுறையையும் பேணவேண்டியதில்லை என்று அதிகமான மக்கள் நம்புகிறார்கள். இதற்குக் காரணம் கெட்டவர்களுக்கு அல்லாஹ் எல்லா இன்பங்களையும் வழங்கியுள்ளதாகவும் நல்லவர்களுக்கு ஒரு இன்பத்தையும் வழங்கவில்லை என்றும் நம்புவதுதான்.

இறைவன் அளித்துள்ள நற்பேறுகள் கோடாணு கோடிகள் உள்ளன. ஆனால் பொருளாதாரம் மட்டுமே பாக்கியம் என்று கருதுவதால்தான் இந்தத் தடுமாற்றம் ஏற்படுகிறது.

ஒருவனுக்குப் பல்லாயிரம் கோடி பண வசதி இருந்தாலும் அவனுடைய வாழ்க்கையைக் கவனித்தால் நூறு சதவிகிதம் நிறைவாக இருக்காது. எத்தனையோ பணக்காரர்கள் தம்மிடம் உள்ள பணத்தை அனுபவிக்க முடியாத நிலையில் இருப்பதைக் காண்கிறோம்.

உயர்தரமான உணவை அவர்கள் சாப்பிட முடியாத அளவுக்குப் பல நோய்கள் அவர்களுக்கு இருக்கும். முக்கியமான பல உறுப்புக்கள் செயல்படாத நிலைக்குச் சென்று விடும். அவரது முழுச் சொத்தையும் செலவிட்டாலும் அதைச் சரி செய்ய முடியாது.

ஆனால் ஒரு ஏழை எதையும் சாப்பிட முடியும். அவனது உடல் உறுப்புக்கள் அனைத்தும் சீராக இருக்கும். மருத்துவத்துக்காக பெரிய அளவில் செலவு செய்யும் நிலை இருக்காது. செல்வந்தரின் நிலையை விட நமது நிலை இந்த வகையில் மேலானது என்று அவன் சிந்தித்தால் அவனுக்கு எந்தத் தடுமாற்றமும் ஏற்படாது.

உலகில் எந்த மனிதனுக்கும் நூறு சதவிகித பாக்கியங்கள் வழங்கப்படவில்லை. குறைகளும் சேர்த்தே வழங்கப்பட்டுள்ளன.

சிலருக்குப் பணத்தில் குறை இருந்தால் மற்றும் சிலருக்கு ஆரோக்கியத்தில் குறை இருக்கும். மனநிம்மதியில் குறை இருக்கும். குழந்தையின்மை என்ற

குறை வேறு சிலருக்கு இருக்கும். மனைவி மக்களால் ஏற்படும் அவப்பெயர்கள் இன்னும் சிலருக்கு உள்ள குறையாக இருக்கும்.

சிந்தித்துப் பார்த்தால் செல்வத்தை விட பெரும் பாக்கியங்கள் உலகில் இருப்பதையும், எத்தனையோ செல்வந்தர்களுக்குக் கொடுக்காத அந்த பாக்கியங்களை அல்லாஹ் தனக்கு வழங்கியுள்ளான் என்பதையும் ஒருவன் அறிந்து கொள்ள முடியும்.

கோடிகளுக்கு அதிபதிகள் பலரை நாம் பார்க்கிறோம். விரும்பிய அனைத்தையும் அனுபவிக்கும் அளவுக்கு அவர்களிடம் செல்வம் குவிந்து கிடக்கும். ஆனால் அவர்கள் இனிப்பு, இறைச்சி, மற்றும் கொழுப்புச் சத்துள்ள பல உணவுகளைச் சாப்பிடக் கூடாது என்று மருத்துவர்களால் எச்சரிக்கப்பட்டுள்ளதை நாம் காண்கிறோம். ஆனால் அவர்கள் வீட்டில் அற்ப ஊதியத்திற்காகப் பணி செய்யும் ஊழியர்கள் விரும்பிய உணவை எல்லாம் சாப்பிடும் அளவுக்கு ஆரோக்கியத்துடன் இருப்பதைக் காண்கிறோம். இது பணத்தை விட மாபெரும் பாக்கியம் அல்லவா?

எந்த மனிதனுக்கும் அனைத்து பாக்கியங்களும் வழங்கப்படவே இல்லை. அல்லாஹ் சிலருக்குப் பணத்தை வழங்கி ஆரோக்கியத்தைக் குறைத்து விடுகிறான். ஆரோக்கியத்தைக் குறைவில்லாமல் கொடுத்து குழந்தைப் பேறு இல்லாமல் ஆக்கி விடுகிறான். குழந்தைப் பேறைக் கொடுத்து வேறு ஏதேனும் சில குறைகளை அமைத்து விடுகிறான்.

இறைவன் எத்தனையோ குறைகளை நமக்குத் தராமல் வறுமை என்ற குறையைத் தந்துள்ளான் என்று புரிந்து கொண்டால் வறுமை ஒரு பிரச்சனையே அல்ல என்ற மன நிம்மதி நமக்குக் கிடைக்கும்.

மனிதனின் இந்த மனநிலையை அல்லாஹ் பின்வருமாறு எடுத்துக் காட்டுகிறான்.

மனிதனை அவனது இறைவன் மரியாதையுடன் வாழச் செய்து இன்பத்தையும் வழங்கி சோதிக்கும்போது "என் இறைவன் என்னைக் கண்ணியமாக நடத்தினான்"

என்று கூறுகிறான். அவனது செல்வத்தை அளவுடன் வழங்கி சோதிக்கும்போது "என் இறைவன் என்னை அவமானப்படுத்தி விட்டான்" எனக் கூறுகிறான்.

திருக்குர்ஆன் 89 : 15, 16

இந்த வாழ்க்கைப் பாடத்தைப் படித்துக் கொண்டால் நல்லவர்களாக வாழ்ந்து நாம் மட்டும் ஏன் கஷ்டப்படுகிறோம் என்று ஒருவன் எண்ண மாட்டான். நமக்குப் பணக் கஷ்டம் இருப்பது போல் மற்றவர்களுக்கு வேறு விதமான கஷ்டங்கள் உள்ளன என்று வாழ்க்கையை சரியாகப் புரிந்து கொள்ளும்போது நல்லவனாக வாழ்வதால் நமக்கு எந்த இழப்பும் ஏற்படவில்லை என்பதைப் புரிந்து கொள்வான்.

## பட்ட கஷ்டங்கள் வீணாவதில்லை

நமக்கு அதிகமான கஷ்டத்தை அல்லாஹ் கொடுக்கும் போது அதைச் சகித்துக் கொண்டால் நாம் பட்ட கஷ்டங்களுக்கான பலனை மறுமையில் குறைவின்றி அல்லாஹ் வழங்குவான். நல்லவனாக வாழ்வதால் நமக்கு இழப்பு ஏதும் இல்லை; மறுமையில் நமக்கு மாபெரும் பரிசுகள் காத்துக் கிடக்கின்றன என்று நம்பும்போது நல்லவனாக வாழ்வதற்கான உறுதி அதிகரிக்கும்.

இந்த உலகில் நல்லவனாக வாழும்போது சிரமங்கள் ஏற்பட்டால் நல்லவனாக வாழ்ந்ததற்கான பரிசை இன்னொரு உலகத்தில் நாம் பெறப் போகிறோம். இவ்வுலகத்தில் சொகுசாக வாழ்வதற்காக நெறிமுறைகளை மீறினால் அதற்கான தண்டனையை நாம் இன்னொரு உலகத்தில் அனுபவிக்க வேண்டும் என்ற உறுதியான நம்பிக்கை நம்மைத் தடம் புரளாமல் காப்பாற்றும்.

இது பற்றி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தெளிவான அறிவுரைகளைக் கூறியுள்ளனர்.

صحيح البخاري

5645 - حدثنا عبد الله بن يوسف، أخبرنا مالك، عن محمد بن عبد الله بن عبد الرحمن بن أبي صعصعة، أنه قال: سمعت سعيد بن يسار أبا الحباب، يقول: سمعت أبا هريرة، يقول: قال رسول الله صلى الله عليه وسلم: «من يرد الله به خيرا يصب منه»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

யாருக்கு அல்லாஹ் நன்மையை நாடுகின்றானோ அவரைச் சோதனைக்கு உள்ளாக்குகின்றான்.

நூல் : புகாரி 5645

صحيح البخاري

5641 - حدثني عبد الله بن محمد، حدثنا عبد الملك بن عمرو، حدثنا زهير بن محمد، عن محمد بن عمرو بن حلحلة، عن عطاء بن يسار، عن أبي سعيد الخدري، وعن أبي هريرة: عن النبي صلى الله عليه وسلم قال: «ما يصيب المسلم، من نصب ولا وصب، ولا هم ولا حزن ولا أذى ولا غم، حتى الشوكة يشاكها، إلا كفر الله بها من خطاياه»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

ஒரு முஸ்லிமைத் தைக்கும் முள் உள்பட அவருக்கு நேரிடும் துன்பம், நோய், துக்கம், கவலை, தொல்லை, மனவேதனை ஆகிய எதுவாயினும் அதற்குப் பதிலாக அவருடைய பாவங்களிலிருந்து சிலவற்றை அல்லாஹ் மன்னிக்காமல் இருப்பதில்லை.

நூல் : புகாரி 5641

صحيح البخاري

5652 - حدثنا مسدد، حدثنا يحيى، عن عمران أبي بكر، قال: حدثني عطاء بن أبي رباح، قال: قال لي ابن عباس: ألا أريك امرأة من أهل الجنة؟ قلت: بلى، قال: هذه المرأة السوداء، أتت النبي صلى الله عليه وسلم فقالت: إني أصرع، وإني أتكشف، فادع الله لي، قال: «إن شئت صبرت ولك الجنة، وإن شئت دعوت الله أن يعافيك» فقالت: أصبر، فقالت: إني أتكشف، فادع الله لي أن لا أتكشف، فدعا لها حدثنا محمد، أخبرنا مخلد، عن ابن جريج، أخبرني عطاء: «أنه رأى أم زفر تلك امرأة طويلة سوداء، على ستر الكعبة»

அதாஉ பின் அபீரபாஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது :

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் என்னிடம், "சொர்க்கவாசியான ஒரு பெண்மணியை உங்களுக்குக் காட்டட்டுமா?" என்று கேட்டார்கள். நான், "ஆம்; (காட்டுங்கள்)" என்று சொன்னேன். அவர்கள், இந்தக் கறுப்பு நிறப் பெண்மணி தாம் அவர். இவர் (ஒரு நாள்) நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்து, "நான் வலிப்பு நோயால் (அடிக்கடி) பாதிக்கப்படுகிறேன். அப்போது என் (உடலிலிருந்து ஆடை விலகி) உடல் திறந்து கொள்கின்றது. ஆகவே, எனக்காக அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்" என்றார். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "நீ நினைத்தால் பொறுமையாக இருக்கலாம். (இதற்குப் பதிலாக) உனக்குச் சொர்க்கம் கிடைக்கும். நீ விரும்பினால் உனக்குக் குணமளிக்கும்படி அல்லாஹ்விடம் நான் பிரார்த்திக்கிறேன்" என்று சொன்னார்கள். இந்தப் பெண்மணி, "நான் பொறுமையாகவே இருந்து விடுகிறேன். ஆனால், (வலிப்பு வரும்போது ஆடை விலகி) என் உடல் திறந்து கொள்கிறது. அப்படித் திறந்து கொள்ளாமல் இருக்க அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்" என்று சொன்னார். அவ்வாறே நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அப்பெண்ணுக்காகப் பிரார்த்தனை செய்தார்கள்.

நூல் : புகாரி 5652

ஒரு முஸ்லிம் சொர்க்கத்துக்குச் செல்ல நல்லறங்கள் காரணமாக அமைவது போல் துன்பங்களைச் சகித்துக் கொள்வதும் சொர்க்கம் செல்வதற்கான காரணமாக அமைந்துள்ளது என்பதற்கு இந்த நபிமொழி சான்றாக அமைந்துள்ளது.

صحيح البخاري

5653 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ، حَدَّثَنَا اللَّيْثُ، قَالَ: حَدَّثَنِي ابْنُ الهَادِ، عَنْ عَمْرٍو، مَوْلَى المُطَّلِبِ، عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: سَمِعْتُ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ يَقُولُ: " إِنَّ اللَّهَ قَالَ: إِذَا ابْتَلَيْتُ عَبْدِي بِحَبِيبَتَيْهِ فَصَبَرَ، عَوَّضْتُهُ مِنْهُمَا الجَنَّةَ " يُرِيدُ: عَيْنَيْهِ، تَابَعَهُ أَشْعَثُ بْنُ جَابِرٍ، وَأَبُو ظِلاَلٍ هِلاَلٌ، عَنْ أَنَسٍ، عَنِ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

அல்லாஹ் கூறுகிறான் : நான் என் அடியானை, அவனுக்கு விருப்பமான இரண்டை (கண்களைப் பறித்து)க் கொண்டு சோதித்து, அவன் அதைப் பொறுத்துக் கொண்டால், அவற்றுக்குப் பதிலாக சொர்க்கத்தை நான் அவனுக்கு வழங்குவேன்.

நூல் : புகாரி 5653

இந்த உலகத்தில் அல்லாஹ் தந்த செல்வங்களை நாம் அனுபவிக்க வேண்டும் என்றால் அதற்குக் கண் மிகவும் அவசியமாகும். கண்ணிருப்பதால்தான் அதிகம் செலவு செய்கிறோம். நாம் அழகான ஆடை வாங்குகிறோம்; அழகான வீட்டை வாங்குகிறோம். எல்லாப் பொருளையும் அழகானவையாகத் தேர்ந்தெடுத்து வாங்குவதற்குக் காரணம் கண்கள்தான்.

இவ்வளவு பெரிய பாக்கியம் மற்றவர்களுக்கு இருப்பது போல் நமக்கு இல்லாமல் போய் விட்டால் நாம் அடையும் துன்பம் கொஞ்சமல்ல. கண்களை இழந்து விட்டாலும் அதனைச் சகித்துக் கொண்டு ஒழுங்காக வாழ்ந்தால் அதற்காக இறைவன் சொர்க்கத்தைத் தருகிறான்.

صحيح مسلم

7692 - حَدَّثَنَا هَدَّابُ بْنُ خَالِدٍ الأَزْدِىُّ وَشَيْبَانُ بْنُ فَرُّوخَ جَمِيعًا عَنْ سُلَيْمَانَ بْنِ الْمُغِيرَةِ - وَاللَّفْظُ لِشَيْبَانَ - حَدَّثَنَا سُلَيْمَانُ حَدَّثَنَا ثَابِتٌ عَنْ عَبْدِ الرَّحْمَنِ بْنِ أَبِى لَيْلَى عَنْ صُهَيْبٍ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- « عَجَبًا لأَمْرِ الْمُؤْمِنِ إِنَّ أَمْرَهُ كُلَّهُ خَيْرٌ وَلَيْسَ ذَاكَ لأَحَدٍ إِلاَّ لِلْمُؤْمِنِ إِنْ أَصَابَتْهُ سَرَّاءُ شَكَرَ فَكَانَ خَيْرًا لَهُ وَإِنْ أَصَابَتْهُ ضَرَّاءُ صَبَرَ فَكَانَ خَيْرًا لَهُ ».

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

இறை நம்பிக்கையாளரின் நிலையைக் கண்டு நான் வியப்படைகிறேன். அவரது (வாழ்வின்) அனைத்து அம்சங்களும் (அவருக்கு) நன்மையாகவே அமைகின்றன. இறை நம்பிக்கையாளருக்கு அல்லாமல் வேறெவருக்கும் இது கிட்டுவதில்லை. அவருக்கு ஏதேனும் மகிழ்ச்சி ஏற்பட்டால், அவர் நன்றி செலுத்துகிறார். அது அவருக்கு நன்மையாக அமைகிறது. அவருக்கு ஏதேனும் துயரம் நேர்ந்தால், அவர் பொறுமை காக்கிறார். அதுவும் அவருக்கு நன்மையாக அமைந்து விடுகிறது.

நூல் : முஸ்லிம் 7692

ஓரளவு அச்சத்தாலும், பசியாலும் செல்வங்கள், உயிர்கள், மற்றும் பலன்களைச் சேதப்படுத்தியும் உங்களைச் சோதிப்போம். பொறுத்துக் கொண்டோருக்கு நற்செய்தி கூறுவீராக!

திருக்குர்ஆன் 2:155

இவ்வுலகில் நமக்கு ஏற்படும் துன்பங்களுக்கும் துயரங்களுக்கும் இறைவனிடம் பரிசு உண்டு என்று நம்பும்போது பொருளீட்டுவதற்காக நாம் மார்க்க நெறிமுறைகளை மீற மாட்டோம்.

மேலும் நம்மைவிடப் பன்மடங்கு சிறந்தவர்களான இறைத்தூதர்கள்கூட பலவித இன்னல்களை அனுபவித்தனர். மறுமையின் மாபெரும் பரிசை எதிர்பார்த்ததால் அந்தத் துன்பங்கள் அவர்களை நிலைகுலையச் செய்யவில்லை.

سنن الترمذي

2398 - حَدَّثَنَا قُتَيْبَةُ قَالَ: حَدَّثَنَا حَمَّادُ بْنُ زَيْدٍ، عَنْ عَاصِمِ ابْنِ بَهْدَلَةَ، عَنْ مُصْعَبِ بْنِ سَعْدٍ، عَنْ أَبِيهِ، قَالَ: قُلْتُ: يَا رَسُولَ اللَّهِ، أَيُّ النَّاسِ أَشَدُّ بَلَاءً؟ قَالَ: «الأَنْبِيَاءُ ثُمَّ الأَمْثَلُ فَالأَمْثَلُ، فَيُبْتَلَى الرَّجُلُ عَلَى حَسَبِ دِينِهِ، فَإِنْ كَانَ دِينُهُ صُلْبًا اشْتَدَّ بَلَاؤُهُ، وَإِنْ كَانَ فِي دِينِهِ رِقَّةٌ ابْتُلِيَ عَلَى حَسَبِ دِينِهِ، فَمَا يَبْرَحُ البَلَاءُ بِالعَبْدِ حَتَّى يَتْرُكَهُ يَمْشِي عَلَى الأَرْضِ مَا عَلَيْهِ خَطِيئَةٌ»: «هَذَا حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ» وَفِي البَابِ عَنْ أَبِي هُرَيْرَةَ، وَأُخْتِ حُذَيْفَةَ بْنِ اليَمَانِ أَنَّ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ، سُئِلَ أَيُّ النَّاسِ أَشَدُّ بَلَاءً؟ قَالَ: «الأَنْبِيَاءُ، ثُمَّ الأَمْثَلُ فَالأَمْثَلُ»

சஅது (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் :

நான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் "அல்லாஹ்வின் தூதரே! மக்களில் அதிகமாகச் சோதிக்கப்பட்டவர்கள் யார்?" என்று கேட்டேன். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) "நபிமார்கள்; பிறகு அவர்களைப் போன்றவர்கள்; பிறகு அவர்களைப் போன்றவர்கள். ஒவ்வொரு மனிதனும் அவனுடைய மார்க்கப் பிடிப்பின் அளவிற்குச் சோதிக்கப்படுவான். அவனுடைய மார்க்கப் பிடிப்பு உறுதியாக இருந்தால் அவனுடைய சோதனைகள் அதிகரிக்கப்படும். அவனுடைய மார்க்கப் பிடிப்பு உறுதியற்றதாக இருந்தால் அவனுடைய மார்க்கப் பிடிப்பின் அளவிற்கு அவன் சோதிக்கப்படுவான். ஒரு அடியான் பூமியில் நடமாடிக் கொண்டிருக்கும் காலமெல்லாம் அவன் மீது எந்தப் பாவங்களும் இல்லாமல் ஆகின்ற வரை அவனை விட்டும் சோதனைகள் நீங்காமலேயே இருக்கும்" என்று கூறினார்கள்.

நூல் : திர்மிதி 2322

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மற்றவர்களை விட அதிகம் சோதிக்கப்பட்டார்கள் என்பதையும் நாம் நினைத்துப் பார்த்தால் துன்பங்களைத் தாங்கிக் கொள்ளும் மனவலிமை நமக்கு அதிகரிக்கும்.

صحيح البخاري

5660 - حَدَّثَنَا قُتَيْبَةُ، حَدَّثَنَا جَرِيرٌ، عَنِ الأَعْمَشِ، عَنْ إِبْرَاهِيمَ التَّيْمِيِّ، عَنِ الحَارِثِ بْنِ سُوَيْدٍ، قَالَ: قَالَ عَبْدُ اللَّهِ بْنُ مَسْعُودٍ: دَخَلْتُ عَلَى رَسُولِ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ وَهُوَ يُوعَكُ وَعْكًا شَدِيدًا، فَمَسِسْتُهُ بِيَدِي فَقُلْتُ: يَا رَسُولَ اللَّهِ، إِنَّكَ لَتُوعَكُ وَعْكًا شَدِيدًا؟ فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «أَجَلْ، إِنِّي أُوعَكُ كَمَا يُوعَكُ رَجُلاَنِ مِنْكُمْ» فَقُلْتُ: ذَلِكَ أَنَّ لَكَ أَجْرَيْنِ؟ فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «أَجَلْ» ثُمَّ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «مَا مِنْ مُسْلِمٍ يُصِيبُهُ أَذًى، مَرَضٌ فَمَا سِوَاهُ، إِلَّا حَطَّ اللَّهُ لَهُ سَيِّئَاتِهِ، كَمَا تَحُطُّ الشَّجَرَةُ وَرَقَهَا»

அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் கூறியதாவது :

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கடும் காய்ச்சலால் சிரமப்பட்டுக் கொண்டிருந்தபோது நான் அவர்களிடம் சென்று அவர்களை என் கையால் தொட்டு, "அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் கடும் காய்ச்சலால் சிரமப்படுகிறீர்களே!" என்று கேட்டேன். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "ஆம்; உங்களில் இருவர் காய்ச்சலால் அடையும் துன்பத்தைப் போன்று நான் (ஒருவனே) அடைகிறேன்" என்று சொன்னார்கள். நான், "(இந்தத் துன்பத்தின் மூலம்) தங்களுக்கு இரு (மடங்கு) நன்மைகள் கிடைக்கும் என்பதா இதற்குக் காரணம்?" என்று கேட்டேன். நபிகள்

நாயகம் (ஸல்) அவர்கள் "ஆம்" என்று கூறிவிட்டுப் பிறகு, "ஒரு முஸ்லிமுக்கு ஏற்படும் நோயாயினும், அது அல்லாத வேறு துன்பமாயினும் (அதற்கு ஈடாக), மரம் தன் இலைகளை உதிர்த்து விடுவதைப் போன்று அவருடைய பாவங்களை அல்லாஹ் உதிர்க்காமல் விடுவதில்லை" என்று சொன்னார்கள்.

நூல் : புகாரி 5660

எனவே நாம் நல்லவர்களாக வாழ்வதால் இவ்வுலகில் எதையும் இழப்பதில்லை. மறுமையில் நாம் இதற்கான கூலியைப் பெறவிருக்கிறோம் என்பதை நினைவு கூர்வதன் மூலம் தவறான முறையில் பொருளீட்டுவதை விட்டு விலகிக் கொள்ள முடியும்.

## செல்வத்தை விட மானம் பெரிது

## பொருளாதாரத் தேடலில் சுயமரியாதையைப் பேணுதல்

பொருளாதாரத்தைத் தேடுவதற்காக எந்த நெறிமுறைகளையும் பேணாமல் இருப்பதற்கு மற்றொரு காரணம் மானம் மரியாதையை விட பொருளாதாரத்துக்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பதாகும்.

பொருளாதாரத்தை விட மானம் மரியாதையே முதன்மையான செல்வம் என்று இஸ்லாம் போதிக்கிறது. சுயமரியாதையை விட்டால்தான் பணம் கிடைக்கும் என்றால் பணத்தை அலட்சியம் செய்து விட்டு சுயமரியாதைக்கு முன்னுரிமை அளிக்க வேண்டும் என்று இஸ்லாம் அறிவுரை கூறுகிறது.

صحيح البخاري قَالَ: مَاذَا يَأْمُرُكُمْ؟ قُلْتُ: يَقُولُ: اعْبُدُوا اللَّهَ وَحْدَهُ وَلاَ تُشْرِكُوا بِهِ شَيْئًا، وَاتْرُكُوا مَا يَقُولُ آبَاؤُكُمْ، وَيَأْمُرُنَا بِالصَّلاَةِ وَالزَّكَاةِ وَالصِّدْقِ وَالعَفَافِ وَالصِّلَةِ.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் பிரச்சாரம் ஆரம்பக் கட்டத்தில் இருந்தபோது அவர்களைப் பற்றிக் கேள்விப்பட்ட ஹெர்குலிஸ் மன்னர் நபிகள் நாயகத்தின் அப்போதைய எதிரியாக இருந்த அபூஸுஃப்யானிடம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் அறிவுரைகள் என்ன என்று விசாரித்தபோது "அல்லாஹ் ஒருவனையே வணங்குங்கள்; அவனுக்கு எதனையும்/ எவரையும் இணையாக்காதீர்கள்; உங்கள் மூதாதையர் சொல்லி வருகின்ற (அறியாமைக் கால) கூற்றுக்களையெல்லாம் விட்டுவிடுங்கள் என்று கூறுகிறார். தொழுகையை நிறைவேற்றும்படியும், ஸகாத் கொடுக்கும்படியும், உண்மை பேசும்படியும், சுயமரியாதையைப் பேணுமாறும் உறவுகளைப் பேணும்படியும் எங்களுக்கு அவர் கட்டளையிடுகின்றார்" என்று கூறினார்.

(நீண்ட ஹதீஸின் ஒரு பகுதி) நூல் : புகாரி 7

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது ஆரம்பகாலப் பிரச்சாரத்தின்போது முன்னுரிமை அளித்தவற்றுள் சுயமரியாதையைப் பேணுவதும் ஒரு அம்சமாக இருந்ததை இந்த வரலாற்று நிகழ்ச்சியில் இருந்து நாம் அறிந்து கொள்ளலாம்.

صحيح البخاري

6470 - حَدَّثَنَا أَبُو اليَمَانِ، أَخْبَرَنَا شُعَيْبٌ، عَنِ الزُّهْرِيِّ، قَالَ: أَخْبَرَنِي عَطَاءُ بْنُ يَزِيدَ اللَّيْثِيُّ، أَنَّ أَبَا سَعِيدٍ الخُدْرِيَّ، أَخْبَرَهُ: أَنَّ أُنَاسًا مِنَ الأَنْصَارِ سَأَلُوا رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَلَمْ يَسْأَلْهُ أَحَدٌ مِنْهُمْ إِلَّا أَعْطَاهُ حَتَّى نَفِدَ مَا عِنْدَهُ، فَقَالَ لَهُمْ حِينَ نَفِدَ كُلُّ شَيْءٍ أَنْفَقَ بِيَدَيْهِ: «مَا يَكُنْ عِنْدِي مِنْ خَيْرٍ لاَ أَدَّخِرْهُ عَنْكُمْ، وَإِنَّهُ مَنْ يَسْتَعِفَّ يُعِفَّهُ اللَّهُ، وَمَنْ يَتَصَبَّرْ يُصَبِّرْهُ اللَّهُ، وَمَنْ يَسْتَغْنِ يُغْنِهِ اللَّهُ، وَلَنْ تُعْطَوْا عَطَاءً خَيْرًا وَأَوْسَعَ مِنَ الصَّبْرِ»

அன்சாரிகளில் சிலர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் (பசிக்கு உணவும் செலவுக்குப் பணமும்) கேட்டார்கள். அவ்வாறு கேட்ட யாருக்குமே நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கொடுக்காமல் இருக்கவில்லை. இறுதியாக, நபியவர்களிடம் இருந்த அனைத்தும் தீர்ந்து விட்டது. தம் கரங்களால் செலவிட்டு எல்லாப் பொருட்களும் தீர்ந்து போன பின்பு அந்த அன்சாரிகளிடம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் "என்னிடத்தில் உள்ள எந்தச் செல்வத்தையும் உங்களுக்கு வழங்காமல் நான் சேமித்து வைக்கப் போவதில்லை. (இருப்பினும்,) யார் சுயமரியாதையோடு நடந்து கொள்கிறாரோ அவரை அல்லாஹ் சுயமரியாதையுடன் வாழச் செய்வான். யார் (இன்னல்களைச்) சகித்துக் கொள்கிறாரோ அவருக்கு அல்லாஹ் (மேலும்) சகிப்புத் தன்மையை வழங்குவான். யார் பிறரிடம் தேவையாகாமல் (தன்னிறைவுடன்) இருக்கிறாரோ அவரை அல்லாஹ் தன்னிறைவு உள்ளவராக ஆக்குவான். பொறுமையைக் காட்டிலும் மேலான விசாலமானதோர் அருட்கொடை (வேறெதுவும்) உங்களுக்கு வழங்கப்படப் போவதில்லை" என்று கூறினார்கள்.

நூல் : புகாரி 6470, 1469

சுயமரியாதையை விட பணம்தான் பெரிது என்ற எண்ணம்தான் ஒரு மனிதனை யாசகம் கேட்பவனாகவும் மனிதர்களிடம் கையேந்தக் கூடியவனாகவும் ஆக்கிவிடுகிறது. எனவேதான் யாசகம் கேட்பதையும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கண்டித்துள்ளார்கள்.

## யாசிக்கக் கூடாது

صحيح البخاري

1472 - وحَدَّثَنَا عَبْدَانُ، أَخْبَرَنَا عَبْدُ اللَّهِ، أَخْبَرَنَا يُونُسُ، عَنِ الزُّهْرِيِّ، عَنْ عُرْوَةَ بْنِ الزُّبَيْرِ، وَسَعِيدِ بْنِ المُسَيِّبِ، أَنَّ حَكِيمَ بْنَ حِزَامٍ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: سَأَلْتُ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَأَعْطَانِي، ثُمَّ سَأَلْتُهُ، فَأَعْطَانِي، ثُمَّ سَأَلْتُهُ، فَأَعْطَانِي ثُمَّ قَالَ: «يَا حَكِيمُ، إِنَّ هَذَا المَالَ خَضِرَةٌ حُلْوَةٌ، فَمَنْ أَخَذَهُ بِسَخَاوَةِ نَفْسٍ بُورِكَ لَهُ فِيهِ، وَمَنْ أَخَذَهُ بِإِشْرَافِ نَفْسٍ لَمْ يُبَارَكْ لَهُ فِيهِ، كَالَّذِي يَأْكُلُ وَلاَ يَشْبَعُ، اليَدُ العُلْيَا خَيْرٌ مِنَ اليَدِ السُّفْلَى»، قَالَ حَكِيمٌ: فَقُلْتُ: يَا رَسُولَ اللَّهِ، وَالَّذِي بَعَثَكَ بِالحَقِّ لاَ أَرْزَأُ أَحَدًا بَعْدَكَ شَيْئًا حَتَّى أُفَارِقَ الدُّنْيَا، فَكَانَ أَبُو بَكْرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ، يَدْعُو حَكِيمًا إِلَى العَطَاءِ، فَيَأْبَى أَنْ يَقْبَلَهُ مِنْهُ، ثُمَّ إِنَّ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُ دَعَاهُ لِيُعْطِيَهُ فَأَبَى أَنْ يَقْبَلَ مِنْهُ شَيْئًا، فَقَالَ عُمَرُ: إِنِّي أُشْهِدُكُمْ يَا مَعْشَرَ المُسْلِمِينَ عَلَى حَكِيمٍ، أَنِّي أَعْرِضُ عَلَيْهِ حَقَّهُ مِنْ هَذَا الفَيْءِ فَيَأْبَى أَنْ يَأْخُذَهُ، فَلَمْ يَرْزَأْ حَكِيمٌ أَحَدًا مِنَ النَّاسِ بَعْدَ رَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ حَتَّى تُوُفِّيَ

ஹகீம் பின் ஹிஸாம் (ரலி) அவர்கள் கூறியதாவது :

நான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் (உதவி) கேட்டேன். அவர்கள் எனக்கு வழங்கினார்கள்; மீண்டும் (உதவி) கேட்டேன் வழங்கினார்கள். மீண்டும் கேட்டேன்; வழங்கிவிட்டு, "ஹகீமே! நிச்சயமாக இந்தச் செல்வம் பசுமையானதும், இனிமையானதுமாகும். யார் இதைப் போதுமென்ற உள்ளத்துடன் எடுத்துக் கொள்கிறாரோ அவருக்கு இதில் பரக்கத் எனும் அருள் ஏற்படுத்தப்படும்; யார் இதைப் பேராசையுடன் எடுத்துக் கொள்கின்றாரோ அவருக்கு அதில் பரக்கத் ஏற்படுத்தப்படாது. அவர் உண்ட பின்பும் வயிறு நிரம்பாதவர் போலாவார். உயர்ந்த கை தாழ்ந்த கையை விடச் சிறந்தது" என்று கூறினார்கள். அப்போது நான், "அல்லாஹ்வின் தூதரே! உங்களைச் சத்தியத்துடன் அனுப்பி வைத்தவன் மீது ஆணையாக! உங்களுக்குப் பின் உலகைப் பிரியும் வரை வேறு யாரிடமும் நான் எதையும் கேட்க மாட்டேன்" எனக் கூறினேன். ஆபூபக்ர் (ரலி) அவர்கள் (தமது ஆட்சிக் காலத்தில்) ஸகாத் பெறுமாறு ஹகீமை அழைத்தார்கள். அவர் அதை ஏற்றுக் கொள்ள மறுத்து விட்டார். பிறகு உமர் (ரலி) அவர்கள் (தமது ஆட்சியில்) ஸகாத் பெறுமாறு அவரை அழைத்தார்கள். அவர் அதையும் ஏற்க மறுத்தார். அப்போது உமர் (ரலி) அவர்கள் "முஸ்லிம் சமுதாயமே! தமது உரிமையைப் பெற்றுக் கொள்ளுமாறு நான் ஹகீமை அழைக்கிறேன். அவரோ அதைப் பெற்றுக் கொள்ள மறுக்கிறார். இதற்கு நீங்களே சாட்சி!" எனக் கூறினார்கள். ஹகீம் (ரலி) அவர்கள் மரணிக்கும் வரை நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குப் பின் வேறு யாரிடமும்

எதையும் கேட்கவேயில்லை என சயீத் பின் அல்முஸய்யப் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

நூல் : புகாரி 1472

سنن الترمذي

2326 - حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ بَشَّارٍ قَالَ: حَدَّثَنَا عَبْدُ الرَّحْمَنِ بْنُ مَهْدِيٍّ قَالَ: حَدَّثَنَا سُفْيَانُ، عَنْ بَشِيرٍ أَبِي إِسْمَاعِيلَ، عَنْ سَيَّارٍ، عَنْ طَارِقِ بْنِ شِهَابٍ، عَنْ عَبْدِ اللَّهِ بْنِ مَسْعُودٍ، قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ: «مَنْ نَزَلَتْ بِهِ فَاقَةٌ فَأَنْزَلَهَا بِالنَّاسِ لَمْ تُسَدَّ فَاقَتُهُ، وَمَنْ نَزَلَتْ بِهِ فَاقَةٌ فَأَنْزَلَهَا بِاللَّهِ، فَيُوشِكُ اللَّهُ لَهُ بِرِزْقٍ عَاجِلٍ أَوْ آجِلٍ»: «هَذَا حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ غَرِيبٌ»

யாருக்கு வறுமை ஏற்பட்டு மக்களிடம் அதை முறையிடுகிறாரோ அவருடைய வறுமை அடைக்கப்படாது. யாருக்கு வறுமை ஏற்பட்டு அதை அல்லாஹ்விடம் முறையிடுகிறாரோ அவருக்கு அல்லாஹ் விரைவான வாழ்வாதாரத்தையோ, அல்லது குறிப்பிட்ட தவணை வரையுள்ள வாழ்வாதாரத்தையோ விரைவில் வழங்குவான்.

நூல் : திர்மிதி 2248

صحيح البخاري

1480 - حَدَّثَنَا عُمَرُ بْنُ حَفْصِ بْنِ غِيَاثٍ، حَدَّثَنَا أَبِي، حَدَّثَنَا الأَعْمَشُ، حَدَّثَنَا أَبُو صَالِحٍ، عَنْ أَبِي هُرَيْرَةَ، عَنِ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ: " لَأَنْ يَأْخُذَ أَحَدُكُمْ حَبْلَهُ ثُمَّ يَغْدُوَ - أَحْسِبُهُ قَالَ: إِلَى الجَبَلِ - فَيَحْتَطِبَ، فَيَبِيعَ، فَيَأْكُلَ وَيَتَصَدَّقَ، خَيْرٌ لَهُ مِنْ أَنْ يَسْأَلَ النَّاسَ " قَالَ أَبُو عَبْدِ اللَّهِ: «صَالِحُ بْنُ كَيْسَانَ أَكْبَرُ مِنَ الزُّهْرِيِّ، وَهُوَ قَدْ أَدْرَكَ ابْنَ عُمَرَ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

என் உயிர் எவன் கைவசத்தில் உள்ளதோ அவன் மீது சத்தியமாக உங்களில் ஒருவர் கயிற்றை எடுத்துக் கொண்டு காலைப் பொழுதில் மலைக்குச் சென்று விறகு வெட்டி விற்று, தாமும் சாப்பிட்டுப் பிறருக்கும் தர்மம் செய்வது மக்களிடத்தில் யாசிப்பதை விடச் சிறந்ததாகும்.

நூல் : புகாரி 1480, 1471

صحيح البخاري

1474 - حَدَّثَنَا يَحْيَى بْنُ بُكَيْرٍ، حَدَّثَنَا اللَّيْثُ، عَنْ عُبَيْدِ اللَّهِ بْنِ أَبِي جَعْفَرٍ، قَالَ: سَمِعْتُ حَمْزَةَ بْنَ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ، قَالَ: سَمِعْتُ عَبْدَ اللَّهِ بْنَ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: قَالَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «مَا يَزَالُ الرَّجُلُ يَسْأَلُ النَّاسَ، حَتَّى يَأْتِيَ يَوْمَ القِيَامَةِ لَيْسَ فِي وَجْهِهِ مُزْعَةُ لَحْمٍ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

(மார்க்கம் அனுமதித்துள்ள காரணம் இன்றி) மக்களிடம் யாசிப்பவன் தன் முகத்தில் சிறிதளவுகூடச் சதை இல்லாதவனாக மறுமை நாளன்று வருவான்.

நூல் : புகாரி 1474

صحيح مسلم

2450 - حَدَّثَنِى عَبْدُ اللَّهِ بْنُ عَبْدِ الرَّحْمَنِ الدَّارِمِىُّ وَسَلَمَةُ بْنُ شَبِيبٍ - قَالَ سَلَمَةُ حَدَّثَنَا وَقَالَ الدَّارِمِىُّ أَخْبَرَنَا مَرْوَانُ وَهُوَ ابْنُ مُحَمَّدٍ الدِّمَشْقِىُّ - حَدَّثَنَا سَعِيدٌ - وَهُوَ ابْنُ عَبْدِ الْعَزِيزِ - عَنْ رَبِيعَةَ بْنِ يَزِيدَ عَنْ أَبِى إِدْرِيسَ الْخَوْلاَنِىِّ عَنْ أَبِى مُسْلِمٍ الْخَوْلاَنِىِّ قَالَ حَدَّثَنِى الْحَبِيبُ الأَمِينُ أَمَّا هُوَ فَحَبِيبٌ إِلَىَّ وَأَمَّا هُوَ عِنْدِى فَأَمِينٌ عَوْفُ بْنُ مَالِكٍ الأَشْجَعِىُّ قَالَ كُنَّا عِنْدَ رَسُولِ اللَّهِ -صلى الله عليه وسلم- تِسْعَةً أَوْ ثَمَانِيَةً أَوْ سَبْعَةً فَقَالَ « أَلاَ تُبَايِعُونَ رَسُولَ اللَّهِ » وَكُنَّا حَدِيثَ عَهْدٍ بِبَيْعَةٍ فَقُلْنَا قَدْ بَايَعْنَاكَ يَا رَسُولَ اللَّهِ. ثُمَّ قَالَ « أَلاَ تُبَايِعُونَ رَسُولَ اللَّهِ ». فَقُلْنَا قَدْ بَايَعْنَاكَ يَا رَسُولَ اللَّهِ. ثُمَّ قَالَ « أَلاَ تُبَايِعُونَ رَسُولَ اللَّهِ ».قَالَ فَبَسَطْنَا أَيْدِيَنَا وَقُلْنَا قَدْ بَايَعْنَاكَ يَا رَسُولَ اللَّهِ فَعَلاَمَ نُبَايِعُكَ قَالَ « عَلَى أَنْ تَعْبُدُوا اللَّهَ وَلاَ تُشْرِكُوا بِهِ شَيْئًا وَالصَّلَوَاتِ الْخَمْسِ وَتُطِيعُوا - وَأَسَرَّ كَلِمَةً خَفِيَّةً - وَلاَ تَسْأَلُوا النَّاسَ شَيْئًا ». فَلَقَدْ رَأَيْتُ بَعْضَ أُولَئِكَ النَّفَرِ يَسْقُطُ سَوْطُ أَحَدِهِمْ فَمَا يَسْأَلُ أَحَدًا يُنَاوِلُهُ إِيَّاهُ.

அவ்ஃப் பின் மாலிக் அல்அஷ்ஜஈ (ரலி) அவர்கள் கூறியதாவது :

நாங்கள் ஒன்பது பேர், அல்லது எட்டுப் பேர், அல்லது ஏழு பேர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் இருந்தோம். அப்போது அவர்கள் "நீங்கள் அல்லாஹ்வின் தூதரிடம் உறுதிமொழி அளிக்கக் கூடாதா?" என்று கேட்டார்கள். அது நாங்கள் உறுதி மொழி அளித்திருந்த புதிதாகும். எனவே, "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் முன்பே உறுதிமொழி அளித்து விட்டோம்" என்று கூறினோம். பின்னர் அவர்கள் "நீங்கள் அல்லாஹ்வின் தூதரிடம் உறுதிமொழி அளிக்கக் கூடாதா?" என்று (மீண்டும்) கேட்டார்கள். "அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் (ஏற்கெனவே) உறுதிமொழி அளித்து விட்டோம்" என்று நாங்கள் (திரும்பவும்) கூறினோம். பின்னர் (மூன்றாவது முறையாக) "நீங்கள் அல்லாஹ்வின் தூதரிடம் உறுதிமொழி அளிக்கக் கூடாதா?" என்று கேட்டபோது, நாங்கள் எங்கள் கைகளை நீட்டி "அல்லாஹ்வின் தூதரே! தங்களிடம் நாங்கள் உறுதிமொழி அளிக்கிறோம். எதற்காக நாங்கள் தங்களிடம் உறுதிமொழி அளிக்க வேண்டும்?" என்று கேட்டோம். அதற்கு அவர்கள், "அல்லாஹ் ஒருவனையே நீங்கள் வழிபட வேண்டும்; அவனுக்கு எதையும் இணையாக்கக் கூடாது; ஐவேளைத் தொழுகைகளைத் தொழ வேண்டும்; எனக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டும் (என்று உறுதிமொழி அளியுங்கள்)" என்று கூறிவிட்டு, (அடுத்த)

ஒரு வார்த்தையை மெதுவாகச் சொன்னார்கள் : "மக்களிடம் எதையும் யாசிக்கக் கூடாது" என்றும் உறுதிமொழி கேட்டார்கள். (அவ்வாறே நாங்களும் உறுதிமொழி அளித்தோம்.) பிறகு அ(வ்வாறு உறுதியளித்த)வர்களில் சிலரை நான் பார்த்திருக்கிறேன். அவர்களில் ஒருவரது சாட்டை (வாகனத்தின் மேலிருந்து) விழுந்தால்கூட அதை யாரிடமும் எடுத்துத் தருமாறு அவர்கள் கேட்டதில்லை.

நூல் : முஸ்லிம் 2450

صحيح مسلم

2446 - حَدَّثَنَا أَبُو كُرَيْبٍ وَوَاصِلُ بْنُ عَبْدِ الأَعْلَى قَالاَ حَدَّثَنَا ابْنُ فُضَيْلٍ عَنْ عُمَارَةَ بْنِ الْقَعْقَاعِ عَنْ أَبِى زُرْعَةَ عَنْ أَبِى هُرَيْرَةَ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- « مَنْ سَأَلَ النَّاسَ أَمْوَالَهُمْ تَكَثُّرًا فَإِنَّمَا يَسْأَلُ جَمْرًا فَلْيَسْتَقِلَّ أَوْ لِيَسْتَكْثِرْ ».

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

அதிகம் பொருள் சேர்ப்பதற்காக மக்களிடம் யாசிப்பவன், (நரகின்) நெருப்புக் கங்கையே யாசிக்கிறான்; அவன் குறைவாக யாசிக்கட்டும். அல்லது அதிகமாக யாசிக்கட்டும். (இரண்டும் சமமானதுதான்)

நூல் : முஸ்லிம் 2446

சுயமரியாதையை விட்டுக் கொடுக்காமல் இருக்கும் போது நம்முடைய மரியாதைக்குப் பங்கம் ஏற்படாத வகையில் நமக்கு யாரேனும் உதவினால் அதைப் பெற்றுக் கொள்வது தவறில்லை.

صحيح البخاري

1473 - حَدَّثَنَا يَحْيَى بْنُ بُكَيْرٍ، حَدَّثَنَا اللَّيْثُ، عَنْ يُونُسَ، عَنِ الزُّهْرِيِّ، عَنْ سَالِمٍ: أَنَّ عَبْدَ اللَّهِ بْنَ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، قَالَ: سَمِعْتُ عُمَرَ، يَقُولُ: كَانَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ يُعْطِينِي العَطَاءَ، فَأَقُولُ: أَعْطِهِ مَنْ هُوَ أَفْقَرُ إِلَيْهِ مِنِّي، فَقَالَ: «خُذْهُ إِذَا جَاءَكَ مِنْ هَذَا المَالِ شَيْءٌ وَأَنْتَ غَيْرُ مُشْرِفٍ وَلاَ سَائِلٍ، فَخُذْهُ وَمَا لاَ فَلاَ تُتْبِعْهُ نَفْسَكَ»

உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது :

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எனக்கு அன்பளிப்புச் செய்யும் வழக்கமுடையவர்களாக இருந்தார்கள். நான் என்னை விட ஏழைக்கு இதைக் கொடுங்களேன் என்பேன். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "இதை வாங்கிக் கொள்ளும்; நீர் பிறரிடம் கேட்காமலும் பேராசை கொள்ளாமலும்

இருக்கும்போது இவ்வாறு வரும் பொருட்களைப் பெற்றுக் கொள்ளும். ஏதும் கிடைக்கவில்லை என்றாலும் அப்பொருட்களுக்குப் பின்னால் உமது மனதைத் தொடரச் செய்யாதீர்!" என்றார்கள்.

நூல் : புகாரி 1473

## யசிப்பதற்கு யாருக்கு அனுமதி?

صحيح مسلم

2451 - حَدَّثَنَا يَحْيَى بْنُ يَحْيَى وَقُتَيْبَةُ بْنُ سَعِيدٍ كِلاَهُمَا عَنْ حَمَّادِ بْنِ زَيْدٍ قَالَ يَحْيَى أَخْبَرَنَا حَمَّادُ بْنُ زَيْدٍ عَنْ هَارُونَ بْنِ رِيَابٍ حَدَّثَنِى كِنَانَةُ بْنُ نُعَيْمٍ الْعَدَوِىُّ عَنْ قَبِيصَةَ بْنِ مُخَارِقٍ الْهِلاَلِىِّ قَالَ تَحَمَّلْتُ حَمَالَةً فَأَتَيْتُ رَسُولَ اللَّهِ -صلى الله عليه وسلم- أَسْأَلُهُ فِيهَا فَقَالَ « أَقِمْ حَتَّى تَأْتِيَنَا الصَّدَقَةُ فَنَأْمُرَ لَكَ بِهَا ». قَالَ ثُمَّ قَالَ « يَا قَبِيصَةُ إِنَّ الْمَسْأَلَةَ لاَ تَحِلُّ إِلاَّ لأَحَدِ ثَلاَثَةٍ رَجُلٍ تَحَمَّلَ حَمَالَةً فَحَلَّتْ لَهُ الْمَسْأَلَةُ حَتَّى يُصِيبَهَا ثُمَّ يُمْسِكُ وَرَجُلٍ أَصَابَتْهُ جَائِحَةٌ اجْتَاحَتْ مَالَهُ فَحَلَّتْ لَهُ الْمَسْأَلَةُ حَتَّى يُصِيبَ قِوَامًا مِنْ عَيْشٍ - أَوْ قَالَ سِدَادًا مِنْ عَيْشٍ - وَرَجُلٍ أَصَابَتْهُ فَاقَةٌ حَتَّى يَقُومَ ثَلاَثَةٌ مِنْ ذَوِى الْحِجَا مِنْ قَوْمِهِ لَقَدْ أَصَابَتْ فُلاَنًا فَاقَةٌ فَحَلَّتْ لَهُ الْمَسْأَلَةُ حَتَّى يُصِيبَ قِوَامًا مِنْ عَيْشٍ - أَوْ قَالَ سِدَادًا مِنْ عَيْشٍ - فَمَا سِوَاهُنَّ مِنَ الْمَسْأَلَةِ يَا قَبِيصَةُ سُحْتًا يَأْكُلُهَا صَاحِبُهَا سُحْتًا ».

கபீஸா பின் முகாரிக் அல்ஹிலாலீ (ரலி) கூறியதாவது :

நான் (மற்றொருவர் செலுத்த வேண்டிய) ஓர் இழப்பீட்டுத் தொகைக்குப் பொறுப்பேற்றுக் கொண்டு, நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் ஏதேனும் கேட்பதற்காகச் சென்றேன். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "தர்மப் பொருட்கள் நம்மிடம் வரும் வரை இங்கேயே இருங்கள். அதில் ஏதேனும் உங்களுக்குத் தரச் சொல்கிறோம்" என்று கூறினார்கள். பிறகு (பின்வருமாறு) கூறினார்கள் : கபீஸா! மூன்று பேருக்கு மட்டுமே யாசிக்க அனுமதி உண்டு. ஒருவர் மற்றவரது ஈட்டுத் தொகைக்குப் பொறுப்பேற்றுக் கொண்டவர். அவர் அத்தொகையை (உரியவரிடம் ஒப்படைப்பதற்காக அதைப்) பெறுகின்ற வரை யாசிக்கலாம். பிறகு (யாசிப்பதை) நிறுத்திக் கொள்ள வேண்டும். மற்றொருவர் (இயற்கைச்) சேதம் ஏற்பட்டு செல்வங்களை இழந்தவர். அவர் வாழ்க்கையின் அடிப்படையை அல்லது வாழ்க்கையின் அவசியத் தேவையை அடைந்து கொள்ளும் வரை யாசிக்கலாம். இன்னொருவர் வறுமைக்கு ஆட்பட்டவர். அவருடைய கூட்டத்தாரில் (அவரைப் பற்றி) விவரம் தெரிந்த மூவர் முன்வந்து, "இன்ன மனிதர் வறுமைக்கு ஆட்பட்டுள்ளார்" என்று (சாட்சியம்) கூறுகின்றனர் என்றால், அவர் வாழ்க்கையின் அடிப்படையை அல்லது வாழ்க்கையின் அவசியத் தேவையை அடைகின்ற வரை யாசிப்பது அவருக்குச் செல்லும். கபீஸா! இவையன்றி மற்ற யாசகங்கள் யாவும் தடை செய்யப்பட்டவையே (ஹராம்) ஆகும். (இம்மூன்று காரணங்களின்றி ஒருவர் யாசித்துச் சாப்பிட்டால்) அவர் தடை செய்யப்பட்டதையே (ஹராம்) சாப்பிடுகிறார். நூல் : முஸ்லிம் 2451

## உழைத்து உண்ணுதல்

யாசகம் கேட்டு மானத்தை இழப்பதை விட உழைத்து வாழ்வது தான் மேலானது. தன் உழைப்பில் வாழ்வதை விட சிறந்த வருவாய் ஏதுமில்லை. இது குறித்து நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் அறிவுரையை அறிந்து கொள்பவர்கள் ஒருக்காலும் யாசிக்க மாட்டார்கள்.

صحيح البخاري

2071 - حَدَّثَنِي مُحَمَّدٌ، حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يَزِيدَ، حَدَّثَنَا سَعِيدٌ، قَالَ: حَدَّثَنِي أَبُو الأَسْوَدِ، عَنْ عُرْوَةَ، قَالَ: قَالَتْ عَائِشَةُ رَضِيَ اللَّهُ عَنْهَا: كَانَ أَصْحَابُ رَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ عُمَّالَ أَنْفُسِهِمْ، وَكَانَ يَكُونُ لَهُمْ أَرْوَاحٌ، فَقِيلَ لَهُمْ: «لَوِ اغْتَسَلْتُمْ»،

நபித்தோழர்கள் பலர் உழைத்து உண்பவர்களாக இருந்தனர். இதனால் அவர்களிடம் (வியர்வை) வாடை வீசும். இதன் காரணமாகவே நீங்கள் குளிக்கக் கூடாதா? என்று அவர்களிடம் கூறப்பட்டது.

நூல் : புகாரி 2071

صحيح البخاري

2072 - حَدَّثَنَا إِبْرَاهِيمُ بْنُ مُوسَى، أَخْبَرَنَا عِيسَى بْنُ يُونُسَ، عَنْ ثَوْرٍ، عَنْ خَالِدِ بْنِ مَعْدَانَ، عَنِ المِقْدَامِ رَضِيَ اللَّهُ عَنْهُ، عَنْ رَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، قَالَ: «مَا أَكَلَ أَحَدٌ طَعَامًا قَطُّ، خَيْرًا مِنْ أَنْ يَأْكُلَ مِنْ عَمَلِ يَدِهِ، وَإِنَّ نَبِيَّ اللَّهِ دَاوُدَ عَلَيْهِ السَّلاَمُ، كَانَ يَأْكُلُ مِنْ عَمَلِ يَدِهِ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

ஒருவர் தமது கையால் உழைத்து உண்பதைவிடச் சிறந்த உணவை ஒருபோதும் உண்ண முடியாது. தாவூத் நபி அவர்கள் தமது கையால் உழைத்து உண்பவர்களாகவே இருந்தார்கள்.

நூல் : புகாரி 2072

صحيح البخاري

2073 - حَدَّثَنَا يَحْيَى بْنُ مُوسَى، حَدَّثَنَا عَبْدُ الرَّزَّاقِ، أَخْبَرَنَا مَعْمَرٌ، عَنْ هَمَّامِ بْنِ مُنَبِّهٍ، حَدَّثَنَا أَبُو هُرَيْرَةَ، عَنْ رَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «أَنَّ دَاوُدَ النَّبِيَّ عَلَيْهِ السَّلاَمُ، كَانَ لاَ يَأْكُلُ إِلَّا مِنْ عَمَلِ يَدِهِ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

தாவூத் நபி தமது கையால் உழைத்தே தவிர உண்ண மாட்டார்கள்.

நூல்  : புகாரி 2073

صحيح البخاري

2074 - حَدَّثَنَا يَحْيَى بْنُ بُكَيْرٍ، حَدَّثَنَا اللَّيْثُ، عَنْ عُقَيْلٍ، عَنِ ابْنِ شِهَابٍ، عَنْ أَبِي عُبَيْدٍ، مَوْلَى عَبْدِ الرَّحْمَنِ بْنِ عَوْفٍ، أَنَّهُ سَمِعَ أَبَا هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ، يَقُولُ: قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «لَأَنْ يَحْتَطِبَ أَحَدُكُمْ حُزْمَةً عَلَى ظَهْرِهِ، خَيْرٌ لَهُ مِنْ أَنْ يَسْأَلَ أَحَدًا، فَيُعْطِيَهُ أَوْ يَمْنَعَهُ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

பிறரிடம் யாசகம் கேட்பதைவிட ஒருவர் தமது முதுகில் விறகுக் கட்டைச் சுமந்து (விற்கச்) செல்வது சிறந்ததாகும். அவர் யாசிக்கும்போது யாரும் கொடுக்கவும் செய்யலாம்; மறுக்கவும் செய்யலாம்.

நூல் : புகாரி 2074, 2075

## பேராசையை வெல்ல

## இருப்பதைக் கொண்டு திருப்தி அடைதல்

மற்றவர்களை விட நமக்குச் செல்வம் குறைவாகக் கொடுக்கப்பட்டதைக் கண்டால் அல்லது அவ்வாறு கருதினால் அதன் காரணமாக நம்முடைய நிம்மதி பறிபோய் விடுகிறது. மன உளைச்சலுக்கு நாம் ஆளாகிறோம்.

இது போன்ற நிலை ஏற்படாமல் தவிர்ப்பதற்கும் இஸ்லாம் நமக்கு வழிகாட்டுகிறது.

இறைவன் நமக்கு எதைக் கொடுத்திருக்கிறானோ அதில் திருப்தி அடைய வேண்டும் என்பதுதான் அந்த வழி.

நம்மைப் படைத்த இறைவன் நமது தேவைகளையும் நமது நிலைகளையும் நம்மை விட நன்கு அறிந்தவன். அவன் நமக்குக் குறைவாகக் கொடுத்தாலும் அதில் நமது தேவையை நிறைவு செய்வான். அல்லது நமக்குச் சிரமத்தைக் கொடுத்துச் சோதித்துப் பார்ப்பதற்காக நமக்கு அளவோடு தந்திருப்பான் என்று நாம் கருதிக் கொண்டால் நமக்குக் கிடைத்திருப்பதில் திருப்தி ஏற்பட்டுவிடும். திருப்தி ஏற்பட்டு விட்டால் நம்முடைய நிம்மதிக்கு எந்தப் பங்கமும் ஏற்படாது.

صحيح مسلم

2467 - حَدَّثَنَا زُهَيْرُ بْنُ حَرْبٍ وَابْنُ نُمَيْرٍ قَالاَ حَدَّثَنَا سُفْيَانُ بْنُ عُيَيْنَةَ عَنْ أَبِى الزِّنَادِ عَنِ الأَعْرَجِ عَنْ أَبِى هُرَيْرَةَ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- « لَيْسَ الْغِنَى عَنْ كَثْرَةِ الْعَرَضِ وَلَكِنَّ الْغِنَى غِنَى النَّفْسِ ».

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

வாழ்க்கை வசதிகள் அதிகமாக இருப்பது செல்வமன்று; மாறாக, போதுமென்ற மனமே (உண்மையான) செல்வமாகும்.

நூல் : முஸ்லிம் 2467

இருப்பதை வைத்து திருப்தி அடையாதவன் மற்றவர்களைப் பார்த்து பொறாமைப்படுகிறான். அவருக்கு நான் சளைத்தவன் அல்ல என்று காட்டிக் கொள்ளும் விதமாக கடன் வாங்கி பெருமை அடிக்கிறான்.

வசதி படைத்தவர்கள் வீடு கட்டுவதையும், கார் வாங்குவதையும் இன்ன பிற ஆடம்பரப் பொருட்களை வாங்கிக் குவிப்பதையும் பார்த்து வசதியற்றவர்களும் ஆசைப்படுவதற்கு போதுமென்ற மனமில்லாததே காரணம்.

கடன் வாங்கிவிட்டு அதைக் கட்ட முடியாமல் திணறுவதற்கும் கடன் கொடுத்தவன் முன்னால் கூனிக் குறுகி நிற்பதற்கும் வாங்கிய கடனை வாரிசுகள் தலையில் சுமத்தி விட்டுச் செல்வதற்கும் இதுவே காரணம்.

صحيح مسلم

2473 - حَدَّثَنَا أَبُو بَكْرِ بْنُ أَبِى شَيْبَةَ حَدَّثَنَا أَبُو عَبْدِ الرَّحْمَنِ الْمُقْرِئُ عَنْ سَعِيدِ بْنِ أَبِى أَيُّوبَ حَدَّثَنِى شُرَحْبِيلُ - وَهُوَ ابْنُ شَرِيكٍ - عَنْ أَبِى عَبْدِ الرَّحْمَنِ الْحُبُلِىِّ عَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ أَنَّ رَسُولَ اللَّهِ -صلى الله عليه وسلم- قَالَ « قَدْ أَفْلَحَ مَنْ أَسْلَمَ وَرُزِقَ كَفَافًا وَقَنَّعَهُ اللَّهُ بِمَا آتَاهُ ».

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

யார் இஸ்லாத்தை ஏற்று போதுமான வாழ்வாதாரம் வழங்கப்பட்டு, அல்லாஹ் வழங்கியதைப் போதுமெனக் கருதினாரோ அவர் (வாழ்க்கையில்) வெற்றி பெற்று விட்டார்.

நூல் : முஸ்லிம் 2473

صحيح البخاري

6416 - حَدَّثَنَا عَلِيُّ بْنُ عَبْدِ اللَّهِ، حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ عَبْدِ الرَّحْمَنِ أَبُو المُنْذِرِ الطُّفَاوِيُّ، عَنْ سُلَيْمَانَ الأَعْمَشِ، قَالَ: حَدَّثَنِي مُجَاهِدٌ، عَنْ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، قَالَ: أَخَذَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ بِمَنْكِبِي، فَقَالَ: «كُنْ فِي الدُّنْيَا كَأَنَّكَ غَرِيبٌ أَوْ عَابِرُ سَبِيلٍ» وَكَانَ ابْنُ عُمَرَ، يَقُولُ: «إِذَا أَمْسَيْتَ فَلاَ تَنْتَظِرِ الصَّبَاحَ، وَإِذَا أَصْبَحْتَ فَلاَ تَنْتَظِرِ المَسَاءَ، وَخُذْ مِنْ صِحَّتِكَ لِمَرَضِكَ، وَمِنْ حَيَاتِكَ لِمَوْتِكَ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் என் தோளைப் பிடித்துக் கொண்டு "உலகத்தில் நீ வெளியூர்வாசியைப் போன்று, அல்லது வழிப்போக்கனைப் போன்று இரு" என்று சொன்னார்கள்.

நூல் : புகாரி 6416

## பேராசை கூடாது

صحيح البخاري

6435 - حَدَّثَنِي يَحْيَى بْنُ يُوسُفَ، أَخْبَرَنَا أَبُو بَكْرٍ، عَنْ أَبِي حَصِينٍ، عَنْ أَبِي صَالِحٍ، عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «تَعِسَ عَبْدُ الدِّينَارِ، وَالدِّرْهَمِ، وَالقَطِيفَةِ، وَالخَمِيصَةِ، إِنْ أُعْطِيَ رَضِيَ، وَإِنْ لَمْ يُعْطَ لَمْ يَرْضَ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

பொற்காசு, வெள்ளிக்காசு, குஞ்சம் உள்ள (ஆடம்பர) ஆடை, சதுரக் கம்பளி ஆடை ஆகியவற்றுக்கு அடிமையாகி விட்டவன் துர்பாக்கியவான் ஆவான். அவனுக்கு (செல்வம்) வழங்கப்பட்டால் திருப்தியடைவான். (செல்வம்) வழங்கப்படாவிட்டால் அதிருப்தியடைவான்.

நூல் : புகாரி 6435

سنن الترمذي

2376 - حَدَّثَنَا سُوَيْدُ بْنُ نَصْرٍ قَالَ: أَخْبَرَنَا عَبْدُ اللَّهِ بْنُ المُبَارَكِ، عَنْ زَكَرِيَّا بْنِ أَبِي زَائِدَةَ، عَنْ مُحَمَّدِ بْنِ عَبْدِ الرَّحْمَنِ بْنِ سَعْدِ بْنِ زُرَارَةَ، عَنِ ابْنِ كَعْبِ بْنِ مَالِكٍ الأَنْصَارِيِّ، عَنْ أَبِيهِ، قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ: «مَا ذِئْبَانِ جَائِعَانِ أُرْسِلَا فِي غَنَمٍ بِأَفْسَدَ لَهَا مِنْ حِرْصِ المَرْءِ عَلَى المَالِ وَالشَّرَفِ لِدِينِهِ». هَذَا حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

ஒரு ஆட்டு மந்தையினுள் அனுப்பி வைக்கப்பட்ட பசியோடு உள்ள இரண்டு ஓநாய்கள் அதனை நாசமாக்குவதை விட ஒரு மனிதனுக்கு செல்வத்தின் மீதுள்ள பேராசை அவனுடைய மார்க்கப்பற்றை நாசாமாக்கி விடும்.

நூல் : திர்மிதி 2298

صحيح البخاري

6420 - حَدَّثَنَا عَلِيُّ بْنُ عَبْدِ اللَّهِ، حَدَّثَنَا أَبُو صَفْوَانَ عَبْدُ اللَّهِ بْنُ سَعِيدٍ، حَدَّثَنَا يُونُسُ، عَنِ ابْنِ شِهَابٍ، قَالَ: أَخْبَرَنِي سَعِيدُ بْنُ المُسَيِّبِ، أَنَّ أَبَا هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: سَمِعْتُ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ يَقُولُ: " لاَ يَزَالُ قَلْبُ الكَبِيرِ شَابًّا فِي اثْنَتَيْنِ: فِي حُبِّ الدُّنْيَا وَطُولِ الأَمَلِ

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

முதியவரின் மனம்கூட இரண்டு விஷயங்களில் இளமையாகவே இருந்து வரும். 1. இம்மை வாழ்வின் (செல்வத்தின்) மீதுள்ள ஆசை. 2. நீண்ட நாள் வாழ வேண்டும் என்ற ஆசை.

நூல் : புகாரி 6420, 6421

## பேராசை என்றால் என்ன?

ஆசைக்கும் பேராசைக்கும் உள்ள வித்தியாசத்தை நாம் விளங்கிக் கொள்ள வேண்டும்.

அதிகமான பணத்தை விரும்புவதுதான் பேராசை என்று பலரும் நினைக்கின்றனர். அது தவறாகும். அற்பமான செல்வத்தின் மீதுள்ள ஆசைகூட பேராசையாக அமைந்து விடும்.

ஒரு விஷயத்தை எந்த இடத்தில் வைக்க வேண்டுமோ அந்த இடத்தில் அதை வைத்து விரும்புவது ஆசையாகும். இதற்கு மார்க்கத்தில் தடை இல்லை. ஆனால் முக்கியமான விஷயத்தைப் புறக்கணித்து விட்டு முக்கியம் குறைந்தவை மீது வைக்கும் ஆசையே பேராசை எனப்படும்.

பொருளாதாரம் மிகவும் முக்கியமானது என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால் அதைவிட முக்கியமானவையும் உள்ளன. பொருளாதாரத்துக்காக அந்த முக்கியமானவைகளை ஒருவன் புறக்கணித்து விட்டு பொருளாதாரத்தின் பின்னால் சென்றால் அவனுக்குப் பொருளாதாரத்தில் பேராசை உள்ளது என்று புரிந்து கொள்ளலாம்.

தொழுகையை விட்டுவிட்டு ஒரு காரியத்தில் ஈடுபடுவதால் ஒருவனுக்குப் பணம் கிடைக்கும் என்றால் தொழுகையை விட்டுவிட்டு அந்தப் பணத்திற்கு ஆசைப்படுவது பேராசை. தொகை சிறிதாக இருந்தாலும் அது பேராசைதான். காரணம் பணத்தை அடைவதற்காக அதைவிட முக்கியமானதை அவன் விட்டு விட்டான்.

அது போல் மனைவியுடன் மகிழ்ச்சியாக இருக்க வேண்டிய கடமை மனிதனுக்கு உண்டு. அதில் மனிதனுக்கு ஆசையும் உண்டு. ஆனால் அதிகமான பணம் கிடைக்கிறது என்பதற்காக மனைவியை விட்டு பல வருடங்கள் பிரிந்து விட ஒருவன் முன்வந்தால் அதற்குக் காரணமும் பேராசைதான். மனைவியுடன் மகிழ்ச்சியாக இருப்பதை விட பணத்துக்கு இவன் முதலிடம் கொடுத்ததால் இது பேராசையாகி விடுகிறது.

சமூகத்தைப் பாதுகாக்கும் அவசியம் ஏற்படும்போது அதில் பங்கு பெறாவிட்டால சமுதாயத்தைப் பாதிக்கும் என்ற நிலையில் பணம் திரட்டச் சென்றால் அதுவும் பேராசைதான்.

குடும்பத்தில் ஒருவர் ஆபத்தான நிலையில் இருக்கிறார். அவருக்கு உயர்தரமான சிகிச்சை அளிக்க நம்மிடம் வசதி இருக்கும்போது அரசாங்க மருத்துவ மனையில் சேர்த்தால் அதுகூட பேராசைதான்.

சுருக்கமாகச் சொன்னால் பணத்தை விட முக்கியத்துவம் கொடுக்க வேண்டிய விஷயங்களுடன் பணம் மோதும்போது நாம் பணத்துக்கு முக்கியத்துவம் கொடுப்பதே பேராசையாகும்.

ஒருவனுக்கு மருத்துவ சிகிச்சைக்காக பத்து லட்சம் ரூபாய் தேவைப்படுகிறது. இதை அடைவதற்காக அவன் ஆசைப்பட்டால் தொகை பெரிதாக இருந்தாலும் அது பேராசையாகாது. இது நியாயமான ஆசை தான். கூனிக்குறுகி கும்பிடு போட்டால் பத்து ரூபாய் கிடைக்கும் என்றால் அதற்கு ஆசைப்படுவது பேராசையாகிவிடும். ஏனெனில் மானம் மரியாதையை விட பத்து ரூபாய் இவனுக்குப் பெரிதாக தெரிகின்றது.

## பேராசையில் இருந்து எப்படி விடுபடுவது?

பேராசையில் இருந்து எப்படி விடுபடலாம்? இதையும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நமக்குத் தெளிவுபடுத்தி விட்டனர்.

நாம் எவ்வளவுதான் பொருளாதாரத்தைத் திரட்டினாலும் அது உண்மையில் நம்முடையது அல்ல. பல கோடிகளுக்கு அதிபதியாக இருப்பவர் அனைத்தையும் சாப்பிட முடியாது. அனைத்தையும் அனுபவித்து விட முடியாது. ஒரு அந்தஸ்து இதனால் கிடைக்குமே தவிர அனைத்தையும் யாராலும் அனுபவிக்க முடியாது.

ஒரு அளவுக்கு மேல் பணத்தை வைத்துக் கொண்டு ஒன்றுமே செய்ய முடியாது. இதை உணர்ந்து கொண்டால் பொருளாதாரத்தை வைக்க வேண்டிய இடத்தில் வைப்பது எளிதாகி விடும்.

صحيح مسلم

7609 - حَدَّثَنَا هَدَّابُ بْنُ خَالِدٍ حَدَّثَنَا هَمَّامٌ حَدَّثَنَا قَتَادَةُ عَنْ مُطَرِّفٍ عَنْ أَبِيهِ قَالَ أَتَيْتُ النَّبِىَّ -صلى الله عليه وسلم- وَهُوَ يَقْرَأُ (أَلْهَاكُمُ التَّكَاثُرُ) قَالَ « يَقُولُ ابْنُ آدَمَ مَالِى مَالِى - قَالَ - وَهَلْ لَكَ يَا ابْنَ آدَمَ مِنْ مَالِكَ إِلاَّ مَا أَكَلْتَ فَأَفْنَيْتَ أَوْ لَبِسْتَ فَأَبْلَيْتَ أَوْ تَصَدَّقْتَ فَأَمْضَيْتَ ».

அப்துல்லாஹ் பின் அஷ்ஷிக்கீர் (ரலி) அவர்கள் கூறியதாவது :

"மண்ணறைகளைச் சந்திக்கும் வரை அதிகமாக (செல்வத்தை)த் தேடுவது உங்கள் கவனத்தைத் திசை திருப்பி விட்டது" என்று தொடங்கும் (102வது) அத்தியாயத்தை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஓதிக் கொண்டிருந்தபோது, அவர்களிடம் நான் சென்றேன். அப்போது அவர்கள், "ஆதமின் மகன் (மனிதன்), எனது செல்வம்; எனது செல்வம்" என்று கூறுகின்றான். ஆதமின் மகனே! நீ உண்டு கழித்ததையும் உடுத்திக் கிழித்ததையும் தர்மம் செய்து (மறுமைக்காக) சேமித்ததையும் தவிர உனது செல்வத்தில் உனக்குரியது எது?" என்று கேட்டார்கள்.

நூல் : முஸ்லிம் 7609

இந்த உலகத்தில் நமக்கு எதுவும் சொந்தம் கிடையாது என்ற மனப் பக்குவத்தை நாம் வளர்த்துக் கொண்டால் நாம் பேராசைப் படமாட்டோம்.

என்னதான் பணத்தைத் திரட்டினாலும் மரணம் வந்து விட்டால் நாம் அப்படியே போட்டு விட்டுப் போய் விடுவோம் என்று புரிந்து கொள்வது பேராசையை ஒழிக்கும்.

பேராசைப்பட்டு செல்வத்தின் பின்னே நாம் அலைந்து கொண்டிருந்தால் எந்த நேரத்திலாவது போதும் என்று நாம் நினைப்போமா? ஒருக்காலும் நினைக்க மாட்டோம். ஒரு கோடி கிடைக்கும் வரை அதுவே இலட்சியமாக இருக்கும். ஒரு கோடி கிடைத்து விட்டால் அப்பாடா என்று நிம்மதிப் பெருமூச்சு விட மாட்டோம். இரண்டு கோடிக்கு அலைய ஆரம்பித்து விடுவோம். பல லட்சம் கோடிகளில்கூட நாம் திருப்தி அடைய மாட்டோம். முடிவே இல்லாத இந்தப் போக்கு ஒரு வகை மனநோய் என்றுதான் கூற வேண்டும்.

அனைத்தையும் அனுபவிக்கவும் முடியாது. பாதுகாக்கவும் முடியாது. எந்தக் கட்டத்திலும் திருப்தி அடையவும் முடியாது என்று தெரிந்து கொண்டே அதன் பின்னே அலைவது மனநோய்தான்.

இதனால்தான் மனைவி மக்கள் இன்ன பிற கடமைகளைக்கூட மனநோயாளி மறப்பதைப் போல் சிலர் மறந்து பணத்திற்காக அலைய ஆரம்பித்து விடுகின்றனர்.

صحيح البخاري

6439 - حَدَّثَنَا عَبْدُ العَزِيزِ بْنُ عَبْدِ اللَّهِ، حَدَّثَنَا إِبْرَاهِيمُ بْنُ سَعْدٍ، عَنْ صَالِحٍ، عَنِ ابْنِ شِهَابٍ، قَالَ: أَخْبَرَنِي أَنَسُ بْنُ مَالِكٍ، أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ: «لَوْ أَنَّ لِابْنِ آدَمَ وَادِيًا مِنْ ذَهَبٍ أَحَبَّ أَنْ يَكُونَ لَهُ وَادِيَانِ، وَلَنْ يَمْلَأَ فَاهُ إِلَّا التُّرَابُ، وَيَتُوبُ اللَّهُ عَلَى مَنْ تَابَ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

ஆதமின் மகனுக்கு (மனிதனுக்கு)த் தங்கத்தாலான ஒரு ஓடை இருந்தால் தனக்கு இரண்டு தங்க ஓடைகள் இருக்க வேண்டுமென்று அவன் ஆசைப்படுவான். அவனுடைய வாயை மண்ணை (மரணத்தை)த் தவிர வேறெதுவும் நிரப்பாது. மேலும், (இது போன்ற பேராசையிலிருந்து) திருந்தி பாவமன்னிப்புக் கோரி மீண்டவரின் கோரிக்கையை அல்லாஹ் ஏற்றுக் கொள்கிறான்.

நூல் : புகாரி 6439, 6436

செல்வம் அவசியம் என்றபோதும் அதைவிட முக்கியமான கொள்கைக்காக செல்வத்தைத் தூக்கியெறியவும் முஸ்லிம்கள் தயாராக இருக்க வேண்டும் என்று இஸ்லாம் வலியுறுத்துகிறது. இப்படி கொள்கைக்காக செல்வத்தையும், வசதி வாய்ப்புகளையும் தூக்கி எறிந்த ஃபிர்அவ்னின் மனைவி ஆசியா அவர்களை உலக முஸ்லிம்கள் அனைவருக்கும் முன்மாதிரி என்று அல்லாஹ் கூறுவதில் இருந்து இதை நாம் அறிந்து கொள்ளலாம்.

"என் இறைவா! சொர்க்கத்தில் உன்னிடம் எனக்கொரு வீட்டை எழுப்புவாயாக! ஃபிர்அவ்னிடமிருந்தும், அவனது சித்திரவதையிலிருந்தும் என்னைக் காப்பாயாக! அநீதி இழைத்த கூட்டத்திலிருந்தும் என்னைக் காப்பாயாக!" என்று ஃபிர்அவ்னின் மனைவி கூறியதால் அவரை நம்பிக்கை கொண்டோருக்கு அல்லாஹ் முன்னுதாரணமாகக் கூறுகிறான்.

திருக்குர்ஆன் 66:11

கொடுங்கோல் ஆட்சி செய்த ஃபிர்அவ்ன் என்பவன் தன்னைக் கடவுள் என்று வாதிட்டபோது அவனது மனைவி ஆஸியா அவர்கள் அதை எதிர்த்தார்கள். மனிதன் கடவுளாக முடியாது; அகிலத்தைப் படைத்த மாபெரும் ஆற்றல் மிக்கவன்தான் கடவுள் என்று துணிந்து முழங்கினார்கள். பட்டத்து ராணி என்ற அடிப்படையில் இவ்வுலகில் அனுபவித்து வந்த பல இன்பங்களை இதனால் இழக்க நேரும் என்று தெரிந்து கொண்டே கொள்கைக்கு முன்னுரிமை கொடுத்தார்கள். செல்வத்துக்கு முன்னுரிமை கொடுக்காமல் கொள்கைக்காக செல்வத்தை தியாகம் செய்த இப்பெண்மணியை ஒட்டு மொத்த முஸ்லிம் சமுதாயத்துக்கும் முன்மாதிரி என்று அல்லாஹ் புகழ்ந்துரைக்கிறான்.

## இருப்பதைக் கொண்டு எவ்வாறு திருப்தி அடைவது

இருப்பதை வைத்து திருப்தி அடைவது எப்படி என்பதையும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காட்டித் தந்துள்ளனர்.

உலகத்தில் நம்மை விட மேலான நிலையில் சிலர் இருப்பது போல் நம்மை விடத் தாழ்ந்த நிலையிலும் பலர் உள்ளனர். தாழ்ந்த நிலையில் உள்ளவர்களுடன் நமது நிலையை ஒப்பு நோக்கிப் பார்த்தால் இருப்பதை வைத்து திருப்தி அடையும் மனநிலை நமக்கு வந்து விடும்.

صحيح مسلم

7617 - حَدَّثَنَا يَحْيَى بْنُ يَحْيَى وَقُتَيْبَةُ بْنُ سَعِيدٍ قَالَ قُتَيْبَةُ حَدَّثَنَا وَقَالَ يَحْيَى أَخْبَرَنَا الْمُغِيرَةُ بْنُ عَبْدِ الرَّحْمَنِ الْحِزَامِىُّ عَنْ أَبِى الزِّنَادِ عَنِ الأَعْرَجِ عَنْ أَبِى هُرَيْرَةَ أَنَّ رَسُولَ اللَّهِ -صلى الله عليه وسلم- قَالَ « إِذَا نَظَرَ أَحَدُكُمْ إِلَى مَنْ فُضِّلَ عَلَيْهِ فِى الْمَالِ وَالْخَلْقِ فَلْيَنْظُرْ إِلَى مَنْ هُوَ أَسْفَلَ مِنْهُ مِمَّنْ فُضِّلَ عَلَيْهِ ».

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

உங்களுக்குக் கீழிருப்பவர்களைப் பாருங்கள். உங்களை விட மேலிருப்பவர்களைப் பார்க்காதீர்கள். அதுவே அல்லாஹ் புரிந்திருக்கும் அருட்கொடைகளை நீங்கள் குறைத்து மதிப்பிடாமலிருக்க மிகவும் ஏற்றதாகும்.

நூல் : முஸ்லிம் 7619

صحيح البخاري

6490 - حَدَّثَنَا إِسْمَاعِيلُ، قَالَ: حَدَّثَنِي مَالِكٌ، عَنْ أَبِي الزِّنَادِ، عَنِ الأَعْرَجِ، عَنْ أَبِي هُرَيْرَةَ، عَنْ رَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ: «إِذَا نَظَرَ أَحَدُكُمْ إِلَى مَنْ فُضِّلَ عَلَيْهِ فِي المَالِ وَالخَلْقِ ، فَلْيَنْظُرْ إِلَى مَنْ هُوَ أَسْفَلَ مِنْهُ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

செல்வத்திலும், தோற்றத்திலும் தம்மை விட மேலான ஒருவரை உங்களில் ஒருவர் கண்டால், உடனே (அவற்றில்) தம்மை விடக் கீழானவர்களை அவர் (நினைத்துப்) பார்க்கட்டும்.

நூல் : புகாரி 6490

அனைத்து உயிரினங்களின் தேவைகளுக்கும் அல்லாஹ் பொறுப்பேற்றுள்ளான் என்பதைப் புரிந்து கொள்பவர்களுக்கு போதுமென்ற மனநிலையை அடைவது எளிதானதுதான். நம் தேவைகளுக்கு அல்லாஹ் பொறுப்பேற்றுள்ளான் என்றால் அவன் குறைவாக நமக்குத் தந்தாலும் அதில் நிச்சயம் நம் தேவையை நிறைவேற்றுவான். இப்படி நம்பும்போது போதுமென்ற மனம் வந்து விடும்.

வறுமையை அஞ்சி உங்கள் குழந்தைகளைக் கொல்லாதீர்கள் நாம்தான் உங்களுக்கும், அவர்களுக்கும் உணவளிக்கிறோம்.

திருக்குர்ஆன் 17:31

பூமியில் உள்ள உயிரினம் எதுவாக இருந்தாலும் அவற்றுக்கு உணவளிப்பது அல்லாஹ்வின் பொறுப்பாகும்.

திருக்குர்ஆன் 11 :6

سنن الترمذي

2344 - حَدَّثَنَا عَلِيُّ بْنُ سَعِيدٍ الكِنْدِيُّ قَالَ: حَدَّثَنَا ابْنُ المُبَارَكِ، عَنْ حَيْوَةَ بْنِ شُرَيْحٍ، عَنْ بَكْرِ بْنِ عَمْرٍو، عَنْ عَبْدِ اللَّهِ بْنِ هُبَيْرَةَ، عَنْ أَبِي تَمِيمٍ الجَيْشَانِيِّ، عَنْ عُمَرَ بْنِ الخَطَّابِ، قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ: «لَوْ أَنَّكُمْ كُنْتُمْ تَوَكَّلُونَ عَلَى اللَّهِ حَقَّ تَوَكُّلِهِ لَرُزِقْتُمْ كَمَا يُرْزَقُ الطَّيْرُ تَغْدُو خِمَاصًا وَتَرُوحُ بِطَانًا»: " هَذَا حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

ஒரு மூமின் அல்லாஹ்வை நம்ப வேண்டிய விதத்தில் நம்பினால் அல்லாஹ் அவனுக்கு ஒரு பறவைக்கு உணவளிப்பதைப் போல உணவளிப்பான். அது காலையில் ஒட்டிய வயிற்றுடன் செல்கிறது. ஆனால் மாலையில் நிரம்பிய வயிறோடு தன் கூட்டுக்குத் திரும்புகிறது.

நூல் : திர்மிதி 2266

صحيح ابن حبان

3240 - أَخْبَرَنَا الْحَسَنُ بْنُ سُفْيَانَ، حَدَّثَنَا شَيْبَانُ بْنُ أَبِي شَيْبَةَ، حَدَّثَنَا أَبُو عَوَانَةَ، عَنِ الْأَعْمَشِ، عَنْ عَبْدِ الرَّحْمَنِ بْنِ ثَرْوَانَ، عَنْ هُزَيْلِ بنِ شرحبيل عن بن عُمَرَ قَالَ: جَاءَ سَائِلٌ إِلَى النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَإِذَا تَمْرَةٌ عَائِرَةٌ، فَأَعْطَاهُ إِيَّاهَا، وَقَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ: "خذها. لو لم تأتها لأتتك"

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் ஒரு மனிதர் யாசகம் கேட்டு வந்தார். அப்போது கீழே கிடந்த பேரீச்சம்பழங்களை அவருக்குக் கொடுத்துவிட்டு இதைப் பெற்றுக் கொள். இதைப் பெற்றுக் கொள்ள நீ இங்கே வராவிட்டால் அது உன்னைத் தேடி வந்திருக்கும் என்று கூறினார்கள் .

நூல் : இப்னு ஹிப்பான்

எது நமக்குக் கிடைக்கும் என்று அல்லாஹ் விதித்து விட்டானோ அது நமக்கு எப்படியும் கிடைத்து விடும். ஏனென்றால் அல்லாஹ் மனிதனை எப்போது படைத்தானோ அப்போதே அவனுக்குரிய செல்வத்தை நிர்ணயித்து எழுதி விட்டான். அவன் எதை எழுதினானோ அதுதான் கிடைக்கும். அதற்கு மேல் வேறொன்றும் கிடைத்து விடாது.

سنن الترمذي

2516 - حَدَّثَنَا أَحْمَدُ بْنُ مُحَمَّدِ بْنِ مُوسَى قَالَ: أَخْبَرَنَا عَبْدُ اللَّهِ بْنُ المُبَارَكِ قَالَ: أَخْبَرَنَا لَيْثُ بْنُ سَعْدٍ، وَابْنُ لَهِيعَةَ، عَنْ قَيْسِ بْنِ الحَجَّاجِ، ح وحَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ عَبْدِ الرَّحْمَنِ قَالَ: أَخْبَرَنَا أَبُو الوَلِيدِ قَالَ: حَدَّثَنَا لَيْثُ بْنُ سَعْدٍ قَالَ: حَدَّثَنِي قَيْسُ بْنُ الحَجَّاجِ، المَعْنَى وَاحِدٌ، عَنْ حَنَشٍ الصَّنْعَانِيِّ، عَنْ ابْنِ عَبَّاسٍ، قَالَ: كُنْتُ خَلْفَ رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يَوْمًا، فَقَالَ: «يَا غُلَامُ إِنِّي أُعَلِّمُكَ كَلِمَاتٍ، احْفَظِ اللَّهَ يَحْفَظْكَ، احْفَظِ اللَّهَ تَجِدْهُ تُجَاهَكَ، إِذَا سَأَلْتَ فَاسْأَلِ اللَّهَ، وَإِذَا اسْتَعَنْتَ فَاسْتَعِنْ بِاللَّهِ، وَاعْلَمْ أَنَّ الأُمَّةَ لَوْ اجْتَمَعَتْ عَلَى أَنْ يَنْفَعُوكَ بِشَيْءٍ لَمْ يَنْفَعُوكَ إِلَّا بِشَيْءٍ قَدْ كَتَبَهُ اللَّهُ لَكَ، وَلَوْ اجْتَمَعُوا عَلَى أَنْ يَضُرُّوكَ بِشَيْءٍ لَمْ يَضُرُّوكَ إِلَّا بِشَيْءٍ قَدْ كَتَبَهُ اللَّهُ عَلَيْكَ، رُفِعَتِ الأَقْلَامُ وَجَفَّتْ الصُّحُفُ» هَذَا حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ "

சிறுவராக இருந்த இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறுகிறார்கள் : உனக்கு நான் சில சொற்களைக் கற்றுத் தருகிறேன்; அல்லாஹ்வின் விஷயத்தில் பேணுதலாக இரு! அல்லாஹ் உன்னைப் பாதுகாப்பான். அல்லாஹ்வின் விஷயத்தில் பேணுதலாக இரு! அல்லாஹ்வைக் கண்முன்னே பெற்றுக் கொள்வாய்! நீ எதையாவது கேட்பதாக இருந்தால் அல்லாஹ்விடத்தில் கேள்! மேலும் நீ உதவி தேடுவதாக இருந்தால் அல்லாஹ்விடத்தில் உதவி தேடு! அறிந்து கொள்! அனைவரும் ஒன்று சேர்ந்து உனக்கு ஒரு நன்மை செய்ய நாடினால் அல்லாஹ் நாடினாலே தவிர அவர்களால் உனக்கு ஒரு நன்மையும் செய்ய முடியாது. அனைவரும் சேர்ந்து உனக்கொரு தீமையைச் செய்ய நாடினால் அல்லாஹ் நாடியதைத் தவிர எந்த ஒரு தீமையையும் அவர்களால் செய்ய முடியாது. எழுதுகோல்கள் உயர்த்தப்பட்டு விட்டன. ஏடுகள் காய்ந்து விட்டன.

நூல் : திர்மிதி 2440

அல்லாஹ் நமக்குத் தர நினைத்ததைத் தவிர வேறு எதுவும் நமக்குக் கிடைக்காது என்பதையும், அவன் தர விரும்பாத எதுவும் நமக்குக் கிடைக்காது என்பதையும் ஒருவன் நம்பவில்லையானால் அவனிடம் இறைநம்பிக்கை இல்லை என்பதே பொருள்.

அல்லாஹ் நமக்குத் தர நினைத்தது எப்படியும் நம்மை வந்து சேர்ந்து விடும் என்று நாம் நம்பிக்கை வைத்தால் நாம் நினைத்துப் பார்க்காத வகையில் அது நம்மை வந்து அடைந்துவிடும்.

மர்யம் (அலை) அவர்களுக்கு இப்படி நினைத்துப் பார்க்காத வகையில் அல்லாஹ் உணவளித்ததை சொல்லிக் காட்டுகிறான்.

அவரை, (அக்குழந்தையை) அவரது இறைவன் அழகிய முறையில் ஏற்றுக் கொண்டான். அவரை அழகிய முறையில் வளர்த்தான். அவருக்கு ஸக்கரிய்யாவைப் பொறுப்பாளியாக்கினான். அவரது அறைக்கு ஸக்கரிய்யா சென்ற போதெல்லாம் அவரிடம் உணவைக் கண்டு, "மர்யமே! இது உனக்கு எங்கிருந்து கிடைத்தது?" என்று கேட்டார். "இது அல்லாஹ்விடமிருந்து கிடைத்தது. அல்லாஹ் நாடுவோருக்கு கணக்கின்றி வழங்குகிறான்" என்று (மர்யம்) கூறினார்.

திருக்குர்ஆன் 3 :37

அல்லாஹ் நாடினால் இறைத்தூதர்களுக்கு வழங்காத பரக்கத்தை இறைத்தூதர் அல்லாதவர்களுக்கும் வழங்கி விடுவான் என்பதற்கு இந்த நிகழ்ச்சி சான்றாக அமைந்துள்ளது.

மர்யம் (அலை) அவர்களை வளர்க்கும் பொறுப்பை ஸக்கரியா நபி அவர்கள் ஏற்றிருந்தார்கள். ஆனால் அவர்கள் உணவு கொண்டு வருதற்கு முன்பே பள்ளிவாசலில் உணவு இருப்பதைக் காண்கிறார்கள். இது எப்படி வந்தது என்று அவர்கள் கேட்டபோது இது அல்லாஹ்விடமிருந்து எனக்குக் கிடைத்தது; அல்லாஹ், நாடுவோருக்கு கணக்கில்லாமல் கொடுப்பான் என்று மர்யம் (அலை) பதில் அளித்தார்கள். இது மர்யம் (அலை) அவர்களுக்கு மட்டும் உரியது

அல்ல; அனைவருக்கும் உரியது என்பதை இதன் மூலம் அல்லாஹ் தெளிவுபடுத்துகிறான்.

அல்லாஹ்வை அஞ்சுவோருக்கு அவன் ஒரு போக்கிடத்தை ஏற்படுத்துவான். அவர் எண்ணிப் பார்த்திராத வகையில் அவருக்கு உணவளிப்பான். அல்லாஹ்வையே சார்ந்திருப்போருக்கு அவன் போதுமானவன். அல்லாஹ் தனது காரியத்தை அடைந்து கொள்பவன். ஒவ்வொரு பொருளுக்கும் அல்லாஹ் ஓர் அளவை நிர்ணயம் செய்துள்ளான்.

திருக்குர்ஆன் 65 : 2,3

மனிதர்கள் எண்ணிப்பார்க்க முடியாத வகையிலும் அல்லாஹ்விடமிருந்து செல்வம் வந்து சேரும் என்பதை இவ்வசனத்திலிருந்து நாம் அறிந்து கொள்ளலாம்.

எங்கள் இறைவா! எனது சந்ததிகளை உனது புனித ஆலயத்திற்கு அருகில் விவசாயத்திற்குத் தகுதியில்லாத பள்ளத்தாக்கில் இவர்கள் தொழுகையை நிறைவேற்றுவதற்காக குடியமர்த்தி விட்டேன். எனவே எங்கள் இறைவா! மனிதர்களில் சிலரது உள்ளங்களை இவர்களை நோக்கி விருப்பம் கொள்ள வைப்பாயாக! இவர்கள் நன்றி செலுத்திட இவர்களுக்குக் கனிகளை உணவாக வழங்குவாயாக.

திருக்குர்ஆன் 14 :37

இப்ராஹீம் நபியவர்கள் பலைவனத்தில் தமது குடும்பத்தைக் குடியமர்த்தியபோது மேற்கண்டவாறு பிரார்த்தனை செய்தார்கள்.

எந்த இடத்தில் குடிப்பதற்குத் தண்ணீர்கூட இல்லையோ அந்த இடத்தில் இப்ராஹீம் நபியவர்கள் தமது மனைவியையும், புதல்வரையும் குடியமர்த்த எப்படித் துணிந்தார்கள்? அல்லாஹ் நாடினால் நாம் நினைத்துப் பார்க்க முடியாத வகையிலும் உணவளிப்பான்; வாழ்வாதாரங்களை ஏற்படுத்தித் தருவான் என்று இப்ராஹீம் நபி அவர்களுக்கு இருந்த அசைக்க முடியாத நம்பிக்கையே காரணம்.

அவர்களின் அசைக்க முடியாத இந்த நம்பிக்கைக்காக அல்லாஹ் தந்த பரிசுதான் ஜம்ஜம் நீரூற்று. மக்காவில் பல்லாயிரம் ஆண்டுகளாக வற்றாமல் இருக்கிறது. இப்போது மக்காவில் பல இலட்சக்கணக்கான மக்களுக்கு தினமும் தேவையைப் பூர்த்தி செய்கிறது. அல்லாஹ்வை மட்டும் நம்பினால் இப்படிப்பட்ட அதிசயத்தை அவன் நிகழ்த்துவான் என்பதற்கு அசைக்க முடியாத ஆதாரமாக ஜம்ஜம் நீரூற்று அமைந்துள்ளது.

## குறைந்த செல்வத்திலும் பரக்கத் உண்டு

### பரக்கத் எனும் மறைமுக அருளை நம்புதல்

இன்னொரு உண்மையைப் புரிந்து கொண்டால் பேராசையில் இருந்து விடுபடலாம்.

பொதுவாக செல்வத்தின் அளவைப் பொருத்தே தேவைகள் நிறைவேறும் என்று மக்கள் நம்புகிறார்கள். பல நேரங்களில் இது பொய்யாகிப் போய் விடுவதை நாம் பார்க்கிறோம். சிலருக்கு அதிகமான செல்வம் கிடைத்தும் தேவைகள் நிறைவேறாமல் போவதையும் வேறு சிலருக்கு குறைந்த அளவு செல்வத்திலும் அதிகமான தேவைகளை அல்லாஹ் நிறைவேற்றி விடுவதையும் நாம் காண்கிறோம்.

இது பரக்கத் எனும் மறைமுக அருளாகும்.

100 ரூபாய் நமக்குத் தேவை என்று நினைக்கும்போது 50 ரூபாய்தான் கிடைக்கிறது என்றால் அது பற்றாக்குறை என்று நமக்குத் தோன்றும்.

ஒரு முஸ்லிமைப் பொருத்தவரை இப்படித் தோன்ற வேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில் நூறு ரூபாயில் நிறைவேற வேண்டிய தேவை 50 ரூபாயில் நிறைவேறலாம்.

பொதுவாக ஒருவேளை உணவுக்கு 200 கிராம் அரிசி ஒருவருக்குத் தேவைப்படுகிறது. ஆனால் சில குடும்பங்களில் 200 கிராம் அரிசியை இரண்டு பேர் வயிறார உண்ணுவதை நாம் காணமுடிகிறது. அதாவது இந்த அரிசி இரு மடங்கு பயனளிக்கிறது. நம்முடைய கணக்கை மிஞ்சும் வகையில் மறைமுகமான அருள் இதில் ஒளிந்திருப்பதை நாம் உணர்கிறோம்.

ஒருவன் பத்தாயிரம் ரூபாய் சம்பாதிக்கிறான். அவனால் இரு குழந்தைகளைக்கூடப் படிக்க வைக்க முடியவில்லை. ஆனால் ஒருவன் இரண்டாயிரம் ரூபாய்தான் சம்பாதிக்கிறான். அதில் அவன் ஐந்து

குழந்தைகளைப் படிக்க வைத்து, தனது ஏனைய தேவைகளையும் அதிலேயே பூர்த்தி செய்து விடுகிறான் என்றால் இதில்தான் பரக்கத் உள்ளது.

எண்ணிக்கையில் வேண்டுமானால் பத்தாயிரம் என்பது பெரிதாக இருக்கலாம் ஆனால் பயனளிப்பதில் இந்த இரண்டாயிரம்தான் சிறந்தது.

பரக்கத் எனும் மறைமுகமான இறையருளைப் பின்வரும் ஆதாரங்கள் மூலம் நாம் தெளிவாக விளங்கிக் கொள்ளலாம்.

سنن أبي داود

- حدَّثنا عثمانُ بن أبي شيبة، حدَّثنا أبو مُعاوية، حدَّثنا الأعمَشُ، عن عبد الله بن عبد الله الرازي، عن عبد الرحمن بن أبي ليلى عن البراء بن عازب، قال: سُئِلَ رسولُ الله - صلى الله عليه وسلم - عن الوضوءِ من لُحومِ الإبلِ، فقال: "تَوضَّؤوا منها" وسُئِلَ عن لُحوم الغَنَم، فقال: "لا توضَّؤوا منها" وسُئِلَ عن الصلاة في مَبَارِكِ الإبِلِ، فقال: "لا تُصَلُّوا في مَبَارِكِ الإبل، فإنَّها مِنَ الشَّياطين" وسُئِلَ عن الصَّلاة في مَرَابِضِ الغَنَم، فقال: "صَلُّوا فيها فإنَّها بَرَكَةٌ"

ஒட்டகம் கட்டுமிடத்தைப் பற்றி நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள் ஒட்டகம் கட்டுமிடத்தில் தொழாதீர்கள்; ஏனென்றால் அவை ஷைத்தான்களைச் சேர்ந்ததாகும் என்று கூறினார்கள். ஆடுகள் கட்டுமிடத்தில் தொழுவதைப் பற்றிக் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள் அதிலே தொழுது கொள்ளுங்கள் ஏனென்றால் அதில்தான் பரக்கத் உள்ளது என்று கூறினார்கள்.

நூல் : அபூதாவூத் :416

سنن ابن ماجه

2304 - حَدَّثَنَا أَبُو بَكْرِ بْنُ أَبِي شَيْبَةَ، حَدَّثَنَا وَكِيعٌ، عَنْ هِشَامِ بْنِ عُرْوَةَ، عَنْ أَبِيهِ عَنْ أُمِّ هَانِئٍ، أَنَّ النَّبِيَّ - صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ - قَالَ لَهَا: "اتَّخِذِي غَنَمًا، فَإِنَّ فِيهَا بَرَكَةً"

உம்முஹானி (ரலி) அவர்களிடம் நீ ஒரு ஆட்டை வளர்த்துக் கொள்! அதில் பரக்கத் உள்ளது என்று நபிகள் நாயகம் (ஸல்) கூறினார்கள்.

நூல் : இப்னுமாஜா 2295

سنن ابن ماجه

2305 - حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ عَبْدِ اللَّهِ بْنِ نُمَيْرٍ، حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ إِدْرِيسَ، عَنْ حُصَيْنٍ، عَنْ عَامِرٍ، عَنْ عُرْوَةَ الْبَارِقِيِّ، يَرْفَعُهُ، قَالَ: "الْإِبِلُ عِزٌّ لِأَهْلِهَا، وَالْغَنَمُ بَرَكَةٌ، وَالْخَيْرُ مَعْقُودٌ فِي نَوَاصِي الْخَيْلِ إِلَى يَوْمِ الْقِيَامَةِ"

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

ஒட்டகம் வைத்திருப்போருக்கு பெருமையிருக்கிறது. ஆனால் ஆட்டில்தான் பரக்கத் என்றார்கள்.

நூல் : இப்னுமாஜா 2295

ஆடுகள் மிகக் குறைந்த அளவில் குட்டி போடுகிறது. செம்மறியாடுகள் ஒரு தடவை ஒரு குட்டிதான் போடும். வெள்ளாடுகள் சில நேரங்களில் இரண்டு குட்டிகள் போடும். மனிதனைப் போல பத்து மாதம் கருவைச் சுமக்கும்.

அதேபோல் அதிகம் உண்ணப்படும் பிராணிகளும் ஆடுகள்தான். அதன் குறைவான இனப் பெருக்கத்தையும் அதிகம் உண்ணப்படுவதையும் ஒப்பு நோக்கிப் பார்த்தால் அந்த இனம் இன்னேரம் அழிந்து போயிருக்க வேண்டும். டைனோசரைப் போல முடிந்து போன வரலாறாகி இருக்க வேண்டும். ஆனால் உலகில் ஆடுகள் மிக அதிக அளவில் உள்ளதைப் பார்க்கிறோம்.

சிங்கம், புலி போன்ற விலங்குகள் வலிமை வாய்ந்தவையாக உள்ளன. அவற்றுக்கு மனிதர்களாலோ மற்ற விலங்குகளாலோ ஆபத்துகள் ஏற்படுவதில்லை. அவை உணவாகவும் உட்கொள்ளப்படுவதில்லை. இந்த அடிப்படையில் பார்க்கும்போது சிங்கம் புலிகள்தான் அதிக எண்ணிக்கையில் இருக்க வேண்டும். ஆனால் உலகில் இந்த விலங்குகளின் எண்ணிக்கை சில ஆயிரங்களில் சுருங்கி இருப்பதும், அதிகம் உண்ணப்படும் ஆடுகள் அதிக எண்ணிக்கையில் பல்கிப் பெருகி இருப்பதும் பரக்கத் எனும் மறைமுகமான அருள் இருப்பதற்குச் சான்றாக உள்ளது.

இறைவனின் பரக்கத் எனும் மறைமுகமான பேரருள் இருப்பதை நாம் உணராமலே பல விதங்களில் அதை அனுபவித்துக் கொண்டிருக்கிறோம்.

முஸ்லிமல்லாத சமுதாயங்களில் ஒரு குடும்பத்தில் ஏழு உறுப்பினர்கள் இருந்தால் ஏழு பேரும் சம்பாதிப்பார்கள். ஒரு நபர் தினமும் முன்னூறு ரூபாய் சம்பாதித்தால் ஏழு பேரும் சேர்ந்து ஒரு நாளைக்கு இரண்டாயிரத்து நூறு ரூபாய்கள் சம்பாதிக்கிறார்கள். இவர்களின் மாத வருமானம் அறுபத்து

மூவாயிரம் ரூபாய்களாகும். இவ்வளவு அதிக வருமானம் வந்தும் இவர்களில் அதிகமானோர் குடிசைகளில்தான் வசிக்கிறார்கள்.

முஸ்லிம்களின் குடும்பங்களில் பெரும்பாலும் ஒருவர்தான் சம்பாதிக்கிறார். தாயையோ, மனைவியையோ, மகளையோ, தந்தையையோ பெரும்பாலும் முஸ்லிம்கள் வேலைக்கு அனுப்ப மாட்டார்கள். ஆனாலும் ஒருவரின் ஐயாயிரம் ரூபாய் வருமானத்தில் குடும்பத்தின் அனைத்துத் தேவைகளும் நிறைவேறுவதை நாம் பார்க்கிறோம்.

அல்லாஹ்வை அறைகுறையாக நம்பிய நாமே இந்தப் பயனை அடைகிறோம் என்றால் அல்லாஹ்வை முறையாக நம்பினால் எப்படிப்பட்ட அதிசயத்தை அல்லாஹ் நிகழ்த்துவான் என்பதை நாம் சற்றே சிந்திக்க வேண்டும்.

صحيح البخاري

5393 - حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ بَشَّارٍ، حَدَّثَنَا عَبْدُ الصَّمَدِ، حَدَّثَنَا شُعْبَةُ، عَنْ وَاقِدِ بْنِ مُحَمَّدٍ، عَنْ نَافِعٍ، قَالَ: كَانَ ابْنُ عُمَرَ، لاَ يَأْكُلُ حَتَّى يُؤْتَى بِمِسْكِينٍ يَأْكُلُ مَعَهُ، فَأَدْخَلْتُ رَجُلًا يَأْكُلُ مَعَهُ فَأَكَلَ كَثِيرًا، فَقَالَ: يَا نَافِعُ، لاَ تُدْخِلْ هَذَا عَلَيَّ، سَمِعْتُ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ يَقُولُ: «المُؤْمِنُ يَأْكُلُ فِي مِعًى وَاحِدٍ، وَالكَافِرُ يَأْكُلُ فِي سَبْعَةِ أَمْعَاءٍ»

முஸ்லிம் ஒரு வயிறுக்கு சாப்பிடுகிறார். முஸ்லிமல்லாதவர் ஏழுவயிறுக்கு சாப்பிடுகிறார் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

நூல் : புகாரி 5393, 5394. 5396. 5397

வெளிப்படையாகத் தெரியும் அருள் மட்டுமின்றி குறைந்த பொருளில் நிறைந்த பயனை அடையும் மறைமுகமான இறையருளும் உள்ளது என்பதை மேற்கண்ட ஹதீஸ் மூலம் நாம் அறிந்து கொள்கிறோம்.

صحيح البخاري

5392 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ، أَخْبَرَنَا مَالِكٌ، ح وَحَدَّثَنَا إِسْمَاعِيلُ، قَالَ: حَدَّثَنِي مَالِكٌ، عَنْ أَبِي الزِّنَادِ، عَنِ الأَعْرَجِ، عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ، أَنَّهُ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «طَعَامُ الِاثْنَيْنِ كَافِي الثَّلاَثَةِ، وَطَعَامُ الثَّلاَثَةِ كَافِي الأَرْبَعَةِ»

ஒருவருடைய உணவு இருவருக்குப் போதுமானது. இருவருடைய உணவு நான்கு நபர்களுக்குப் போதுமானது என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல் : புகாரி 5392

ஒருவருக்கு உரிய உணவை இரண்டு பேர் உண்ணலாம் என்பது நம்முடைய கணக்குக்கு ஒத்து வராத தத்துவமாகத் தோன்றலாம். ஆனாலும் நம்முடைய கணக்கைப் பொய்யாக்கும் வகையில் இது நடந்தேறுவதை அதிகமான முஸ்லிம்கள் தமது வாழ்வில் அனுபவித்து வருகின்றனர். இந்த அருளுக்குத்தான் நாம் ஆசைப்பட வேண்டும்.

## சஹர் நேர உணவில் பரக்கத்

நம்முடைய கணக்கைப் பொய்யாக்கும் வகையில் அல்லாஹ்வின் பரக்கத் உள்ளது என்பதற்கு இன்னொரு சான்றாக சஹர் உணவு அமைந்துள்ளது.

صحيح البخاري

1923 - حَدَّثَنَا آدَمُ بْنُ أَبِي إِيَاسٍ، حَدَّثَنَا شُعْبَةُ، حَدَّثَنَا عَبْدُ العَزِيزِ بْنُ صُهَيْبٍ قَالَ: سَمِعْتُ أَنَسَ بْنَ مَالِكٍ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: قَالَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «تَسَحَّرُوا فَإِنَّ فِي السَّحُورِ بَرَكَةً»

சஹர் நேரத்தில் உண்ணுங்கள்! சஹர் உணவில் பரக்கத் இருக்கிறது என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல் : புகாரி 1923

பொதுவாக நாம் அன்றாடம் எந்த நேரங்களில் சாப்பிட்டுப் பழகி இருக்கிறோமோ அந்த நேரங்களில்தான் நம்மால் தேவையான அளவுக்கு ஈடுபாட்டுடன் சாப்பிட முடியும். சஹர் எனும் வைகறை நேரம் நாம் வழக்கமாக உணவு உண்ணும் நேரம் அல்ல. தூக்கக் கலக்கத்துடன் இருக்கும் நேரம். பசி எடுக்காத நேரம். அந்த நேரத்தில் குறைந்த அளவுதான் யாராலும் சாப்பிட முடியும்.

நோன்பு வைத்திருப்பவர் வைகறையில் சாப்பிட்ட பின் சூரியன் மறையும் வரை சாப்பிடக் கூடாது என்பதால் அந்த நேரத்தில் வழக்கத்தை விட அதிகம் சாப்பிட வேண்டிய அவசியம் உள்ளது. ஆனாலும் வழக்கத்தை விட மிகவும் குறைவாகவே அவரால் சாப்பிட முடியும்.

இப்படிக் குறைந்த அளவு உணவு உட்கொண்டு விட்டு பத்து முதல் பதினான்கு மணி நேரம்வரை நாம் எதையும் உண்பதில்லை. பச்சைத் தண்ணீரும் அருந்துவதில்லை. ஆனாலும் இதனால் நமக்கு எந்தப் பாதிப்பும் ஏற்படுவதில்லை. வழக்கமான நமது செயல்பாடுகளில் எந்தக் குறைவும் நாம் வைப்பதில்லை.

இது எப்படிச் சாத்தியமாகிறது? சஹர் நேரத்தில் சாப்பிடுவதில் இறைவன் பரக்கத் எனும் பேரருளை நம்முடைய அறிவுக்கு எட்டாத முறையில் அமைத்து இருப்பதால் மட்டுமே இது சாத்தியமாகிறது.

குறிப்பிட்ட சில வகை உணவுகளை மட்டும் சில மணி நேரம் நாங்கள் தவிர்த்துக் கொண்டு மற்ற உணவுகளைச் சாப்பிட்டு விரதம் இருக்கிறோம். அதுவே எங்களுக்கு மிகவும் சிரமமாக உள்ளது. ஆனால் நீங்கள் பல மணி நேரங்கள் எந்த ஒரு பொருளையும் உட்கொள்ளாமல் ஒரு மாதகாலம் நோன்பிருப்பது நம்ப முடியாத அதிசயமாக உள்ளது என்று முஸ்லிம் அல்லாத நண்பர்கள் வியந்து பாராட்டுவதை நாம் அடிக்கடி செவியேற்கிறோம். மற்ற சமுதாய மக்களும் வியப்படையும் வகையில் சஹர் நேரத்தில் சாப்பிடும் உணவில் மறமுகமான பேரருள் குவிந்து கிடப்பதை இதில் இருந்து அறியலாம்.

## பெருநாள் தினத்தில் பரக்கத்

பெருநாள் தினத்தில் அல்லாஹ் பரக்கத்தை வாரிவழங்குவதையும் நாம் அனுபவத்தில் பார்க்கிறோம்.

صحيح البخاري

971 - حَدَّثَنَا عُمَرُ بْنُ حَفْصٍ، قَالَ: حَدَّثَنَا أَبِي، عَنْ عَاصِمٍ، عَنْ حَفْصَةَ، عَنْ أُمِّ عَطِيَّةَ، قَالَتْ: «كُنَّا نُؤْمَرُ أَنْ نَخْرُجَ يَوْمَ العِيدِ حَتَّى نُخْرِجَ البِكْرَ مِنْ خِدْرِهَا، حَتَّى نُخْرِجَ الحُيَّضَ، فَيَكُنَّ خَلْفَ النَّاسِ، فَيُكَبِّرْنَ بِتَكْبِيرِهِمْ، وَيَدْعُونَ بِدُعَائِهِمْ يَرْجُونَ بَرَكَةَ ذَلِكَ اليَوْمِ وَطُهْرَتَهُ»

உம்மு அத்திய்யா (ரலி) அவர்கள் கூறியதாவது :

பெருநாளன்று (பெண்களாகிய) நாங்கள் (தொழும் திடலுக்குப்) புறப்பட்டுச் செல்ல வேண்டுமெனவும் கூடாரத்திலுள்ள குமரிப் பெண்களையும் புறப்படச் செய்ய வேண்டுமெனவும் கட்டளையிடப்பட்டிருந்தோம். எந்த அளவிற்கென்றால் மாதவிடாய் ஏற்பட்டுள்ள பெண்களைக்கூடப் புறப்படச் செய்ய வேண்டுமெனக் கட்டளையிடப்பட்டோம். பெண்கள் (தொழும் திடலுக்குச் சென்று) ஆண்களுக்குப் பின்னால் இருந்து கொண்டு ஆண்கள் தக்பீர் சொல்லும்போது அவர்களும் தக்பீர் சொல்வார்கள்; ஆண்கள் பிரார்த்திக்கும்போது அவர்களும் பிரார்த்திப்பார்கள். அந்த நாளின் பரக்கத்தையும் தூய்மையையும் எதிர்பார்ப்பார்கள்.

நூல் : புகாரி 971

பெருநாள் தினத்தில் நாம் பல சுவையான உணவுகளைத் தயார் செய்கிறோம். கேட்பவருக்கு இல்லை என்று சொல்லாமல் அள்ளிக் கொடுக்கிறோம். ஆனாலும் அன்றைய தினத்தில் உணவுப் பொருளுக்கு பற்றாக்குறை ஏற்படுவதில்லை. உணவுப் பொருள் மீந்து கிடப்பதை நாம் காண்கிறோம்.

## சாதாரண உணவில் அதிகப் பயன்

விஞ்ஞானிகள் மற்றும் மருத்துவர்கள் அதிக சத்துள்ள உணவுகளைப் பட்டியலிட்டுள்ளனர். அவற்றில் பெரும்பாலான உணவுகள் ஏழைகள் வாங்க முடியாத அளவுக்கு அதிக விலைக்கு விற்கப்படுகின்றன. இறைச்சி, நெய், பாதாம், பிஸ்தா, முந்திரி, அக்ரூட் போன்ற பொருட்களை சாதாரண மக்கள் அன்றாடாம் அல்லது அடிக்கடி உண்ண பொருளாதரம் இடம் தராது.

இது போன்ற உணவுகளைச் செல்வந்தர்கள் தான் அதிகமாகப் பயன்படுத்துகிறார்கள். இவ்வளவு சத்தான உணவுகளைச் சாப்பிட்டு வரும் வசதி படைத்தவர்கள் உடல் வலிமையானவர்களாக இருப்பதில்லை. அந்த உணவில் என்ன கிடைக்கும் என்று சொல்லப்பட்டதோ அது கிடைப்பதில்லை.

ஆனால் பச்சை மிளகாயைக் கடித்துக் கொண்டு பழைய சோறு சாப்பிடும் ஏழை அதிக உடல்வலு உள்ளவனாக இருக்கிறான். அதில் என்ன சத்து கிடைக்கும் என்று விஞ்ஞானிகள் கூறுகிறார்களோ அதை விட அதிக சத்துக்களை அவன் பெற்றுக் கொள்கிறான்.

வகைவகையான சத்தான உணவு உட்கொள்பவர்களை விட குறைந்த சத்துள்ள உணவு உட்கொள்ளும் சாமானிய மக்கள் உடல் வலிமை மிக்கவர்களாகவும் அதிக ஆரோக்கியமானவர்களாகவும் இருப்பதை நாம் பரவலாகக் காண்கிறோம்.

மனிதனின் கணக்கை பொய்யாக்கும் வகையில் இந்த பரக்கத் எனும் அருள் அமைந்திருக்கிறது.

## பெண்களுக்குக் கிடைக்கும் பரக்கத்

பரக்கத் எனும் மறைமுகமான பேரருள் ஒன்று உள்ளது என்பதற்கு பெண்கள் உதாரணமாக இருக்கிறார்கள்.

மாதவிடாய் காரணமாகவும், கருவில் உள்ள குழந்தைக்காகவும், பாலூட்டுவதற்காகவும் அதிகமான சக்தியை பெண்கள் இழக்கிறார்கள். இது போன்ற சக்தி இழப்புகள் ஆண்களுக்கு இல்லை. எனவே பெண்கள் தான் அதிகச் சத்துள்ள உணவுகளைச் சாப்பிட வேண்டும். அதிகமாகவும் சாப்பிட வேண்டும்.

ஆனால் நடைமுறையில் பெண்கள் ஆண்களை விட குறைவாகவே சாப்பிடுகிறார்கள். வீட்டில் சாப்பிட்டது போக வெளியிலும் ஆண்கள் நொறுக்குத் தீனி சாப்பிடுவது போல் பெண்கள் சாப்பிடுவதில்லை. சத்தான உணவும் பென்களுக்குக் கிடைப்பதில்லை.

ஆண்கள் சத்தான உணவைச் சாப்பிட வேண்டும் என்பதற்காக சமைத்துப் போடும் பெண்கள் ஆண்கள் மீதம் வைத்தால் தான் அதைச் சாப்பிட இயலும். மேலும் சத்தான உணவுகளை சாப்பிட விரும்பினாலும் சமூக அமைப்பில் அதற்கு வாய்ப்பு இல்லை. மாமியார் போன்றவர்கள் இதை ஒப்புக் கொள்வதில்லை.

கணவன் ஊரில் இருந்தால் மட்டுமே சத்தான உணவு சமைக்கும் வழக்கம் தான் அதிகமான ஊர்களில் உள்ளது. எனவே பெண்களுக்கு அதிக சத்து தேவையாக இருந்தும் அதற்கேற்ப அவர்களுக்கு உணவுகள் கிடைக்காமல் இருந்தும் அவர்கள் தான் ஆண்களை விட ஆரோக்கியமாக உள்ளனர். அதிக நாட்கள் வாழ்கின்றனர்.

பத்துப் பிள்ளை பெற்றாலும் அவர்களுக்கு எந்தப் பாதிப்பும் ஏற்படுவதில்லை. அல்லாஹ்வின் பரக்கத் எனும் மறைவான பேரருள் வியாபித்துக் கிடக்கிறது என்பதை இதிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

எனவே அல்லாஹ் நமக்கு குறைவான செல்வத்தை வழங்கினாலும் அவன் தனது பரக்கத் மூலம் நம் தேவைகளை நிறைவேற்றுவான் என்று நம்பினால் வறுமை பற்றி நாம் கடுகளவும் கவலைப்பட மாட்டோம்.

## பரக்கத்தை அடைவதற்கான வழிமுறைகள்

صحيح مسلم

5426 - وَحَدَّثَنِى مُحَمَّدُ بْنُ حَاتِمٍ وَأَبُو بَكْرِ بْنُ نَافِعٍ الْعَبْدِىُّ قَالاَ حَدَّثَنَا بَهْزٌ حَدَّثَنَا حَمَّادُ بْنُ سَلَمَةَ حَدَّثَنَا ثَابِتٌ عَنْ أَنَسٍ أَنَّ رَسُولَ اللَّهِ -صلى الله عليه وسلم- كَانَ إِذَا أَكَلَ طَعَامًا لَعِقَ أَصَابِعَهُ الثَّلاَثَ. قَالَ وَقَالَ « إِذَا سَقَطَتْ لُقْمَةُ أَحَدِكُمْ فَلْيُمِطْ عَنْهَا الأَذَى وَلْيَأْكُلْهَا وَلاَ يَدَعْهَا لِلشَّيْطَانِ ». وَأَمَرَنَا أَنْ نَسْلُتَ الْقَصْعَةَ قَالَ « فَإِنَّكُمْ لاَ تَدْرُونَ فِى أَىِّ طَعَامِكُمُ الْبَرَكَةُ »

விரல்களைச் சூப்பி பாத்திரத்தை நன்கு வழித்து தட்டில் மீதம் வைக்காமல் சாப்பிடும்படி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கட்டளையிட்டு விட்டு உணவில் எங்கே பரக்கத் இருக்கிறது என்று நீங்கள் அறிய மாட்டீர்கள் என்று கூறினார்கள்.

நூல் : முஸ்லிம் 5426

பரக்கத் எனும் மறைமுகமான பேரருள் உணவு முழுவதும் இருக்கும் என்று சொல்ல முடியாது. மாறாக அது கடைசிக் கவளத்தில்கூட இருக்கலாம். அல்லது கடைசிப் பருக்கையில்கூட இருக்கலாம். அல்லது நமது விரல்களிலும் உணவுத் தட்டிலும் ஒட்டிக் கொண்டுள்ள உணவுத் துகள்களிலும்கூட அந்த பரக்கத் இருக்கலாம்.

நாம் உண்ணும்போது மேலதிகமாகச் சாப்பாடு எடுத்து வைக்க வேண்டும் என்று விரும்பினால் உணவுத் தட்டில் ஓரளவு உணவு இருக்கும்போதுதான் வைக்க வேண்டும் என்ற நம்பிக்கை பலரிடம் காணப்படுகிறது. இது தவறான நம்பிக்கையாகும். இந்த நம்பிக்கையின் காரணமாக பரக்கத் எனும் பேரருளை நாம் இழக்கும் நிலை ஏற்படும்.

உணவுத் தட்டில் உள்ள கடைசிப் பருக்கையில் நம்முடைய வயிற்றை நிரப்பும் பரக்கத் அமைந்திருக்கலாம். எனவே அதைச் சாப்பிட்டவுடன் வயிறும் மனதும் முழுமையாக நிரம்பி விடலாம். அதன் பிறகு மேலதிகமாகச் சாப்பாடு வைப்பது தேவை இல்லாமல் போகலாம்.

எனவே உணவில் எங்கே பரக்கத் உள்ளது என்பது நமக்குத் தெரியாததால் கடைசி உணவையும் சாப்பிட்ட பிறகு உணவு மேலும் தேவை என்று தோன்றினால்தான் உணவை மேலும் எடுக்க வேண்டும்.

இப்படி விரல்களைச் சூப்பி, உணவுத் தட்டையும் வழித்துச் சாப்பிட்டு நாம் பழகி வரும்போது உணவுத் தட்டில் உணவை மீதம் வைத்து யாருக்கும் பயன்படாமல் உணவை வீணாக்கும் விரயம் செய்யும் பழக்கம் நம்மிடமிருந்து எடுபட்டுப் போய் விடும்.

இதன் காரணமாக பெருமளவு உணவுப் பொருள்கள் நமக்கு மீதமாகும். இதுபோன்ற நல்ல பழக்கங்கள் மூலம் அல்லாஹ்வின் பரக்கத் எனும் பேரருளை நாம் அனுபவிக்க முடியும்.

## ஓரத்திலிருந்து உண்பதிலும் பரக்கத் உண்டு

பரக்கத் எதில் உள்ளது என்பதை நம்முடைய அறிவைக் கொண்டு முடிவு செய்ய முடியாது. பரக்கத் என்பதே அறிவைப் பொய்யாக்கும் மறைமுக அருள் என்பதால் அதை அல்லாஹ்வோ அவனது தூதரோ நமக்குச் சொல்லித் தந்தால் தான் அறிய முடியும்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இதையும் நமக்குச் சொல்லித் தந்துள்ளனர்.

سنن الترمذي

1805 - حَدَّثَنَا أَبُو رَجَاءٍ قَالَ: حَدَّثَنَا جَرِيرٌ، عَنْ عَطَاءِ بْنِ السَّائِبِ، عَنْ سَعِيدِ بْنِ جُبَيْرٍ، عَنْ ابْنِ عَبَّاسٍ، أَنَّ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ: «البَرَكَةُ تَنْزِلُ وَسَطَ الطَّعَامِ، فَكُلُوا مِنْ حَافَتَيْهِ، وَلَا تَأْكُلُوا مِنْ وَسَطِهِ»: هَذَا حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ

உணவின் நடுவில்தான் பரக்கத் இறங்குகிறது எனவே அதன் ஓரத்திலிருந்து உண்ணுங்கள். நடுவிலிருந்து உண்ணாதீர்கள் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல் : திர்மிதி 1727

நமக்கு அருகில் உள்ள ஓரப் பகுதியில் இருந்துதான் உணவை எடுக்க வேண்டும். நடுப்பகுதியில் எடுக்காமல் ஓரப்பகுதியில் இருந்து எடுத்துச் சாப்பிட்டுப் பழகினால் குறைந்த உணவில் அதிகமான நபர்கள் சாப்பிட முடியும்.

## உணவை அளந்து போடுவதிலும் பரக்கத் உண்டு

எத்தனை பேர் சாப்பிட உள்ளனர்; அவர்களின் தேவை எவ்வளவு என்பதையெல்லாம் மதிப்பிட்டு அதற்குத் தக்கவாறு சமைக்க பழகிக் கொள்வதன் மூலம் அல்லாஹ்வின் பரக்கத்தை நாம் அடைய முடியும்.

صحيح البخاري

2128 - حَدَّثَنَا إِبْرَاهِيمُ بْنُ مُوسَى، حَدَّثَنَا الوَلِيدُ، عَنْ ثَوْرٍ، عَنْ خَالِدِ بْنِ مَعْدَانَ، عَنِ المِقْدَامِ بْنِ مَعْدِي كَرِبَ رَضِيَ اللَّهُ عَنْهُ، عَنِ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، قَالَ: «كِيلُوا طَعَامَكُمْ يُبَارَكْ لَكُمْ»

உங்களுடைய உணவை அளந்து போடுங்கள்! உங்களுக்கு பரக்கத் செய்யப்படும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல் : புகாரி 2128

இன்றைக்குப் பொருளாதாரப் பற்றாக்குறைக்கு குறிப்பாக உணவுப் பற்றாக் குறைக்குக் காரணம் இந்தத் தத்துவத்தைப் புரிந்து கொள்ளாததுதான். எவ்விதத் திட்டமிடுதலும் இல்லாமல் தேவைக்கு அதிகமாக உணவு சமைத்து பெரும்பாலான உணவுப் பொருள்களைக் குப்பையில் கொட்டி வீணாக்குவதை நாம் காண்கிறோம்.

ஒரு மாதம் எவ்வளவு உணவை வீணாக்கி இருக்கிறோம் என்பதைக் கணக்கிட்டு வந்தால் அந்த உணவுப் பொருள் இன்னொரு மாதத்தின் உணவுத் தேவையைப் பூர்த்தி செய்யும் அளவுக்கு அமைந்திருப்பதை ஒவ்வொருவரும் உணரலாம். இதை உணர்ந்து நடந்தால் ஆண்டுக்குப் பல ஆயிரம் ரூபாய்கள் இதனால் நமக்கு மீதமாவதையும் அறிய முடியும்.

## பரக்கத்திற்காகப் பிரார்த்தனை செய்தல்

நாம் அனுபவித்து வரும் பரக்கத் எனும் பேரருளை இறைவனிடம் வேண்டுமாறு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நமக்கு வழிகாட்டியுள்ளார்கள்.

صحيح البخاري

2395 - حَدَّثَنَا عَبْدَانُ، أَخْبَرَنَا عَبْدُ اللَّهِ، أَخْبَرَنَا يُونُسُ، عَنِ الزُّهْرِيِّ، قَالَ: حَدَّثَنِي ابْنُ كَعْبِ بْنِ مَالِكٍ، أَنَّ جَابِرَ بْنَ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، أَخْبَرَهُ: أَنَّ أَبَاهُ قُتِلَ يَوْمَ أُحُدٍ شَهِيدًا، وَعَلَيْهِ دَيْنٌ، فَاشْتَدَّ الغُرَمَاءُ فِي حُقُوقِهِمْ، فَأَتَيْتُ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَسَأَلَهُمْ أَنْ يَقْبَلُوا تَمْرَ حَائِطِي وَيُحَلِّلُوا أَبِي، فَأَبَوْا، فَلَمْ يُعْطِهِمُ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ حَائِطِي، وَقَالَ: «سَنَغْدُو عَلَيْكَ»، فَغَدَا عَلَيْنَا حِينَ أَصْبَحَ، فَطَافَ فِي النَّخْلِ وَدَعَا فِي ثَمَرِهَا بِالْبَرَكَةِ، فَجَدَدْتُهَا، فَقَضَيْتُهُمْ، وَبَقِيَ لَنَا مِنْ تَمْرِهَا

ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது :

என் தந்தையார் உஹுதுப் போரின்போது, அவர் மீது கடன் இருந்த நிலையில் கொல்லப்பட்டு விட்டார்கள். கடன் கொடுத்தவர்கள் தம் உரிமைகளைக் கேட்டுக் கடுமை காட்டினார்கள். உடனே, நான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் சென்றேன். (விஷயத்தைக் கூறினேன்.) நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கடன் கொடுத்தவர்களிடம் என் தோட்டத்தின் பேரீச்சம் பழங்களை (கடனுக்குப் பகரமாக) ஏற்றுக் கொண்டு என் தந்தையை மன்னித்து (மீதிக் கடனைத்) தள்ளுபடி செய்து விடும்படி கேட்டுக் கொண்டார்கள். (அவ்வாறு செய்ய) அவர்கள் மறுத்து விட்டனர்.

ஆகவே, அவர்களுக்கு அந்தப் பேரீச்சம் பழங்களை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கொடுக்கவில்லை. மாறாக, "நாம் உன்னிடம் காலையில் வருவோம்" என்று என்னிடம் கூறினார்கள். பிறகு காலையில் என்னிடம் வந்தார்கள். பேரீச்ச மரங்களிடையே சுற்றி வந்து, அவற்றின் கனிகளில் பரக்கத்துக்காக துஆ செய்தார்கள். பிறகு, நான் அவற்றைப் பறித்துக் கடன் கொடுத்தவர்களின் கடன்களையெல்லாம் திருப்பிச் செலுத்தினேன். (முழுக் கடனையும் தீர்த்த பின்பும்) அதன் கனிகள் எங்களுக்கு மீதமாக இருந்தன.

நூல் : புகாரி 2395

صحيح البخاري

5155 - حَدَّثَنَا سُلَيْمَانُ بْنُ حَرْبٍ، حَدَّثَنَا حَمَّادٌ هُوَ ابْنُ زَيْدٍ، عَنْ ثَابِتٍ، عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ: أَنَّ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ رَأَى عَلَى عَبْدِ الرَّحْمَنِ بْنِ عَوْفٍ أَثَرَ صُفْرَةٍ، قَالَ: «مَا هَذَا؟» قَالَ: إِنِّي تَزَوَّجْتُ امْرَأَةً عَلَى وَزْنِ نَوَاةٍ مِنْ ذَهَبٍ، قَالَ: «بَارَكَ اللَّهُ لَكَ، أَوْلِمْ وَلَوْ بِشَاةٍ»

அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்களின் (ஆடையின்) மீது (வாசனை திரவியத்தின்) மஞ்சள் நிற அடையாளத்தைக் கண்ட நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "இது என்ன?" என்று கேட்டார்கள். அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்கள், "ஒரு பேரீச்சங்கொட்டையின் எடையளவு தங்கத்தை (மஹ்ராக)க் கொடுத்து, ஒரு பெண்ணை நான் மணமுடித்துக் கொண்டேன்" என்று பதிலளித்தார்கள். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "பாரக்கல்லாஹ் - அல்லாஹ் உங்களுக்கு பரக்கத்தை வழங்குவானாக!" என்று பிரார்த்தித்து விட்டு, "ஓர் ஆட்டையாவது (அறுத்து) வலீமா - மணவிருந்து அளியுங்கள்!" என்று சொன்னார்கள்.

நூல் : புகாரி 5155

அதிக அளவு செல்வம் இருந்தும் அவை போதாமலிருப்பதை விட குறைந்த செல்வம் இருந்து அவை தேவைகள் நிறைவேற போதுமானதாக இருப்பது சிறந்ததாகும். இதனால்தான் வாழ்க்கையில் அடி எடுத்து வைக்கும் தம்பதிகளுக்காக அல்லாஹ் உமக்கு பரக்கத் செய்வனாக என்ற இந்தப் பிரார்த்தனையை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வழிமுறையாக்கியுள்ளனர்.

صحيح البخاري

6344 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ أَبِي الأَسْوَدِ، حَدَّثَنَا حَرَمِيٌّ، حَدَّثَنَا شُعْبَةُ، عَنْ قَتَادَةَ، عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: قَالَتْ أُمِّي: يَا رَسُولَ اللَّهِ، خَادِمُكَ أَنَسٌ، ادْعُ اللَّهَ لَهُ، قَالَ: «اللَّهُمَّ أَكْثِرْ مَالَهُ، وَوَلَدَهُ، وَبَارِكْ لَهُ فِيمَا أَعْطَيْتَهُ»

அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது :

என் தாயார் (உம்மு சுலைம்) அவர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! தங்களின் சேவகர் அனஸுக்காகப் பிரார்த்தியுங்கள்" என்றார்கள். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வே! அனஸின் செல்வத்தையும் குழந்தைகளையும் அதிகமாக்குவாயாக! அவருக்கு நீ வழங்கியுள்ளவற்றில் பரக்கத் அளிப்பாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.

நூல் : புகாரி 6344

صحيح مسلم

5449 - حَدَّثَنِى مُحَمَّدُ بْنُ الْمُثَنَّى الْعَنَزِىُّ حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ جَعْفَرٍ حَدَّثَنَا شُعْبَةُ عَنْ يَزِيدَ بْنِ خُمَيْرٍ عَنْ عَبْدِ اللَّهِ بْنِ بُسْرٍ قَالَ نَزَلَ رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- عَلَى أَبِى - قَالَ - فَقَرَّبْنَا إِلَيْهِ طَعَامًا وَوَطْبَةً فَأَكَلَ مِنْهَا ثُمَّ أُتِىَ بِتَمْرٍ فَكَانَ يَأْكُلُهُ وَيُلْقِى النَّوَى بَيْنَ إِصْبَعَيْهِ وَيَجْمَعُ السَّبَّابَةَ وَالْوُسْطَى - قَالَ شُعْبَةُ هُوَ ظَنِّى وَهُوَ فِيهِ إِنْ شَاءَ اللَّهُ إِلْقَاءُ النَّوَى بَيْنَ الإِصْبَعَيْنِ - ثُمَّ أُتِىَ بِشَرَابٍ فَشَرِبَهُ ثُمَّ نَاوَلَهُ الَّذِى عَنْ يَمِينِهِ - قَالَ - فَقَالَ أَبِى وَأَخَذَ بِلِجَامِ دَابَّتِهِ ادْعُ اللَّهَ لَنَا فَقَالَ « اللَّهُمَّ بَارِكْ لَهُمْ فِى مَا رَزَقْتَهُمْ وَاغْفِرْ لَهُمْ وَارْحَمْهُمْ ».

அப்துல்லாஹ் இப்னு பிஷ்ர் என்ற நபித்தோழர் கூறுகிறார் :

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எங்கள் வீட்டிற்கு விருந்து உண்ண வந்தார்கள். அவர்களுக்கு உணவை வைத்தோம். அவர்கள் உண்டார்கள். உண்டுவிட்டு வீட்டைவிட்டு வெளியில் சென்றபோது என்னுடைய தந்தை நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடைய வாகனத்தின் கயிற்றைப் பிடித்து எங்களுக்காக அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள் என்று கேட்டபோது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வே இவர்களுக்கு வழங்கியவற்றில் இவர்களுக்கு பரக்கத் செய்வாயாக! மேலும் இவர்களை மன்னித்து இவர்களுக்கு அருள் புரிவாயாக என்று கேட்டார்கள்.

நூல் : முஸ்லிம் 5449

பிரார்த்தனை செய்யுங்கள் என்று இந்தத் தோழர் கோரிக்கை வைத்தபோது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இவருக்கு அதிகமான செல்வத்தைத்

தருவாயாக என்று கேட்கவில்லை. மாறாக அவருக்கு நீ எதைத் தந்தாயோ அதிலே பரக்கத்தைத் தருவாயாக என்றுதான் கேட்டார்கள்.

இறைவன் நமக்கு குறைவான செல்வத்தைத் தந்தாலும் அதன் மூலம் நம் தேவைகள் நிறைவேறும் அளவுக்கு பரக்கத் செய்வான் என்று ஒருவன் நம்பி விட்டால் தவறான வழியில் பொருளீட்டத் துணிய மாட்டான். உள்ளதைக் கொண்டு போதுமாக்கிக் கொள்வான்.

صحيح البخاري

1885 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ مُحَمَّدٍ، حَدَّثَنَا وَهْبُ بْنُ جَرِيرٍ، حَدَّثَنَا أَبِي، سَمِعْتُ يُونُسَ، عَنِ ابْنِ شِهَابٍ، عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ، عَنِ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، قَالَ: «اللَّهُمَّ اجْعَلْ بِالْمَدِينَةِ ضِعْفَيْ مَا جَعَلْتَ بِمَكَّةَ مِنَ البَرَكَةِ»

அல்லாஹ்வே மக்காவிற்கு எவ்வளவு பரக்கத் செய்தாயோ அதைவிட இரண்டு மடங்கு மதினாவிற்கு பரக்கத் செய்வாயாக என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பிரார்த்தனை செய்தார்கள்.

நூல் : புகாரி 1885

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மதீனாவிற்குச் சென்றபோது அவர்களும் ஹிஜ்ரத் செய்து மதீனா வந்த தோழர்களும் உண்ணுவதற்கு உணவில்லாமல் கஷ்டப்பட்டார்கள். உள்ளூர்வாசிகளான மதினாவாசிகளும் கஷ்டப்பட்டார்கள்.

இந்த மக்களுக்கு அதிகமான செல்வத்தை வழங்குமாறு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பிரார்த்தனை செய்யவில்லை. மாறாக மதீனாவாழ் மக்கள் பயன்படுத்தும் அளவுப் பாத்திரங்களில் அல்லாஹ் பரக்கத் செய்ய வேண்டும் என்றுதான் பிரார்த்தனை செய்தார்கள்.

صحيح البخاري

2130 - حَدَّثَنِي عَبْدُ اللَّهِ بْنُ مَسْلَمَةَ، عَنْ مَالِكٍ، عَنْ إِسْحَاقَ بْنِ عَبْدِ اللَّهِ بْنِ أَبِي طَلْحَةَ، عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ رَضِيَ اللَّهُ عَنْهُ: أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، قَالَ: «اللَّهُمَّ بَارِكْ لَهُمْ فِي مِكْيَالِهِمْ، وَبَارِكْ لَهُمْ فِي صَاعِهِمْ، وَمُدِّهِمْ» يَعْنِي أَهْلَ المَدِينَةِ

இறைவா! மதீனாவாசிகளின் முகத்தலளவையில் நீ பரக்கத் அளிப்பாயாக! குறிப்பாக அவர்களது ஸாஉ, முத்து எனும் அளவுப் பாத்திரங்களில் நீ பரக்கத் அளிப்பாயாக என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பிரார்த்தனை செய்தார்கள்.

நூல் : புகாரி 2130

மதினாவுக்கு ஹிஜ்ரத் செய்த மக்களுக்கு தினமும் ரொட்டிகள் கிடைக்கவில்லை. வேறு வகையான உணவுகளும் கிடைக்கவில்லை. அவர்களுக்கு தினமும் கிடைத்தது ஓரிரு பேரீச்சம் பழங்கள் தான். ஒரு முழுநாளுக்கு ஒரு பேரீச்சம்பழத்தைச் சாப்பிட்டு விட்டுத் தான் அவர்கள் போர்களில் கூட பங்கு கொண்டார்கள். அவர்கள் சாப்பிட்ட ஒரு பேரீச்சம் பழத்தில் வயிறு நிரம்ப சாப்பிடும் போது கிடைக்கும் எல்லா சத்துக்களையும் அல்லாஹ் வழங்கினான்.

صحيح البخاري 2483 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ، أَخْبَرَنَا مَالِكٌ، عَنْ وَهْبِ بْنِ كَيْسَانَ، عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، أَنَّهُ قَالَ: بَعَثَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ بَعْثًا قِبَلَ السَّاحِلِ، فَأَمَّرَ عَلَيْهِمْ أَبَا عُبَيْدَةَ بْنَ الجَرَّاحِ وَهُمْ ثَلاَثُ مِائَةٍ، وَأَنَا فِيهِمْ، فَخَرَجْنَا حَتَّى إِذَا كُنَّا بِبَعْضِ الطَّرِيقِ فَنِيَ الزَّادُ، فَأَمَرَ أَبُو عُبَيْدَةَ بِأَزْوَادِ ذَلِكَ الجَيْشِ، فَجُمِعَ ذَلِكَ كُلُّهُ، فَكَانَ مِزْوَدَيْ تَمْرٍ، فَكَانَ يُقَوِّتُنَا كُلَّ يَوْمٍ قَلِيلًا قَلِيلًا حَتَّى فَنِيَ، فَلَمْ يَكُنْ يُصِيبُنَا إِلَّا تَمْرَةٌ تَمْرَةٌ، فَقُلْتُ: وَمَا تُغْنِي تَمْرَةٌ، فَقَالَ: لَقَدْ وَجَدْنَا فَقْدَهَا حِينَ فَنِيَتْ، قَالَ: ثُمَّ انْتَهَيْنَا إِلَى البَحْرِ، فَإِذَا حُوتٌ مِثْلُ الظَّرِبِ، فَأَكَلَ مِنْهُ ذَلِكَ الجَيْشُ ثَمَانِيَ عَشْرَةَ لَيْلَةً، ثُمَّ أَمَرَ أَبُو عُبَيْدَةَ بِضِلَعَيْنِ مِنْ أَضْلاَعِهِ، فَنُصِبَا ثُمَّ أَمَرَ بِرَاحِلَةٍ، فَرُحِلَتْ ثُمَّ مَرَّتْ تَحْتَهُمَا فَلَمْ تُصِبْهُمَا

ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கடற்கரையை நோக்கி ஒரு படையை அனுப்பினார்கள். அந்தப் படையினருக்கு அபூ உபைதா பின் ஜர்ராஹ் (ரலி) அவர்களைத் தளபதியாக ஆக்கினார்கள். அவர்கள் (படையினர்) முந்நூறு பேர் இருந்தனர். அவர்களில் நானும் ஒருவனாயிருந்தேன். நாங்கள் புறப்பட்டோம். பாதி வழியிலேயே எங்கள் கையிருப்பில் இருந்த (பயண) உணவு தீர்ந்து போய்விட்டது. அபூ உபைதா (ரலி) அவர்கள் அந்தப் படையின் (கைவசமிருந்த) கட்டுச் சாதங்கள் அனைத்தையும் ஒன்று திரட்டும் படி உத்தரவிட்டார்கள். அவ்வாறே அவை அனைத்தும் ஒன்று திரட்டப்பட்டன. இரு பைகள் (நிறைய) பேரீச்சம் பழங்கள் சேர்ந்தன. அபூஉபைதா (ரலி) அவர்கள் அவற்றை எங்களுக்கு ஒவ்வொரு நாளும் சிறிது சிறிதாகக் கொடுத்து வந்தார்கள். இறுதியில், அவையும் தீர்ந்து போய் விட்டன. எங்களுக்கு (ஆளுக்கு) ஒவ்வொரு பேரீச்சம் பழம் தான் கிடைத்து வந்தது. ...இதை ஜாபிர் (ரலி) அவர்கள் சொன்ன போது, இதைக் கேட்டுக் கொண்டிருந்த அறிவிப்பாளர் வஹ்ப் பின் கைஸான் (ரஹ்) அவர்கள், ஒரு பேரீச்சம் பழம் எப்படிப்

போதும்? என்று கேட்டார். அதற்கு ஜாபிர் (ரலி) அவர்கள், அதுவும் தீர்ந்து போன பின்பு தான் அதன் மதிப்பை நாங்கள் உணர்ந்தோம் என்று பதிலளித்தார்கள்...

பிறகு நாங்கள் கடல் வரை வந்து சேர்ந்து விட்டோம். அங்கு தற்செயலாக சிறிய மலை போன்ற (திமிங்கல வகை) மீன் ஒன்று கிடைத்தது. அதிலிருந்து (எங்களுடைய) அந்தப் படை பதினெட்டு நாட்கள் உண்டது. பிறகு அபூஉபைதா (ரலி) அவர்கள் அதன் விலா எலும்புகளிலிருந்து இரு விலா எலும்புகளை பூமியில் நட்டு வைக்கும்படி உத்திர விட்டார்கள். அவ்வாறே, அவை இரண்டும் நடப்பட்டன. பிறகு, ஒட்டகத்தை அதன் கீழே ஓட்டிச் செல்லும்படி உத்திரவிட்டார்கள். அவ்வாறே ஓட்டிச் செல்லப்பட்டது. அது (அந்தத் திமிங்கலத்தின்) விலா எலும்புகளின் கீழே சென்றது. ஆனால், அவற்றை அது தொடவில்லை.

நூல் : புகாரி 2483

صحيح البخاري 2484 - حَدَّثَنَا بِشْرُ بْنُ مَرْحُومٍ، حَدَّثَنَا حَاتِمُ بْنُ إِسْمَاعِيلَ [ص:138]، عَنْ يَزِيدَ بْنِ أَبِي عُبَيْدٍ، عَنْ سَلَمَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: خَفَّتْ أَزْوَادُ القَوْمِ، وَأَمْلَقُوا، فَأَتَوُا النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ فِي نَحْرِ إِبِلِهِمْ، فَأَذِنَ لَهُمْ، فَلَقِيَهُمْ عُمَرُ، فَأَخْبَرُوهُ فَقَالَ: مَا بَقَاؤُكُمْ بَعْدَ إِبِلِكُمْ، فَدَخَلَ عَلَى النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَقَالَ: يَا رَسُولَ اللَّهِ، مَا بَقَاؤُهُمْ بَعْدَ إِبِلِهِمْ، فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «نَادِ فِي النَّاسِ، فَيَأْتُونَ بِفَضْلِ أَزْوَادِهِمْ»، فَبُسِطَ لِذَلِكَ نِطَعٌ، وَجَعَلُوهُ عَلَى النِّطَعِ، فَقَامَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ فَدَعَا وَبَرَّكَ عَلَيْهِ، ثُمَّ دَعَاهُمْ بِأَوْعِيَتِهِمْ، فَاحْتَثَى النَّاسُ حَتَّى فَرَغُوا، ثُمَّ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلَّا اللَّهُ، وَأَنِّي رَسُولُ اللَّهِ»

சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:

(ஹவாஸின் போரில்) மக்களின் பயண உணவு தீர்ந்து போய்ப் பஞ்சத்திற்குள்ளானார்கள். ஆகவே, நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்து, (புசிப்பதற்காகத்) தங்கள் ஒட்டகங்களை அறுக்க அனுமதி கேட்டார்கள். நபி (ஸல்) அவர்களும் அவர்களுக்கு அனுமதியளித்தார்கள். (வழியில்) அவர்களை உமர் (ரலி) அவர்கள் சந்திக்க, மக்கள் அவர்களுக்கு (நடந்த விஷயத்தை)த் தெரிவித்தார்கள். அதற்கு உமர் (ரலி) அவர்கள், உங்கள் ஒட்டகங்களை அறுத்து (உண்டு) விட்ட பிறகு நீங்கள் எப்படி உயிர் வாழ்வீர்கள்? என்று கேட்டார்கள். பிறகு நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் சென்று, அல்லாஹ்வின் தூதரே! மக்கள் தங்களுடைய ஒட்டகத்தை அறுத்து (உண்டு) விட்ட பிறகு அவர்கள் எப்படி உயிர் வாழ்வார்கள்? என்று கேட்டார்கள். உடனே நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், மக்கள் தங்கள் பயண உணவில் எஞ்சியதைக் கொண்டு வரும்படி அவர்களிடையே அறிவிப்புச்

செய்யுங்கள் என்று கூறினார்கள். அவ்வாறே அறிவிப்புச் செய்யப்பட்டு, மக்கள் தங்கள் எஞ்சிய உணவைக் கொண்டு வந்து போடுவதற்காக ஒரு தோல் விரிப்பு விரித்து வைக்கப்பட்டது. மக்கள் அதில் தங்கள் எஞ்சிய உணவுகளை (குவியலாக) வைத்து விட்டார்கள். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் துஆ செய்து அதில் பரக்கத்தை அளிக்கும்படி அல்லாஹ் விடம் வேண்டினார்கள். பிறகு, தங்கள் பாத்திரங்களைக் கொண்டு வரும்படி மக்களை அழைத்தார்கள். மக்கள், தங்கள் இரு கைகளையும் குவித்து (உணவில் தங்கள் பங்கைப்) பெற்று(பாத்திரங்களை நிரப்பி)க் கொண்டார்கள். அனைவரும் உணவைப் பெற்றுக் கொண்டுவிட்ட பிறகு நபி (ஸல்) அவர்கள், வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் இல்லை என்றும் நான் அல்லாஹ்வின் தூதர் என்றும் சாட்சி கூறுகின்றேன் என்று சொன்னார்கள்.

நூல் : புகாரி 2484

அதிகச் செல்வத்தை அல்லாஹ் வழங்கினாலும் அதில் பரக்கத் செய்யவில்லையானால் அதிகச் செல்வமும் ஒருவனது தேவைகளை நிறைவு செய்திடாது என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

மாதம் ஒரு லட்சம் ரூபாய் வருமானம் வந்து மாதம் இரண்டு லட்சம் செலவிடும் அளவுக்கு நோயை அல்லாஹ் தருவதை விட மாதம் ஐந்தாயிரம் ரூபாய் வருமானம் வந்து எந்த நோயும் இல்லாமல் இருப்பது எவ்வளவு சிறந்தது என்பதை நாம் சிந்திக்க வேண்டும்.

## பரக்கத்தைப் பெறுவதற்கான தகுதிகள்

பரக்கத் எனும் பேரருள் ஒருவருக்குக் கிடைக்க வேண்டுமானால் அவர் அல்லாஹ்விடம் அதை வேண்டுவதுடன் சில தகுதிகளையும் அவர் வளர்த்துக் கொள்ள வேண்டும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கற்றுத் தந்துள்ளனர்.

### பேராசை கொள்ளக் கூடாது

صحيح البخاري

1472 - وحَدَّثَنَا عَبْدَانُ، أَخْبَرَنَا عَبْدُ اللَّهِ، أَخْبَرَنَا يُونُسُ، عَنِ الزُّهْرِيِّ، عَنْ عُرْوَةَ بْنِ الزُّبَيْرِ، وَسَعِيدِ بْنِ المُسَيِّبِ، أَنَّ حَكِيمَ بْنَ حِزَامٍ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: سَأَلْتُ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَأَعْطَانِي، ثُمَّ سَأَلْتُهُ، فَأَعْطَانِي، ثُمَّ سَأَلْتُهُ، فَأَعْطَانِي ثُمَّ قَالَ: «يَا حَكِيمُ، إِنَّ هَذَا المَالَ خَضِرَةٌ حُلْوَةٌ، فَمَنْ أَخَذَهُ بِسَخَاوَةِ نَفْسٍ بُورِكَ لَهُ فِيهِ، وَمَنْ أَخَذَهُ بِإِشْرَافِ نَفْسٍ لَمْ يُبَارَكْ لَهُ فِيهِ، كَالَّذِي يَأْكُلُ وَلاَ يَشْبَعُ، اليَدُ العُلْيَا خَيْرٌ مِنَ اليَدِ السُّفْلَى»، قَالَ حَكِيمٌ: فَقُلْتُ: يَا رَسُولَ اللَّهِ، وَالَّذِي بَعَثَكَ بِالحَقِّ لاَ أَرْزَأُ أَحَدًا بَعْدَكَ شَيْئًا حَتَّى أُفَارِقَ الدُّنْيَا، فَكَانَ أَبُو بَكْرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ، يَدْعُو حَكِيمًا إِلَى العَطَاءِ، فَيَأْبَى أَنْ يَقْبَلَهُ مِنْهُ، ثُمَّ إِنَّ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُ دَعَاهُ لِيُعْطِيَهُ فَأَبَى أَنْ يَقْبَلَ مِنْهُ شَيْئًا، فَقَالَ عُمَرُ: إِنِّي أُشْهِدُكُمْ يَا مَعْشَرَ المُسْلِمِينَ عَلَى حَكِيمٍ، أَنِّي أَعْرِضُ عَلَيْهِ حَقَّهُ مِنْ هَذَا الفَيْءِ فَيَأْبَى أَنْ يَأْخُذَهُ، فَلَمْ يَرْزَأْ حَكِيمٌ أَحَدًا مِنَ النَّاسِ بَعْدَ رَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ حَتَّى تُوُفِّيَ

ஹகீம் பின் ஹிஸாம் (ரலி) அவர்கள் கூறியதாவது :

நான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் (உதவி) கேட்டேன். அவர்கள் எனக்கு வழங்கினார்கள்; மீண்டும் (உதவி) கேட்டேன்; வழங்கினார்கள். மீண்டும் கேட்டேன்; வழங்கிவிட்டு, "ஹகீமே! நிச்சயமாக இந்தச் செல்வம் பசுமையானதும், இனிமையானதுமாகும். யார் இதைப் போதுமென்ற உள்ளத்துடன் எடுத்துக் கொள்கிறாரோ அவருக்கு இதில் பரக்கத் ஏற்படுத்தப்படும். யார் இதைப் பேராசையுடன் எடுத்துக் கொள்கின்றாரோ அவருக்கு அதில் பரக்கத் ஏற்படுத்தப்படாது. அவர் உண்ட பின்பும் வயிறு நிரம்பாதவர் போலாவார். உயர்ந்த கை தாழ்ந்த கையை விடச் சிறந்தது" என்று கூறினார்கள்.

நூல் : புகாரி 1472

செல்வத்தின் பின்னால் பேராசைப்பட்டு ஓடாமல் எது கிடைக்கிறதோ அதுபோதும் என்ற மனது யாருக்கு இருக்கிறதோ அவருக்கு அல்லாஹ் பரக்கத் செய்வான் என்பதை மேற்கண்ட நபி மொழியிலிருந்து நாம் அறியலாம்.

அனுமதிக்கப்பட்ட முறையில் அடைய வேண்டும்

2434 - حَدَّثَنَا أَبُو بَكْرِ بْنُ أَبِى شَيْبَةَ وَعَمْرٌو النَّاقِدُ قَالاَ حَدَّثَنَا سُفْيَانُ عَنِ الزُّهْرِىِّ عَنْ عُرْوَةَ بْنِ الزُّبَيْرِ وَسَعِيدٍ عَنْ حَكِيمِ بْنِ حِزَامٍ قَالَ سَأَلْتُ النَّبِىَّ -صلى الله عليه وسلم- فَأَعْطَانِى ثُمَّ سَأَلْتُهُ فَأَعْطَانِى ثُمَّ سَأَلْتُهُ فَأَعْطَانِى ثُمَّ قَالَ « إِنَّ هَذَا الْمَالَ خَضِرَةٌ حُلْوَةٌ فَمَنْ أَخَذَهُ بِطِيبِ نَفْسٍ بُورِكَ لَهُ فِيهِ وَمَنْ أَخَذَهُ بِإِشْرَافِ نَفْسٍ لَمْ يُبَارَكْ لَهُ فِيهِ وَكَانَ كَالَّذِى يَأْكُلُ وَلاَ يَشْبَعُ وَالْيَدُ الْعُلْيَا خَيْرٌ مِنَ الْيَدِ السُّفْلَى ».

செல்வத்தை உரிய முறையில் யார் அடைகிறாரோ அவருக்கு அதில் பரக்கத் வழங்கப்படும். செல்வத்தை முறையற்ற வழிகளில் யார் அடைகிறாரோ அவர் உண்டும் வயிறு நிரம்பாதவரைப் போன்றவர் ஆவார்" என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல் : முஸ்லிம் 2434

நேர்மையற்ற வழிகளிலும், மார்க்கம் அனுமதிக்காத வழிகளிலும் ஒருவர் கோடி கோடியாகச் சம்பாதித்தாலும் அதில் அல்லாஹ்வின் பரக்கத் நிச்சயம் இருக்காது. ஹலாலான வழிகளில் பொருளீட்டுவோர் மட்டுமே இந்த மாபெரும் அருளை அடைய முடியும்.

## இருப்பதில் திருப்தி அடைய வேண்டும்

حَدَّثَنَا إِسْمَاعِيلُ عَنْ يُونُسَ حَدَّثَنِي أَبُو الْعَلَاءِ بْنُ الشِّخِّيرِ حَدَّثَنِي أَحَدُ بَنِي سُلَيْمٍ وَلَا أَحْسَبُهُ إِلَّا قَدْ رَأَى رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ أَنَّ اللَّهَ تَبَارَكَ وَتَعَالَى يَبْتَلِي عَبْدَهُ بِمَا أَعْطَاهُ فَمَنْ رَضِيَ بِمَا قَسَمَ اللَّهُ عَزَّ وَجَلَّ لَهُ بَارَكَ اللَّهُ لَهُ فِيهِ وَوَسَّعَهُ وَمَنْ لَمْ يَرْضَ لَمْ يُبَارِكْ لَهُ

அல்லாஹ் தன் அடியானுக்கு வழங்கியதில் சோதிக்கிறான். அல்லாஹ் பங்கிட்டுத் தந்ததை யார் பொருந்திக் கொள்கிறாரோ அவருக்கு அல்லாஹ் தந்தவற்றில் பரக்கத் செய்கிறான். மேலும் விசாலமாக்குகிறான். எவர் பொருந்திக் கொள்ளவில்லையோ அவருக்கு அல்லாஹ் பரக்கத் செய்ய மாட்டான் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்..

நூல் : அஹ்மத் 19398

## கடன்

## கடன் விஷயத்தில் கண்டிப்பு

கடன் வாங்குவது, வாங்கிய கடனைத் திருப்பிச் செலுத்துவது ஆகியவற்றில் இஸ்லாம் கடுமையான நிலைபாட்டைக் கொண்டுள்ளது.

صحيح البخاري

2295 - حَدَّثَنَا أَبُو عَاصِمٍ، عَنْ يَزِيدَ بْنِ أَبِي عُبَيْدٍ، عَنْ سَلَمَةَ بْنِ الأَكْوَعِ رَضِيَ اللَّهُ عَنْهُ: أَنَّ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ أُتِيَ بِجَنَازَةٍ لِيُصَلِّيَ عَلَيْهَا، فَقَالَ: «هَلْ عَلَيْهِ مِنْ دَيْنٍ؟»، قَالُوا: لاَ، فَصَلَّى عَلَيْهِ، ثُمَّ أُتِيَ بِجَنَازَةٍ أُخْرَى، فَقَالَ: «هَلْ عَلَيْهِ مِنْ دَيْنٍ؟»، قَالُوا: نَعَمْ، قَالَ: «صَلُّوا عَلَى صَاحِبِكُمْ»، قَالَ: أَبُو قَتَادَةَ عَلَيَّ دَيْنُهُ يَا رَسُولَ اللَّهِ، فَصَلَّى عَلَيْهِ

ஜனாஸாத் தொழுகை நடத்துவதற்காக ஒருவரது உடல் கொண்டு வரப்பட்டது. இவர் கடனாளியா? என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கேட்டபோது, நபித்தோழர்கள் இல்லை என்றனர். அவருக்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தொழுகை நடத்தினார்கள். பிறகு மற்றொரு ஜனாஸா கொண்டு வரப்பட்டபோது, இவர் கடனாளியா? என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். நபித்தோழர்கள் ஆம் என்றனர். அப்படியென்றால் உங்கள் தோழருக்கு நீங்களே தொழுகை நடத்துங்கள்! என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது அபூகத்தாதா (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதரே! இவரது கடனுக்கு நான் பொறுப்பு என்று கூறியதும், அவருக்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தொழுகை நடத்தினார்கள்.

நூல் : புகாரி 2295

صحيح البخاري

2298 - حَدَّثَنَا يَحْيَى بْنُ بُكَيْرٍ، حَدَّثَنَا اللَّيْثُ، عَنْ عُقَيْلٍ، عَنِ ابْنِ شِهَابٍ، عَنْ أَبِي سَلَمَةَ، عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ: أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ كَانَ يُؤْتَى بِالرَّجُلِ [ص:98] المُتَوَفَّى، عَلَيْهِ الدَّيْنُ، فَيَسْأَلُ: «هَلْ تَرَكَ لِدَيْنِهِ فَضْلًا؟»، فَإِنْ حُدِّثَ أَنَّهُ تَرَكَ لِدَيْنِهِ وَفَاءً صَلَّى، وَإِلَّا قَالَ لِلْمُسْلِمِينَ: «صَلُّوا عَلَى صَاحِبِكُمْ»، فَلَمَّا فَتَحَ اللَّهُ عَلَيْهِ الفُتُوحَ، قَالَ: «أَنَا أَوْلَى بِالْمُؤْمِنِينَ مِنْ أَنْفُسِهِمْ، فَمَنْ تُوُفِّيَ مِنَ المُؤْمِنِينَ فَتَرَكَ دَيْنًا، فَعَلَيَّ قَضَاؤُهُ، وَمَنْ تَرَكَ مَالًا فَلِوَرَثَتِهِ»

கடன்பட்டு இறந்தவர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் (ஜனாஸாத் தொழுகைக்காகக்) கொண்டு வரப்படுவார். அப்போது இவர் கடனை அடைக்க ஏதேனும் விட்டுச் சென்றிருக்கிறாரா? என்று கேட்பார்கள். கடனை அடைப்பதற்குப்

போதுமானதை விட்டுச் சென்றிருக்கிறார்" என்று கூறப்பட்டால் (அவருக்காகத்) தொழுகை நடத்துவார்கள். இல்லையென்றால், நீங்கள் உங்கள் தோழருக்காகத் தொழுகை நடத்துங்கள்!" என்று முஸ்லிம்களிடம் கூறிவிடுவார்கள். அல்லாஹ் அவர்களுக்கு மிகுதியான வெற்றிகளைக் கொடுத்தபோது (அதன் மூலம் செல்வம் குவிந்ததால்) மூமின்களைப் பொறுத்தவரை அவர்கள் விஷயத்தில் நானே அதிக உரிமையுடையவன்! மூமின்களில் யாரேனும் கடன்பட்ட நிலையில் இறந்துவிட்டால் அதை நிறைவேற்றுவது என் பொறுப்பாகும். யாரேனும் செல்வத்தை விட்டுச் சென்றால் அது அவர்களின் வாரிசுகளுக்குரியதாகும் என்று கூறினார்கள்.

நூல் : புகாரி 2298

கடன்பட்ட நிலையில் ஒருவர் மரணித்து விட்டால் மறுமை நாளில் அவரது நன்மைகள் கடன் கொடுத்தவர் கணக்கில் சேர்க்கப்பட்டு விடும். இந்த நிலையை யாரும் அடையக் கூடாது என்பதற்காக நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஜனாஸா தொழுகை நடத்தாமல் புறக்கணித்துள்ளார்கள். நாம் கடனாளியாக மரணித்தால் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் பிரார்த்தனை நமக்குக் கிடைக்காமல் போய்விடும் என்ற அச்சம் காரணமாக கடனில்லாமல் மரணிக்க நபித்தோழர்கள் முயற்சிப்பார்கள் என்பதற்காக நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இதில் கடுமை காட்டியுள்ளனர்.

நபித்தோழர்களின் நிலையே இதுவென்றால் நாம் கடன் வாங்கினால் என்னவாகும் என்ற அச்சம் அனைத்து முஸ்லிம்களுக்கும் ஏற்படவேண்டும்.

எனவே இயன்றவரை யாருக்கும் கடனாளியாக இல்லாமல் நமது வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும்.

## கடனை இழுத்தடிக்கக் கூடாது.

கடன் வாங்குவதில் இரண்டு நிலைகள் உள்ளன. எந்த வழியும் இல்லாமல் மிகவும் அவசியத் தேவைக்காக வாங்கும் கடன் ஒருவகை. இதைப் பெரும்பாலும் தவிர்க்க முடியாது. இப்படிப்பட்ட கடன் வாங்கியவர்கள் குறித்த நேரத்தில் திருப்பிச் செலுத்த முடியாத நிலை ஏற்படலாம். அவர்கள் கடன் கொடுத்தவரிடம் அவகாசம் கேட்பது தவறில்லை.

வசதிகளும் சொத்துக்களும் இருந்தும் பெருக்கிக் கொள்வதற்காக வாங்கும் கடன் இன்னொரு வகை.

வசதி படைத்தவர்களாக இருந்தால் தன்னிடம் உள்ள சொத்துக்கள் சிலவற்றை விற்று தேவையைப் பூர்த்தி செய்து கொள்வதுதான் சிறந்ததாகும். அப்படியே கடன் வாங்கி விட்டால் குறித்த நேரத்தில் கடனைத் திருப்பிச் செலுத்திவிட முடியும் என்பதால் இவர்கள் அவகாசம் கேட்பது மார்க்கத்தில் தடுக்கப்பட்டதாகும்.

வசதி படைத்தவர்கள் பெரும்பாலும் அவசியத் தேவைகளுக்காக கடன் வாங்குவதில்லை. இருக்கும் தொழிலைப் பெருக்குவதற்காகவும், ஒரு வீட்டை இரண்டு வீடுகளாக ஆக்குவதற்கும், ஆடம்பரப் பொருள்களை வாங்கிக் குவிப்பதற்காகவும்தான் கடன் வாங்குகிறார்கள்.

கடன் வாங்குவதால் ஏற்படும் விளைவுகளை இவர்கள் அறியாமல் உள்ளனர்.

கடன் வாங்கிய நிலையில் நாம் மரணித்து நம்முடைய வாரிசுகள் அந்தக் கடனை அடைக்கவில்லையானால் நாம் செய்த நன்மைகள் கடன் கொடுத்தவனுக்குப் போய் விடும் என்று அஞ்சி தவிர்க்க இயன்ற கடன்களைத் தவிர்த்துக் கொள்ள வேண்டும்.

صحيح البخاري

2287 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ، أَخْبَرَنَا مَالِكٌ، عَنْ أَبِي الزِّنَادِ، عَنِ الأَعْرَجِ، عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ: أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ: «مَطْلُ الغَنِيِّ ظُلْمٌ، فَإِذَا أُتْبِعَ أَحَدُكُمْ عَلَى مَلِيٍّ فَلْيَتْبَعْ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

செல்வந்தன் இழுத்தடிப்பது அநியாயமாகும். உங்களில் ஒருவரது கடன் ஒரு செல்வந்தன் மீது மாற்றப்பட்டால் அவர் (அதற்கு) ஒப்புக் கொள்ளட்டும்!

நூல் : புகாரி 2287, 2288, 2400

## நல்ல முறையில் திருப்பிக் கொடுத்தல்

கடன் வாங்கியவர் அதைத் திருப்பிக் கொடுக்கும்போது அழகிய முறையில் திருப்பிக் கொடுக்க வேண்டும். இயலுமானால் வாங்கியதை விடச் சிறந்ததை அல்லது பெரியதைக் கொடுக்க வேண்டும். இது வட்டியில் சேராது.

கடன் வாங்கும்போது கூனிக்குறுகி கெஞ்சிக் கூத்தாடி கடன் வாங்குகிறார்கள். ஆனால் அதன் பின்னர் கடன் கொடுத்தவன் கெஞ்சிக்கூத்தாடி வசூல் செய்யும் நிலையை ஏற்படுத்துகிறார்கள். ஒரு முஸ்லிம் இவ்வாறு நடந்து கொள்ள அனுமதி இல்லை.

حَدَّثَنَا أَبُو الْوَلِيدِ حَدَّثَنَا شُعْبَةُ أَخْبَرَنَا سَلَمَةُ بْنُ كُهَيْلٍ قَالَ سَمِعْتُ أَبَا سَلَمَةَ بِمِنًى يُحَدِّثُ عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَجُلًا تَقَاضَى رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَأَغْلَظَ لَهُ فَهَمَّ بِهِ أَصْحَابُهُ فَقَالَ دَعُوهُ فَإِنَّ لِصَاحِبِ الْحَقِّ مَقَالًا وَاشْتَرُوا لَهُ بَعِيرًا فَأَعْطُوهُ إِيَّاهُ وَقَالُوا لَا نَجِدُ إِلَّا أَفْضَلَ مِنْ سِنِّهِ قَالَ اشْتَرُوهُ فَأَعْطُوهُ إِيَّاهُ فَإِنَّ خَيْرَكُمْ أَحْسَنُكُمْ قَضَاءً

ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதரிடம், தான் கொடுத்த (ஒட்டகத்)தைத் திருப்பித் தரும்படி கேட்டார். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் அந்த மனிதர் கடுமையாகப் பேசினார். ஆகவே, நபித்தோழர்கள் அவரைத் தண்டிக்க விரும்பினார்கள். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தம் தோழர்களை நோக்கி, "விட்டு விடுங்கள். ஏனெனில், ஒருவர் தனக்குக் கடன் தர வேண்டியவரிடம் கடுமையாகப் பேச உரிமையுண்டு. அவருக்காக ஓர் ஒட்டகத்தை வாங்கிக் கொடுத்து விடுங்கள்" என்று கூறினார்கள். "அவருக்குத் தர வேண்டிய ஒட்டகத்தின் வயதை விட அதிக வயதுடைய ஒட்டகம்தான் எங்களிடம் இருக்கின்றது" என்று நபித்தோழர்கள் கூறினார்கள். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "அதையே வாங்கி அவருக்குக் கொடுத்து விடுங்கள். ஏனெனில், உங்களில் எவர் நல்ல முறையில் கடனைத் திருப்பிச் செலுத்துகின்றாரோ அவரே உங்களில் சிறந்தவர்" என்று கூறினார்கள்.

நூல் : புகாரி 2305, 2306, 2390, 2392, 2393, 2606, 2609

2097 - حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ بَشَّارٍ، حَدَّثَنَا عَبْدُ الوَهَّابِ، حَدَّثَنَا عُبَيْدُ اللَّهِ، عَنْ وَهْبِ بْنِ كَيْسَانَ، عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، قَالَ: كُنْتُ مَعَ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ فِي غَزَاةٍ، فَأَبْطَأَ بِي جَمَلِي وَأَعْيَا، فَأَتَى عَلَيَّ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَ «جَابِرٌ»: فَقُلْتُ: نَعَمْ، قَالَ: «مَا شَأْنُكَ؟» قُلْتُ: أَبْطَأَ عَلَيَّ جَمَلِي وَأَعْيَا، فَتَخَلَّفْتُ، فَنَزَلَ يَحْجُنُهُ بِمِحْجَنِهِ ثُمَّ قَالَ: «ارْكَبْ»، فَرَكِبْتُ، فَلَقَدْ رَأَيْتُهُ أَكُفُّهُ عَنْ رَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، قَالَ: «تَزَوَّجْتَ» قُلْتُ: نَعَمْ، قَالَ: «بِكْرًا أَمْ ثَيِّبًا» قُلْتُ: بَلْ ثَيِّبًا، قَالَ: «أَفَلاَ جَارِيَةً تُلاَعِبُهَا وَتُلاَعِبُكَ» قُلْتُ: إِنَّ لِي أَخَوَاتٍ، فَأَحْبَبْتُ أَنْ أَتَزَوَّجَ امْرَأَةً تَجْمَعُهُنَّ، وَتَمْشُطُهُنَّ، وَتَقُومُ عَلَيْهِنَّ، قَالَ: «أَمَّا إِنَّكَ قَادِمٌ، فَإِذَا قَدِمْتَ، فَالكَيْسَ الكَيْسَ»، ثُمَّ قَالَ: «أَتَبِيعُ جَمَلَكَ» قُلْتُ: نَعَمْ، فَاشْتَرَاهُ مِنِّي بِأُوقِيَّةٍ، ثُمَّ قَدِمَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَبْلِي، وَقَدِمْتُ بِالْغَدَاةِ، فَجِئْنَا إِلَى المَسْجِدِ فَوَجَدْتُهُ عَلَى بَابِ المَسْجِدِ، قَالَ: «آلْآنَ قَدِمْتَ» قُلْتُ: نَعَمْ، قَالَ: «فَدَعْ جَمَلَكَ، فَادْخُلْ، فَصَلِّ رَكْعَتَيْنِ»، فَدَخَلْتُ فَصَلَّيْتُ، فَأَمَرَ بِلاَلًا أَنْ يَزِنَ لَهُ أُوقِيَّةً، فَوَزَنَ لِي بِلاَلٌ، فَأَرْجَحَ لِي فِي المِيزَانِ، فَانْطَلَقْتُ حَتَّى وَلَّيْتُ، فَقَالَ: «ادْعُ لِي جَابِرًا» قُلْتُ: الآنَ يَرُدُّ عَلَيَّ الجَمَلَ، وَلَمْ يَكُنْ شَيْءٌ أَبْغَضَ إِلَيَّ مِنْهُ، قَالَ: «خُذْ جَمَلَكَ وَلَكَ ثَمَنُهُ»

நான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடன் ஒரு போரில் (பங்கு கொண்டு விட்டுத் திரும்பி வந்து கொண்டு) இருந்தேன். அப்போது எனது ஒட்டகம் களைத்து பலமிழந்து போனதால் என்னைப் பின்தங்க வைத்துவிட்டது. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் என்னிடம் வந்து, ஜாபிரா? என்று கேட்டார்கள். நான், ஆம்! என்றேன். என்ன விஷயம் (ஏன் பின்தங்கி விட்டீர்)? என்று கேட்டார்கள். என் ஒட்டகம் களைத்து பலமிழந்து போனதால் என்னைப் பின்தங்க வைத்துவிட்டது; அதனால் நான் பின்தங்கி விட்டேன்" என்றேன். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கீழே இறங்கி தலைப்பகுதி வளைந்த ஒரு கைத்தடியால் எனது ஒட்டகத்தைத் தட்டி(எழுப்பி)னார்கள். பிறகு (உமது வாகனத்தில்) ஏறுவீராக! என்றார்கள். நான் (வாகனத்தில்) ஏறினேன். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை விட எனது ஒட்டகம் முந்தாதவாறு அதைக் கட்டுப்படுத்தினேன். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், நீர் மணமுடித்து விட்டீரா? என்று கேட்டார்கள். நான் ஆம் என்றேன். கன்னியையா? கன்னிகழிந்த பெண்ணையா? என்று கேட்டார்கள். கன்னிகழிந்த பெண்ணைத்தான் என்று நான் கூறினேன். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், கன்னிப் பெண்ணை மணந்திருக்கக் கூடாதா? அவள் உம்முடனும் நீர் அவளுடனும் கூடிக்குலாவி மகிழலாமே! என்று கூறினார்கள். நான், எனக்குச் (சிறிய வயதுடைய) சகோதரிகள் உள்ளனர்! அவர்களை அரவணைத்து, அவர்களுக்குத் தலைவாரி, அவர்களைப் பராமரிக்கக் கூடிய ஒரு பெண்ணை மணக்க வேண்டும் என்று விரும்பினேன் என்றேன். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், இப்போது ஊருக்கு செல்லப்போகிறீர்! ஊர் சென்றதும் நிதானத்துடன் நடந்து கொள்வீராக! நிதானத்துடன் நடந்து கொள்வீராக என்று கூறிவிட்டு பின்னர்,

உமது ஒட்டகத்தை எனக்கு விற்று விடுகிறீரா?" என்று கேட்டார்கள். நான், சரி (விற்று விடுகிறேன்) என்றேன். அவர்கள் என்னிடமிருந்து, ஒரு ஊக்கியா எடை (தங்கத்து)க்குப் பகரமாக அதை வாங்கிக் கொண்டார்கள். பிறகு, எனக்கு முன்பே நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் (மதீனாவுக்கு) சென்று விட்டார்கள். நான் மறுநாள் சென்றடைந்தேன். நாங்கள் பள்ளிவாசலுக்கு வந்தபோது அதன் நுழைவாயிலில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நின்று கொண்டிருந்தார்கள். இப்போதுதான் வருகிறீரா?" என்று அவர்கள் (என்னைப் பார்த்துக்) கேட்டார்கள். நான் ஆம்! என்றேன். உமது ஒட்டகத்தை விட்டுவிட்டு உள்ளே சென்று இரண்டு ரக்அத்கள் தொழுவீராக! என்று சொன்னார்கள். அவ்வாறே, நான் உள்ளே சென்று தொழுதேன். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எனக்காக ஒரு ஊக்கியா (தங்கத்தை) எடை போடுமாறு பிலால் (ரலி) அவர்களுக்கு உத்தரவிட்டார்கள். எனக்காக பிலால் (ரலி) அவர்கள் எடைபோட்டு சற்று தாராளமாகவே நிறுத்தார்கள். பிறகு நான் திரும்பிச் சென்று விட்டேன். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், ஜாபிரை என்னிடம் அழைத்து வாரும்! என்றார்கள். நான் (மனதிற்குள்) இப்போது என் ஒட்டகம் திருப்பித் தரப்பட்டுவிடும்; அதை விட எனக்கு வெறுப்பானது வேறொன்றுமில்லை" என்று கூறிக் கொண்டேன். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், உமது ஒட்டகத்தை எடுத்துக் கொள்வீராக! அதனுடைய விலையையும் நீரே வைத்துக் கொள்வீராக!" என்று சொன்னார்கள்.

நூல் : புகாரி 2097, 2309

صحيح البخاري

2603 - حَدَّثَنَا ثَابِتٌ، حَدَّثَنَا مِسْعَرٌ، عَنْ مُحَارِبٍ، عَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ، «أَتَيْتُ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ فِي المَسْجِدِ، فَقَضَانِي وَزَادَنِي»

பள்ளிவாசலில் இருந்த நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் நான் சென்றேன். எனக்கு (என்னிடம் வாங்கிய ஒட்டகத்தின் விலையைச்) செலுத்தி எனக்கு அதிகமாகவும் தந்தார்கள்.

நூல் : புகாரி 2603

கடன் வாங்கியவர் அதைத் திருப்பிச் செலுத்தும்போது சிறந்ததாகவும் அதிகமாகவும் செலுத்துவது விரும்பத்தக்கது என்பதை இதில் இருந்து அறிகிறோம்.

நம்முடைய பணம் ஒருவரிடம் இருக்கும் காலத்துக்கு ஏற்ப நிர்ணயித்த தொகையை வாங்குவதுதான் வட்டியாகும். நாம் பத்தாயிரம் ரூபாய் கடன் வாங்கிவிட்டு திருப்பிக் கொடுக்கும்போது நாமாக விரும்பி பதினோராயிரமோ பதினைந்தாயிரமோ கொடுத்தால் அது வட்டியாகாது என்பதையும் இதில் இருந்து நாம் அறிந்து கொள்கிறோம்.

திருப்பித் தரும்போது கொஞ்சம் கூடுதலாகத் தரவேண்டும் என்று என்று கடன் கொடுத்தவர் நிபந்தனை போட்டால் அது வட்டியில் சேரும்.

## கடனைத் திருப்பி செலுத்தும் வழிமுறை

கடன் வாங்கிவிட்டு குறித்த நேரத்தில் அதைக் கொடுக்க முடியாவிட்டால் சிலர் பொய்களைச் சொல்லி தப்பிக்கப் பார்க்கின்றனர். அல்லது தலைமறைவாகி விடுகிறார்கள். அல்லது கடன் கொடுத்தவரையே மிரட்டுகிறார்கள். உன்னிடம் நான் கடன் வாங்கவில்லை என்றும் நான் அப்போதே கொடுத்து விட்டேன் என்றும் கூசாமல் பொய் சொல்கிறார்கள்.

கடனைத் திருப்பிக் கொடுக்க முடியாத நிலை ஏற்படும்போது மனிதனின் மனநிலை இப்படியெல்லாம் மாறிவிடுகிறது. ஆனால் ஒருவன் நல்ல முஸ்லிமாக இருந்தால் இது போன்ற நிலை ஏற்படாமல் தவிர்க்க முடியும்.

ஆம் அல்லாஹ்வின் அருளால் கடனைத் திருப்பிக் கொடுக்கும் நிலையை நாம் அடைவதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சிறந்த வழிமுறையைக் கற்றுத் தந்துள்ளனர்.

صحيح البخاري

2387 - حَدَّثَنَا عَبْدُ العَزِيزِ بْنُ عَبْدِ اللَّهِ [ص:116] الأُوَيْسِيُّ، حَدَّثَنَا سُلَيْمَانُ بْنُ بِلاَلٍ، عَنْ ثَوْرِ بْنِ زَيْدٍ، عَنْ أَبِي الغَيْثِ، عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ، عَنِ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ: «مَنْ أَخَذَ أَمْوَالَ النَّاسِ يُرِيدُ أَدَاءَهَا أَدَّى اللَّهُ عَنْهُ، وَمَنْ أَخَذَ يُرِيدُ إِتْلاَفَهَا أَتْلَفَهُ اللَّهُ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

எவர் மக்களின் பணத்தை (அல்லது பொருட்களைத்) திருப்பிச் செலுத்தும் எண்ணத்துடன் கடன் வாங்குகின்றாரோ அவர் சார்பாக அல்லாஹ்வே அதனைத் திருப்பிச் செலுத்துவான். எவர் திருப்பிச் செலுத்தும் எண்ணமின்றி அதை (ஏமாற்றி) அழித்து விடும் எண்ணத்துடன் கடன் வாங்குகின்றாரோ அல்லாஹ்வும் அவரை அழித்து விடுவான்.

நூல் : புகாரி 2387

سنن النسائي

4687 - حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ الْمُثَنَّى، قَالَ: حَدَّثَنَا وَهْبُ بْنُ جَرِيرٍ، قَالَ: حَدَّثَنَا أَبِي، عَنْ الْأَعْمَشِ، عَنْ حُصَيْنِ بْنِ عَبْدِ الرَّحْمَنِ، عَنْ عُبَيْدِ اللَّهِ بْنِ عَبْدِ اللَّهِ بْنِ عُتْبَةَ، أَنَّ مَيْمُونَةَ، زَوْجَ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ اسْتَدَانَتْ فَقِيلَ لَهَا: يَا أُمَّ الْمُؤْمِنِينَ، تَسْتَدِينِينَ

وَلَيْسَ عِنْدَكِ وَفَاءٌ، قَالَتْ: إِنِّي سَمِعْتُ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ يَقُولُ: «مَنْ أَخَذَ دَيْنًا وَهُوَ يُرِيدُ أَنْ يُؤَدِّيَهُ، أَعَانَهُ اللَّهُ عَزَّ وَجَلَّ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடைய (மரணத்திற்குப் பிறகு அவர்களுடைய) மனைவி மைமூனா (ரலி) அவர்கள் ஒருவரிடம் கடன் கேட்டனர். மூமின்களின் அன்னையே கடனைத் திருப்பிச் செலுத்த வழியில்லாத நீங்கள் கடன் கேட்கிறீர்களே என்று அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு மைமூனா (ரலி) திருப்பிச் செலுத்தும் எண்ணத்தில் யார் கடன் வாங்குகிறாரோ அவருக்கு அல்லாஹ் உதவி செய்கிறான் என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூற நான் செவியுற்றுள்ளேன் என்றார்கள்.

நூல் : நஸாயீ

## கடனை நிறைவேற்றிய பிறகே சொத்தைப் பிரிக்க வேண்டும்

ஒருவர் மரணித்த பின்னர் அவர் செய்த மரணசாசனம் எனும் வசிய்யத்தையும் கடனையும் நிறைவேற்றிய பிறகுதான் வாரிசுகள் சொத்துக்களைப் பிரிக்க வேண்டும் என்று இஸ்லாம் நமக்கு வழிகாட்டுகிறது.

.....(இவை யாவும்) அவர் செய்த மரண சாசனத்தையும் கடனையும் நிறைவேற்றிய பின்னரே.

திருக்குர்ஆன் 4:11

உங்கள் மனைவியருக்குக் குழந்தை இல்லாவிட்டால் அவர்கள் விட்டுச் சென்றதில் பாதி உங்களுக்கு உண்டு. அவர்களுக்குக் குழந்தை இருந்தால் அவர்கள் விட்டுச் சென்றதில் கால்பாகம் உங்களுக்கு உண்டு. அவர்கள் செய்த மரண சாசனம், கடன் ஆகியவற்றை நிறைவேற்றிய பிறகே (பாகம் பிரிக்க வேண்டும்). உங்களுக்குக் குழந்தை இல்லாவிட்டால் நீங்கள் விட்டுச் சென்றதில் கால்பாகம் உங்கள் மனைவியருக்கு உண்டு. உங்களுக்குக் குழந்தை இருந்தால் நீங்கள் விட்டுச் சென்றதில் எட்டில் ஒரு பாகம் அவர்களுக்கு உண்டு. நீங்கள் செய்த மரண சாசனம், கடன் ஆகியவற்றை நிறைவேற்றிய பின்பே (பாகம் பிரிக்கப்பட வேண்டும்). இறந்த ஆணோ, பெண்ணோ பிள்ளை இல்லாதவராக இருந்து அவர்களுக்கு ஒரு சகோதரனும், ஒரு சகோதரியும் இருந்தால் அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஆறில்

ஒரு பாகம் உள்ளது. அதைவிட அதிகமாக இருந்தால் மூன்றில் ஒரு பங்கில் அவர்கள் அனைவரும் கூட்டாளிகள். செய்யப்பட்ட மரண சாசனம், மற்றும் கடனுக்குப் பிறகே (பாகம் பிரிக்கப்பட வேண்டும்.) (இவை அனைத்தும் யாருக்கும்) பாதிப்பு ஏற்படாத வகையில் (செய்யப்பட வேண்டும்.) இது அல்லாஹ்வின் கட்டளை. அல்லாஹ் அறிந்தவன்; சகிப்புத் தன்மை மிக்கவன்.

திருக்குர்ஆன் 4.11.1

ஒருவர் மரணித்தால் அவரது கடனை அடைத்த பின்னர்தான் வாரிசுகள் சொத்தைப் பிரிக்க வேண்டும் என்று மேற்கண்ட வசனங்களில் அல்லாஹ் கட்டளை இடுகிறான்.

ஆனால் நம்மில் அதிகமானவர்கள் இப்படி நடப்பதில்லை. பெற்றோரின் கடனைத் தீர்க்காவிட்டால் நம்முடைய பெற்றோரின் மறுமை வாழ்க்கை பாழாகிப் போய்விடும் என்பதுகூட அவர்களுக்குத் தெரிவதில்லை.

பெற்றோர்கள் சொத்துக்கள் எதையும் விட்டு வைக்காமல் கடனை மட்டும் வைத்து விட்டு மரணித்து விட்டால் அப்போது அவரது பிள்ளைகள் அந்தக் கடனைச் சுமக்க வேண்டும்; அந்தக் கடனை அடைப்பது அவர்களின் கடமையாகும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வழிகாட்டியுள்ளனர்.

صحيح البخاري

1852 - حَدَّثَنَا مُوسَى بْنُ إِسْمَاعِيلَ، حَدَّثَنَا أَبُو عَوَانَةَ، عَنْ أَبِي بِشْرٍ، عَنْ سَعِيدِ بْنِ جُبَيْرٍ، عَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، أَنَّ امْرَأَةً مِنْ جُهَيْنَةَ، جَاءَتْ إِلَى النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَقَالَتْ: إِنَّ أُمِّي نَذَرَتْ أَنْ تَحُجَّ فَلَمْ تَحُجَّ حَتَّى مَاتَتْ، أَفَأَحُجُّ عَنْهَا؟ قَالَ: «نَعَمْ حُجِّي عَنْهَا، أَرَأَيْتِ لَوْ كَانَ عَلَى أُمِّكِ دَيْنٌ أَكُنْتِ قَاضِيَةً؟ اقْضُوا اللَّهَ فَاللَّهُ أَحَقُّ بِالوَفَاءِ»

ஜுஹைனா கூட்டத்தைச் சேர்ந்த ஒரு பெண்மணி நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்து, "என் தாய் ஹஜ் செய்வதாக நேர்ந்து அதை நிறைவேற்றாமல் இறந்துவிட்டார். அவர் சார்பாக நான் ஹஜ் செய்யலாமா?" என்று கேட்டார். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "ஆம்! அவர் சார்பாக நீ ஹஜ் செய். உன் தாய்க்குக் கடன் இருந்தால் நீதானே அதை நிறைவேற்றுவாய். எனவே அல்லாஹ்வின் கடன்களை நிறைவேற்றுங்கள். கடன்கள் நிறைவேற்றப்படுவதற்கு அல்லாஹ் அதிகம் உரிமை படைத்தவன்" என்றார்கள்

நூல் : புகாரி 1852, 6697, 7315

பெற்றோர்கள் பட்ட கடனை அடைப்பது பிள்ளைகளின் கடமை என்பதை இதிலிருந்து நாம் அறிந்து கொள்கிறோம்.

## கடனைத் தள்ளுபடி செய்தல்

ஒருவர் நம்மிடம் கடன் வாங்கி விட்டு மரணித்து விட்டால் கடனுக்குத் தக்கவாறு அவர் செய்த நன்மைகள் நமக்கு கிடைத்து விடும். ஆனால் நாமாக முன்வந்து கடனைத் தள்ளுபடி செய்து விட்டால் அதை விட அதிக நன்மையை அல்லாஹ் நமக்கு வழங்குகிறான்.

صحيح البخاري

3480 - حَدَّثَنَا عَبْدُ العَزِيزِ بْنُ عَبْدِ اللَّهِ، حَدَّثَنَا إِبْرَاهِيمُ بْنُ سَعْدٍ، عَنِ ابْنِ شِهَابٍ، عَنْ عُبَيْدِ اللَّهِ بْنِ عَبْدِ اللَّهِ بْنِ عُتْبَةَ، عَنْ أَبِي هُرَيْرَةَ أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، قَالَ: " كَانَ الرَّجُلُ يُدَايِنُ النَّاسَ، فَكَانَ يَقُولُ لِفَتَاهُ: إِذَا أَتَيْتَ مُعْسِرًا فَتَجَاوَزْ عَنْهُ، لَعَلَّ اللَّهَ أَنْ يَتَجَاوَزَ عَنَّا، قَالَ: فَلَقِيَ اللَّهَ فَتَجَاوَزَ عَنْهُ "

(முன் காலத்தில்) ஒரு மனிதர் மக்களுக்குக் கடன் கொடுத்து (உதவி) வந்தார். (அதை வசூலிக்கச் செல்லும்) தனது (அலுவலரான) வாலிபரிடம், "(வசதியின்றிச்) சிரமப்படுபவரிடம் நீ சென்றால் (அவரைக் கண்டு கொள்ளாமல்) மன்னித்து(க் கடனைத் தள்ளுபடி செய்து) விடு. அல்லாஹ்வும் (நம்மைக் கண்டு கொள்ளாமல்) மன்னித்து விடக்கூடும்" என்று சொல்லி வந்தார். அவர் (மரணமடைந்து) அல்லாஹ்வைச் சந்தித்தபோது அவருடைய பிழைகளைப் பொறுத்து அவன் மன்னித்து விட்டான்.

நூல் : புகாரி 3480

صحيح البخاري

2077 - حَدَّثَنَا أَحْمَدُ بْنُ يُونُسَ، حَدَّثَنَا زُهَيْرٌ، حَدَّثَنَا مَنْصُورٌ، أَنَّ رِبْعِيَّ بْنَ حِرَاشٍ، حَدَّثَهُ أَنَّ حُذَيْفَةَ [ص:58] رَضِيَ اللَّهُ عَنْهُ، حَدَّثَهُ قَالَ: قَالَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: " تَلَقَّتِ المَلاَئِكَةُ رُوحَ رَجُلٍ مِمَّنْ كَانَ قَبْلَكُمْ، قَالُوا: أَعَمِلْتَ مِنَ الخَيْرِ شَيْئًا؟ قَالَ: كُنْتُ آمُرُ فِتْيَانِي أَنْ يُنْظِرُوا وَيَتَجَاوَزُوا عَنِ المُوسِرِ، قَالَ: قَالَ: فَتَجَاوَزُوا عَنْهُ "، قَالَ أَبُو عَبْدِ اللَّهِ: وَقَالَ أَبُو مَالِكٍ، عَنْ رِبْعِيّ: «كُنْتُ أُيَسِّرُ عَلَى المُوسِرِ، وَأُنْظِرُ المُعْسِرَ»، وَتَابَعَهُ شُعْبَةُ، عَنْ عَبْدِ المَلِكِ، عَنْ رِبْعِيّ، وَقَالَ أَبُو عَوَانَةَ: عَنْ عَبْدِ المَلِكِ، عَنْ رِبْعِيّ: «أُنْظِرُ المُوسِرَ، وَأَتَجَاوَزُ عَنِ المُعْسِرِ»، وَقَالَ نُعَيْمُ بْنُ أَبِي هِنْدٍ، عَنْ رِبْعِيّ: «فَأَقْبَلُ مِنَ المُوسِرِ، وَأَتَجَاوَزُ عَنِ المُعْسِرِ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

உங்களுக்கு முன்னர் வாழ்ந்த ஒரு மனிதரின் உயிரை வானவர்கள் கைப்பற்றி, அவரிடம் நீர் ஏதேனும் நல்லது செய்திருக்கிறீரா? எனக் கேட்டனர். அதற்கு அம்மனிதர், வசதியானவருக்கு அவகாசம் அளிக்கும்படியும் வசதியற்றவரைக் கண்டுகொள்ளாமல் விட்டுவிடும்படியும் நான் எனது ஊழியர்களுக்குக் கட்டளையிட்டிருந்தேன்! என்று கூறினார். உடனே, அவரது தவறுகளைக் கண்டுகொள்ளாமல் விட்டுவிடுங்கள்! என்று அல்லாஹ் வானவர்களுக்குக் கட்டளையிட்டான்!

நூல் : புகாரி 2077

صحيح البخاري

2078 - حَدَّثَنَا هِشَامُ بْنُ عَمَّارٍ، حَدَّثَنَا يَحْيَى بْنُ حَمْزَةَ، حَدَّثَنَا الزُّبَيْدِيُّ، عَنِ الزُّهْرِيِّ، عَنْ عُبَيْدِ اللَّهِ بْنِ عَبْدِ اللَّهِ، أَنَّهُ سَمِعَ أَبَا هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ، عَنِ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، قَالَ: " كَانَ تَاجِرٌ يُدَايِنُ النَّاسَ، فَإِذَا رَأَى مُعْسِرًا قَالَ لِفِتْيَانِهِ: تَجَاوَزُوا عَنْهُ، لَعَلَّ اللَّهَ أَنْ يَتَجَاوَزَ عَنَّا، فَتَجَاوَزَ اللَّهُ عَنْهُ "

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(முன் காலத்தில்) மக்களுக்குக் கடன் கொடுக்கக் கூடிய ஒரு வியாபாரி இருந்தார். கடனைத் திருப்பிச் செலுத்தச் சிரமப்படுபவரை அவர் கண்டால், தமது பணியாளர்களிடம் இவரது கடனைத் தள்ளுபடி செய்யுங்கள்; அல்லாஹ் நமது தவறுகளைத் தள்ளுபடி செய்யக்கூடும் என்று கூறுவார். அல்லாஹ்வும் அவரது தவறுகளைத் தள்ளுபடி செய்தான்.

நூல் : புகாரி 2078

صحيح مسلم

4083 - حَدَّثَنَا أَبُو الْهَيْثَمِ خَالِدُ بْنُ خِدَاشِ بْنِ عَجْلاَنَ حَدَّثَنَا حَمَّادُ بْنُ زَيْدٍ عَنْ أَيُّوبَ عَنْ يَحْيَى بْنِ أَبِى كَثِيرٍ عَنْ عَبْدِ اللَّهِ بْنِ أَبِى قَتَادَةَ أَنَّ أَبَا قَتَادَةَ طَلَبَ غَرِيمًا لَهُ فَتَوَارَى عَنْهُ ثُمَّ وَجَدَهُ فَقَالَ إِنِّى مُعْسِرٌ. فَقَالَ آللَّهِ قَالَ آللَّهِ. قَالَ فَإِنِّى سَمِعْتُ رَسُولَ اللَّهِ -صلى الله عليه وسلم- يَقُولُ « مَنْ سَرَّهُ أَنْ يُنْجِيَهُ اللَّهُ مِنْ كُرَبِ يَوْمِ الْقِيَامَةِ فَلْيُنَفِّسْ عَنْ مُعْسِرٍ أَوْ يَضَعْ عَنْهُ

அப்துல்லாஹ் பின் அபீகத்தாதா (ரஹ்) அவர்கள் கூறியதாவது :

(என் தந்தை) அபூகத்தாதா (ரலி) அவர்கள், தமக்குக் கடன் தர வேண்டிய ஒருவரைத் தேடினார்கள். அவர் தலைமறைவாகி விட்டார். பின்னர் அவரைக் கண்டபோது அவர், "நான் (வசதியின்றி) சிரமப்படுபவன்" என்று கூறினார். அதற்கு அபூகத்தாதா

(ரலி) அவர்கள், "அல்லாஹ்வின் மீது சத்தியமாகவா?" என்று கேட்டார்கள். அவர் "அல்லாஹ்வின் மீது சத்தியமாகத்தான்" என்றார். அதற்கு அபூகத்தாதா (ரலி) அவர்கள், "மறுமை நாளின் துயரங்களிலிருந்து அல்லாஹ் தம்மைக் காப்பாற்ற வேண்டுமென விரும்புகின்றவர், (கடனை அடைக்க முடியாமல்) சிரமப்படுபவருக்கு அவகாசம் அளிக்கட்டும். அல்லது கடனைத் தள்ளுபடி செய்துவிடட்டும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.

நூல் : முஸ்லிம் 4083

## கடன் பட்டவருக்காகப் பரிந்துரை செய்தல்

கடன் கொடுத்தவர் கடன் வாங்கியவரை நெருக்கும்போது கடன் வாங்கியவர் பரிந்துரை செய்யுமாறு கோரிக்கை வைத்தால் பரிந்துரை செய்து அவரது சிரமத்தைக் குறைப்பதற்கு உதவ வேண்டும். நபியவர்கள் தம்முடைய தோழர்களுக்காக இவ்வாறு பரிந்துரை செய்துள்ளார்கள்.

صحيح البخاري

457 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ مُحَمَّدٍ، قَالَ: حَدَّثَنَا عُثْمَانُ بْنُ عُمَرَ، قَالَ: أَخْبَرَنَا يُونُسُ، عَنِ الزُّهْرِيِّ، عَنْ عَبْدِ اللَّهِ بْنِ كَعْبِ بْنِ مَالِكٍ، عَنْ كَعْبٍ، أَنَّهُ تَقَاضَى ابْنَ أَبِي حَدْرَدٍ دَيْنًا كَانَ لَهُ عَلَيْهِ فِي المَسْجِدِ، فَارْتَفَعَتْ أَصْوَاتُهُمَا حَتَّى سَمِعَهَا رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ وَهُوَ فِي بَيْتِهِ، فَخَرَجَ إِلَيْهِمَا حَتَّى كَشَفَ سِجْفَ حُجْرَتِهِ، فَنَادَى: «يَا كَعْبُ» قَالَ: لَبَّيْكَ يَا رَسُولَ اللَّهِ، قَالَ: «ضَعْ مِنْ دَيْنِكَ هَذَا» وَأَوْمَأَ إِلَيْهِ: أَيِ الشَّطْرَ، قَالَ: لَقَدْ فَعَلْتُ يَا رَسُولَ اللَّهِ، قَالَ: «قُمْ فَاقْضِهِ»

கஅப் (ரலி) அவர்கள் கூறியதாவது :

(நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் காலத்தில்) எனக்கு அப்துல்லாஹ் பின் அபீஹத்ரத் அல்அஸ்லமீ (ரலி) அவர்கள் தர வேண்டியிருந்த ஒரு கடனை (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலில் வைத்து திருப்பித் தரும்படி கேட்டேன். (இது தொடர்பாக எங்களிடையே வாக்குவாதம் ஏற்பட்டு) எங்கள் இருவரின் குரல்களும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வீட்டிலிருந்தபடியே அதைக் கேட்கும் அளவிற்கு உயர்ந்தன. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எங்களிருவரையும் நோக்கி வந்தார்கள். தமது அறையின் திரையை விலக்கி, "கஅப்! என்றழைத்தார்கள். நான், "இதோ வந்துவிட்டேன், அல்லாஹ்வின் தூதரே!" என்று பதிலளித்தேன். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "இதை (இந்த அளவை) உன் கடனிலிருந்து தள்ளுபடி

செய்துவிடு!" என்று கூறி பாதியளவு கடனைக் குறைத்துக் கொள்ளும்படி (என்னிடம் விரலால்) சைகை செய்தார்கள். "அவ்வாறே செய்து விட்டேன், அல்லாஹ்வின் தூதரே!" என்று கூறினேன். பிறகு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் (அப்துல்லாஹ் பின் அபீஹத்ரத் அவர்களை நோக்கி,) "எழுந்து சென்று கடனை அடைப்பீராக!" என்று சொன்னார்கள்.

நூல் : புகாரி 457, 471, 2418, 2424, 2706, 2710

صحيح البخاري

2127 - حَدَّثَنَا عَبْدَانُ، أَخْبَرَنَا جَرِيرٌ، عَنْ مُغِيرَةَ، عَنِ الشَّعْبِيِّ، عَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: تُوُفِّيَ عَبْدُ اللَّهِ بْنُ عَمْرِو بْنِ حَرَامٍ وَعَلَيْهِ دَيْنٌ، فَاسْتَعَنْتُ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ عَلَى غُرَمَائِهِ أَنْ يَضَعُوا مِنْ دَيْنِهِ، فَطَلَبَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ إِلَيْهِمْ فَلَمْ يَفْعَلُوا، فَقَالَ لِي النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «اذْهَبْ فَصَنِّفْ تَمْرَكَ أَصْنَافًا، العَجْوَةَ عَلَى حِدَةٍ، وَعَذْقَ زَيْدٍ عَلَى حِدَةٍ، ثُمَّ أَرْسِلْ إِلَيَّ»، فَفَعَلْتُ، ثُمَّ أَرْسَلْتُ إِلَى النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَجَاءَ فَجَلَسَ عَلَى أَعْلاَهُ، أَوْ فِي وَسَطِهِ، ثُمَّ قَالَ: «كِلْ لِلْقَوْمِ»، فَكِلْتُهُمْ حَتَّى أَوْفَيْتُهُمُ الَّذِي لَهُمْ وَبَقِيَ تَمْرِي كَأَنَّهُ لَمْ يَنْقُصْ مِنْهُ شَيْءٌ وَقَالَ فِرَاسٌ عَنِ الشَّعْبِيِّ، حَدَّثَنِي جَابِرٌ، عَنِ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «فَمَا زَالَ يَكِيلُ لَهُمْ حَتَّى أَدَّاهُ»، وَقَالَ هِشَامٌ: عَنْ وَهْبٍ، عَنْ جَابِرٍ، قَالَ: النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «جُذَّ لَهُ فَأَوْفِ لَهُ»

ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது :

என் தந்தையார் உஹதுப் போரின்போது, அவர் மீது கடன் இருந்த நிலையில் (ஷஹீதாகக்) கொல்லப்பட்டு விட்டார்கள். கடன் கொடுத்தவர்கள் தம் உரிமைகளைக் கேட்டு கடுமை காட்டினார்கள். உடனே, நான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் சென்றேன். (விஷயத்தைக் கூறினேன்.) நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கடன் கொடுத்தவர்களிடம் என் தோட்டத்தின் பேரீச்சம் பழங்களை (கடனுக்குப் பகரமாக) ஏற்றுக் கொண்டு என் தந்தையை மன்னித்து (மீதிக் கடனைத்) தள்ளுபடி செய்து விடும்படி கேட்டுக் கொண்டார்கள். (அவ்வாறு செய்ய) அவர்கள் மறுத்து விட்டனர். ஆகவே, அவர்களுக்கு அந்தப் பேரீச்சம் பழங்களை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கொடுக்கவில்லை. மாறாக, "நாம் உன்னிடம் காலையில் வருவோம்" என்று கூறினார்கள். பிறகு காலையில் என்னிடம் வந்தார்கள். பேரீச்சை மரங்களிடையே சுற்றி வந்து, அவற்றின் கனிகளில் பரக்கத்துக்காக துஆச் செய்தார்கள். பிறகு, நான் அவற்றைப் பறித்துக் கடன் கொடுத்தவர்களின் கடன்களையெல்லாம் திருப்பிச் செலுத்தினேன். (முழுக் கடனையும் தீர்த்த பின்பும்) அதன் கனிகள் எங்களுக்கு மீதமாக இருந்தன.

நூல் : புகாரி 2127, 2395, 2396, 2406, 2601, 2709

## கடனை அடைக்கும் அளவுக்கு பொருளாதாரம் இல்லாவிட்டால்

வாங்கிய கடனை முழுமையாக அடைக்க முடியாமல் சிறிதளவுதான் கடன்பட்டவரிடம் வசதி இருக்கிறது என்றால் என்ன செய்ய வேண்டும் என்பதற்கும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வழிகாட்டியுள்ளனர்.

صحيح مسلم

4064 - حَدَّثَنَا قُتَيْبَةُ بْنُ سَعِيدٍ حَدَّثَنَا لَيْثٌ عَنْ بُكَيْرٍ عَنْ عِيَاضِ بْنِ عَبْدِ اللَّهِ عَنْ أَبِى سَعِيدٍ الْخُدْرِىِّ قَالَ أُصِيبَ رَجُلٌ فِى عَهْدِ رَسُولِ اللَّهِ -صلى الله عليه وسلم- فِى ثِمَارٍ ابْتَاعَهَا فَكَثُرَ دَيْنُهُ فَقَالَ رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- « تَصَدَّقُوا عَلَيْهِ ». فَتَصَدَّقَ النَّاسُ عَلَيْهِ فَلَمْ يَبْلُغْ ذَلِكَ وَفَاءَ دَيْنِهِ فَقَالَ رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- لِغُرَمَائِهِ « خُذُوا مَا وَجَدْتُمْ وَلَيْسَ لَكُمْ إِلاَّ ذَلِكَ ».

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களது காலத்தில் பழங்களை விலைக்கு வாங்கிய ஒருவர் (நஷ்டமடைந்து) பாதிக்கப்பட்டார். அவருக்குக் கடன் அதிகமாகி விட்டது. அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "இவருக்குத் தர்மம் செய்யுங்கள்" என்று கூறினார்கள். அவ்வாறே மக்கள் அவருக்குத் தர்மம் செய்தனர். அது அவரது கடனை அடைக்கப் போதுமான அளவுக்குத் தேறவில்லை. எனவே, அவருக்குக் கடன் கொடுத்தவர்களிடம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "(அவரிடம்) இருப்பதைப் பெற்றுக் கொள்ளுங்கள். அதைத் தவிர உங்களுக்கு வேறெதுவுமில்லை" என்று கூறினார்கள்.

நூல் : முஸ்லிம் 4064

கடன் வாங்கியவரிடம் ஒரு லட்சம் ரூபாய்தான் உள்ளது. ஆனால் கடன் இரண்டு லட்சம் இருக்கிறது. இரண்டு லட்சம் தேறும் வரை அவகாசம் அளிக்க கடன் கொடுத்தவர் உடன்படவில்லை. இப்போதே முடிக்க வேண்டும் என்று வழக்கு கொண்டு வந்தால் இரண்டு லட்சம் கடன் கொடுத்தவர் ஒரு லட்சத்தை மட்டும் பெற்றுக் கொண்டு அதோடு விட்டுவிட வேண்டும்.

அல்லது அவகாசம் அளித்து வசதி வரும் போது வாங்கிக் கொள்ளலாம்.

## கடனை எழுதிக் கொள்ளுதல்

கொடுக்கும் கடன்களை எழுதிக் கொள்ள வேண்டும்; இதில் தயவு தாட்சண்யம் பார்க்கக் கூடாது என்று இஸ்லாம் வழிகாட்டுகிறது. வெளித்தோற்றத்தை நம்பி கடன் கொடுத்து பலர் ஏமாந்து போகின்றனர்.

கொடுக்கும் கடன் வந்தால் வரட்டும்; இல்லாவிட்டால் போகட்டும் என்று நினைத்து ஒருவர் கடன் கொடுத்தால் அதை எழுதிக் கொள்ள வேண்டியதில்லை. அவ்வாறு இல்லாமல் கடனை கண்டிப்பாக திரும்பப் பெற வேண்டும் என்று கருதி கடன் கொடுத்தால் எழுதி வாங்கிக் கொள்ள வேண்டும்.

ஒரு மனிதன் நல்லவனா கெட்டவனா என்பதை இன்னொரு மனிதனால் அறிய முடியாது என்பது இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கையாகும். நம்மிடம் நல்லவர் போல் ஒருவர் பழகி விட்டால் அதனால் அவரை நம்பி எந்தப் பிடிமானமும் இல்லாமல் கடன் கொடுக்கக் கூடாது. அவர் உடன் பிறந்த சகோதரர் ஆனாலும் உற்ற நண்பரே ஆனாலும் எழுத்துப்பூர்வமான ஆதாரம் அல்லது அடைமானம் இல்லாமல் கடன் கொடுக்குமாறு இஸ்லாம் நமக்கு வழிகாட்டவில்லை.

ஒருவர் எவ்வளவுதான் நல்லவர் என்று நமக்குத் தோற்றமளித்தாலும் அவர் நல்லவராக இருப்பதற்கு வாய்ப்பு உள்ளது போல் அவ்வாறு இல்லாமல் இருப்பதற்கும் வாய்ப்பு உள்ளது.

நம்பிக்கை கொண்டோரே! குறிப்பிட்ட காலக்கெடு விதித்து ஒருவருக்கொருவர் கடன் கொடுத்தால் அதை எழுதிக் கொள்ளுங்கள்! எழுதுபவர் உங்களுக்கிடையே நேர்மையான முறையில் எழுதட்டும். அல்லாஹ் தமக்குக் கற்றுக் கொடுத்தது போல் எழுதிட எழுத்தர் மறுக்காது எழுதட்டும். கடன் வாங்கியவர், எழுதுவதற்குரிய வாசகங்களைச் சொல்லட்டும்! தனது இறைவனாகிய அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளட்டும். அதில் எதையும் குறைத்து விடக் கூடாது. கடன் வாங்கியவர் விபரமறியாதவராகவோ, பலவீனராகவோ, எழுதுவதற்கு ஏற்பச் சொல்ல இயலாதவராகவோ இருந்தால் அவரது பொறுப்பாளர் நேர்மையாகச் சொல்லட்டும். உங்கள் ஆண்களில் இருவரை சாட்சிகளாக்கிக் கொள்ளுங்கள்! இரு ஆண்கள்

இல்லாவிட்டால் சாட்சிகள் என நீங்கள் திருப்தியடையும் ஓர் ஆணையும், இரண்டு பெண்களையும் (ஆக்கிக் கொள்ளுங்கள்!) அவ்விரு பெண்களில் ஒருத்தி மறந்து விட்டால் மற்றொருத்தி நினைவுபடுத்துவாள். அழைக்கப்படும்போது சாட்சிகள் மறுக்கக் கூடாது. சிறிதோ, பெரிதோ தவணையைக் குறிப்பிட்டு எழுதிக் கொள்வதை அலட்சியம் செய்யாதீர்கள்! இதுவே அல்லாஹ்விடம் நேர்மையானது; சாட்சியத்தை நிரூபிக்கத்தக்கது; ஒருவருக்கொருவர் சந்தேகம் கொள்ளாமல் இருப்பதற்கு ஏற்றது. உங்களுக்கிடையே உடனுக்குடன் நடைபெறும் வியாபாரமாக இருந்தால் தவிர, (கடனில்லாத) வியாபாரத்தை எழுதிக் கொள்ளாமல் இருப்பது உங்களுக்குக் குற்றமாகாது. ஒப்பந்தம் செய்யும்போதும் சாட்சிகளை ஏற்படுத்திக் கொள்ளுங்கள்! எழுத்தருக்கோ, சாட்சிக்கோ எந்த இடையூறும் அளிக்கப்படக் கூடாது. அவ்வாறு செய்தால் அது உங்கள் மீது குற்றம். அல்லாஹ்வை அஞ்சுங்கள்! அல்லாஹ் உங்களுக்குக் கற்றுத் தருவான். அல்லாஹ் அனைத்துப் பொருட்களையும் அறிந்தவன்

திருக்குர்ஆன் 2:282

வாங்கிய கடனை எழுதி வாங்கும்போது "என் மீது உனக்கு நம்பிக்கை இல்லையா? நமக்குள் எழுத்துமானம் எதற்கு என்றெல்லாம் சொல்ல இஸ்லாத்தில் இடமில்லை. இத்தகைய சமாதானங்களை நம்மிடம் ஒருவர் சொன்னால் அதை நாம் ஏற்க வேண்டியதில்லை. எழுதிக் கேட்டால் அவர் புண்படுவார் என்று நாம் கருத வேண்டியதில்லை. அவர் புண்படாத வகையில் இதை நாம் எதிர்கொள்ள முடியும். உங்கள் மீது எனக்கு நம்பிக்கை இருந்தாலும் அல்லாஹ் எழுதிக் கொள்ளும்படி கட்டளை இடுவதால் நாம் எழுதிக் கொள்வது அவசியம் என்று நாம் கூறி விட்டால் அவர் புண்படும் நிலை ஏற்படாது.

ஒவ்வொரு காலத்திலும் எவ்வாறு எழுதிக் கொள்வது பாதுகாப்பானதாகக் கருதப்படுகிறதோ அவ்வாறு எழுதிக் கொள்ள வேண்டும்.

சாதாரண காகிதத்தில் எழுதிக் கொள்வது ஒரு காலத்தில் போதுமானதாக இருந்தது. ஆனால் இன்று கடன் தொகைக்கு ஏற்ப ஸ்டாம்ப் பேப்பரில் அல்லது ஸ்டாம்ப் ஒட்டி எழுதிக் கொள்ள வேண்டும். அப்போதுதான் அந்தக் கடனைச்

சட்டப்படி திரும்பப்பெற இயலும். கடன் வாங்கியவர் அடைமானமாக பொருளைக் கொடுத்து நம்மிடம் கடன் கேட்டால் எழுதி வாங்குவதுதான் நல்லது என்று நமக்குத் தோன்றினால் எழுதிக் கொள்ளலாம். தேவை இல்லை என்று கருதினால் எழுதாமலும் இருக்கலாம்.

நீங்கள் பயணத்தில் இருக்கும்போது எழுத்தர் கிடைக்காவிட்டால் அடைமானத்தைப் பெற்றுக் கொள்ள வேண்டும். உங்களில் ஒருவர் மற்றவரை நம்பினால் நம்பப்பட்டவர் தனது நாணயத்தை நிறைவேற்றட்டும். தனது இறைவனாகிய அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளட்டும்! சாட்சியத்தை மறைத்து விடாதீர்கள்! அதை மறைப்பவரின் உள்ளம் குற்றம் புரிந்தது. நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் அறிந்தவன்.

திருக்குர்ஆன் 2:283

மேற்கண்ட வசனங்களில் இருந்து இதை அறிந்து கொள்ளலாம்.

அற்பமான பொருள்கள், அற்பமான தொகைகள் என்றால் அதை எழுதிக் கொள்ள வேண்டியதில்லை. ஒரு பத்து ரூபாய் ஒருவர் கடன் கேட்டால் அதை எழுத வேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில் பத்து ரூபாயை அவர் தராவிட்டால் அதற்காக நாம் பஞ்சாயத்து வைக்க மாட்டோம். நீதிமன்றத்தை அணுக மாட்டோம்.

## கடன் கொடுத்த பின் பணமதிப்பு குறைந்துவிட்டால்

கரன்ஸி நோட்டுகள் நடைமுறைக்கு வந்த பின் பணமதிப்பில் ஏற்ற இறக்கம் ஏற்படுகிறது. இன்று ஒரு லட்சம் ரூபாய் நாம் கடனாகக் கொடுக்கிறோம். இந்தக் கடன் நமக்கு இரண்டு ஆண்டுகளுக்குப் பின் திரும்பக் கிடைத்தால் எண்ணிக்கையில்தான் அது ஒரு லட்சமாக இருக்கும். அதன் மதிப்பு நாம் கொடுத்த ரூபாயின் மதிப்பைவிட குறைவாகத்தான் இருக்கும். இதனால் கடன் கொடுத்தவருக்கு பாதிப்பு ஏற்படுகிறது.

ஆனாலும் கடன் கொடுக்கும் போது நாம் கொடுத்த ஒரு லட்சம் ரூபாய் என்ற எண்ணிக்கையைத் தான் கருத்தில் கொண்டு கடன் கொடுத்தோம். அதன் மதிப்பு இறங்குவது பற்றி நாம் சிந்திக்கவில்லை. எனவே பணத்தின் மதிப்பு ஏறினாலும் இறங்கினாலும் கடனாகக் கொடுத்த ஒரு லட்சம் ரூபாயைத்தான் நாம் வாங்கிக் கொள்ள முடியும்.

கடன் கொடுக்கும் போது எண்ணிக்கையைக் கருத்தில் கொள்ளாமல் அதன் மதிப்பைக் கருத்தில் கொண்டு கொடுத்தால் கடன் கொடுக்கும் போதே அதைத் தெளிவுபடுத்தி இருந்தால் அப்போது மதிப்பின் அடிப்படையில் நாம் கடனை வசூலிக்கலாம்.

ஒரு பவுன் நகை 24 ஆயிரமாக இருக்கும்போது நாம் ஐந்து பவுன் நகை வாங்குவதற்காக ஒரு லட்சத்து இருபதாயிரம் ரூபாய் சேமித்து வைத்திருக்கிறோம். அவசரத்துக்காக ஒருவர் கடன் கேட்கும்போது ஒரு லட்சத்து இருபதாயிரத்தைக் கொடுக்கிறோம். அவர் ஆறு மாதம் கழித்து திருப்பித் தரும்போது ஒரு பவுன் விலை 30 ஆயிரமாகி விடுகிறது. இப்போது ஒரு லட்சத்து இருபதாயிரம் ரூபாயில் ஐந்து பவுன் வாங்க முடியாது. நான்கு பவுன்தான் வாங்க முடியும். கடன் கொடுக்காமல் அப்போதே நகையாக வாங்கி இருந்தால் நாம் ஐந்து பவுன் வாங்கி இருக்க முடியும். கடன் கொடுத்ததால் நமக்கு ஏற்பட்ட நட்டம் ஒரு பவுன் அதாவது 15 ஆயிரம் ரூபாய்.

நாம் கடன் கொடுக்கும்போது நமக்கு நட்டம் வராத வகையில் ஒப்பந்தம் செய்து கொள்ளலாம். ஐந்து பவுன் தங்கத்தின் மதிப்புக்கு உரிய தொகையை உனக்குக் கடனாகத் தருகிறேன். நீ திருப்பித் தரும்போது ஐந்து பவுன் தங்கத்துக்கு உரிய தொகை என்னவோ அதைத்தான் தர வேண்டும் என்று பேசி கடன் கொடுத்தால் அதில் தவறு இல்லை.

சவூதி ரியாலாகக் கடன் கொடுத்து விட்டு இந்திய ரூபாயில் திருப்பித்தருமாறு பேசிக் கொண்டால் அதைத் தெளிவுபடுத்திக் கொள்ள வேண்டும்.

நாம் சவூதி ரியாலாகக் கடன் கொடுக்கும் போது நான் இந்திய ரூபாய் மதிப்பில் தான் கடன் தருகிறேன். எனவே திருப்பித் தரும் போது இந்திய ரூபாய் மதிப்பில் தான் திருப்பித் தர வேண்டும் என்று பேசிக் கொண்டால் அதன்படி திரும்பப்பெறுவது குற்றமில்லை.

உதாரணமாக ஒரு சவூதி ரியால் பதினைந்து ரூபாய் என்று இருக்கும் போது நாம் 4000 ரியால்கள் ஒருவருக்குக் கடன் கொடுக்கிறோம். இந்திய ரூபாய் மதிப்பில் நாம் அறுபதாயிரம் ரூபாய்க்குச் சமமான தொகையைக் கொடுக்கிறோம். திருப்பித் தரும்போது அறுபதாயிரம் இந்திய ரூபாய்களுக்குச் சமமான மதிப்பில் சவூதி ரியால்களைத் தர வேண்டும் என்று நாம் கருதினால் அப்படி ஒப்பந்தம் செய்து கொள்ளலாம்.

இப்படி ஒப்பந்தம் செய்தபின் இந்திய ரூபாயின் மதிப்பு அதிகமாகலாம். அல்லது குறையலாம்.

ஒரு சவூதி ரியால் இருபது ரூபாய் என்ற அளவுக்கு ஏறி விட்டால் நாலாயிரம் ரியாலுக்கு பதிலாக மூவாயிரம் ரூபாய்களைத்தான் நாம் வாங்கிக் கொள்ள வேண்டும். மூவாயிரம் சவூதி ரியால் கொடுத்தாலே அறுபதாயிரம் இந்திய ரூபாய்கள் கிடைத்து விடும்.

ஒரு சவூதி ரியால் பத்து ரூபாய் என்ற அளவுக்கு இறங்கி விட்டால் நாலாயிரம் ரியாலுக்கு பதிலாக ஆறாயிரம் ரூபாய்களை நாம் வாங்கிக் கொள்ளலாம்.

ஆறாயிரம் சவூதி ரியால் கொடுத்தால் தான் அறுபதாயிரம் இந்திய ரூபாய்கள் கிடைக்கும்.

இப்படி தெளிவுபடுத்தாமல் கடன் கொடுத்தால் கொடுத்த இந்திய ரூபாயைத் தான் பெற்றுக் கொள்ள வேண்டும். நாம் இந்திய ரூபாயின் மதிப்பில் தான் கடன் கொடுத்தோம்.

நம்பிக்கை கொண்டோரே! ஒப்பந்தங்களை நிறைவேற்றுங்கள்!

திருக்குர்ஆன் 5:1

ஒப்பந்தத்தை நிறைவேற்ற வேண்டும் என்று வலியுறுத்தி ஏராளமான வசனங்கள், ஹதீஸ்கள் உள்ளன.

எனவே கடன் கொடுக்கும்போது எந்தக் கரன்ஸியின் அடிப்படையில் திருப்பித் தர வேண்டும் என்று ஒப்பந்தம் செய்து கொடுக்கிறோமோ அதே கரன்ஸியின் மதிப்பின் அடிப்படையில் வாங்க வேண்டும்.

## அடைமானம் வைத்தல்

நாம் ஒருவருக்கு கடன் கொடுக்கும் போது அந்தக் கடன் திரும்பக் கிடைக்காமல் போகக் கூடாது என்பதற்காக அடைமானம் பெற்றுக் கொள்ளலாம். அடைமானம் பெற்றுக் கொண்டு கடன் கொடுக்கும் போது அடைமானமாகப் பெற்ற பொருளை நாம் பயன்படுத்தக் கூடாது. அவ்வாறு பயன்படுத்தினால் கொடுத்த கடனுக்கு வட்டியாகவே அது கருதப்படும்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களே அடைமானம் வைத்து கடன் வாங்கியுள்ளனர்.

صحيح البخاري

2068 - حَدَّثَنَا مُعَلَّى بْنُ أَسَدٍ، حَدَّثَنَا عَبْدُ الوَاحِدِ، حَدَّثَنَا الأَعْمَشُ، قَالَ: ذَكَرْنَا عِنْدَ إِبْرَاهِيمَ، الرَّهْنَ فِي السَّلَمِ، فَقَالَ: حَدَّثَنِي الأَسْوَدُ، عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا: «أَنَّ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ اشْتَرَى طَعَامًا مِنْ يَهُودِيٍّ إِلَى أَجَلٍ، وَرَهَنَهُ دِرْعًا مِنْ حَدِيدٍ»

போர்க்களத்தில் அணிந்து கொள்ளும் தமது கவசத்தை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஒரு யூதரிடம் அடகு வைத்துள்ளார்கள்.

நூல் : புகாரி : 2068, 2096, 2200, 2251, 2252, 2386, 2509, 2513, 2916, 4467

அதிகமான முஸ்லிம் பெண்கள் அடைமானமாக நகைகளையும், பாத்திரங்களையும் வாங்கி வைத்துக் கொண்டு கடன் கொடுக்கிறார்கள். அதன் பின்னர் கடன் திரும்ப வரும் வரை அந்த நகையை அணிந்து கொள்கிறார்கள். பாத்திரங்களைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். இதனால் அவை பழைய பொருளாகி விடும். தேய்மானம் ஏற்படும்.

நாம் கொடுத்த கடன் எப்படி நமக்கு முழுமையாகக் கிடைக்கிறதோ அப்படி அடைமானத்தையும் முழுமையாகத் திருப்பிக் கொடுக்க வேண்டும்.

கொடுத்த கடனுக்காக எந்த விதமான ஆதாயத்தை எதிர்பார்த்தாலும் அது வட்டியாக ஆகிவிடும்.

ஆனால் கால்நடைகளை அடைமானமாகப் பெற்றால் அதற்குத் தீனி போட வேண்டும். போடாவிட்டால் செத்து விடும். அடைமானம் பெற்றவர் தலையில் இதைச் சுமத்தவும் முடியாது. எனவே கால்நடைகளை அடைமானமாக பெற்றால் அதற்குத் தீனி போடுவதால் அதன் பாலை நாம் பயன்படுத்திக் கொள்ளலாம். வண்டி இழுப்பதற்கும், பாரம் சுமப்பதற்கும் உழவு செய்வதற்கும் கால் நடைகளைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

صحيح البخاري

2511 - حَدَّثَنَا أَبُو نُعَيْمٍ، حَدَّثَنَا زَكَرِيَّاءُ، عَنْ عَامِرٍ، عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ، عَنِ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ أَنَّهُ كَانَ يَقُولُ: «الرَّهْنُ يُرْكَبُ بِنَفَقَتِهِ، وَيُشْرَبُ لَبَنُ الدَّرِّ إِذَا كَانَ مَرْهُونًا»

அடகு வைக்கப்பட்ட பிராணியை, அதற்காகும் (பராமரிப்புச்) செலவுக்குப் பிரதியாக (அடகு வாங்கியவன்) வாகனமாகப் பயன்படுத்திக் கொள்ளலாம். பால் தரும் பிராணி அடகு வைக்கப்பட்டிருப்பின், அதன் பாலை (அடகு வாங்கியவர்) அருந்தலாம் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல் : புகாரி 2511, 2512

## நாணயம் பேணல்

நம்பி ஒப்படைக்கப்படும் அமானிதங்களை அப்படியே திரும்ப ஒப்படைப்பது முஸ்லிம்கள் மீது கடமையாகும். இது குறித்து அல்லாஹ்வும் அவனது தூதரும் அதிகமதிகம் வலியுறுத்தியுள்ளனர்.

அமானிதங்களை அதற்குரியோரிடம் ஒப்படைக்குமாறும், மக்கள் மத்தியில் தீர்ப்பளிக்கும்போது நீதியாக நீங்கள் தீர்ப்பளிக்க வேண்டும் எனவும் அல்லாஹ் உங்களுக்குக் கட்டளையிடுகிறான். அல்லாஹ்வின் இந்த அறிவுரை உங்களுக்கு மிகவும் நல்லது. அல்லாஹ் செவியுறுபவனாகவும், பார்ப்பவனாகவும் இருக்கிறான்.

திருக்குர்ஆன் 4.58

நம்பிக்கை கொண்டோரே! அறிந்து கொண்டே அல்லாஹ்வுக்கும் இத்தூதருக்கும் (முஹம்மதுக்கும்) மோசடி செய்யாதீர்கள்! உங்களிடம் நம்பி ஒப்படைக்கப்பட்டவற்றிலும் மோசடி செய்யாதீர்கள்!

திருக்குர்ஆன் 8:27

صحيح البخاري.

33 - حَدَّثَنَا سُلَيْمَانُ أَبُو الرَّبِيعِ، قَالَ: حَدَّثَنَا إِسْمَاعِيلُ بْنُ جَعْفَرٍ، قَالَ: حَدَّثَنَا نَافِعُ بْنُ مَالِكِ بْنِ أَبِي عَامِرٍ أَبُو سُهَيْلٍ، عَنْ أَبِيهِ، عَنْ أَبِي هُرَيْرَةَ، عَنِ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ: " آيَةُ المُنَافِقِ ثَلاَثٌ: إِذَا حَدَّثَ كَذَبَ، وَإِذَا وَعَدَ أَخْلَفَ، وَإِذَا اؤْتُمِنَ خَانَ "

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

நயவஞ்சகனின் அடையாளங்கள் மூன்றாகும். அவன் பேசும்போது பொய் பேசுவான்; வாக்களித்தால் அதற்கு மாறுசெய்வான்; அவனிடம் நம்பி (ஏதேனுமொன்றை) ஒப்படைத்தால் (அதில்) மோசடி செய்வான்.

நூல் : புகாரி 33, 34, 2682, 2749, 6095

தமது அமானிதங்களையும், தமது உடன்படிக்கையையும் அவர்கள் பேணுவார்கள்.

திருக்குர்ஆன் 23:8

அவர்கள் தமது அமானிதங்களையும், ஒப்பந்தத்தையும் பேணுவார்கள்.

திருக்குர்ஆன் 70:32

நம்பி அமானிதமாக ஒப்படைத்தவருக்கும் நமக்கும் ஏதாவது சண்டை சச்சரவுகள் ஏற்பட்டால் அப்போது அமானிதத்துக்கு மோசடி செய்யுமாறு ஷைத்தான் நம்மைத் துண்டுவான்; அதை அழகாக்கிக் காட்டுவான். சாதாரண நேரத்தில் அமானிதத்தைப் பேணி நடப்பவர்கள் சண்டை ஏற்படும்போது எவ்வித உறுத்தலும் இல்லாமல் அமானித மோசடி செய்வதை நாம் பரவலாகக் காண்கிறோம். இது யூதர்களின் வழக்கம் என்று அல்லாஹ் இடித்துரைக்கிறான்.

ஒரு குவியலையே நம்பி ஒப்படைத்தால் உம்மிடம் திருப்பித் தருவோரும் வேதமுடையோரில் உள்ளனர். ஒரு தங்கக்காசை நீர் நம்பி ஒப்படைத்தால் நிலையாய் நின்றால் தவிர உம்மிடம் திருப்பித் தராதோரும் அவர்களில் உள்ளனர். "எழுதப்படிக்கத் தெரியாத சமுதாயத்தின் விஷயத்தில் எங்கள் மீது எந்தப் பாவமும் ஏற்படாது" என்று அவர்கள் கூறுவதே இதற்குக் காரணம். அல்லாஹ்வின் பெயரால் அறிந்து கொண்டே அவர்கள் பொய்யை இட்டுக்கட்டி கூறுகின்றனர்.

திருக்குர்ஆன் 3:75

## வட்டி

### வட்டிக்கு அறவே அனுமதி இல்லை

இஸ்லாமியப் பொருளாதாரத்தில் வட்டிக்கு அறவே அனுமதி இல்லை. வட்டியில் இருந்து முற்றிலுமாக முஸ்லிம்கள் விலகிக் கொள்ள வேண்டும்.

வட்டியைக் குறித்து இஸ்லாம் கடுமையான போக்கைக் கொண்டுள்ளது. வட்டி வாங்குவோர் அல்லாஹ்வுடன் போர் செய்பவர்கள் என்றும் மேலும் வட்டி வாங்குவோருக்கு நிரந்தர நரகம் எனவும் அல்லாஹ் எச்சரிக்கிறான்.

நம்பிக்கை கொண்டோரே! அல்லாஹ்வை அஞ்சுங்கள்! நீங்கள் நம்பிக்கை கொண்டிருந்தால் வர வேண்டிய வட்டியை விட்டு விடுங்கள்! அவ்வாறு நீங்கள் செய்யாவிட்டால் அல்லாஹ்விடமிருந்தும், அவனது தூதரிடமிருந்தும் போர்ப் பிரகடனத்தை உறுதி செய்து கொள்ளுங்கள்! நீங்கள் திருந்திக் கொண்டால் உங்கள் செல்வங்களில் மூலதனம் உங்களுக்கு உரியது. நீங்களும் அநீதி இழைக்கக் கூடாது. உங்களுக்கும் அநீதி இழைக்கப்படாது.

திருக்குர்ஆன் 2 : 278, 279

கொடும் வட்டிதான் தடுக்கப்பட்டுள்ளது; சிறிய அளவிலான வட்டிக்குத் தடை இல்லை என்று சிலர் வாதிட்டு இதற்கு ஆதாரமாகப் பின்வரும் வசனத்தை எடுத்துக் காட்டுகின்றனர்.

நம்பிக்கைகொண்டோரே! பன்மடங்காகப் பெருகிக் கொண்டிருக்கும் நிலையில் வட்டியை உண்ணாதீர்கள்! அல்லாஹ்வை அஞ்சுங்கள்! இதனால் வெற்றி பெறுவீர்கள்.

திருக்குர்ஆன் 3: 130

பன்மடங்கு வட்டி கூடாது என்றுதான் அல்லாஹ் இவ்வசனத்தில் கூறுகிறான்; எனவே சிறிய வட்டிக்கு அனுமதி உள்ளது என்று அவர்கள் வாதிடுகின்றனர்.

பன்மடங்காகப் பெருகும் நிலையில் வட்டியை உண்ணாதீர்கள் என்ற சொற்றொடர் இவர்கள் கூறும் கருத்தில் பயன்படுத்தப்படவில்லை. சிறிய

வட்டியாக இருந்தாலும் பெரிய வட்டியாக இருந்தாலும் வட்டியின் தன்மையே பன்மடங்காகப் பெருகுவதுதான்.

ஒரு பொருளை ஒருவர் ஆயிரம் ரூபாய்க்கு விற்கிறார். அதில் அவருக்கு ஐம்பது ரூபாய் லாபம் கிடைக்கிறது என்று வைத்துக் கொள்வோம். அந்த ஐம்பது ரூபாய் லாபத்துடன் அந்த வியாபாரம் முடிந்து விடுகிறது.

ஆனால் ஆயிரம் ரூபாயை ஒருவர் மாதம் ஐம்பது ரூபாய் என்று வட்டிக்குக் கொடுக்கிறார். மாதாமாதம் ஐம்பது ரூபாய் என்று அது பன்மடங்காகிக் கொண்டே இருக்கும். பத்து ரூபாய் வட்டி என்று வைத்தாலும் அதுவும் பன்மடங்காகப் பெருகிக் கொண்டுதான் இருக்கும். வட்டியின் தன்மையே அதுதான். எனவேதான் பன்மடங்காக பெருகிக் கொண்டுள்ள நிலையில் வட்டியை உண்ணாதீர்கள் என்று அல்லாஹ் கூறுகிறான். சிறிய வட்டியை அனுமதிக்கும் வகையில் இந்த வாசகம் அமையவில்லை.

மேலும் பின்வரும் வசனத்தில் "நம்பிக்கை கொண்டோரே! அல்லாஹ்வை அஞ்சுங்கள்! நீங்கள் நம்பிக்கை கொண்டிருந்தால் வரவேண்டிய வட்டியை விட்டு விடுங்கள்" என்று அல்லாஹ் கூறுகிறான். சிறிய வட்டி கூடும் என்றால் வரவேண்டிய வட்டியில் பெரிய வட்டியை விட்டு விடுங்கள் என்று அல்லாஹ் சொல்லி இருப்பான். வரவேண்டிய வட்டி சிறிதாக இருந்தாலும் பெரிதாக இருந்தாலும் அதை விட்டுவிட வேண்டும் என்ற கருத்தில் இவ்வசனம் அமைந்துள்ளதால் வட்டி முழுமையாகத் தடை செய்யப்பட்டுள்ளதை அறிந்து கொள்ளலாம்.

صحيح البخاري

2086 - حَدَّثَنَا أَبُو الوَلِيدِ، حَدَّثَنَا شُعْبَةُ، عَنْ عَوْنِ بْنِ أَبِي جُحَيْفَةَ، قَالَ: رَأَيْتُ أَبِي اشْتَرَى عَبْدًا حَجَّامًا، فَسَأَلْتُهُ فَقَالَ: « نَهَى النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ عَنْ ثَمَنِ الكَلْبِ وَثَمَنِ الدَّمِ، وَنَهَى عَنِ الوَاشِمَةِ وَالمَوْشُومَةِ، وَآكِلِ الرِّبَا وَمُوكِلِهِ، وَلَعَنَ المُصَوِّرَ»

பச்சை குத்திவிடுபவளையும், பச்சை குத்திக்கொள்பவளையும், வட்டி உண்பவனையும், வட்டி உண்ணக் கொடுப்பவனையும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சபித்தார்கள். நாய் விற்ற காசு, விபசாரியின் வருமானம் ஆகியவற்றைத்

தடை செய்தார்கள். மேலும், (உயிரினங்களின்) உருவப் படங்கள் வரைபவரையும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சபித்தார்கள்.

நூல் : புகாரி 2086, 5347, 5945

صحيح مسلم

4177 - حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ الصَّبَّاحِ وَزُهَيْرُ بْنُ حَرْبٍ وَعُثْمَانُ بْنُ أَبِى شَيْبَةَ قَالُوا حَدَّثَنَا هُشَيْمٌ أَخْبَرَنَا أَبُو الزُّبَيْرِ عَنْ جَابِرٍ قَالَ لَعَنَ رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- آكِلَ الرِّبَا وَمُوكِلَهُ وَكَاتِبَهُ وَشَاهِدَيْهِ وَقَالَ هُمْ سَوَاءٌ.

வட்டி வாங்குபவரையும் வட்டி கொடுப்பவரையும், அதை எழுதுபவரையும் அதன் இரு சாட்சிகளையும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சபித்தார்கள். மேலும், "இவர்கள் அனைவரும் (பாவத்தில்) சமமானவர்கள் ஆவர்" என்றும் கூறினார்கள்.

நூல் : முஸ்லிம் 4177

## வட்டி என்றால் என்ன?

இஸ்லாத்தில் எவை வட்டியாகக் கருதப்படும் என்பதை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இரத்தினச் சுருக்கமாக விளக்கியுள்ளனர்.

ரொக்கமாக நடக்கும் கொடுக்கல் வாங்கலிலும் வட்டி ஏற்படும்.

கடனாக நடக்கும் கொடுக்கல் வாங்கலிலும் வட்டி ஏற்படும்.

ஒரே இனத்தைச் சேர்ந்த இரண்டு பொருட்களுக்கு மத்தியில் பண்டமாற்று செய்யும்போது இரண்டும் சமமாக இருக்க வேண்டும். ஒன்று அதிகமாகவும் மற்றொன்று குறைவாகவும் இருந்தால் அது வட்டியாகக் கருதப்படும்.

வெவ்வேறு இனத்தைச் சேர்ந்த பொருட்களுக்கு மத்தியில் ரொக்கமாக நடக்கும் கொடுக்கல் வாங்கலில் வட்டி ஏற்படாது.

உதாரணமாக அரிசிக்குப் பதில் நாம் கோதுமையை வாங்கினால் இரண்டும் சமமாக இருக்க வேண்டியதில்லை. பத்து கிலோ அரிசிக்கு இருபது கிலோ கோதுமையை வாங்கலாம். அல்லது பத்து கிலோ அரிசியைக் கொடுத்து விட்டு ஐந்து கிலோ கோதுமையை வாங்கலாம். சந்தை நிலவரத்துக்கு ஏற்ப மக்கள் இதைத் தீர்மானித்துக் கொள்வார்கள். அரிசியும் கோதுமையும் வெவ்வேறு இனம் என்பதால் இது வட்டியாகாது.

பத்து கிலோ பாசுமதி அரிசியைக் கொடுத்து விட்டு இருபது கிலோ பொன்னி அரிசியை வாங்கினால் அது வட்டியாகிவிடும். ஏனெனில் இரண்டும் ஒரே இனத்தைச் சேர்ந்தவையாகும். இரண்டு அரிசிக்கும் தரத்தில் வேறுபாடு இருப்பதால் இந்த வித்தியாசம் ஏற்பட்டு இருக்கலாம் என்றாலும் இதுவும் வட்டி என்றே நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் முடிவு செய்துள்ளனர்.

உணவுப் பொருட்களில் இதன் நுணுக்கம் நமக்குப் புரியாவிட்டாலும் நாணயங்களை மாற்றும்போது இதன் நுணுக்கத்தைப் புரிந்து கொள்ளலாம்.

90 ஒரு ரூபாயைக் கொடுத்து விட்டு முழு நூறு ரூபாயை வாங்கினால் அது வட்டியாகி விடும். ரூபாய்க்கு பதிலாக ரியால் அல்லது திர்ஹத்தை மாற்றினால் அதில் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகள் வட்டியாக ஆகாது.

இதற்கான ஆதாரங்கள் வருமாறு :

صحيح البخاري

2302 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ، أَخْبَرَنَا مَالِكٌ، عَنْ عَبْدِ المَجِيدِ بْنِ سُهَيْلِ بْنِ عَبْدِ الرَّحْمَنِ بْنِ عَوْفٍ، عَنْ سَعِيدِ بْنِ المُسَيِّبِ، عَنْ أَبِي سَعِيدٍ الخُدْرِيِّ، وَأَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا: أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ اسْتَعْمَلَ رَجُلًا عَلَى خَيْبَرَ، فَجَاءَهُمْ بِتَمْرٍ جَنِيبٍ، فَقَالَ: «أَكُلُّ تَمْرِ خَيْبَرَ هَكَذَا»، فَقَالَ: إِنَّا لَنَأْخُذُ الصَّاعَ مِنْ هَذَا بِالصَّاعَيْنِ، وَالصَّاعَيْنِ بِالثَّلاَثَةِ، فَقَالَ: «لاَ تَفْعَلْ، بِعِ الجَمْعَ بِالدَّرَاهِمِ، ثُمَّ ابْتَعْ بِالدَّرَاهِمِ جَنِيبًا»، وَقَالَ فِي المِيزَانِ مِثْلَ ذَلِكَ

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஒரு மனிதரைக் கைபருக்கு அதிகாரியாக நியமித்தார்கள். அவர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் உயர் ரகப் பேரீச்சம் பழங்களைக் கொண்டு வந்தார். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், கைபரில் உள்ள பேரீச்சம் பழங்கள் அனைத்துமே இதே தரத்திலமைந்தவையா?" என்று கேட்டார்கள். அதற்கவர், அல்லாஹ்வின் மீதாணையாக! இல்லை; அல்லாஹ்வின் தூதரே! மட்டமான பேரீச்சம் பழத்தில் இரண்டு ஸாஉக்கு இந்தத் தரமான பேரீச்சம் பழத்தில் ஒரு ஸாஉவையும், மட்டமான பேரீச்சம் பழத்தில் மூன்று ஸாஉக்கு இந்தப் பேரீச்சம் பழத்தில் இரண்டு ஸாஉவையும் நாங்கள் வாங்குவோம் எனக் கூறினார். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், இவ்வாறு செய்யாதீர்! மட்டமான பேரீச்சம் பழத்தைக் காசுக்கு விற்று, அந்தக் காசின் மூலம் தரமான பேரீச்சம் பழத்தை வாங்குவீராக! எனக் கூறினார்கள்.

நூல் : புகாரி 2202, 2303, 2321

صحيح البخاري

2175 - حَدَّثَنَا صَدَقَةُ بْنُ الفَضْلِ، أَخْبَرَنَا إِسْمَاعِيلُ بْنُ عُلَيَّةَ، قَالَ: حَدَّثَنِي يَحْيَى بْنُ أَبِي إِسْحَاقَ، حَدَّثَنَا عَبْدُ الرَّحْمَنِ بْنُ أَبِي بَكْرَةَ، قَالَ: قَالَ أَبُو بَكْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ: قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «لاَ تَبِيعُوا الذَّهَبَ بِالذَّهَبِ إِلَّا سَوَاءً بِسَوَاءٍ، وَالفِضَّةَ بِالفِضَّةِ إِلَّا سَوَاءً بِسَوَاءٍ، وَبِيعُوا الذَّهَبَ بِالفِضَّةِ، وَالفِضَّةَ بِالذَّهَبِ كَيْفَ شِئْتُمْ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

சரிக்குச் சரியாகவே தவிர, தங்கத்திற்குத் தங்கத்தை விற்காதீர்கள்! சரிக்குச் சரியாகவே தவிர, வெள்ளிக்கு வெள்ளியை விற்காதீர்கள்! தங்கத்திற்கு

வெள்ளியையும், வெள்ளிக்குத் தங்கத்தையும் விரும்பியவாறு விற்றுக் கொள்ளுங்கள்.

நூல் : புகாரி 2175, 2177, 2182

ஆனால் கடனாக நடக்கும் கொடுக்கல் வாங்கலில் ஒரே இனமாக இருந்தாலும் வெவ்வேறு இனமாக இருந்தாலும் கூடுதல் குறைவு இருக்கக் கூடாது.

இன்று நூறு மூட்டை நெல் தருகிறேன்; அடுத்த மாதம் நூற்றி இருபது மூட்டை நெல்லைத்தா என்று சொன்னால் அது வட்டியாகும்.

இன்று நூறு மூட்டை நெல் தருகிறேன். அடுத்த மாதம் நூற்றி இருபது மூட்டை கோதுமை தா எனக் கூறினாலும் அதுவும் வட்டியாகும்.

தவணை முறையில் கொடுக்கல் வாங்கல் நடக்கும்போது கொடுத்ததை விட அதிகமாக வாங்கினால் அது வட்டியாகும்.

صحيح البخاري

2177 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ، أَخْبَرَنَا مَالِكٌ، عَنْ نَافِعٍ، عَنْ أَبِي سَعِيدٍ الخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ: أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ: «لاَ تَبِيعُوا الذَّهَبَ بِالذَّهَبِ إِلَّا مِثْلًا بِمِثْلٍ، وَلاَ تُشِفُّوا بَعْضَهَا عَلَى بَعْضٍ، وَلاَ تَبِيعُوا الوَرِقَ بِالوَرِقِ إِلَّا مِثْلًا بِمِثْلٍ، وَلاَ تُشِفُّوا بَعْضَهَا عَلَى بَعْضٍ، وَلاَ تَبِيعُوا مِنْهَا غَائِبًا بِنَاجِزٍ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

சரிக்குச் சரியாகவே தவிர, தங்கத்திற்குத் தங்கத்தை விற்காதீர்கள்! ஒன்றைவிட மற்றொன்றை அதிகமாக்கி விடாதீர்கள்! சரிக்குச் சரியாகவே தவிர, வெள்ளிக்கு வெள்ளியை விற்காதீர்கள்! ஒன்றைவிட மற்றொன்றை அதிகமாக்காதீர்கள்! ஒன்று ரொக்கமாகவும் மற்றொன்று தவணையாகவும் இருக்கும் நிலையில் விற்காதீர்கள்!

நூல் : புகாரி 2177

## நாணயம் மாற்றும் முறை

ஒரு நாணயத்துக்குப் பகரமாக இன்னொரு நாட்டு நாணயத்தை மாற்றும் போது எண்ணிக்கையில் வித்தியாசம் இருக்கும். பத்து சவூதி ரியாலுக்கு நூறு இந்திய ரூபாய் என்று மாற்றினால் பத்துக்கு பதிலாக நூறு வாங்கியது போல் உள்ளது.

இந்த ஏற்றத் தாழ்வு நாணயங்களுடைய மதிப்பு வேறுபாட்டினால் வந்ததா? வட்டி என்ற அடிப்படையில் வந்ததா என்று உறுதி செய்ய வேண்டும்.

இன்று பத்து சவூதி ரியால் தருகிறேன்; அடுத்த மாதம் நூறு இந்திய ரூபாய் கொடு என்று சொன்னால் கடனாகக் கொடுப்பதால் இந்த வேறுபாடு ஏற்பட்டிருக்க வாய்ப்பு உள்ளது. அப்படியானால் அது வட்டியாகி விடும்.

ஆனால் இப்போது பத்து ரியாலைக் கொடுத்து விட்டு இப்போதே நூறு ரூபாயை வங்கினால் நாணய மதிப்பில் உள்ள வித்தியாசம் தான் காரணம் என்று உறுதியாகின்றது.

صحيح البخاري 2060 - حَدَّثَنَا أَبُو عَاصِمٍ، عَنِ ابْنِ جُرَيْجٍ، قَالَ: أَخْبَرَنِي عَمْرُو بْنُ دِينَارٍ، عَنْ أَبِي المِنْهَالِ، قَالَ: كُنْتُ أَتَّجِرُ فِي الصَّرْفِ، فَسَأَلْتُ زَيْدَ بْنَ أَرْقَمَ رَضِيَ اللَّهُ عَنْهُ، فَقَالَ: قَالَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، ح وحَدَّثَنِي الفَضْلُ بْنُ يَعْقُوبَ، حَدَّثَنَا الحَجَّاجُ بْنُ مُحَمَّدٍ، قَالَ: ابْنُ جُرَيْجٍ، أَخْبَرَنِي عَمْرُو بْنُ دِينَارٍ، وَعَامِرُ بْنُ مُصْعَبٍ: أَنَّهُمَا سَمِعَا أَبَا المِنْهَالِ، يَقُولُ: سَأَلْتُ البَرَاءَ بْنَ عَازِبٍ، وَزَيْدَ بْنَ أَرْقَمَ عَنِ الصَّرْفِ، فَقَالاَ: كُنَّا تَاجِرَيْنِ عَلَى عَهْدِ رَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَسَأَلْنَا رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ عَنِ الصَّرْفِ، فَقَالَ: «إِنْ كَانَ يَدًا بِيَدٍ فَلاَ بَأْسَ، وَإِنْ كَانَ نَسَاءً فَلاَ يَصْلُحُ»

அபுல் மின்ஹால் (ரஹ்) அவர்கள் கூறியதாவது :

நான் நாணயமாற்று வியாபாரம் செய்துவந்தேன்; அது பற்றி(ய மார்க்கச் சட்டத்தை) ஸைத் பின் அர்கம் (ரலி), பராஉ பின் ஆஸிப் (ரலி) ஆகியோரிடம் கேட்டேன். அதற்கவர்கள், நாங்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களது காலத்தில் வியாபாரிகளாக இருந்தோம்: அவர்களிடம் நாணயமாற்று வியாபாரம் பற்றிக் கேட்டோம்; அதற்கு உடனுக்குடன் மாற்றிக் கொண்டால் அதில் தவறில்லை; தவணையுடன் இருந்தால் அது கூடாது என அவர்கள் பதிலளித்தார்கள் என்றார்கள்.

நூல் : புகாரி 2061, 2498, 3940

## வங்கிகள் மூலம் கிடைக்கும் வட்டி

வங்கிகளில் நாம் பணத்தைச் சேமித்து வைக்கிறோம். பணத்தைப் பாதுகாக்கவும், எளிதில் பணப்பரிமாற்றச் செய்யும் வசதிக்காகவும்தான் நாம் வங்கிகளில் பணத்தைச் சேமிக்கிறோம். ஆனாலும் நாம் விரும்பாவிட்டாலும் வங்கிகள் நம் கணக்கில் வட்டியை வரவு வைக்கின்றனர். இந்த வட்டியை நாம் வாங்கிக் கொள்ளலாமா என்ற சந்தேகம் பலருக்கும் உள்ளது.

அந்தப் பணத்தை வாங்கி நன்மையை எதிர்பாராமல் ஏழைகளுக்குக் கொடுத்து விடவேண்டும். அல்லது கழிப்பறை கட்டுதல் போன்ற காரியங்களுக்காக செலவிட வேண்டும் என்பதுதான் அதிகமான அறிஞர்களின் முடிவாக உள்ளது.

ஆனால் இம்முடிவு பல காரணங்களால் தவறாகும்.

கழிப்பறை கட்டுவதற்காக ஹராமான பணத்தைப் பயன்படுத்தலாம் என்ற சட்டத்தை எங்கிருந்து பெற்றார்களோ தெரியவில்லை. உணவுக்காகச் செய்யப்படும் செலவு எப்படி ஹலாலாக இருக்க வேண்டுமோ அது போல் கழிப்பறை கட்டும் செலவும் ஹலாலாக இருக்க வேண்டும். ஆடைகளுக்காகச் செய்யப்படும் செலவு எப்படி ஹலாலாக இருக்க வேண்டுமோ அது போல் செருப்பு வாங்கும் செலவும் ஹலாலாக இருக்க வேண்டும். இதுதான் இஸ்லாமிய பொருளாதாரத்தின் அடிப்படையாகும். இந்த அடிப்படைக்கு மாற்றமாக இவர்களின் தீர்ப்பு அமைந்துள்ளது

அல்லாஹ் நமக்கு ஒன்றை ஹராமாக ஆக்கிவிட்டால் அதை எப்படி நாம் பயன்படுத்தக் கூடாதோ அது போல் மற்றவருக்கும் கொடுக்கக் கூடாது. நமக்கு பன்றி ஹராம் என்றால் மற்றவருக்கு பன்றிக்கறி பிரியாணி செய்து கொடுக்க முடியாது. இந்த அடிப்படைக்கு மாற்றமாகவும் இவர்களின் தீர்ப்பு அமைந்துள்ளது.

அடுத்தவருக்கு நாம் கொடுக்கலாம் என்றால் அதை நாமே வைத்துக் கொள்ளலாம். மற்றவருக்குக் கொடுக்க அனுமதிக்கப்பட்ட எந்த ஒன்றையும்

நாமே வைத்துக் கொள்ளவும் மார்க்கத்தில் அனுமதி உண்டு. இந்த அடிப்படைக்கு மாறாகவும் இந்தத் தீர்ப்பு அமைந்துள்ளது.

திருடக் கூடாது என்று மார்க்கம் தடுத்துள்ளது. நாம் திருடி விட்டு அதை ஏழைகளுக்குத் தர்மம் செய்தால் திருடிய குற்றம் இல்லை என்று ஆகிவிடுமா?

நாம் வாங்காவிட்டால் அந்தப் பணத்தை நமக்கு எதிராகப் பயன்படுத்துவார்கள் என்று சொல்லப்படும் காரணமும் ஏற்கத்தக்கதல்ல. நம்முடைய பணத்தைக் குறித்துத்தான் நாம் இப்படி கவலைப்பட வேண்டும். வட்டி என்பது மார்க்க அடிப்படையில் நம்முடைய பணமே அல்ல. நாம் சேமிப்பில் செலுத்திய பணம் மட்டுமே நம்முடைய பணமாகும். நமக்கு உரிமையில்லாத பணத்தை யார் எப்படி பயன்படுத்தினாலும் நாம் அது பற்றி கவலை கொள்ளத் தேவையில்லை.

வங்கியில் தரப்படும் வட்டியை நாம் வாங்கி நாமே வைத்துக் கொண்டாலும் மற்றவருக்குக் கொடுத்தாலும் நாம் வட்டி வாங்கிய குற்றத்தைச் செய்தவர்களாக ஆகிவிடுவோம் என்பதுதான் சரியான கருத்தாகும்.

## வங்கியில் கணக்கு வைக்கக் கூடாதா?

நம்முடைய சேமிப்புக்கு வங்கிகள் தரும் வட்டியை வாங்கக் கூடாது என்பதால் வங்கிகளில் கணக்கு வைக்கக் கூடாது என்று புரிந்து கொள்ளக் கூடாது.

வங்கிகள் தங்களின் இருப்புகளை வட்டிக்குக் கொடுப்பதால் அதற்கு நாம் துணை போகக் கூடாது என்ற காரணத்தால் வங்கிகளில் கணக்கு வைக்கக் கூடாது என்று சிலர் வாதிடுகின்றனர். நமது பொருளைப் பாதுகாப்பதற்காகத்தான் வங்கியில் சேமிக்கிறோம். அதை அவர்கள் வட்டிக்குக் கொடுத்தால் அந்தக் குற்றம் நம்மைச் சேராது. இப்படி இஸ்லாம் நமக்கு வழிகாட்டவில்லை.

ஒரு குவியலையே நம்பி ஒப்படைத்தால் உம்மிடம் திருப்பித் தருவோரும் வேதமுடையோரில் உள்ளனர். ஒரு தங்கக்காசை நீர் நம்பி ஒப்படைத்தால் நிலையாய் நின்றால் தவிர உம்மிடம் திருப்பித் தராதோரும் அவர்களில் உள்ளனர். "எழுதப்படிக்கத் தெரியாத சமுதாயத்தின் விஷயத்தில் எங்கள் மீது எந்தப் பாவமும்

ஏற்படாது" என்று அவர்கள் கூறுவதே இதற்குக் காரணம். அல்லாஹ்வின் பெயரால் அறிந்து கொண்டே அவர்கள் பொய்யை இட்டுக்கட்டி கூறுகின்றனர்.

திருக்குர்ஆன் 3:75

யூதர்கள் வட்டித் தொழில்தான் செய்து வந்தனர் என்று திருக்குர்ஆன் சொல்கிறது. (பார்க்க 4:161)

அவர்கள் வட்டித் தொழில் செய்வதால் அவர்களிடம் எந்தப் பொருளையும் நம்பி ஒப்படைக்காதீர்கள்; அவர்கள் அதை வட்டிக்குப் பயன்படுத்துவார்கள் என்று கூறாமல் அந்த யூதர்களில் நாணயமானவர்களும் உள்ளனர்; நம்பி ஒப்படைக்கப்படும் பொருட்களை நாணயமாக திருப்பித் தருவார்கள் என்று இவ்வசனம் கூறுகிறது.

எனவே வங்கியில் நாம் சேமிக்கும் பணத்தை அவர்கள் வட்டிக்கு விடுவார்கள் என்பதால் வங்கியில் கணக்கு வைப்பது தவறு எனக் கூற முடியாது.

நம்முடைய நாட்டில் உள்ள சட்டப்படி பெரிய தொகைகளைக் கையில் வைத்திருப்பது பொருளாதாரக் குற்றமாகக் கருதப்படுகிறது. இதன் காரணமாக பெரிய தொகைகளை வங்கியில் பாதுகாத்து வைப்பது நிர்பந்தமாகவும் ஆகி விடுகின்றது.

ஒருவர் காசோலையாக அல்லது வரைவோலையாக நமக்குப் பணம் தந்தால் அந்தப் பணத்தை நம்முடையதாக ஆக்கிக் கொள்ள வங்கியில் கணக்கு வைப்பது அவசியமாகின்றது. இல்லாவிட்டால் நம்முடைய பணம் நமக்குக் கிடைக்காமல் போய் விடும். இந்தக் காரணத்துக்காகவும் வங்கியில் கணக்கு வைப்பது சிலருக்கு அவசியமாகி விடுகின்றது.

மேலும் வெளியூர்களுக்குச் செல்லும்போது அதிகமான பணத்தைக் கையில் வைத்திருப்பது பாதுகாப்பானது அல்ல. பணமாக வைத்திருப்பது நம்முடைய உயிருக்குக்கூட கேடாக ஆகிவிடும். வங்கியில் கணக்கு வைத்திருந்தால் நமக்குத் தேவைப்படும் பணத்தை எங்கிருந்து வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ள முடியும்.

இதுபோல் மார்க்கம் அனுமதித்துள்ள பல காரியங்களை வங்கியில் கணக்கு வைத்திருப்பதன் மூலம் நாம் சாதித்துக் கொள்ள முடியும். எனவே வங்கியில் கணக்கு வைப்பதைத் தடுக்க எந்த முகாந்திரம் இல்லை.

## ஷரியத் பைனான்ஸ் மற்றும் இஸ்லாமிய வங்கி

வட்டி இஸ்லாத்தில் தடுக்கப்பட்டுள்ளது என்பதாலும் வட்டியை வெறுப்பவர்கள் முஸ்லிம் சமுதாயத்தில் அதிகமாக உள்ளதாலும் இதைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு சிலர் மக்களை ஏமாற்றி வருகின்றனர். வட்டி இல்லாத வங்கி நடத்துகிறோம்; ஷரீஅத் ஃபைனான்ஸ் நடத்துகிறோம் எனக் கூறிக் கொண்டு மக்களைச் சுரண்டி வருகின்றனர். ஆனால் இவர்கள் நடத்துவது ஷரீஅத் ஃபைனான்ஸ் அல்ல. ஷரீஅத்துக்கு எதிரான ஃபைனான்ஸ் ஆகும்.

வட்டியில்லாமல் கடன் தருகிறோம் எனக் கூறிக் கொண்டு இவர்கள் நிதிநிறுவனம் உருவாக்குகிறார்கள். நாம் இவர்களை அணுகி கடன் கேட்டால் ரொக்கமாகக் கடன் தர மாட்டார்கள். எதற்காகக் கடன் என்று கேட்பார்கள். வீடு வாங்க அல்லது கார் வாங்க கடன் வேண்டுமென்று நாம் கூறினால் அந்தக் காரை அந்த வீட்டை நாங்கள் வாங்கித் தருகிறோம் எனக் கூறி காரை அல்லது வீட்டை விலைக்கு வாங்கி அதைக் கடனாகத் தருவார்கள். கடன் அடையும் வரை அதைத் தங்கள் பெயரில் அடைமானமாக வைத்துக் கொள்வார்கள்.

அதாவது காரின் விலை பத்து லட்சம் என்றால் அந்தக்காரை இவர்கள் வாங்கி நமக்கு 12 லட்சத்துக்கு தருவார்கள். 12 லட்சம் தந்தால் போதும்; வட்டி தர வேண்டாம் என்று கூறுவார்கள். ஆனால் இவர்கள் ரொக்கமாக பத்து லட்ச ரூபாய் கடனாகத் தந்தால் பத்து லட்சத்துக்கு அந்தக் காரை நாம் வாங்க முடியும். வட்டிக்கு கடன் கொடுப்பவர்கள் மூலம் அந்தக் காரை வாங்குவதாக இருந்தால் பத்து லட்சத்து ஐம்பதாயிரம் ரூபாய்க்கு வாங்க முடியும். ஆனால் இவர்கள் வட்டியை விட மேலும் மும்மடங்கு கொள்ளை அடிப்பதற்கு ஷரீஅத் போர்வை போர்த்தி மக்களை ஏமாற்றுகிறார்கள்.

சந்தையில் பத்து லட்சத்துக்குக் கிடைக்கும் காரை இவர்கள் கடனாக வாங்கித்தரும் காரணத்தால்தான் 12 லட்சத்தை நம்மிடம் கறந்து விடுகிறார்கள். இது அப்பட்டமான கொடும் வட்டி என்பதில் சந்தேகம் கிடையாது.

வீடு வாங்குவதற்காக பணமாகக் கடன் கொடுத்தால் பல இடங்களில் விசாரித்து எங்கே குறைவாக உள்ளதோ அங்கே வாங்கிக் கொள்ள முடியும். இதை விட்டுவிட்டு நாங்கள்தான் வீடு வாங்கித் தருவோம் என்று கூறி வட்டியைவிட அதிக விலைக்கு விற்பது என்ன நியாயம்? இதற்குத்தான் ஷரியத் பைனான்ஸ் என்று பெயர் வைத்துள்ளனர். வட்டிக்கடைக்காரர்கள் சம்பாதிப்பதை விட அதிகமாக ஒரு கூட்டம் சம்பாதித்துக் கொண்டிருக்கின்றது. சில ஆலிம்கள் இது ஷரீஅத் அடிப்படையிலானது என்று பத்வா கொடுத்து பணம் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

வட்டியை வேறுவடிவத்தில் வாங்குவதுடன் இவர்கள் இன்னொரு பாவமும் செய்கிறார்கள்.

இடைத் தரகராக இருந்து விலையை ஏற்றிவிடக் கூடாது என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எச்சரித்துள்ளார்கள். பத்து லட்சம் பெறுமானமுள்ள பொருளை இடையில் புகுந்து 12 லட்சமாக ஆக்கும் குற்றத்தையும் இவர்கள் செய்கிறார்கள்.

ஆபத்தான நிலையில் ஒருவரை மருத்துவமனையில் சேர்த்து விட்டு அதற்காக வட்டியில்லா கடன் கேட்டால் ஷரீஅத் ஃபைனான்சில் தருவார்களா என்றால் தர மாட்டார்கள். வீட்டையோ வேறு சொத்தையோ அடைமானமாக வைத்துக் கொண்டு மருத்துவத்துக்குக் கடன் தாருங்கள் என்று கேட்டாலும் தர மாட்டார்கள். நாமே விலை பேசி முடித்த பொருளை அதே விலைக்கு வாங்கி அதைவிட இரண்டு மூன்று லட்சம் அதிக விலைக்கு நம்மிடம் விற்கும் இவர்கள் வட்டி வாங்குவோரை விட அயோக்கியத்தனம் செய்பவர்கள் என்பதில் சந்தேகம் இல்லை.

## இன்சூரன்ஸ்

இன்ஷ்யூரன்ஸ் என்பது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலத்தில் இல்லாத நவீன பிரச்சனையாகும். சமீப காலத்தில்தான் இது வழக்கத்துக்கு வந்துள்ளது. ஆயினும் இது குறித்து முடிவு எடுக்கத் தேவையான அடிப்படைகள் இஸ்லாத்தில் வகுக்கப்பட்டுள்ளன.

இஸ்லாம் தடுத்துள்ள வட்டி, மோசடி, ஏமாற்றுதல் போன்றவை இருந்தால் அது எந்த நவீன பிரச்சனையாக இருந்தாலும் அது தடுக்கப்பட்டதாகும். அவ்வாறு இல்லாவிட்டால் அது அனுமதிக்கப்பட்டதாகும்.

பொத்தாம் பொதுவாக இன்ஷ்யூரன்ஸ் கூடாது என்று சிலர் மார்க்கத் தீர்ப்பு அளித்து வருகின்றனர். இது தவறாகும்.

இன்ஷ்யூரன்ஸில் பல வகைகள் உள்ளன. அவற்றில் வட்டியை அடிப்படையாகக் கொண்டவையும் உள்ளன. அவை மட்டுமே மார்க்கத்தில் தடுக்கப்பட்டவையாகும். அவ்வாறு இல்லாத இன்ஷ்யூரன்ஸ் வகைகளைத் தடுப்பதற்கு தக்க காரணம் இல்லை.

உதாரணமாக ஆயுள் காப்பீடு என்ற வகையை எடுத்துக் கொள்வோம். ஒருவர் பத்து லட்சம் ரூபாய்க்கு ஆயுள் காப்பீடு எடுத்துள்ளார் என்றால் இந்தத் தொகையை குறிப்பிட்ட வருடங்கள் வரை ஆண்டுக்கு இவ்வளவு என்ற விகிதத்தில் அவர் கட்டி வர வேண்டும். முழுகையாகக் கட்டி முடித்து விட்டால் கட்டிய தொகை வட்டியுடன் திருப்பித் தரப்படும். அல்லது இடையிடையே கணக்குப் பார்த்து போனஸ் என்ற பெயரில் வட்டி தருவார்கள்.

பத்து லட்சம் ரூபாய்க்கு காப்பீடு எடுத்தவர் முதல் தவணை கட்டிய உடன் மரணித்து விட்டால் அவரது குடும்பத்தினருக்கு பத்து லட்சம் ரூபாய் கிடைத்து விடும்.

காப்பீடு எடுத்தவர் மரணிக்காமல் தொடர்ந்து தவணையைக் கட்டி வரும்போது காப்பீட்டு நிறுவனங்கள் வட்டி தருகிறார்கள். இது மார்க்கத்துக்கு எதிரானதாகும். இதன் காரணமாக ஆயுள் காப்பீட்டுத் திட்டத்தில் சேரக்கூடாது என்று கூறலாம்.

ஆயுள் காப்பீட்டுத் திட்டத்தில் நாம் செலுத்தும் பணத்துக்கு வட்டி தரப்பட மாட்டாது என்ற வகையில் இத்திட்டம் மாற்றப்பட்டால் இதைத் தடை செய்ய எந்த முகாந்திரமும் இல்லை.

மருத்துவக் காப்பீட்டுத் திட்டத்தை எடுத்துக் கொள்வோம். இதில் சேர்பவர்கள் வருடத்துக்கு ஒரு தொகையைக் கட்ட வேண்டும். இதில் சேரக்கூடியவர்களின் வயது, ஆரோக்கியம் ஆகியவற்றைப் பொருத்து இத்தொகை வேறுபடும். இத்திட்டத்தில் சேர்பவருக்கு பெரிய நோய் வந்து விட்டால் அவர் ஆயிரம் ரூபாய் கட்டி இருந்தாலும் அவரது மருத்துவச் செலவுக்கு காப்பீட்டு நிறுவனம் பொறுப்பேற்றுக் கொள்ளும். அந்த ஒரு வருடத்துக்குள் எந்த நோயும் வராவிட்டால் அவர் கட்டிய பணம் திரும்பத்தரப்பட மாட்டாது. கட்டிய பணமே திரும்பக் கிடைக்காது என்றால் வட்டியைக் கற்பனை செய்ய முடியாது.

அதாவது பல்லாயிரம் பேர் ஆயிரம் ரூபாய் கட்டுகிறோம். எங்களுக்கு நோய் வந்தால் அதற்கு மருத்துவம் செய்ய உதவுங்கள். நோய் வராவிட்டால் எங்கள் பணம் மற்றவர்களுக்கு உதவியாக இருக்கட்டும் என்ற அடிப்படையில்தான் இதில் சேர்பவர்கள் பணம் செலுத்துகிறார்கள். இதில் வட்டியும் இல்லை. மோசடியும் இல்லை. யாரையும் ஏமாற்றுதலும் இல்லை.

இதுபோல்தான் வாகனத்திற்கான இன்ஷ்யூரன்ஸும் உள்ளது. நாம் ஒரு வாகனத்தை வாங்கினால் அதில் மூன்று விதமான பாதிப்புகள் ஏற்படலாம். விபத்துகள் ஏற்படும்போது அந்த வாகனத்துக்குச் சேதம் ஏற்படலாம். அல்லது வாகனத்தை ஓட்டிச் சென்றவருக்குச் சேதம் ஏற்படலாம். அல்லது வாகனத்தினால் மற்றவருக்குச் சேதம் ஏற்படலாம்.

பாதிக்கப்பட்டவருக்கு இழப்பீடு வழங்கவோ நமக்குரிய சிகிச்சை செய்து கொள்ளவோ வாகனத்தைச் சீர்செய்யவோ நமக்கு இயலாமல் போகலாம். இதைக் கருத்தில் கொண்டுதான் வாகனக் காப்பீட்டுத் திட்டம் கொண்டுவரப்பட்டுள்ளது. வாகனத்துக்காக நாம் செலுத்தும் காப்பீட்டுத் தொகை நமக்கு திரும்பத் தரப்படாது. ஏதேனும் விபத்து அல்லது வாகனத் திருட்டு போன்றவை நடந்தால் காப்பீட்டு நிறுவனம் அதற்கான செலவை ஏற்றுக்

கொள்ளும். மார்க்கத்தின் அடிப்படையில் இதைத் தடை செய்ய ஒரு முகாந்திரமும் இல்லை.

அது போல்தான் வீடுகள், கடைகள், இன்னபிற சொத்துக்களுக்கும் காப்பீட்டுத் திட்டங்கள் உள்ளன. இந்தக் காப்பீட்டுத் திட்டங்களில் ஆண்டு தோறும் நாம் செலுத்தும் தொகை அந்த ஆண்டுடன் காலாவதியாகி விடும். திரும்பத் தரப்படமாட்டாது. அசலும் தரமாட்டார்கள். வட்டியும் தர மாட்டார்கள். எனவே இவற்றைக் கூடாது எனக் கூற எந்த நியாயமும் முகாந்திரமும் இல்லை.

கலவரங்களின்போது முஸ்லிம்களின் வீடுகளும் கடைகளும் இன்னபிற சொத்துக்களும் சூறையாடப்படுகின்றன. முஸ்லிம்கள் காப்பீடு செய்வதில்லை; எனவே அவர்களின் சொத்துக்களை அழித்தால் அதோடு அவர்கள் பிச்சைக்காரர்களாக ஆவார்கள் என்று எதிரிகள் நன்றாக விளங்கி வைத்துள்ளதால் திட்டமிட்டு முஸ்லிம்களின் சொத்துக்களைச் சூறையாடுவதை ஒரு கொள்கையாக வைத்துள்ளனர். கடைகள் மற்றும் சொத்துக்களுக்கு காப்பீடு செய்தால் இவர்களின் சொத்துக்களை அழித்தாலும் மீண்டும் பழைய நிலைக்கு வந்துவிடுவார்கள் என்பதால் சொத்துக்களைச் சூறையாடுவதுகூட தவிர்க்கப்படும். அப்படி சூறையாடினாலும் காப்பீட்டின் மூலம் இழப்பீட்டைப் பெற்று பழைய நிலையை அடைய முடியும்

இதைக் கருத்தில் கொண்டு முஸ்லிம்கள் இயன்றவரை தொழில் நிறுவனங்களைக் காப்பீடு செய்வதுதான் அறிவுடமையாகும்.

## தவணை வியாபாரம்

அதைப் போல தவணை வியாபாரம் பற்றியும் நாம் விரிவாக விளங்க வேண்டியுள்ளது.

ரொக்கமாக வியாபாரம் செய்ய அனுமதி உள்ளது போல் கடனாகவும், தவணை முறையிலும் வியாபாரம் செய்ய அனுமதி உள்ளது. ஆனால் ரொக்கத்துக்கு ஒரு விலை கடனுக்கு ஒரு விலை என்று இரட்டை விலை வைத்து விற்பது வட்டி என்பதால் இதற்கு அனுமதி இல்லை.

ரொக்கமாக மட்டும் அல்லது கடனாக மட்டும் ஒருவர் வியாபாரம் செய்தால் அதில் இரட்டைவிலை வைப்பது குற்றமாகாது.

அதிக அளவில் வாங்குபவருக்கு விலை குறைவாக கொடுக்கலாம். அதுபோல் தனக்கு வேண்டியவர்களுக்கு லாபமே வைக்காமல் அசலுக்குக்கூட விற்கலாம். இதில் எந்தக் குற்றமும் இல்லை.

ஆயிரம் ரூபாய்க்கு நாம் விற்கும் பொருளை நம்முடைய உறவினருக்கு 900 ரூபாய்க்குக் கொடுப்போம். அல்லது இலவசமாகக்கூட கொடுப்போம். இது தடுக்கப்பட்ட இரட்டை விலையில் சேராது. ஒருவருக்கு இலவசமாகக் கொடுத்ததால் எனக்கும் இலவசமாகக் கொடு என்று மற்றவர்கள் கேட்க முடியாது.

கடனுக்கு ஒரு விலை ரொக்கத்துக்கு ஒரு விலை என்று இரட்டை விலை நிர்ணயிக்கும்போதுதான் அது வட்டியாக ஆகின்றது. அவ்வாறு இல்லாமல் வேறு காரணங்களுக்காக ஒரு பொருளுக்கு இரு விலைகள் நிர்ணயிப்பது குற்றமாகாது.

ஒரு பொருள் வாங்கினால் இன்ன விலை; பத்து பொருள் வாங்கினால் இன்ன விலை என்று சொல்லும்போது இங்கும் இரட்டை விலைதான் வருகிறது. ஆனால் இது குற்றமில்லை. ஏனெனில் கடனுக்காக நாம் விலையை அதிகரிக்கவில்லை.

ஆனால் ரொக்கமாக விற்கும்போது ஆயிரம் ரூபாய் எனவும் கடனாக விற்கும்போது 1200 ரூபாய் எனவும் விற்பனை செய்தால் கூடுதலான 200 ரூபாய் பொருளுக்கான விலை அல்ல. வியாபாரியின் பணம் வாடிக்கையாளரிடம் சில நாட்கள் இருக்கிறது என்பதற்காகத்தான் 200 ரூபாய் அதிகமாக்கப்படுகிறது. ஒருவரின் பணம் இன்னொருவரிடம் இருப்பதற்காக பெறக்கூடிய ஆதாயம் தான் வட்டியாகும். எனவே கடனுக்கு ஒரு விலை ரொக்கத்துக்கு ஒரு விலை என்று விற்பதை முஸ்லிம்கள் தவிர்க்க வேண்டும்.

## ஒத்திக்கு விடுதல் கூடாது

சொந்த வீடு வைத்துள்ளவர்களுக்கு பொருளாதார நெருக்கடி ஏற்படும்போது பெரும் தொகையை முன்பணமாகப் பெற்றுக் கொண்டு வீட்டை ஒருவரிடம் ஒப்படைப்பார்கள். வீட்டை ஒப்புக் கொண்டவர் பெரிய தொகையைக் கொடுத்துள்ளதால் வாடகை ஏதும் கொடுக்காமல் வீட்டில் குடியிருப்பார். குறிப்பிட்ட காலக்கெடு முடிந்த பின்னர் முன்பணத்தைப் பெற்றுக் கொண்டு வீட்டை ஒப்படைப்பார். இது ஒத்தி எனவும் சில பகுதிகளில் போகியம் எனவும் கூறப்படுகின்றது.

கொடுத்த பணம் திரும்பக் கிடைக்க வேண்டும் என்பதற்காக வீட்டை அடைமானமாகப் பெற்றுக் கொள்வது குற்றமில்லை. ஆனால் அதற்குரிய வாடகையை வீட்டின் உரிமையாளருக்குக் கொடுக்காமல் கொடுத்த பணத்துக்காக ஆதாயம் அடைவது வட்டியாகும் என்பதால் இதை முஸ்லிம்கள் தவிர்த்துக் கொள்ள வேண்டும்.

கடனாக நாம் கொடுக்கும் பணத்துக்கு உத்தரவாதம் தேவை என்றால் வீட்டின் பத்திரத்தை அடைமானமாகப் பெற்று எழுதிக் கொண்டு உரிமையாளரை வீட்டில் தங்கிக் கொள்ள அனுமதிக்கலாம். அல்லது வேறு யாருக்காவது வாடகைக்கு விட்டுக் கொள்ள உரிமையாளரை அனுமதிக்கலாம். ஒரு முஸ்லிம் இப்படித்தான் நடந்து கொள்ள வேண்டும். ஒருவனுக்கு ஏற்பட்ட பண நெருக்கடியைப் பயன்படுத்தி வட்டியை வேறு பெயரில் வாங்கக் கூடாது.

## ஏலச்சீட்டு

ஏலச் சீட்டு என்ற பெயரில் நடக்கும் அநியாயத்துக்கு நம் சமுதாயத்திலும் சிலர் பலியாகி உள்ளனர். அது தவறு என்ற ஞானம்கூட அவர்களுக்கு இல்லை.

ஒரு லட்சம் ரூபாய் ஏலச்சீட்டு என்று வைத்துக் கொள்வோம். பத்து நபர்கள் சேர்ந்து மாதம் பத்தாயிரம் ரூபாய் கட்டுவார்கள். ஒவ்வொரு மாதமும் ஒரு லட்சம் ரூபாய் சேரும். பத்து நபர்களில் ஒருவருக்கு அந்தத் தொகையைக் கொடுப்பார்கள். குறிப்பிட்ட மாதத்தில் யாருக்குக் கொடுக்கலாம் என்று குலுக்கல் மூலம் நிர்ணயித்து கொடுத்தால் இதில் குற்றம் சொல்ல முடியாது. அல்லது பத்துப் பேரில் யாருக்கு முக்கிய தேவை உள்ளது என்று ஆய்வு செய்து முடிவு செய்தால் அதையும் குற்றம் சொல்ல முடியாது.

ஒவ்வொரு மாதத்திலும் யாருக்குக் கொடுப்பது என்பதை ஏலத்தின் மூலம் முடிவு செய்கிறார்கள். அதாவது ஒரு லட்ச ரூபாய்க்குப் பதிலாக யார் குறைந்த தொகையை வாங்கிக்கொள்ள முன்வருகிறார்களோ அவர்களுக்கு அந்தக் குறைந்த தொகையைக் கொடுப்பார்கள்.

ஒரு லட்சம் ரூபாய்க்குப் பதிலாக 90 ஆயிரம் தந்தால் போதும் என்று ஒருவரும் 80 ஆயிரம் தந்தால் போதும் என்று வேறு ஒருவரும் போட்டியிட்டால் 80 ஆயிரத்துக்கு ஏலம் கேட்டவருக்கு 80 ஆயிரத்தைக் கொடுப்பார்கள். ஆனால் இவர் மீதி ஒன்பது மாதங்களுக்கு தலா பத்தாயிரம் கட்டி வர வேண்டும். இவரிடம் வசூலிக்கப்படுவது ஒரு லட்சம். ஆனால் இவருக்குக் கொடுப்பது 80 ஆயிரம். இதை ஏலச் சீட்டு நடத்துபவர் எடுத்துக் கொள்வார். அல்லது இதில் பாதியை அவர் எடுத்துக் கொண்டு மீதியை ஏலச்சீட்டில் சேர்ந்தவர்களுக்குப் பிரித்துக் கொடுப்பார்.

இது அப்பட்டமான மோசடியாகும். ஒருவனின் நெருக்கடியைப் பயன்படுத்தி செய்யப்படும் சுரண்டலாகும். அவனிடம் இருந்து 20 ஆயிரம் ரூபாயைச் சுருட்டுவதற்கு மார்க்கம் அனுமதித்த எந்தக் காரணமும் இல்லை.

முன் கூட்டியே பணம் கொடுப்பதால் 80 ஆயிரத்துக்கு ஒரு லட்சம் என்று வாங்குவதும் வட்டியில்தான் சேரும்.

## பிராவிடண்ட் ஃபண்ட்

அரசு அலுவலகங்களிலும் பெரிய நிறுவனங்களிலும் பணியாற்றும் ஊழியர்கள் தங்கள் ஓய்வு காலத்தில் சிரமப்படக் கூடாது என்பதற்காக ஊழியர்களின் ஊதியத்தில் ஒரு பகுதியைப் பிடித்தம் செய்ய வேண்டும் என்ற சட்டம் நமது நாட்டிலும் இன்னும் பல நாடுகளிலும் உள்ளது.

ஒவ்வொரு மாதமும் பிடிக்கப்பட்ட தொகை ஓய்வு பெறும்போது ஊழியர்களுக்கு வழங்கப்படும். இதில் பிரச்சனை இல்லை.

ஆனால் இவ்வாறு பிடிக்கப்படும் தொகைக்கு அவ்வப்போது வட்டியைக் கணக்கிட்டு ஊழியர்கள் கணக்கில் சேர்ப்பார்கள்.. ஊழியர்களின் சம்பளத்தில் இருந்து பிடிக்கப்பட்ட தொகை பத்து லட்சம் என்றால் அதற்கான வட்டியும் சேர்த்து வழங்கப்படும். இதில்தான் பிரச்சனை உள்ளது.

வட்டி மார்க்கத்தில் தடுக்கப்பட்டு இருந்தாலும் நம் விருப்பப்படி முடிவு செய்யும் காரியங்களில்தான் நாம் முடிவு எடுக்க முடியும். என்னுடைய ஊதியத்தில் பிராவிடண்ட் ஃபண்டுக்காக பிடித்தம் செய்யக் கூடாது என்று கூறும் உரிமை ஊழியர்களுக்கு வழங்கப்படவில்லை. ஊழியர்கள் மீது இது கட்டாயமாகத் திணிக்கப்படுவதால் இது நிர்பந்தம் என்ற வகையில் சேரும். இதற்காக ஊழியர் குற்றம் பிடிக்கப்பட மாட்டார்.

ஆனால் ஓய்வு பெறும்போது வட்டி இல்லாமல் ஊழியரிடமிருந்து பிடித்த பணத்தை மட்டும் பெற்றுக் கொள்ள வழி இருந்தால் அந்த வழியைத் தேர்வு செய்து வட்டியில் இருந்து விடுபட வேண்டும்.

அல்லது வேறு ஏதேனும் வழிமுறைகளைக் கையாண்டு வட்டியை வாங்காமல் இருக்க முயற்சிக்க வேண்டும். வட்டியுடன் சேர்த்துத்தான் அந்தப்பணம் கிடைக்கும். இல்லாவிட்டால் நம்முடைய ஊதியத்தில் இருந்து சேமிக்கப்பட்ட பணமே கிடைக்காது என்ற நிலை இருந்தால் அப்போது நிர்பந்தம் என்ற

நிலைக்கு ஒருவர் தள்ளப்படுகிறார். அவர் மீது திணிக்கப்பட்ட வட்டியை வாங்கிக் கொண்டால் அதற்காக அல்லாஹ் குற்றம் பிடிக்க மாட்டான்.

சக்திக்கு மீறி யாரையும் அல்லாஹ் சிரமப்படுத்த மாட்டான்.

திருக்குர்ஆன் 2:286

## வங்கிகளில் வேலை செய்யலாமா?

வங்கிகள் பெரும்பாலும் வட்டித் தொழிலுக்கான கேந்திரம் என்றாலும் மார்க்கம் அனுமதித்த காரியங்களும் அதில் நடக்கின்றன. காசோலைகளை மாற்றித் தருதல், பணப்பரிவர்த்தனை செய்தல் போன்ற பல பணிகள் வங்கியில் நடக்கின்றன.

வட்டிக்கு துணை போவது தான் மார்க்கத்தில் குற்றமாகும். அது அல்லாத பணிகள் செய்வது மார்க்கத்தில் தடுக்கப்பட்டதல்ல.

வங்கியைச் சுத்தம் செய்வது, வங்கிக்கு பெயிண்ட் பண்ணுவது, பர்னிச்சர் செய்து கொடுப்பது போன்ற காரியங்களை ஒருவர் செய்து கொடுத்தால் அது வட்டிக்கு துணை போனதாக ஆகாது.

صحيح مسلم

4177 - حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ الصَّبَّاحِ وَزُهَيْرُ بْنُ حَرْبٍ وَعُثْمَانُ بْنُ أَبِى شَيْبَةَ قَالُوا حَدَّثَنَا هُشَيْمٌ أَخْبَرَنَا أَبُو الزُّبَيْرِ عَنْ جَابِرٍ قَالَ لَعَنَ رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- آكِلَ الرِّبَا وَمُوكِلَهُ وَكَاتِبَهُ وَشَاهِدَيْهِ وَقَالَ هُمْ سَوَاءٌ.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், வட்டி வாங்குபவரையும் வட்டி கொடுப்பவரையும், அதை எழுதுபவரையும் அதன் இரு சாட்சிகளையும் சபித்தார்கள். மேலும், "இவர்கள் அனைவரும் (பாவத்தில்) சமமானவர்கள் ஆவர்" என்று கூறினார்கள்.

நூல் : முஸ்லிம் 4177

மேற்கண்ட நான்கு பணிகளைச் செய்தால் அது வட்டிக்கு துணை போன குற்றமாக ஆகும்.

## கிரெடிட் கார்டு - கடன்அட்டை

தற்போது கிரடிட் கார்டு எனும் கடன்அட்டை பயன்பாடு அதிகரித்து வருகின்றது.

வாடிக்கையாளர்களுக்கு வழங்கப்படும் இந்த அட்டை மூலம் தேவையான பொருட்களை கடைகளில் வாங்கிக் கொள்ளலாம். கடைக்காரர்கள் வங்கியில் அந்தப் பணத்தைப் பெற்றுக் கொள்ளலாம். கடன் அட்டை வைத்திருப்பவர் 45 நாட்கள் அல்லது (குறிப்பிட்ட நாட்கள்) முடிவதற்குள் வங்கியில் பணத்தைச் செலுத்தினால் அதற்கு வட்டி இல்லாமல் செலுத்தலாம். குறிப்பிட்ட நாட்களுக்குள் பணம் செலுத்தாவிட்டால் வட்டியுடன் அதைச் செலுத்த வேண்டும்.

குறிப்பிட்ட நாட்களுக்குள் கடனைச் செலுத்தி விடும்போது வட்டி செலுத்தும் நிலை வராது என்பதால் இது குற்றமாகாது. வட்டி வாங்கிய குற்றம் சேராது.

குறிப்பிட்ட நாட்களுக்குள் நாம் கடனைச் செலுத்தத் தவறினால் வட்டி கட்டும் குற்றத்தைச் செய்ய வேண்டிய நிலை ஏற்படும்.

குறிப்பிட்ட நாட்களுக்குள் நாம் வட்டி இல்லாமல் அசலைச் செலுத்தினால் குற்றம் வராது என்றபோதும் குறிப்பிட்ட நாட்களுக்குள் அந்தக் கடனைச் செலுத்த இயலாமல் போகும் என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும். கடனாகக் கிடைக்கிறது என்பதற்காக சக்திக்கு மீறி கடன் அட்டை மூலம் கடன் வாங்கி விட்டு அதைக் கட்ட முடியாமல் தினறக்கூடிய மக்களை நாம் அதிக அளவில் பார்க்கிறோம்.

அன்றாடம் உழைத்து வாழக் கூடியவர்களும் அதிகமான கையிருப்பு இல்லாதவர்களும் கடன் அட்டை வாங்கினால் அவர்கள் வட்டி செலுத்தும் நிலைக்குத் தள்ளப்படுவார்கள். இவர்கள் கடன் அட்டையைப் பயன்படுத்தாமல் இருப்பதுதான் பாதுகாப்பானது.

பணம் கையிருப்பில் இருந்தும் பணத்தை எடுத்துச் செல்ல சிரமமாக உள்ளது என்பதற்காக கடன் அட்டையைப் பயன்படுத்தக் கூடியவர்கள் மட்டும்தான்

குறித்த காலத்துக்குள் பணத்தைச் செலுத்தி வட்டி இல்லாமல் பார்த்துக் கொள்ள முடியும்.

ஏழைகளும், நடுத்தர மக்களும் இதை உணர்ந்து, சிரமத்தில் தள்ளி சக்திக்கு மீறிய பொருட்களை வாங்கத் தூண்டும் கடன் அட்டையில் இருந்து தங்களைக் காத்துக் கொள்வதுதான் இம்மைக்கும் மறுமைக்கும் நல்லது.

குறிப்பிட்ட காலத்துக்குள் கடனைச் செலுத்தாவிட்டால் அதற்கான வட்டியைச் செலுத்துவேன் என்று ஒப்புக்கொண்டு விண்ணப்பப் படிவத்தில் கையெழுத்திட்டால்தான் கடன் அட்டை தரப்படும். நாம் குறிப்பிட்ட காலத்துக்குள் கடனைச் செலுத்தா விட்டால் வட்டி செலுத்துவோம் என்று ஒப்புக் கொண்டது தவறுதானே என்ற சந்தேகம் சிலருக்கு ஏற்படலாம்.

குறிப்பிட்ட காலத்துக்குள் கடனைச் செலுத்தி வட்டி கொடுக்காமல் நடந்து கொள்வேன் என்று நம்பிக்கை வைத்து ஒரு வேளை அப்படி செலுத்த முடியாவிட்டால் வட்டி செலுத்துவேன் என்று கூறுவது வட்டி வாங்கியதாகவோ, கொடுத்ததாகவோ, துணை நின்றதாகவோ ஆகாது.

மேலும் பேச்சுக்காக இது போன்ற சொற்களைப் பயன்படுத்துவது மார்க்கத்தில் குற்றமாக ஆகாது.

கிறித்தவர்களுடன் விவாதம் செய்யும் போது நீங்கள் பைபிளை இறைவேதம் என்று நிரூபித்து விட்டால் அதை நாங்கள் வேதமாக ஏற்றுக் கொள்வோம் என்று ஒப்பந்தம் செய்கிறோம். அவர்கள் பைபிளை இறைவேதம் என்று நிரூபிக்க முடியாது என்பதில் நாம் உறுதியாக இருப்பதால் வாயளவில் இதைக் கூறுகிறோம். பைபிளை ஏற்றுக் கொள்வதாக இதற்கு நாம் அர்த்தம் செய்ய மாட்டோம்.

தர்கா கட்ட ஆதாரத்தைக் காட்டினால் நாங்களும் அதை ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கிறோம் என்று கூறுவதோ எழுதுவதோ தர்காவை ஆதரித்ததாக ஆகாது. அவர்களால் ஆதாரத்தைக் காட்டவே முடியாது என்ற அசைக்க முடியாத நம்பிக்கையின் காரணமாகவே நாம் இப்படி கூறுகிறோம்.

ரஹ்மானுக்கு (அல்லாஹ்வுக்கு) பிள்ளை இருக்குமானால் முதலில் வணங்குபவனாக நான் இருப்பேன் என்று கூறுவீராக (43:81) என்று அல்லாஹ் கூறுகிறான்.

அல்லாஹ்வுக்குப் பிள்ளை இல்லவே இல்லை என்பதில் உறுதியாக நம்பிக்கை வைத்த நிலையில் தான் இப்படி நபியைக் கூறச்சொல்கிறான்.

இஸ்லாத்தில் வட்டி தடுக்கப்பட்டதை அறிந்து, வட்டி கொடுக்க மாட்டோம் என்று உறுதியாக நம்பிக்கை வைத்துள்ள நாம் குறிப்பிட்ட நாளில் கடனைச் செலுத்தத் தவறினால் வட்டி செலுத்துவேன் என்று கூறுகிறோம். வட்டி செலுத்தும் நிலைக்கு போக மாட்டோம் என்ற நம்பிக்கையுடன் தான் இப்படி கூறுகிறோம். வட்டி செலுத்துவோம் என்பதற்காகக் கூறவில்லை.

எனவே இதைக் காரணமாகக் கொண்டு கடன் அட்டை கூடாது என்ற வாதம் ஏற்கத்தக்கதல்ல.

## மணி டிரான்ஸ்பர் செய்யலாமா?

ஒரே வகையான நாணயத்திற்குள் நடக்கும் நாணயமாற்றுதல். வெவ்வேறு வகையான நாணயங்களுக்குள் நடக்கும் நாணயமாற்றுதல் என மணி டிரான்ஸ்பர் இரு வகைகளில் அமைந்துள்ளன.

ஒரே வகையான நாணயங்களுக்குள் நடக்கும் நாணயமாற்றுதலில் கூடுதல் குறைவு இல்லாமல் சமமான மதிப்பில் மாற்றிக் கொள்ள வேண்டும்.

பத்து கிராம் தங்கக் காசைக் கொடுத்து பத்து ஒரு கிராம் தங்கக் காசுகள் வாங்கலாம். விற்கலாம். பதினொரு அல்லது ஒன்பது காசுகள் என்ற வகையில் மாற்றினால் அது ஹராமாகும்.

அது போல் ஒரு நாட்டின் ரூபாய்க்கு சில்லரை மாற்றும் போது கூடுதல் குறைவு இருக்கக் கூடாது. நூறு ரூபாயை பத்து ரூபாயாக மாற்றும் போது பத்து நோட்டுகள் வாங்கலாம். பதினொன்று அல்லது ஒன்பது நோட்டுக்கள் வாங்கக்

கூடாது. அது போல் நோட்டுக்குப் பதிலாக காயன்ஸ் வாங்கும் போது அதற்குச் சமமான மதிப்பில் தான் வாங்க வேண்டும்.

நாணய வகை மாறுபட்டால் மார்கெட் நிலவரப்படி அல்லது நம் விருப்பப்படி விலை நிர்ணயிக்கலாம். மார்க்கத்தில் இது குற்றமாகாது. டாலருக்கு ரியாலை அல்லது ரூபாய்க்கு திர்ஹமை மாற்றும் போது அல்லது தங்கத்துக்கு வெள்ளியை மாற்றும் போது எப்படி வேண்டுமானாலும் மாற்றிக் கொள்ளலாம். ஆனால் இது உடனுக்குடன் நடக்க வேண்டும். கடனாக இருக்கக் கூடாது. இன்று ஒரு நூறு டாலர் கொடு நாளை ஐந்தாயிரம் தருகிறேன் என்று வியாபாரம் நடந்தால் கடனுக்காக நாம் அதிகம் பெற்றதாக ஆகி வட்டியில் சேர்ந்து விடும்.

صحيح البخاري

2060 - حَدَّثَنَا أَبُو عَاصِمٍ، عَنِ ابْنِ جُرَيْجٍ، قَالَ: أَخْبَرَنِي عَمْرُو بْنُ دِينَارٍ، عَنْ أَبِي المِنْهَالِ، قَالَ: كُنْتُ أَتَّجِرُ فِي الصَّرْفِ، فَسَأَلْتُ زَيْدَ بْنَ أَرْقَمَ رَضِيَ اللَّهُ عَنْهُ، فَقَالَ: قَالَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، ح وحَدَّثَنِي الفَضْلُ بْنُ يَعْقُوبَ، حَدَّثَنَا الحَجَّاجُ بْنُ مُحَمَّدٍ، قَالَ: ابْنُ جُرَيْجٍ، أَخْبَرَنِي عَمْرُو بْنُ دِينَارٍ، وَعَامِرُ بْنُ مُصْعَبٍ: أَنَّهُمَا سَمِعَا أَبَا المِنْهَالِ، يَقُولُ: سَأَلْتُ البَرَاءَ بْنَ عَازِبٍ، وَزَيْدَ بْنَ أَرْقَمَ عَنِ الصَّرْفِ، فَقَالاَ: كُنَّا تَاجِرَيْنِ عَلَى عَهْدِ رَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَسَأَلْنَا رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ عَنِ الصَّرْفِ، فَقَالَ: «إِنْ كَانَ يَدًا بِيَدٍ فَلاَ بَأْسَ، وَإِنْ كَانَ نَسَاءً فَلاَ يَصْلُحُ»

அபுல் மின்ஹால் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

நான் நாணயமாற்று வியாபாரம் செய்து வந்தேன்; அது பற்றி(ய மார்க்கச் சட்டத்தை) ஸைத் பின் அர்கம் (ரலி), பராஉ பின் ஆஸிப் (ரலி) ஆகியோரிடம் கேட்டேன். அதற்கவர்கள், நாங்கள் நபி (ஸல்) அவர்களது காலத்தில் வியாபாரிகளாக இருந்தோம்: அவர்களிடம் நாணயமாற்று வியாபாரம் பற்றிக் கேட்டோம்; அதற்கு உடனுக்குடன் மாற்றிக் கொண்டால் அதில் தவறில்லை; தவணையுடன் இருந்தால் அது கூடாது என அவர்கள் பதிலளித்தார்கள் என்றார்கள்.

நூல் : புகாரி 2060

صحيح البخاري

2175 - حَدَّثَنَا صَدَقَةُ بْنُ الفَضْلِ، أَخْبَرَنَا إِسْمَاعِيلُ بْنُ عُلَيَّةَ، قَالَ: حَدَّثَنِي يَحْيَى بْنُ أَبِي إِسْحَاقَ، حَدَّثَنَا عَبْدُ الرَّحْمَنِ بْنُ أَبِي بَكْرَةَ، قَالَ: قَالَ أَبُو بَكْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ: قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «لاَ تَبِيعُوا الذَّهَبَ بِالذَّهَبِ إِلَّا سَوَاءً بِسَوَاءٍ، وَالفِضَّةَ بِالفِضَّةِ إِلَّا سَوَاءً بِسَوَاءٍ، وَبِيعُوا الذَّهَبَ بِالفِضَّةِ، وَالفِضَّةَ بِالذَّهَبِ كَيْفَ شِئْتُمْ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

சரிக்குச் சரியாகவே தவிர, தங்கத்திற்குத் தங்கத்தை விற்காதீர்கள்! சரிக்குச் சரியாகவே தவிர, வெள்ளிக்கு வெள்ளியை விற்காதீர்கள்! தங்கத்திற்கு வெள்ளியையும், வெள்ளிக்குத் தங்கத்தையும் விரும்பியவாறு விற்றுக் கொள்ளுங்கள்.

நூல் : புகாரி 2175

## தவிர்க்க வேண்டியவை

### இறைவன் தடுத்ததை விட்டு விலகிக் கொள்ள வேண்டும்

பொருளாதாரத்தைத் திரட்டுவதற்கு சில கட்டுப்பாடுகளை இஸ்லாம் விதித்திருக்கிறது. அனுமதிக்கப்பட்ட வகையில் பொருளீட்டுவதை ஹலால் என்றும், அனுமதிக்கப்படாத வகையில் பொருளீட்டுவதை ஹராம் என்றும் இஸ்லாம் வகைப்படுத்தியுள்ளது.

பொருளாதாரத்தைத் திரட்டுவது தனி மனிதனின் உரிமை; அதில் மதங்கள் தலையிட்டு கட்டுப்பாடுகள் விதிப்பது தேவையற்றது என்று முஸ்லிம்களில் சிலர் நினைக்கின்றனர். இவ்வாறு கட்டுப்பாடுகள் விதிப்பதால் பொருளாதாரத்தைத் திரட்டும் பல வாய்ப்புகளை மனிதன் இழந்து விடுகிறான் என்றும் அவர்கள் கருதுகின்றனர்.

பொருளீட்டுவதில் யாரும் தலையிடக் கூடாது என்று நினைக்கும் இத்தகைய முஸ்லிம்கள் அரசாங்கம் தலையிடுவதை ஏற்றுக் கொள்கின்றனர். அரசாங்கம் விதிக்கும் கட்டுப்பாடுகளுக்குக் கட்டுப்படுகின்றனர். அரசாங்கம் தடுத்தவைகளைத் தடுத்துக் கொள்கின்றனர். ஆனால் படைத்த இறைவனுக்கு இந்த அதிகாரம் இல்லை என்று நினைக்கின்றனர்.

இஸ்லாத்தில் தடை செய்யப்பட்டவை அனுமதிக்கப்பட்டவைகளை விட மிகமிகக் குறைவாக இருப்பதால் பொருளீட்டுவதற்கான வாய்ப்புகள் இல்லாமல் போய்விடாது.

மேலும் இஸ்லாத்தில் தடை செய்யப்பட்ட பொருளாதாரம் என்பது அர்த்தமில்லாத சடங்கு என்ற அடிப்படையில் அமையவில்லை. மாறாக மனித குலத்துக்குக் கேடு விளைவிக்கும் வகையில் அமைந்த பொருளாதாரமே தடுக்கப்பட்டுள்ளது. அவற்றைப் பேணி நடப்பதால் அது நமக்குத்தான் நன்மை என்று புரிந்து கொண்டால் இது போன்ற கட்டுப்பாடுகளை நாம் மனமாற ஏற்றுக் கொள்ள முடியும்.

இறைவனுக்காக வணக்க வழிபாடுகளை நாம் எவ்வாறு ஆர்வத்துடன் செய்கிறோமோ அது போல் பொருளீட்டுவதற்கு இறைவன் வகுத்த வரம்புகளையும் பேணுவது அவசியம் என்று இஸ்லாம் கட்டளையிடுகிறது.

மனிதர்களே! பூமியில் உள்ளவற்றில் அனுமதிக்கப்பட்ட தூய்மையானதை உண்ணுங்கள்! ஷைத்தானின் அடிச்சுவடுகளைப் பின்பற்றாதீர்கள்! அவன் உங்களுக்குப் பகிரங்க எதிரி.

திருக்குர்ஆன் : 2:168

நம்பிக்கை கொண்டோரே! நாம் உங்களுக்கு வழங்கிய தூய்மையானவற்றை உண்ணுங்கள்! நீங்கள் அல்லாஹ்வையே வணங்குவோராக இருந்தால் அவனுக்கே நன்றி செலுத்துங்கள்.

திருக்குர்ஆன் 2:172

"நம்பிக்கையாளர்களே! நாம் உங்களுக்கு வழங்கிய தூய்மையான பொருள்களிலிருந்து உண்ணுங்கள். நீங்கள் (உண்மையில்) அல்லாஹ்வைத்தான் வணங்குகிறீர்களென்றால், அவனுக்கு நன்றி பாராட்டுங்கள்.

திருக்குர்ஆன் 2:172

صحيح مسلم 65 - (1015) وحَدَّثَنِي أَبُو كُرَيْبٍ مُحَمَّدُ بْنُ الْعَلَاءِ، حَدَّثَنَا أَبُو أُسَامَةَ، حَدَّثَنَا فُضَيْلُ بْنُ مَرْزُوقٍ، حَدَّثَنِي عَدِيُّ بْنُ ثَابِتٍ، عَنْ أَبِي حَازِمٍ، عَنْ أَبِي هُرَيْرَةَ، قَالَ: قَالَ رَسُولُ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: " أَيُّهَا النَّاسُ، إِنَّ اللهَ طَيِّبٌ لَا يَقْبَلُ إِلَّا طَيِّبًا، وَإِنَّ اللهَ أَمَرَ الْمُؤْمِنِينَ بِمَا أَمَرَ بِهِ الْمُرْسَلِينَ، فَقَالَ: {يَا أَيُّهَا الرُّسُلُ كُلُوا مِنَ الطَّيِّبَاتِ وَاعْمَلُوا صَالِحًا، إِنِّي بِمَا تَعْمَلُونَ عَلِيمٌ} [المؤمنون: 51] وَقَالَ: {يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا كُلُوا مِنْ طَيِّبَاتِ مَا رَزَقْنَاكُمْ} [البقرة: 172] ثُمَّ ذَكَرَ الرَّجُلَ يُطِيلُ السَّفَرَ أَشْعَثَ أَغْبَرَ، يَمُدُّ يَدَيْهِ إِلَى السَّمَاءِ، يَا رَبِّ، يَا رَبِّ، وَمَطْعَمُهُ حَرَامٌ، وَمَشْرَبُهُ حَرَامٌ، وَمَلْبَسُهُ حَرَامٌ، وَغُذِيَ بِالْحَرَامِ، فَأَنَّى يُسْتَجَابُ لِذَلِكَ؟ "

"மக்களே! அல்லாஹ் தூயவன். தூய்மையானதையே அவன் ஏற்கின்றான். அல்லாஹ் தன்னுடைய தூதர்களுக்குக் கட்டளையிட்டவற்றையே இறை நம்பிக்கையாளர்களுக்கும் கட்டளையிட்டுள்ளான்" என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறிவிட்டு(ப் பின்வரும் இரு வசனங்களை 23:51) ஓதிக் காட்டினார்கள் :தூதர்களே! தூய்மையான பொருள்களிலிருந்து உண்ணுங்கள். நற்செயலைச் செய்யுங்கள். நீங்கள் செய்வதை நான் நன்கு அறிபவன் ஆவேன்.

பின்னர் ஒரு மனிதரைப் பற்றிச் சொன்னார்கள். "அவர் தலைவிரி கோலத்துடனும், புழுதி படிந்த நிலையிலும் நீண்ட பயணம் மேற்கொள்கிறார். அவர் தம் கரங்களை வானை நோக்கி உயர்த்தி என் இறைவா என் இறைவா என்று பிரார்த்திக்கிறார். ஆனால், அவர் உண்ணும் உணவு தடை செய்யப்பட்டதாக இருக்கிறது; அவர் அருந்தும் பானம் தடை செய்யப்பட்டதாக இருக்கிறது; அவர் அணியும் உடை தடை செய்யப்பட்டதாக இருக்கிறது; தடை செய்யப்பட்ட உணவையே அவர் உட்கொண்டிருக்கிறார். இத்தகையவருக்கு எவ்வாறு (அவரது பிரார்த்தனை) ஏற்கப்படும்?" என்று கூறினார்கள்.

நூல் : முஸ்லிம் 2393

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இந்தச் செய்தியில் இரண்டு விஷயங்களைச் சொல்கிறார்கள். ஒன்று நம்முடைய துஆக்கள் அங்கீகரிக்கப்பட வேண்டும் என்றால் நம் வருவாய் தூய்மையான முறையில் இருக்க வேண்டும். அடுத்தது ஹராமான பொருளாதாரத்தில் இருந்து நாம் செய்யக் கூடிய தர்மங்களுக்கு நன்மை கிடைக்காது.

صحيح مسلم

4848 - حَدَّثَنَا أَبُو بَكْرِ بْنُ أَبِى شَيْبَةَ حَدَّثَنَا وَكِيعُ بْنُ الْجَرَّاحِ حَدَّثَنَا إِسْمَاعِيلُ بْنُ أَبِى خَالِدٍ عَنْ قَيْسِ بْنِ أَبِى حَازِمٍ عَنْ عَدِىِّ بْنِ عَمِيرَةَ الْكِنْدِىِّ قَالَ سَمِعْتُ رَسُولَ اللَّهِ -صلى الله عليه وسلم- يَقُولُ « مَنِ اسْتَعْمَلْنَاهُ مِنْكُمْ عَلَى عَمَلٍ فَكَتَمَنَا مِخْيَطًا فَمَا فَوْقَهُ كَانَ غُلُولاً يَأْتِى بِهِ يَوْمَ الْقِيَامَةِ ». قَالَ فَقَامَ إِلَيْهِ رَجُلٌ أَسْوَدُ مِنَ الأَنْصَارِ كَأَنِّى أَنْظُرُ إِلَيْهِ فَقَالَ يَا رَسُولَ اللَّهِ اقْبَلْ عَنِّى عَمَلَكَ قَالَ « وَمَا لَكَ ». قَالَ سَمِعْتُكَ تَقُولُ كَذَا وَكَذَا. قَالَ « وَأَنَا أَقُولُهُ الآنَ مَنِ اسْتَعْمَلْنَاهُ مِنْكُمْ عَلَى عَمَلٍ فَلْيَجِئْ بِقَلِيلِهِ وَكَثِيرِهِ فَمَا أُوتِىَ مِنْهُ أَخَذَ وَمَا نُهِىَ عَنْهُ انْتَهَى ».

(ஒரு முறை) நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "நாம் உங்களில் எவரையேனும் ஒரு பணிக்கு அதிகாரியாக நியமித்திருந்து, பின்னர் அவர் ஓர் ஊசியையோ அதை விடச் சிறியதையோ நம்மிடம் (கணக்குக் காட்டாமல்) மறைத்து விட்டால் அது மோசடியாகவே அமையும். அவர் மறுமை நாளில் அந்தப் பொருளுடன் வருவார்" என்று கூறியதை நான் கேட்டேன். அப்போது அன்சாரிகளில் ஒரு கறுப்பு நிற மனிதர் எழுந்து, -அவரை இப்போதும் நான் பார்ப்பதைப் போன்றுள்ளது. "அல்லாஹ்வின் தூதரே! என்னிடம் தாங்கள் ஒப்படைத்திருந்த பணியை நீங்கள் (திரும்ப) ஏற்றுக் கொள்ளுங்கள்" என்று கூறினார். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "உங்களுக்கு என்ன நேர்ந்தது?" என்று கேட்டார்கள். அவர், "தாங்கள்

இன்னின்னவாறு கூறியதை நான் கேட்டேன்" என்றார். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "நான் இப்போதும் அவ்வாறே கூறுகிறேன். நாம் உங்களில் எவரையேனும் ஒரு பணிக்கு அதிகாரியாக நியமித்தால், அவர் அதில் கிடைக்கும் சிறியதையும் அதிகத்தையும் (நம்மிடம்) கொண்டு வந்து சேர்க்கட்டும். பிறகு எது அவருக்கு வழங்கப்படுகிறதோ அதை அவர் பெற்றுக் கொள்ளட்டும். எது அவருக்கு மறுக்கப்படுகிறதோ அதிலிருந்து அவர் விலகிக் கொள்ளட்டும்" என்று கூறினார்கள்.

நூல் : முஸ்லிம் 4848

## ஹராமை ஹலாலாக்க தந்திரம் செய்தல்

صحيح البخاري

2083 - حَدَّثَنَا آدَمُ، حَدَّثَنَا ابْنُ أَبِي ذِئْبٍ، حَدَّثَنَا سَعِيدٌ المَقْبُرِيُّ، عَنْ أَبِي هُرَيْرَةَ، عَنِ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، قَالَ: «لَيَأْتِيَنَّ عَلَى النَّاسِ زَمَانٌ، لاَ يُبَالِي المَرْءُ بِمَا أَخَذَ المَالَ، أَمِنْ حَلاَلٍ أَمْ مِنْ حَرَامٍ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

தாம் சம்பாதித்தது ஹலாலா ஹராமா என்று மனிதர்கள் பொருட்படுத்தாத ஒரு காலம் வரும்.

நூல் : புகாரி 2083

ஹராமை ஹலாலாகச் சித்தரித்து தவறான முறையில் பொருளீட்டுவதை நம்மில் சிலர் நியாயப்படுத்துவதைப் பார்க்கிறோம். இப்படித் தந்திரம் செய்து ஹராமை ஹலாலாக்குவது பற்றியும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எச்சரித்துள்ளார்கள்.

سنن أبي داود

3688 - حدثنا أحمد بن حنبل قال ثنا زيد بن الحباب قال ثنا معاوية بن صالح عن حاتم بن حريث عن مالك بن أبي مريم قال دخل علينا عبد الرحمن بن غنم فتذاكرنا الطلاء فقال حدثني أبو مالك الأشعري : أنه سمع رسول الله صلى الله عليه و سلم يقول ليشربن ناس من أمتي الخمر يسمونها بغير اسمها

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

நிச்சயமாக என்னுடைய சமுதாயத்தில் சில மனிதர்கள் மதுவை அருந்துவார்கள். அவர்கள் அதற்கு வேறு பெயரைச் சூட்டிக் கொள்வார்கள்.

நூல் : ஆபுதாவூத் 3203

அல்லாஹ் ஹராமாக்கியதை யூதர்கள் தந்திரமாக ஹலாலாக்கிக் கொண்டதைச் சுட்டிக்காட்டி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நமக்கு எச்சரிக்கை செய்துள்ளார்கள்.

صحيح البخاري

2236 - حَدَّثَنَا قُتَيْبَةُ، حَدَّثَنَا اللَّيْثُ، عَنْ يَزِيدَ بْنِ أَبِي حَبِيبٍ، عَنْ عَطَاءِ بْنِ أَبِي رَبَاحٍ، عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، أَنَّهُ: سَمِعَ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، يَقُولُ عَامَ الفَتْحِ وَهُوَ بِمَكَّةَ: «إِنَّ اللَّهَ وَرَسُولَهُ حَرَّمَ بَيْعَ الخَمْرِ، وَالمَيْتَةِ وَالخِنْزِيرِ وَالأَصْنَامِ»، فَقِيلَ: يَا رَسُولَ اللَّهِ، أَرَأَيْتَ شُحُومَ المَيْتَةِ، فَإِنَّهَا يُطْلَى بِهَا السُّفُنُ، وَيُدْهَنُ بِهَا الجُلُودُ، وَيَسْتَصْبِحُ بِهَا النَّاسُ؟ فَقَالَ: «لاَ، هُوَ حَرَامٌ»، ثُمَّ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ عِنْدَ ذَلِكَ: «قَاتَلَ اللَّهُ اليَهُودَ إِنَّ اللَّهَ لَمَّا حَرَّمَ شُحُومَهَا جَمَلُوهُ، ثُمَّ بَاعُوهُ، فَأَكَلُوا ثَمَنَهُ»

மதுபானம், செத்தவை, பன்றி, உருவச் சிலைகள் ஆகியவற்றை விற்பனை செய்வதை அல்லாஹ்வும், அவனுடைய தூதரும் தடை செய்துள்ளனர் என்று மக்கா வெற்றியின்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது அவர்களிடம், அல்லாஹ்வின் தூதரே! செத்தவற்றின் கொழுப்புகள் கப்பல்களுக்குப் பூசப்படுகின்றன; தோல்களுக்கு அவற்றின் மூலம் மெருகேற்றப்படுகின்றது; மக்கள் விளக்கெரிக்க அவற்றைப் பயன்படுத்துகின்றனர்; ஆகவே, அதைப் பற்றிக் கூறுங்கள் எனக் கேட்கப்பட்டது. அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், கூடாது! அது ஹராம்! எனக் கூறினார்கள். அப்போது தொடர்ந்து, அல்லாஹ் யூதர்களைத் தனது கருணையிலிருந்து அப்புறப்படுத்துவானாக! அல்லாஹ் யூதர்களுக்குக் கொழுப்பை ஹராமாக்கியபோது, அவர்கள் அதை உருக்கி விற்று, அதன் கிரயத்தைச் சாப்பிட்டார்கள்! என்று கூறினார்கள்.

நூல் : புகாரி 2236

## சந்தேகமானதை விட்டுவிட வேண்டும்

சில வகைப் பொருளாதாரங்கள் அனுமதிக்கப்பட்டதா? தடை செய்யப்பட்டதா என்ற சந்தேகம் நமக்கு அவ்வப்போது ஏற்படும். அதுபோன்ற சந்தர்ப்பங்களில் சந்தேகமானதை விட்டும் நாம் விலகிக் கொள்ளும் வகையில் நம்மைப் பக்குவப்படுத்திக் கொண்டால் ஹராமானதில் இருந்து விலகுவது நம்முடைய இயல்பாகவே மாறி விடும்.

நம்மிடம் ஒரு குவளை பால் தரப்படுகிறது. அப்போது அருகில் இருக்கும் ஒருவர் அதில் விஷம் கலந்துள்ளது என்று கூறுகிறார். இன்னொருவர் அதில் தேன் கலந்துள்ளது என்கிறார். இப்போது நாம் என்ன செய்வோம்?

தேன் கலந்திருக்கவும் வாய்ப்பு உள்ளது; விஷம் கலந்திருக்கவும் வாய்ப்பு உள்ளது என்ற போதும் நாம் அதை அருந்த மாட்டோம். ஹலாலா ஹராமா என்று சந்தேகம் ஏற்படும்போது இது போன்ற மனநிலையை நாம் அடைய வேண்டும்.

صحيح البخاري

52 - حَدَّثَنَا أَبُو نُعَيْمٍ، حَدَّثَنَا زَكَرِيَّاءُ، عَنْ عَامِرٍ، قَالَ: سَمِعْتُ النُّعْمَانَ بْنَ بَشِيرٍ، يَقُولُ: سَمِعْتُ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ يَقُولُ: " الحَلاَلُ بَيِّنٌ، وَالحَرَامُ بَيِّنٌ، وَبَيْنَهُمَا مُشَبَّهَاتٌ لاَ يَعْلَمُهَا كَثِيرٌ مِنَ النَّاسِ، فَمَنِ اتَّقَى المُشَبَّهَاتِ اسْتَبْرَأَ لِدِينِهِ وَعِرْضِهِ، وَمَنْ وَقَعَ فِي الشُّبُهَاتِ: كَرَاعٍ يَرْعَى حَوْلَ الحِمَى، يُوشِكُ أَنْ يُوَاقِعَهُ، أَلاَ وَإِنَّ لِكُلِّ مَلِكٍ حِمًى، أَلاَ إِنَّ حِمَى اللَّهِ فِي أَرْضِهِ مَحَارِمُهُ، أَلاَ وَإِنَّ فِي الجَسَدِ مُضْغَةً: إِذَا صَلَحَتْ صَلَحَ الجَسَدُ كُلُّهُ، وَإِذَا فَسَدَتْ فَسَدَ الجَسَدُ كُلُّهُ، أَلاَ وَهِيَ القَلْبُ "

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

அனுமதிக்கப்பட்டவையும் மிகத் தெளிவானவை. அனுதிக்கப்படாதவையும் தெளிவானவை. இவ்விரண்டிற்கும் இடையில் சந்தேகத்திற்கு இடமானவையும் இருக்கின்றன. அவற்றை மக்களில் அதிகம் பேர் அறிய மாட்டார்கள். எனவே எவர் சந்தேகத்திற்கு இடமானவற்றைத் தவிர்த்துக் கொள்கிறாரோ அவர் தமது மார்க்கத்தையும், மானத்தையும் காப்பாற்றிக் கொள்கிறார். எவர் சந்தேகத்திற்கிடமானவைகளில்) தலையிடுகிறாரோ அவர், (அனுமதிக்கப்படாதவைகளில் தலையிட நேரும்.) வேலியோரங்களில் (கால்நடைகளை) மேய்ப்பவர் வேலிக்குள்ளேயே (கால்நடைகளை) மேயவிட நேரும். எச்சரிக்கை! ஒவ்வொரு மன்னனுக்கும் ஓர் எல்லை இருக்கின்றது.

அல்லாஹ்வின் பூமியில் அவனது எல்லை (வேலி) அவனால் தடை விதிக்கப்பட்டவையே. அறிந்து கொள்க : உடலில் ஒரு சதைத் துண்டு இருக்கிறது. அது சீர்பெற்று விட்டால் உடல் முழுவதும் சீர்பெற்று விடும். அது சீர்குலைந்து விட்டால் முழு உடலும் சீர்குலைந்து விடும். அறிந்து கொள்ளுங்கள்: அதுதான் உள்ளம்.

நூல் : புகாரி 52

சந்தேகமானதை விட்டு விடுவதில் நபிகள் நாயகம் (ஸல்) கடுமையான போக்கைக் கடைப்பிடித்துள்ளனர். தமது தோழர்களுக்கும் அவ்வாறே பயிற்சி அளித்துள்ளனர்.

صحيح البخاري

88 - حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ مُقَاتِلٍ أَبُو الحَسَنِ، قَالَ: أَخْبَرَنَا عَبْدُ اللَّهِ، قَالَ: أَخْبَرَنَا عُمَرُ بْنُ سَعِيدِ بْنِ أَبِي حُسَيْنٍ، قَالَ: حَدَّثَنِي عَبْدُ اللَّهِ بْنُ أَبِي مُلَيْكَةَ، عَنْ عُقْبَةَ بْنِ الحَارِثِ، أَنَّهُ تَزَوَّجَ ابْنَةً لِأَبِي إِهَابِ بْنِ عُزَيْزٍ فَأَتَتْهُ امْرَأَةٌ فَقَالَتْ: إِنِّي قَدْ أَرْضَعْتُ عُقْبَةَ وَالَّتِي تَزَوَّجَ، فَقَالَ لَهَا عُقْبَةُ: مَا أَعْلَمُ أَنَّكِ أَرْضَعْتِنِي، وَلاَ أَخْبَرْتِنِي، فَرَكِبَ إِلَى رَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ بِالْمَدِينَةِ فَسَأَلَهُ، فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «كَيْفَ وَقَدْ قِيلَ» فَفَارَقَهَا عُقْبَةُ، وَنَكَحَتْ زَوْجًا غَيْرَهُ

உக்பா பின் அல்ஹாரிஸ் (ரலி) கூறியதாவது :

நான் அபூ இஹாப் பின் அஸீஸ் என்பவரின் மகளை மணந்து கொண்டேன். அப்போது ஒரு பெண்மணி என்னிடம் வந்து "உனக்கும் நீ மணந்துள்ள பெண்ணுக்கும் (உங்கள் மழலைப் பருவத்தில்) நான் பாலூட்டியிருக்கிறேன்" (இந்த வகையில் நீங்கள் இருவரும் பால்குடிச் சகோதரரர்கள் ஆவீர்கள்) என்று கூறினார். "நீங்கள் எனக்குப் பாலூட்டியதை நான் அறிய மாட்டேன்; (நான் மணமுடித்துக் கொண்டபோது) நீங்கள் எனக்கு (இதைத்) தெரிவிக்கவில்லையே!" என்று நான் கேட்டேன். ஆகவே, (இப்பிரச்சினைக்குத் தீர்வு காண மக்காவிலிருந்த) நான் மதீனாவிலிருந்த நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை நோக்கிப் பயணம் செய்து, அவர்களிடம் (இது குறித்து) வினவினேன். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "(நீயும் உம் மனைவியும் ஒரே செவிலித்தாயிடம் பால் குடித்ததாகச்) சொல்லப்பட்ட பிறகு (நீங்கள் இருவரும் இணைந்து வாழ்வது) எப்படி (செல்லும்)?" என்று கூறினார்கள். ஆகவே நான் அவளை விட்டுப் பிரிந்து விட்டேன். அந்தப் பெண்ணும் வேறொரு கணவனை மணந்து கொண்டாள்.

நூல் : புகாரி 88

திருமணம் நடந்து முடிந்து விட்டாலும், அதன் பின்னர் பிரிவது பெண்ணுக்குப் பாதிப்பை ஏற்படுத்தும் என்றபோதும் சந்தேகத்துக்கு இடமானதைத் தொடர்வதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அனுமதிக்கவில்லை.

صحيح البخاري

2054 - حَدَّثَنَا أَبُو الوَلِيدِ، حَدَّثَنَا شُعْبَةُ، قَالَ: أَخْبَرَنِي عَبْدُ اللَّهِ بْنُ أَبِي السَّفَرِ، عَنِ الشَّعْبِيِّ، عَنْ عَدِيِّ بْنِ حَاتِمٍ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: سَأَلْتُ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ عَنِ المِعْرَاضِ، فَقَالَ: «إِذَا أَصَابَ بِحَدِّهِ فَكُلْ، وَإِذَا أَصَابَ بِعَرْضِهِ فَقَتَلَ، فَلاَ تَأْكُلْ فَإِنَّهُ وَقِيذٌ»، قُلْتُ: يَا رَسُولَ اللَّهِ أُرْسِلُ كَلْبِي وَأُسَمِّي، فَأَجِدُ مَعَهُ عَلَى الصَّيْدِ كَلْبًا آخَرَ لَمْ أُسَمِّ عَلَيْهِ، وَلاَ أَدْرِي أَيُّهُمَا أَخَذَ؟ قَالَ: «لاَ تَأْكُلْ، إِنَّمَا سَمَّيْتَ عَلَى كَلْبِكَ وَلَمْ تُسَمِّ عَلَى الآخَرِ»

அதீ பின் ஹாத்திம் (ரலி) அவர்கள் கூறியதாவது :

நான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் ஈட்டி (மூலம் வேட்டையாடுவதைப்) பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள், பிராணியை ஈட்டி அதன் முனையால் தாக்கிக் கொன்றால் அதை நீ உண்; பக்கவாட்டாகத் தாக்கிக் கொன்றால் அதை நீ உண்ணாதே. ஏனெனில் அது அடித்துக் கொல்லப்பட்டதாகும்" என்றார்கள். அல்லாஹ்வின் தூதரே! (வேட்டைக்காக) நான் எனது நாயை அல்லாஹ்வின் பெயர் கூறி அனுப்புகிறேன்; வேட்டையாடப்பட்ட பிராணிக்கு அருகில் எனது நாயுடன் மற்றொரு நாயையும் நான் காண்கிறேன்; அந்த மற்றொரு நாய்க்காக நான் அல்லாஹ்வின் பெயர் கூறவில்லை; இவ்விரு நாய்களில் எது வேட்டையாடியது என்பதும் எனக்குத் தெரியவில்லை (அதை நான் சாப்பிடலாமா?) எனக் கேட்டேன். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், சாப்பிடாதே! நீ அல்லாஹ்வின் பெயர் கூறியது உனது நாயை அனுப்பும்போதுதான். மற்றொரு நாய்க்கு நீ அல்லாஹ்வின் பெயர் கூறவில்லை என விடையளித்தார்கள்.

நூல் : புகாரி 2054

வேட்டைக்கு அனுப்பிய நாய் வேட்டைப் பிராணியைக் கொன்றிருக்க எவ்வாறு வாய்ப்பு உள்ளதோ அது போல் மற்றொரு நாய் அதைக் கொன்றிருக்கவும் வாய்ப்பு உள்ளது. இப்போது சந்தேகம் ஏற்பட்டு விட்டதால் அதைச் சாப்பிட வேண்டாம் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வழிகாட்டியிருப்பதில்

இருந்து நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இதில் கடும் போக்கைக் கடைப்பிடித்துள்ளார்கள் என்பதை அறியலாம்.

صحيح البخاري

2597 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ مُحَمَّدٍ، حَدَّثَنَا سُفْيَانُ، عَنِ الزُّهْرِيِّ، عَنْ عُرْوَةَ بْنِ الزُّبَيْرِ، عَنْ أَبِي حُمَيْدٍ السَّاعِدِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: اسْتَعْمَلَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ رَجُلًا مِنَ الأَزْدِ، يُقَالُ لَهُ ابْنُ الأُتْبِيَّةِ عَلَى الصَّدَقَةِ، فَلَمَّا قَدِمَ قَالَ: هَذَا لَكُمْ وَهَذَا أُهْدِيَ لِي، قَالَ: «فَهَلَّا جَلَسَ فِي بَيْتِ أَبِيهِ أَوْ بَيْتِ أُمِّهِ، فَيَنْظُرَ يُهْدَى لَهُ أَمْ لاَ؟ وَالَّذِي نَفْسِي بِيَدِهِ لاَ يَأْخُذُ أَحَدٌ مِنْهُ شَيْئًا إِلَّا جَاءَ بِهِ يَوْمَ القِيَامَةِ يَحْمِلُهُ عَلَى رَقَبَتِهِ، إِنْ كَانَ بَعِيرًا لَهُ رُغَاءٌ، أَوْ بَقَرَةً لَهَا خُوَارٌ، أَوْ شَاةً تَيْعَرُ» ثُمَّ رَفَعَ بِيَدِهِ [ص:160] حَتَّى رَأَيْنَا عُفْرَةَ إِبْطَيْهِ: «اللَّهُمَّ هَلْ بَلَّغْتُ، اللَّهُمَّ هَلْ بَلَّغْتُ» ثَلاَثًا

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அஸ்த் என்னும் குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதரை (ஸகாத்) வசூலிப்பவராக நியமித்தார்கள். அவர் இப்னுல் லுத்பிய்யா என்று அழைக்கப்பட்டு வந்தார். அவர் ஸக்காத் வசூலித்துக் கொண்டு வந்தபோது, "இது உங்களுக்குரியது; இது எனக்கு அன்பளிப்பாக வழங்கப்பட்டது" என்று கூறினார். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "இவர் தன் தகப்பனின் வீட்டில் அல்லது தாயின் வீட்டில் உட்கார்ந்து கொண்டு, தமக்கு அன்பளிப்புக் கிடைக்கிறதா இல்லையா என்று பார்க்கட்டுமே! என் உயிரைத் தனது கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! உங்களில் யாரேனும் அந்த ஸகாத் பொருளில் இருந்து (முறைகேடாக) எதைப் பெற்றாலும் அதை அவர் மறுமை நாளில் தன் பிடரியில் சுமந்து கொண்டு வருவார். அது ஒட்டகமாக இருந்தால் கனைத்துக் கொண்டிருக்கும்; பசுவாகவோ ஆடாகவோ இருந்தால் கத்திக் கொண்டிருக்கும்" என்று கூறினார்கள். பிறகு, அவர்களுடைய அக்குள்களின் வெண்மையை நாங்கள் பார்க்கும் அளவுக்குத் தம் கைகளை உயர்த்தி, "இறைவா! (உன் செய்தியை மக்களுக்கு) நான் எடுத்துரைத்து விட்டேன் அல்லவா? நான் எடுத்துரைத்து விட்டேன் அல்லவா?" என்று மும்முறை கூறினார்கள்.

நூல் : புகாரி 2597

ஸகாத் நிதியைத் திரட்டுவதற்காக அனுப்பப்பட்ட அந்த மனிதர் எந்த மோசடியும் செய்யவில்லை. எதையும் ஒளிக்கவில்லை. வசூலிக்கச் சென்ற இடத்தில் அவருக்காகத் தனிப்பட்ட முறையில் கொடுக்கப்பட்டதைத்தான் வாங்கிக் கொண்டார். ஆனால் அவருக்காக அது கொடுக்கப்பட்டாலும் அவர் ஸகாத்

வசூலிக்கச் சென்றபோது அது அவருக்குக் கொடுக்கப்பட்டதால் அதில் சந்தேகம் ஏற்படுகிறது.

அவருக்கு அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டிருக்க வாய்ப்பு உள்ளது போல் அவர் ஸகாத் வசூலிக்கும்போது சலுகை அளிப்பார் என்று எதிர்பார்த்தும் அது கொடுக்கப்பட்டிருக்கலாம்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இந்த நுணுக்கமான வேறுபாட்டைக் கவனிக்கிறார்கள். இவருக்கு அன்பளிப்பாக அளிக்கப்பட்டது என்றால் இவர் தனது தந்தை வீட்டில் உட்கார்ந்து இருந்தால் இவருக்கு அந்த அன்பளிப்பைக் கொடுப்பார்களா? என்று அற்புதமான கேள்வியை எழுப்பி சந்தேகத்தின் சாயல் இருந்தால்கூட அதைத் தவிர்த்தாக வேண்டும் என்று நமக்கு வழி காட்டியுள்ளனர்.

நம்முடைய காலத்தில் முஸ்லிம்களிடம் காணப்படும் ஒரு வழக்கத்தை இந்த இடத்தில் நினைவு கூறுவது பொருத்தமாக இருக்கும்.

இஸ்லாத்தில் வரதட்சணை தடுக்கப்பட்டுள்ளதை நாம் அறிவோம். இன்று கொள்கைவாதிகள் பலர் வரதட்சணை வாங்குவதைத் தவிர்த்து மஹர் கொடுத்து திருமணம் செய்யும் நிலை ஏற்பட்டுள்ளது. ஆனால் சில கொள்கைவாதிகள்(?) மறைமுகமாக வரதட்சணை வாங்குவதைப் பார்க்கிறோம். அதாவது நாங்கள் எதுவும் கேட்கவில்லை. பெண் வீட்டார்தான் மனவிருப்பத்துடன் அவர்களாக முன்வந்து தருகிறார்கள். எனவே இது வரதட்சணை ஆகாது என்பது அவர்களின் வாதம்.

ஆனால் இதில் உண்மையில்லை. அவர்களது பெண்ணைத் திருமணம் செய்கின்ற காரணத்தால்தான் இது தரப்படுகிறது. தமது மகளைக் கொடுமைப்படுத்தக் கூடாது என்ற பெற்றோரின் அச்சம் காரணமாகத்தான் இப்படி தரப்படுகிறது என்பது நம்முடைய மனசாட்சிக்குத் தெரிகிறது. ஆனாலும் இதை அன்பளிப்பு என்ற போர்வை போர்த்தி நியாயப்படுத்துகின்றனர். இவர்கள் மேற்கண்ட ஹதீஸைச் சிந்திக்க வேண்டும்.

நாம் அவருடைய பெண்ணைத் திருமணம் செய்யாமல் இருந்தால் இந்த அன்பளிப்பைத் தருவார்களா? அல்லது ஏதோ ஒரு காரணத்தால் திருமணம் நின்றுவிட்டால் நாங்கள் தந்த அன்பளிப்பை வைத்துக் கொள்ளுங்கள் என்று கூறுவார்களா? கூற மாட்டார்கள். என் பெண்ணே உன்னுடன் வாழாதபோது உனக்கு எதற்கு இந்தப் பொருட்கள் என்று சொல்லி பிடுங்கிக் கொள்வார்கள்.

திருமணம் முடிந்து சில காலம் கடந்து விட்ட பின் நம்முடைய மருமகன் நன்றாக இருக்க வேண்டும் என்பதற்காக எதையாவது மாமனார் வீட்டினர் கொடுத்தால் அவர் குடும்பத்தில் ஒருவராகி விட்டபடியால் அதைப் பெற்றுக் கொள்வதில் தவறில்லை.

سنن أبي داود

3313 حدَّثنا داودُ بن رُشَيد، حدَّثنا شعيبُ بن إسحاقَ، عن الأوزاعيِّ، عن يحيى بن أبي كثيرٍ، حدَّثني أبو قِلابةَ حدَّثني ثابتُ بن الضحَّاك، قال: نذرَ رجلٌ على عهدِ رسولِ الله -صلَّى الله عليه وسلم- أن ينحرَ إبلاً ببُوانةَ، فأتى رسول الله -صلَّى الله عليه وسلم -، فقال: إني نذرتُ أن أنحر إبلاً ببُوانةَ، فقال رسول الله -صلَّى الله عليه وسلم-: "هل كان فيها وثنٌ من أوثانِ الجاهليةُ يُعبَدُ؟ " قالوا: لا، قال: "هل كان فيها عِيدٌ من أعيادِهم؟ "

புவானா என்ற இடத்தில் ஒட்டகத்தை அறுத்துப் பலியிட வேண்டும் என்று ஒருவர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலத்தில் நேர்ச்சை செய்திருந்தார். அவர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்து, "நான் புவானா என்ற இடத்தில் ஒட்டகத்தை அறுத்துப் பலியிட வேண்டும் என்று நேர்ச்சை செய்திருக்கின்றேன்" என்று கூறினார். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "அதில் வணங்கப்படக் கூடிய அறியாமைக் கால சிலைகளில் ஏதேனும் ஒரு சிலை இருக்கின்றதா?" என்று (மக்களிடம்) கேட்டார்கள். அதற்கு (மக்கள்) இல்லை என்று பதிலளித்தார்கள். "அவர்களது திருவிழாக்களில் ஏதேனும் ஒரு திருவிழா அங்கு நடப்பதுண்டா?" என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அதற்கும் அவர்கள் இல்லை என்று பதிலளித்தார்கள். "அப்படியானால் நீ உன்னுடைய நேர்ச்சையை நிறைவேற்றிக் கொள். ஏனெனில் அல்லாஹ்வுக்கு மாறு செய்யும் வகையிலான காரியங்களிலோ மனிதனுக்கு இயலாத காரியத்திலோ நேர்ச்சையை நிறைவேற்றுதல் இல்லை" என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல் : அபூதாவூத்

இந்த மனிதர் அல்லாஹ்வுக்காகத்தான் நேர்ச்சை செய்தார். ஆனால் குறிப்பிட்ட இடத்தில் வைத்து அதைச் செய்வதாக அவர் கூறியதால் அந்த இடத்துக்கு முக்கியத்துவம் அளிக்கக் காரணம் என்ன என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் விசாரணை நடத்துகிறார்கள். அந்த இடத்தில் பிறர் வழிபாடு செய்யும் சிலைகள் இருந்தால் அந்த மனிதர் அல்லாஹ்வுக்கு நேர்ச்சை செய்திருந்தாலும் அந்த இடத்தில் அதை நிறைவேற்ற தடை செய்திருப்பார்கள் என்பது இதில் இருந்து தெரிகிறது.

நேர்ச்சை செய்த அந்த மனிதர் அல்லாஹ்வுக்குத்தான் நேர்ச்சை செய்தார் என்பதால் அவரைப் பொருத்தவரை அதில் எந்தச் சந்தேகமும் இல்லை. ஆனால் சிலை வழிபாடு நடக்கும் இடத்தில் அவர் நேர்ச்சையை நிறைவேற்றுவது மற்றவர்களுக்குச் சந்தேகத்தை ஏற்படுத்தும். அதுகூட ஏற்படக் கூடாது என்பதில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மிகுந்த கவனம் செலுத்தியுள்ளார்கள் என்பது இதிலிருந்து தெரிகிறது.

பனை மரத்தடியில் அமர்ந்து பாலைக் குடித்தாலும் கள் குடிப்பதாக மற்றவர்களுக்குச் சந்தேகம் ஏற்படும் என்றால் அதையும்கூட முஸ்லிம்கள் தவிர்த்துக் கொள்ள வேண்டும்.

நாம் பாலைத்தானே குடிக்கிறோம். எவன் எப்படி நினைத்தால் நமக்கு என்ன என்று சமாளிக்க அனுமதி இல்லை. நாம் பாலைக் குடித்தாலும் கள் குடிப்பதாக மக்கள் கருதினால் கள் குடிப்பது தவறு இல்லை என்ற எண்ணம் படிப்படியாக மக்களிடம் உருவாக இது காரணமாக அமைந்து விடும் என்பதை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தம்முடைய பேரன் ஹஸன் (ரலி) அவர்களுக்கு இதைத்தான் கட்டளையிட்டார்கள்.

سنن النسائي

5711 - أَخْبَرَنَا مُحَمَّدُ بْنُ أَبَانَ، قَالَ: حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ إِدْرِيسَ، قَالَ: أَنْبَأَنَا شُعْبَةُ، عَنْ بُرَيْدِ بْنِ أَبِي مَرْيَمَ، عَنْ أَبِي الْحَوْرَاءِ السَّعْدِيِّ، قَالَ: قُلْتُ لِلْحَسَنِ بْنِ عَلِيٍّ رَضِيَ اللَّهُ عَنْهُمَا: مَا حَفِظْتَ مِنْ رَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ؟ قَالَ: حَفِظْتُ مِنْهُ: «دَعْ مَا يَرِيبُكَ إِلَى مَا لَا يَرِيبُكَ»

நீ சந்தேகமானதை விட்டுவிட்டு சந்தேகம் இல்லாததின் பக்கம் திரும்பி விடு. நிச்சயமாக உண்மை என்பது நிம்மதியாகும். பொய் என்பது சந்தேகமானதாகும் என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல் : நஸாயீ, திர்மிதி

சந்தேகமானதை விட்டு விலகிக் கொள்வதில் மற்றவர்களுக்கு அறிவுரை கூறிய நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தாமும் அதில் உறுதியாக இருந்தார்கள்.

صحيح البخاري

2431 - حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ يُوسُفَ، حَدَّثَنَا سُفْيَانُ، عَنْ مَنْصُورٍ، عَنْ طَلْحَةَ، عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: مَرَّ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ بِتَمْرَةٍ فِي الطَّرِيقِ، قَالَ: «لَوْلاَ أَنِّي أَخَافُ أَنْ تَكُونَ مِنَ الصَّدَقَةِ لَأَكَلْتُهَا»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பாதையில் கிடந்த ஒரு பேரீச்சம் பழத்தைக் கடந்து சென்றார்கள். "இது சதகா (தர்ம)ப் பொருளாக இருக்குமோ என்ற அச்சம் எனக்கில்லாவிட்டால் இதை நான் சாப்பிட்டிருப்பேன்" என்று கூறினார்கள்.

நூல் : புகாரி 2431

தர்மப் பொருள்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு ஹராம். அதனால் கீழே கிடக்கின்ற பேரீச்சம்பழம் தர்மப் பொருளாக இருக்குமோ என்று அவர்களுக்குச் சந்தேகம் வந்ததால் அதை விட்டு விலகி விட்டார்கள்.

ஹலால் ஹராமின் இலக்கணத்தை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் விளக்கும்போதும் இதைத் தெளிவுபடுத்தியுள்ளனர்.

صحيح مسلم

6681 - حَدَّثَنِى هَارُونُ بْنُ سَعِيدٍ الأَيْلِىُّ حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ وَهْبٍ حَدَّثَنِى مُعَاوِيَةُ - يَعْنِى ابْنَ صَالِحٍ - عَنْ عَبْدِ الرَّحْمَنِ بْنِ جُبَيْرِ بْنِ نُفَيْرٍ عَنْ أَبِيهِ عَنْ نَوَّاسِ بْنِ سِمْعَانَ قَالَ أَقَمْتُ مَعَ رَسُولِ اللَّهِ -صلى الله عليه وسلم- بِالْمَدِينَةِ سَنَةً مَا يَمْنَعُنِى مِنَ الْهِجْرَةِ إِلاَّ الْمَسْأَلَةُ كَانَ أَحَدُنَا إِذَا هَاجَرَ لَمْ يَسْأَلْ رَسُولَ اللَّهِ -صلى الله عليه وسلم- عَنْ شَىْءٍ - قَالَ - فَسَأَلْتُهُ عَنِ الْبِرِّ وَالإِثْمِ فَقَالَ رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- « الْبِرُّ حُسْنُ الْخُلُقِ وَالإِثْمُ مَا حَاكَ فِى نَفْسِكَ وَكَرِهْتَ أَنْ يَطَّلِعَ عَلَيْهِ النَّاسُ »

பாவத்தைப் பற்றியும் நன்மையைப் பற்றியும் நான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் கேட்டேன். நற்குணமே நன்மையாகும். எது உன் உள்ளத்தை

உறுத்துகிறதோ மற்றவர்களுக்குத் தெரிவதை நீ வெறுக்கிறாயோ அதுதான் பாவம் என்று விளக்கமளித்தார்கள்.

நூல் : முஸ்லிம் 6681

சந்தேகமானதை எல்லாம் விட்டு விட்டால் நம்முடைய வருவாய் பாதிக்குமே என்ற தயக்கம் சிலருக்கு ஏற்படலாம். அல்லாஹ்வின் அருளில் சரியான முறையில் நம்பிக்கை வைத்துள்ளவர்கள் இப்படி தயக்கம் கொள்ளத் தேவை இல்லை. சந்தேகமானதை விட்டு விலகிக் கொள்வதால் வருவாய் குறையும் என்று நம்முடைய அறிவு கூறினாலும் அதனால் எந்தப் பாதிப்பும் ஏற்படாது என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நமக்கு உத்தரவாதம் தருகிறார்கள்.

مسند أحمد بن حنبل

20758 - حدثنا عبد الله حدثني أبي ثنا إسماعيل ثنا سليمان بن المغيرة عن حميد بن هلال عن أبي قتادة وأبي الدهماء قالا كانا يكثران السفر نحو هذا البيت قالا أتينا على رجل من أهل البادية فقال البدوي : أخذ بيدي رسول الله صلى الله عليه و سلم فجعل يعلمنى مما علمه الله تبارك وتعالى وقال إنك لن تدع شيئا اتقاء الله جل وعز ألا أعطاك الله خيرا منه

நீ அல்லாஹ்விற்குப் பயந்து ஏதேனும் விசயத்தை விட்டால் அதை விடச் சிறந்ததை அல்லாஹ் உனக்குத் தருவான் என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல் : அஹ்மது

அல்லாஹ்வுக்கு அஞ்சி சந்தேகமானதை விட்டு நாம் விலகிக் கொண்டால் நாம் நினைத்துப் பார்க்காத வேறு வழிகளை அல்லாஹ் நமக்குக் காட்டுவான். சந்தேகத்தின் காரணமாக நாம் எதைத் தவிர்த்துக் கொண்டோமோ அதை விடச் சிறந்ததை அல்லாஹ் தருவான்.

சந்தேகமானதை விட்டு விடச் சொல்லும்போது அதை ஷைத்தான் பெரிய விஷயமாக நமக்குச் சித்தரித்துக் காட்டி அதில் நம்மைத் தள்ளப் பார்க்கிறான். ஆனால் மார்க்க விஷயத்தில்தான் இப்படியெல்லாம் மனிதன் விதண்டாவாதம் செய்கிறான். ஆனால் உலக வாழ்க்கையில் சந்தேகத்துக்கு இடமானவைகளைத் தவிர்த்துக் கொள்வதுதான் மனிதனின் இயல்பாக இருக்கிறது.

ஒரு தெருவில் நாம் போக முயலும்போது அங்கே கலவரம் நடப்பதாகத் தெரிகிறது என்று ஒருவர் சந்தேகத்தைக் கிளப்பினால் அந்தத் தெருவில் செல்வதை உடனே தவிர்த்துக் கொள்கிறோம். நம்முடைய உயிரைப் பாதுகாப்பதில் நமக்கு இருக்கும் அக்கறை மார்க்கத்தைக் காப்பதிலும் வந்து விட்டால் சந்தேகமானதை விட்டு விடுவது மிக எளிதாகி விடும்.

## அர்த்தமற்ற சந்தேகங்கள்

சந்தேகத்துக்கும், மனக்குழப்பத்துக்கும் நுணுக்கமான வேறுபாடு உள்ளது. மனக்குழப்பத்தைச் சந்தேகம் என்று எண்ணினால் ஹலாலானவையும் ஹராம் எனத் தோற்றமளித்து விடும்.

சந்தேகமானதை விட்டு விலகிக் கொள்ள வேண்டும் என்பதைச் சரியான முறையில் நாம் புரிந்து கொள்ள வேண்டும். சந்தேகத்துக்கு இடமில்லாத காரியங்களில் சந்தேகம் கொள்வது மனநோயின் அறிகுறியாகும்.

صحيح البخاري

2056 - حَدَّثَنَا أَبُو نُعَيْمٍ، حَدَّثَنَا ابْنُ عُيَيْنَةَ، عَنِ الزُّهْرِيِّ، عَنْ عَبَّادِ بْنِ تَمِيمٍ، عَنْ عَمِّهِ، قَالَ: شُكِيَ إِلَى النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ الرَّجُلُ يَجِدُ فِي الصَّلاَةِ شَيْئًا أَيَقْطَعُ الصَّلاَةَ؟ قَالَ: «لاَ حَتَّى يَسْمَعَ صَوْتًا أَوْ يَجِدَ رِيحًا

ஒரு மனிதர் தொழும்போது காற்றுப் பிரிந்தது போன்று உணர்கிறார்; இதனால் தொழுகை முறியுமா? என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கவர்கள், சப்தத்தைக் கேட்காதவரை அல்லது நாற்றத்தை உணராதவரை முறியாது என்றார்கள்.

நூல் : புகாரி 2056

அடிப்படை இல்லாத சந்தேகங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கத் தேவை இல்லை என்பதை மேற்கண்ட செய்தியில் இருந்து நாம் அறிந்து கொள்ளலாம்.

நாம் ஒரு இடத்துக்குச் செல்கிறோம். அங்கே நாம் அருந்துவதற்குப் பால் தருகிறார்கள். இந்தப் பாலில் விஷம் கலந்திருப்பார்களோ என்று எண்ணுவது அடிப்படையில்லாத சந்தேகமாகும்.

பேருந்தில் ஏறிக்கொண்டு இது கவிழ்ந்து விடுமோ என்று எண்ணி பேருந்தை விட்டு இறங்கக் கூடாது. இது அடிப்படை இல்லாத மனக்குழப்பத்தின் வெளிப்பாடாகும்.

ஒருவர் நமக்குப் பால் தரும்போது அருகில் இருக்கும் இன்னொருவர் அதில் விஷம் கலந்துள்ளது என்று கூறினாலோ, அதை அருந்த வேண்டாம் என்று

சாடை காட்டினாலோ, அல்லது நமக்குப் பால் தந்தவருக்கும் நமக்கும் இடையே கடும் பகை இருந்தாலோ, அல்லது அந்தப் பாலின் நிறம், மனம், சுவை வித்தியாசமாக இருந்தாலோ அப்போது சந்தேகப்படுவது காரணத்துடன் இணைந்த சந்தேகமாகும்.

இது போல்தான் மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்ட ஒரு பொருள் நமக்குக் கிடைத்தால் காரணமில்லாமல் சந்தேகத்தைக் கிளப்பி அதை ஹராமாக்கி விடக் கூடாது.

"தனது அடியார்களுக்காக அல்லாஹ் வழங்கிய அலங்காரத்தையும், தூய்மையான உணவுகளையும் தடை செய்பவன் யார்?" என்று (முஹம்மதே!) கேட்பீராக! "அவை இவ்வுலக வாழ்க்கையிலும் குறிப்பாக கியாமத் நாளிலும் நம்பிக்கை கொண்ட மக்களுக்குரியது" எனக் கூறுவீராக! அறிகின்ற சமுதாயத்திற்கு இவ்வாறே சான்றுகளை விளக்குகிறோம்.

திருக்குர்ஆன் 7:32

"அல்லாஹ் உங்களுக்கு உணவை இறக்கினான். அதில் விலக்கப்பட்டதையும், அனுமதிக்கப்பட்டதையும் நீங்களாக ஏற்படுத்திக் கொண்டீர்கள்!" என்று (முஹம்மதே!) கூறுவீராக! "அல்லாஹ்வே உங்களுக்கு அனுமதியளித்தானா? அல்லது அல்லாஹ்வின் மீது இட்டுக்கட்டுகிறீர்களா? என்பதற்குப் பதில் சொல்லுங்கள்!" என்று கேட்பீராக

திருக்குர்ஆன் 10:59

அல்லாஹ் ஹராமாக்கிய விஷயங்களைப் பேணுதல் என்ற அடிப்படையில் ஹராமாக்குவது மறுமை வாழ்வை அழித்துவிடும்

அறிவில்லாமல் மடமையின் காரணமாகத் தமது குழந்தைகளைக் கொன்றவர்களும், அல்லாஹ்வின் பெயரால் இட்டுக்கட்டி, தமக்கு அல்லாஹ் வழங்கியதைத் தடுக்கப்பட்டதாக ஆக்கிக் கொண்டோரும் நஷ்டம் அடைந்தனர்; வழி கெட்டனர்; நேர்வழி பெறவில்லை.

திருக்குர்ஆன் 6:140

நம்பிக்கை கொண்டோரே! அல்லாஹ் உங்களுக்கு அனுமதித்த தூயவற்றை விலக்கப்பட்டவைகளாக்கி விடாதீர்கள்! வரம்பு மீறாதீர்கள்! வரம்பு மீறுவோரை அல்லாஹ் நேசிக்க மாட்டான்

திருக்குர்ஆன் 5:87

தெள்ளத் தெளிவான ஆதாரங்களின் அடிப்படையில் ஹராம் என்று தெரிவது ஒருவகை.

இரு முரண்பட்ட ஆதாரங்கள் மூலம் ஹலால் என்றும் சொல்ல முடிகிறது. ஹராம் என்றும் சொல்ல முடிகிறது. இரண்டில் எது சரியானது என்று ஆய்வு செய்து ஒன்றுதான் சரியானது என்றும் மற்றொன்று தவறானது என்றும் முடிவுக்கு வந்தால் அதுவும் தெளிவான ஹராம்தான்.

முரண்பட்ட இரு ஆதாரங்கள் இருந்து இரண்டும் சமமாகவும் இருந்து இரண்டில் ஒன்றைத் தேர்வு செய்ய முடியாமல் இருந்தால் அப்போதுதான் சந்தேகமானதை விடுதல் என்ற நிலை ஏற்படும். அதுவும் ஹராம் என்று முடிவு செய்து அதிலிருந்து விலகிக் கொள்ள வேண்டும்.

எவ்வித ஆதாரமும் இல்லாமல் இது திருட்டுப் பொருளாகத்தான் இருக்கும் என்று கருதினால் அது வஸ்வாஸ் எனும் மனக்குழப்பமாகும். அதற்கு நாம் எந்த மதிப்பும் தர வேண்டியதில்லை.

## இரண்டு வகை ஹராம்கள்

மார்க்கத்தில் ஹராமாக உள்ளவை இரண்டு வகைப்படும்.

அடிப்படையில் ஹராம் புறக் காரணங்களால் ஹராம்
பன்றி இறைச்சி, தாமாகச் செத்தவை எப்படி ஹராமாக உள்ளதோ அது போல் பிறரிடமிருந்து முறைகேடாகப் பெற்ற பொருளும் ஹாராமாகும்.

ஆனால் இரண்டுக்கும் வித்தியாசம் உண்டு

பன்றி இறைச்சி எந்த வழியில் நமக்குக் கிடைத்திருந்தாலும் ஹராம் என்ற நிலையில் இருந்து அது மாறப் போவதில்லை. நம்முடைய சொந்தப் பணத்தில் அதை வாங்கி இருந்தாலும் அது ஹராம் என்ற நிலையை விட்டு மாறாது.

மற்றவரிடம் வழிப்பறி செய்த ஆட்டிறைச்சியும் ஹராம் என்று நாம் விளங்கி வைத்துள்ளோம். ஆட்டிறைச்சி ஹலால் என்றாலும் அது நமக்குக் கிடைக்கும் வழி சரியாக இல்லாததால்தான் அது ஹராமாகிறது. அதுவே சரியான முறையில் நமக்குக் கிடைத்திருந்தால் ஹராமாகி இருக்காது.

அந்தப் பொருளே ஹராம் என்பது ஒரு வகை. வந்தவழி சரி இல்லாததால் ஹாராமாகிப் போனது மற்றொரு வகை என்பதை இதிலிருந்து நாம் தெரிந்து கொள்கிறோம்.

முதல் வகையான ஹராமைப் புரிந்து கொள்வதில் மக்களுக்குக் குழப்பம் ஏதும் இல்லை. இரண்டாவது வகையான ஹராமைப் புரிந்து கொள்வதில் அதிகமான மக்களுக்குத் தெளிவு இல்லை.

பொதுவாக ஹராமாக்கப்பட்டவை எல்லா நிலையிலும் ஹராமாகவே இருக்கும். ஒரு காரணத்துக்காக ஹராமாக்கப்பட்டவை அந்தக் காரணம் இல்லாவிட்டால் ஹராமாகாது என்பதுதான் விளங்கிக் கொள்ள வேண்டிய விஷயமாகும்.

ஒருவர் வட்டியின் மூலமோ வேறு ஹராமான வழியிலோ பணம் திரட்டினால் அது இரண்டாம் வகையைச் சேர்ந்ததாகும். அந்தப் பணம் அவருக்குக் கிடைத்த வழி சரியாக இல்லை என்பதால்தான் அது ஹராமாகிறது. அவர் அந்தப்

பணத்தை வைத்திருப்பதும் அதன் மூலம் சாப்பிடுவதும் அவருக்கு ஹராமாகும் என்பதில் மாற்றுக் கருத்து இல்லை. மக்களுக்கும் இதில் குழப்பம் இல்லை.

இப்படி தவறான வழியில் பொருள் திரட்டியவர் அதில் இருந்து நமக்கு அன்பளிப்பு தருகிறார் என்றால் அப்பணம் நமக்கு ஹராமாகுமா?

அல்லது தடுக்கப்பட்ட வழியில் பொருளீட்டியவர் இறந்த பின்னர் அவரது வாரிசுகளுக்கு அந்தச் சொத்து கிடைத்தால் அதை வாரிசுகள் பெற்றுக் கொள்ளலாமா?

இந்த போன்ற விஷயங்களில்தான் மக்களிடம் குழப்பம் உள்ளது.

ஹராமான வழியில் பொருளீட்டியவரின் பொருட்கள் அவருக்கு எப்படி ஹராமாக ஆகின்றதோ அது போல் அவர் அன்பளிப்பாக நமக்குத் தந்தால் அது நமக்கும் ஹராமே என்று அதிகமான அறிஞர்கள் கருதுகின்றனர்.

ஆனால் இந்தக் கருத்துக்கு குர்ஆன் ஹதீஸில் ஆதாரம் இல்லை.

ஒருவன் சாராயத்தை நமக்குத் தந்தால் அது நமக்கு ஹராம்தான். ஏனெனில் சாராயம் அடிப்படையிலேயே ஹராமானதாகும். ஆனால் சாராயத்தை விற்றுச் சம்பாதித்த பணத்தில் நமக்கு அன்பளிப்புச் செய்தால் அது நமக்கு ஹராமாகாது என்பதே சரியான கருத்தாகும். ஏனெனில் அந்தப் பணம் அவருக்கு வந்த வழிதான் சரியில்லை. பணமே ஹராம் அல்ல.

இந்தக் கருத்துக்குத்தான் திருக்குர்ஆனிலும் நபிவழியிலும் ஆதாரங்கள் உள்ளன.

முதலாவது ஆதாரம் ஒருவர் சுமையை ஒருவர் சுமக்க மாட்டார் என்ற கருத்தில் அமைந்த வசனங்களாகும்.

அவர்கள், சென்று விட்ட சமுதாயம். அவர்கள் செய்தது அவர்களுக்கு. நீங்கள் செய்தது உங்களுக்கு. அவர்கள் செய்தது குறித்து நீங்கள் விசாரிக்கப்பட மாட்டீர்கள்.

திருக்குர்ஆன் 2:134

"அல்லாஹ் அல்லாதோரையா இறைவனாகக் கருதுவேன்? அவனே அனைத்துப் பொருட்களின் இறைவன். (பாவம் செய்யும்) எவரும் தமக்கு எதிராகவே சம்பாதித்துக் கொள்கிறார். ஒருவன் மற்றவனின் சுமையைச் சுமக்க மாட்டான். பின்னர் உங்கள் இறைவனிடமே உங்கள் மீளுதல் உள்ளது. நீங்கள் முரண்பட்டது பற்றி அவன் உங்களுக்கு அறிவிப்பான்" என்றும் கூறுவீராக

திருக்குர்ஆன் 6:164

நேர்வழி பெற்றவர் தனக்காகவே நேர்வழி பெறுகிறார். வழி தவறுபவர் தனக்கெதிராகவே வழி தவறுகிறார். ஒருவன் இன்னொருவனின் சுமையைச் சுமக்க மாட்டான். ஒரு தூதரை அனுப்பாதவரை நாம் (எவரையும்) தண்டிப் பதில்லை

திருக்குர்ஆன் 17:15

ஒருவர் வட்டி வாங்கி பொருளீட்டினால் அவர் குற்றவாளியாகிறார். ஆனால் அவர் நமக்கு அன்பளிப்பாக ஒரு தொகையைத் தந்தால் அந்தப் பொருள் அன்பளிப்பு என்ற வழியில்தான் நமக்குக் கிடைக்கிறது. வட்டி என்ற அடிப்படையில் நமக்குக் கிடைக்கவில்லை. எனவே அது நமக்கு ஹராமாகாது.

ஒருவனுடைய தந்தை வட்டி வாங்கிச் சம்பாதித்து சொத்துக்களை விட்டு இறந்து விட்டார். அந்தச் சொத்து அவரது மகனுக்கு வாரிசு என்ற முறையில் கிடைக்கிறது. அந்த மகன் அந்தச் சொத்தை அனுபவிப்பது ஹராமாகாது. ஏனெனில் அந்த மகனுக்கு வட்டி மூலம் அந்தப் பொருள் கிடைக்கவில்லை. மார்க்கம் அனுமதித்தபடி வாரிசு முறையில்தான் அது அவருக்குக் கிடைக்கிறது.

செல்வந்தர்களிடமிருந்து ஜகாத் வசூலித்து எட்டு வகையான பணிகளுக்குச் செலவிட வேண்டும் என்று இஸ்லாம் கூறுவதை நாம் அறிவோம்.

யாசிப்போருக்கும், ஏழைகளுக்கும், அதை வசூலிப்போருக்கும், உள்ளங்கள் ஈர்க்கப்பட வேண்டியவர்களுக்கும், அடிமை(களை விடுதலை செய்வதற்)கும், கடன்பட்டோருக்கும், அல்லாஹ்வின் பாதையிலும், நாடோடிகளுக்கும் தர்மங்கள் உரியனவாகும். இது அல்லாஹ்வின் கடமை. அல்லாஹ் அறிந்தவன்; ஞானமிக்கவன்

திருக்குர்ஆன் 9:60

ஜகாத் எனும் நிதியை வசூலித்து மேற்கண்ட எட்டுப் பணிகளுக்குச் செலவிட வேண்டும் என்று திருக்குர்ஆன் கூறுகிறது.

ஜகாத் கொடுக்கக் கடமைப்பட்டவர்களில் ஹலாலான முறையில் பொருளீட்டியவர்களும் இருப்பார்கள். ஹராமான முறையில் பொருளீட்டியவர்களும் இருப்பார்கள். ஹராமான முறையில் பொருளீட்டியவர்களின் பொருளாதாரத்தை மேற்கண்ட நற்பணிகளுக்குப் பயன்படுத்தக் கூடாது என்றால் இதை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தெளிவுபடுத்தி இருப்பார்கள்.

ஹலாலான முறையில் பொருளீட்டியவர்களிடமிருந்து மட்டும் ஜகாத் நிதியைத் திரட்டுங்கள். ஹராமான முறையில் பொருளீட்டியவர்களிடமிருந்து ஜகாத் நிதியை வாங்காதீர்கள் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஒரு சந்தர்ப்பத்திலும் கூறவில்லை.

பொருள் வசதி படைத்தவர்களின் வருவாய் எத்தகையதாக இருந்தாலும் அதில் ஜகாத் வசூலிப்பது கியாமத்நாள் வரை கடமையாகும். ஹராமான முறையில் ஒருவர் பொருள் திரட்டி இருந்தால் அதில் கொடுக்கப்படும் ஜகாத்துக்கு மறுமையில் நன்மை கிடைக்காது என்பதற்குத்தான் ஆதாரம் உள்ளதே தவிர அதை வாங்கக் கூடாது என்பதற்கோ, அதை ஏழைகளுக்கு வழங்கக் கூடாது என்பதற்கோ எந்த ஆதாரமும் இல்லை.

இஸ்லாமிய அரசில் செய்யப்படும் நற்பணிகள் ஜகாத் மூலம் மட்டுமின்றி முஸ்லிமல்லாத மக்களிடம் திரட்டப்படும் ஜிஸ்யா வரியின் மூலமும் செய்யப்பட்டு வந்தன.

முஸ்லிமல்லாத மக்களின் பொருளாதாரம் பெரும்பாலும் இஸ்லாம் அனுமதித்த வழியில் திரட்டப்பட்டதாக இருக்காது. ஒருவர் தவறாகப் பொருள் திரட்டினால் அதை மற்றவர்கள் பெற்றுக் கொள்ளக் கூடாது என்பது இஸ்லாத்தின் நிலையாக இருந்தால் ஜிஸ்யா எனும் வரியே சட்டமாக்கப்பட்டிருக்காது.

அது போல் போர்க்களத்தில் முஸ்லிமல்லாதவர்களை முஸ்லிம்கள் வெற்றி கொண்டால் அவர்களிடமிருந்து கைப்பற்றப்பட்ட பொருட்கள் கனீமத் எனப்படும். இவற்றை நாம் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று அல்லாஹ் அனுமதிக்கிறான்.

போர்க்களத்தில் எதிரிகளிடம் கைப்பற்றப்பட்ட, அனுமதிக்கப்பட்ட, தூய்மையானதை உண்ணுங்கள்! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்! அல்லாஹ் மன்னிப்பவன்; நிகரற்ற அன்புடையோன்.

திருக்குர்ஆன் 8:69

இஸ்லாத்தின் எதிரிகளாக இருந்து போருக்கு வந்தவர்கள் ஹலாலான முறையில் சம்பாதித்து இருக்க வாய்ப்பே இல்லை. ஆனாலும் அவர்களிடமிருந்து கனீமத் என்ற வழியில் நமக்கு வந்து சேர்வதால் அது நமக்கு ஹலாலாக ஆகி விடுகின்றது என்பதை இதில் இருந்து அறிந்து கொள்ளலாம்.

அது போல் வாரிசுரிமைச் சட்டத்தை அல்லாஹ் திருக்குர்ஆனில் கூறும்போது அவர் விட்டுச் சென்றதில் வாரிசுகளுக்கு உரிமை உண்டு என்று குறிப்பிடுகிறான். அவர் விட்டுச் சென்றவற்றில் ஹலாலாகச் சம்பாதித்ததில் வாரிசுகளுக்கு உரிமை உண்டு என்று அல்லாஹ் கூறவில்லை.

குறைவாக இருந்தாலும், அதிகமாக இருந்தாலும் பெற்றோரும், உறவினர்களும் விட்டுச் சென்றவற்றில் ஆண்களுக்கும் பங்கு உண்டு. பெற்றோரும் உறவினர்களும் விட்டுச் சென்றவற்றில் பெண்களுக்கும் பங்கு உண்டு. இப்பங்கீடு கட்டாயக் கடமை.

திருக்குர்ஆன் 4:7

இரண்டு பெண்களின் பாகம் போன்றது ஓர் ஆணுக்கு உண்டு" என்று உங்கள் பிள்ளைகள் விஷயத்தில் அல்லாஹ் வலியுறுத்துகிறான். அனைவரும் பெண்களாகவும் (இரண்டு அல்லது) இரண்டுக்கு மேற்பட்டும் இருந்தால் (பெற்றோர்) விட்டுச் சென்றதில் மூன்றில் இரண்டு பங்கு அவர்களுக்கு உண்டு. ஒரே ஒரு பெண் மட்டும் இருந்தால் அவளுக்கு (மொத்தச் சொத்தில்) பாதி உள்ளது.

அவருக்குச் சந்ததி இருந்தால் அவர் விட்டுச் சென்றதில் பெற்றோர் ஒவ்வொரு வருக்கும் ஆறில் ஒரு பாகம் உண்டு. அவருக்குச் சந்ததி இல்லாவிட்டால் அவர் விட்டுச் சென்றதற்குப் பெற்றோர் இருவரும் வாரிசாவார்கள். அவரது தாய்க்கு மூன்றில் ஒரு பாகம் உண்டு. அவருக்குச் சகோதரர்கள் இருந்தால் அவரது தாய்க்கு ஆறில் ஒரு பாகம் உண்டு. (இவை யாவும்) அவர் செய்த மரண சாசனத்தையும் கடனையும் நிறைவேற்றிய பின்னரே. உங்கள் பெற்றோர் மற்றும் பிள்ளைகளில் உங்களுக்கு அதிகமாகப் பயன் தருபவர் யார் என்பதை அறிய மாட்டீர்கள். (இது) அல்லாஹ் விதித்த கடமை. அல்லாஹ் அறிந்தவனாகவும், ஞானமிக்கவனாகவும் இருக்கிறான்.

திருக்குர்ஆன் 4:11

சொத்துக்களை விட்டு மரணிப்பவர்களில் ஹலாலாகப் பொருள் திரட்டியவர்களும் இருப்பார்கள். ஹராமான முறையில் பொருள் திரட்டியவர்களும் இருப்பார்கள். அப்படி இருந்தும் அவர்கள் விட்டுச் சென்றதில் ஹலாலானதைப் பங்கிட்டுக் கொள்ளுங்கள் என்று அல்லாஹ் கூறவில்லை. ஒருவர் எந்த முறையில் பொருளீட்டி இருந்தாலும் அதை வாரிசுகள் எடுத்துக் கொள்ளலாம் என்பது இதில் இருந்து தெரிகிறது.

மேலும் முஸ்லிமல்லாதவர்கள் பல்வேறு சந்தர்ப்பங்களில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு அன்பளிப்புகள் வழங்கியுள்ளனர். முஸ்லிமல்லாதவர்கள் பொருளீட்டுவதற்கு இஸ்லாம் கூறும் நெறிமுறைகளைப் பேண மாட்டார்கள் என்றபோதும் அந்த அன்பளிப்புகளை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பெற்றுக் கொண்டார்கள்.

صحيح البخاري

3161 - حَدَّثَنَا سَهْلُ بْنُ بَكَّارٍ، حَدَّثَنَا وُهَيْبٌ، عَنْ عَمْرِو بْنِ يَحْيَى، عَنْ عَبَّاسٍ السَّاعِدِيِّ، عَنْ أَبِي حُمَيْدٍ السَّاعِدِيِّ، قَالَ: «غَزَوْنَا مَعَ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ تَبُوكَ وَأَهْدَى مَلِكُ أَيْلَةَ لِلنَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ بَغْلَةً بَيْضَاءَ، وَكَسَاهُ بُرْدًا، وَكَتَبَ لَهُ بِبَحْرِهِمْ»

அய்லா என்ற ஊரின் மன்னர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு ஒரு வெள்ளைநிறக் கோவேறுக்கழுதையை அன்பளிப்புச் செய்து ஒரு

மேல்துண்டையும் அணிவித்தார். தம் நாட்டவருக்காக (ஜிஸ்யா வரி தருகிறோம்) என்றும் அவர் எழுதிக் கொடுத்தார்.

நூல் : புகாரி 3161

صحيح مسلم

5543 - وَحَدَّثَنَا أَبُو بَكْرِ بْنُ أَبِى شَيْبَةَ وَأَبُو كُرَيْبٍ وَزُهَيْرُ بْنُ حَرْبٍ - وَاللَّفْظُ لِزُهَيْرٍ - قَالَ أَبُو كُرَيْبٍ أَخْبَرَنَا وَقَالَ الآخَرَانِ حَدَّثَنَا وَكِيعٌ عَنْ مِسْعَرٍ عَنْ أَبِى عَوْنٍ الثَّقَفِيِّ عَنْ أَبِى صَالِحٍ الْحَنَفِيِّ عَنْ عَلِيٍّ أَنَّ أُكَيْدِرَ دُومَةَ أَهْدَى إِلَى النَّبِيِّ -صلى الله عليه وسلم- ثَوْبَ حَرِيرٍ فَأَعْطَاهُ عَلِيًّا فَقَالَ « شَقِّقْهُ خُمُرًا بَيْنَ الْفَوَاطِمِ »

அலீ (ரலி) அவர்கள் கூறியதாவது :

தூமத்துல் ஜந்தல் பகுதியின் மன்னர் உகைதிர் என்பவர், நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குப் பட்டுத்துணி ஒன்றை அன்பளிப்பாக வழங்கினார். அதை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எனக்கு அன்பளிப்பாக வழங்கி, இதை முக்காடுகளாக வெட்டி, ஃபாத்திமாக்களிடையே (பெண்களுக்கிடையே) பங்கிட்டு விடுங்கள்" என்று சொன்னார்கள் .

நூல் : முஸ்லிம் 5543

மன்னர்கள் ஹலாலான முறையில் சம்பாதித்து வாழ்ந்தார்கள் என்று சொல்ல முடியாது. மக்களுடைய வரிப்பணத்தில் ஆடம்பர வாழ்க்கை வாழ்ந்தவர்கள்தான் மன்னர்கள். அப்படி இருந்தும் அந்தப் பணத்திலிருந்து வாங்கப்பட்ட பொருட்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டபோது அதை ஏற்றுள்ளார்கள்.

ஒருவர் தவறான முறையில் பொருளீட்டி இருந்தாலும் அவர் நமக்கு அன்பளிப்பாகத் தந்தால் அது நமக்கு ஹராமாகாது என்பதை மேற்கண்ட ஆதாரங்களில் இருந்து அறிந்து கொள்ளலாம்.

صحيح البخاري

2617 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ عَبْدِ الوَهَّابِ، حَدَّثَنَا خَالِدُ بْنُ الحَارِثِ، حَدَّثَنَا شُعْبَةُ، عَنْ هِشَامِ بْنِ زَيْدٍ، عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ رَضِيَ اللَّهُ عَنْهُ، أَنَّ يَهُودِيَّةً أَتَتِ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ بِشَاةٍ مَسْمُومَةٍ، فَأَكَلَ مِنْهَا، فَجِيءَ بِهَا فَقِيلَ: أَلاَ نَقْتُلُهَا، قَالَ: «لاَ»، فَمَا زِلْتُ أَعْرِفُهَا فِي لَهَوَاتِ رَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ

யூதப் பெண் கொடுத்த விருந்தை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஏற்றார்கள்.

நூல் : புகாரி 2617

யூதர்களின் வருவாய் வட்டி அடிப்படையில் இருந்தும் யூதப் பெண்ணின் விருந்தை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஏற்றுள்ளனர்.

மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்ட உணவு, உடை, இன்னபிற பொருட்களை ஒருவர் ஹராமாகத் திரட்டிய பணத்தில் வாங்கி நமக்கு அன்பளிப்பாகத் தந்தால் அதை நாம் பெற்றுக் கொள்ளலாம். அது அவருக்குத்தான் ஹராமான வழியில் வந்துள்ளது. எனவே அது அவருக்குத்தான் ஹராமாகும். நமக்கு அன்பளிப்பு என்ற முறையில் வந்துள்ளதால் அது நமக்கு ஹராம் அல்ல என்பதை மேற்கண்ட ஆதாரங்கள் சந்தேகத்துக்கு இடமில்லாத வகையில் தெளிவாகக் கூறுகின்றன.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு அன்பளிப்பாக ஒருவர் கொடுத்தால் அது அவர்களுக்கு ஹலால் ஆகும். அவர்கள் மீது இரக்கப்பட்டு பரிதாபப்பட்டு கொடுக்கும் போது அது தர்மம் என்பதால் அவர்களுக்கு ஹலால் இல்லை. இதைக் கவனத்தில் வைத்துக் கொண்டு பின்வரும் ஹதீஸைப் பாருங்கள்!

صحيح البخاري

2577 - حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ بَشَّارٍ، حَدَّثَنَا غُنْدَرٌ، حَدَّثَنَا شُعْبَةُ، عَنْ قَتَادَةَ، عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: أُتِيَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ بِلَحْمٍ، فَقِيلَ: تُصُدِّقَ عَلَى بَرِيرَةَ، قَالَ: «هُوَ لَهَا صَدَقَةٌ وَلَنَا هَدِيَّةٌ»

பரீரா என்ற அடிமைப் பெண்ணுக்குச் சிலர் தர்மமாக இறைச்சியைக் கொடுத்தனர். அந்த இறைச்சியை அவர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு அன்பளிப்பாகக் கொடுத்தார். அதை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பெற்றுக் கொண்டனர். இது எனக்கு தர்மமாக வந்தது என்று பரீரா கூறியபோது அது உனக்கு தர்மமாக வந்திருந்தாலும் நீ எனக்கு அன்பளிப்பாகத் தந்துள்ளதால் அது எனக்கு அன்பளிப்புதான் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பதிலளித்தனர்.

நூல் : புகாரி 1495, 2577

பரீரா அவர்கள் அடிமையாகவும், பரமஏழையாகவும் இருந்ததால் ஒருவர் அவருக்குத் தர்மம் செய்துள்ளார். அந்த தர்மத்தைப் பெற்றுக் கொண்ட பரீரா அவர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குத் தர்மமாகக் கொடுக்கவில்லை. மாறாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் ஏழ்மையைக் கருத்தில் கொள்ளாமல் அவர்களின் தகுதியைக் கருத்தில் கொண்டு அன்பளிப்பாக வழங்குகிறார். இந்த நிகழ்ச்சியில் பொருள் கிடைக்கும் வழி மாறியபோது சட்டமும் மாறுவதைக் காணலாம். பரீராவுக்குத் தர்மம் என்ற வழியில் கிடைத்தாலும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குத் தர்மம் என்ற வகையில் அது கிடைக்கவில்லை. எனவேதான் அதைச் சாப்பிட்டுள்ளனர்.

## திருட்டுப் பொருளை அன்பளிப்பாகப் பெறலாமா?

திருட்டுப் பொருளை அன்பளிப்பாகக் கொடுத்தால் அதை உண்ணலாமா என்று சிலர் நினைக்கலாம்.

வட்டியின் மூலம் சம்பாதித்த பொருளை அன்பளிப்பாகக் கொடுப்பதற்கும். திருட்டுப் பொருளை அன்பளிப்பாகக் கொடுப்பதற்கும் வித்தியாசம் உள்ளது.

வட்டியின் மூலம் ஒருவன் சம்பாதித்தால் அவனுடைய சம்பாத்தியம் ஹராமாக இருந்தாலும் அது அவனுடைய பொருளாகும். இந்தியச் சட்டப்படியும், உலக நாடுகள் அனைத்தின் சட்டப்படியும், இஸ்லாமியச் சட்டப்படியும் இதுதான் சட்டமாகும்.

வட்டி கொடுத்த ஒருவன் வட்டி வாங்கியவனுக்கு எதிராக என்னுடைய பணத்தை வட்டியின் மூலம் அபகரித்து விட்டான் என்று வழக்குப் போட முடியுமா?

ஆனால் திருடப்பட்ட பொருள் இஸ்லாமியச் சட்டப்படியும் ஊர் உலகத்தில் உள்ள அனைத்துச் சட்டங்களின்படியும் திருடியவனுக்குச் சொந்தமானதல்ல. பறிகொடுத்தவன் திருடனுக்கு எதிராக என்னுடைய பொருளைத் திருடி விட்டான் என்று வழக்குப் போட முடியும்.

எனவே திருட்டுப் பொருளை அன்பளிப்பாகப் பெறுவதையும் திருட்டுப் பொருள் என்று தெரிந்து அதை வாங்கி வியாபாரம் செய்வதையும் மேற்கண்ட ஆதாரங்களைக் காட்டி யாரும் நியாயப்படுத்த முடியாது. அடுத்தவனின் பொருளை அன்பளிப்பு கொடுக்கவும் விற்கவும் எந்தச் சட்டத்திலும் அனுமதி இல்லை.

## வட்டிக் கடைக்கு வாடகைக்கு விடலாமா?

வட்டியின் மூலம் சம்பாதித்த பொருளை அன்பளிப்பாகக் கொடுக்கும்போது வாங்கலாம் என்றால் நம் இடத்தை அல்லது நம் கடையை வட்டிக் கடைக்கு வாடகைக்குக் கொடுக்கலாமே என்று யாரும் கருதக் கூடாது.

இரண்டுக்கும் இடையே பெரிய வேறுபாடு உள்ளது.

நமது இடத்தை அல்லது கடையை வட்டிக் கடைக்கு வாடகைக்கு விட்டால் வட்டி எனும் கொடுமைக்கு நாம் துணை நின்றவர்களாக நேரும். ஆகவே இடத்தையோ, அல்லது கடையையோ வட்டிக்கடைக்கு வாடகைக்குக் கொடுப்பது தவறாகும்.

## பேணுதல் என்பது எது

ஒருவர் ஹராமான வழியில் திரட்டிய பொருள் மற்றவருக்கு ஹராமாகாது என்று நாம் தக்க ஆதாரத்துடன் கூறுவதை பேணுதலுக்கு எதிரானதாகச் சிலர் நினைக்கின்றனர். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைவிட யாரும் அதிகப் பேணுதல் உள்ளவர் கிடையாது என்பதை ஏனோ கவனிக்கத் தவறி விடுகின்றனர். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு இருந்ததைவிட தங்களிடம் அதிகம் பேணுதல் உள்ளது போல் வாதிடுகின்றனர். பேணுதலுக்காக இதைத் தவிர்க்க வேண்டும் என்றால் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் முதலில் தவிர்ப்பவர்களாக இருந்திருப்பார்கள்.

அல்லாஹ்வும், அவனது தூதரும் தெளிவாக அனுமதித்த ஒன்றைப் பேணுதல் என்ற பெயரில் தவிர்ப்பதற்கு அறவே இடமில்லை. அல்லாஹ்வும் அவனது தூதரும் அனுமதித்தார்களா இல்லையா என்பதற்குத் தெளிவான ஆதாரம் இல்லாமல் இருந்து அதில் சந்தேகம் ஏற்படும்போதுதான் பேணுதல் என்ற அடிப்படையில் அதைத் தவிர்க்கும் கடமை உண்டு என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

صحيح البخاري قَالَتْ: رَدَّ اللَّهُ كَيْدَ الكَافِرِ، أَوِ الفَاجِرِ، فِي نَحْرِهِ، وَأَخْدَمَ هَاجَرَ "

இறைவன் எண்ணற்ற நபிமார்களை அனுப்பி இருந்தாலும் நமக்கு இப்ராஹீம் நபியின் மார்க்கத்தைப் பின்பற்றுமாறு கட்டளை இடுகிறான். அந்த இப்ராஹீம் நபியவர்கள் ஒரு மன்னன் அன்பளிப்பாகக் கொடுத்த ஹாஜர் என்ற பணிப்பெண்ணைப் பெற்றுள்ளனர் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்.

பார்க்க : புகாரி 3358

## வரதட்சணை திருமணத்திலும் பங்கெடுக்கலாமா?

நாம் இவ்வாறு வாதிடுவதால் வரதட்சணை மற்றும் மார்க்கத்துக்கு விரோதமான காரியங்கள் நடக்கும் சபைகளுக்கும் நாம் போய் கலந்து கொள்ளலாமா? அவர் பாவம் அவருக்கு என்பது இதற்கு மட்டும் பொருந்தாதா என்று சிலர் கருதலாம். இந்தக் கருத்து முற்றிலும் தவறாகும்.

ஹராமான வழியில் பொருள் திரட்டிய ஒருவர் நமக்குத் தரும் அன்பளிப்பை ஏற்கலாம் என்று கூறும் நாம் மார்க்கம் தடை செய்த காரியங்கள் நடக்கும் நிகழ்ச்சிகளில் பங்கெடுக்கக் கூடாது என்றும் கூறுகிறோம். இரண்டும் வெவ்வேறு விஷயங்கள் என்பதால் வெவ்வேறு நிலைபாட்டை நாம் எடுக்கிறோம்.

வரதட்சணை வாங்கி நடத்தப்படும் திருமணத்தில் கலந்து கொள்ள வேண்டாம் என்று நாம் கூறுவது அங்கு வழங்கப்படும் உணவு ஹராம் என்பதற்காக அல்ல. மாறாக ஒரு தீமை நடக்கக் கண்டால் அதைப் புறக்கணிக்க வேண்டும் என்பதற்காகவே அதைப் புறக்கணிக்கிறோம்.

صحيح البخاري

2613 - حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ جَعْفَرٍ أَبُو جَعْفَرٍ، حَدَّثَنَا ابْنُ فُضَيْلٍ، عَنْ أَبِيهِ، عَنْ نَافِعٍ، عَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، قَالَ: أَتَى النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ بَيْتَ فَاطِمَةَ، فَلَمْ يَدْخُلْ عَلَيْهَا، وَجَاءَ عَلِيٌّ، فَذَكَرَتْ لَهُ ذَلِكَ، فَذَكَرَهُ لِلنَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، قَالَ: «إِنِّي رَأَيْتُ عَلَى بَابِهَا سِتْرًا مَوْشِيًّا»، فَقَالَ: «مَا لِي وَلِلدُّنْيَا» فَأَتَاهَا عَلِيٌّ، فَذَكَرَ ذَلِكَ لَهَا، فَقَالَتْ: لِيَأْمُرْنِي فِيهِ بِمَا شَاءَ، قَالَ: «تُرْسِلُ بِهِ إِلَى فُلاَنٍ، أَهْلِ بَيْتٍ بِهِمْ حَاجَةٌ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், (தமது மகள்) ஃபாத்திமா (ரலி) அவர்களின் வீட்டுக்கு வந்தார்கள். ஆனால், அவர்களிடம் செல்லவில்லை. (திரும்பி விட்டார்கள்.) (இதற்கிடையில் அங்கே) அலீ (ரலி) அவர்கள் வந்தார்கள். ஃபாத்திமா (ரலி) அவர்கள் அலீ (ரலி) அவர்களிடம் விஷயத்தைச் சொன்னார்கள். அலீ (ரலி) அவர்கள் அதை நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் சொல்ல, "நான் ஃபாத்திமாவின் வீட்டு வாசலில் பல வண்ணச் சித்திரங்கள் வரையப்பட்ட திரைச்சீலை ஒன்றைக் கண்டேன். எனக்கும் இந்த (ஆடம்பரமான) உலகத்திற்கும் என்ன தொடர்பு? (அதனால்தான் திரும்பி வந்து விட்டேன்)" என்று கூறினார்கள். அலீ (ரலி) அவர்கள், ஃபாத்திமா (ரலி) அவர்களிடம் சென்று, நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியதைச் சொன்னார்கள். அதற்கு ஃபாத்திமா (ரலி) அவர்கள், "அந்தத் திரைச்சீலையின் விஷயத்தில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், தாம் விரும்புவதை எனக்குக் கட்டளையிடட்டும். (அதன்படியே நான் நடந்து கொள்கிறேன்)" என்று கூறினார்கள். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "அதை இன்னாரின் வீட்டாரிடம் அனுப்பி விடு. அவர்களுக்குத் தேவையுள்ளது" என்று கூறினார்கள்.

நூல் : புகாரி 2613

ஃபாத்திமா (ரலி) அவர்களின் வீட்டில் நபிகள் நாயகம் கண்ட வண்ணத்திரை மார்க்கத்தில் தடை செய்யப்பட்டதல்ல. தடை செய்யப்பட்டதாக இருந்தால் மற்றவருக்கு அதைக் கொடுக்குமாறு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறி இருக்க மாட்டார்கள். ஆனாலும் அது ஆடம்பரமாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குத் தோன்றியுள்ளது. அதன் காரணமாக தமது மகளின் இல்லத்துக்குள் நுழையாமல் திரும்பி விட்டார்கள்.

ஃபாத்திமா (ரலி) அவர்களின் வீட்டில் உள்ள உணவு ஹராம் என்பதற்காக நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் புறக்கணிக்கவில்லை. மாறாக ஆடம்பரம் என்று தோன்றிய காரணத்துக்காகத்தான் புறக்கணித்துள்ளனர். அப்படியானால் மார்க்கத்தில் தடை செய்யப்பட்ட காரியங்கள் நடக்கும் சபைக்கு நாம் எப்படிச் செல்லலாம்? இந்த அடிப்படையிலேயே நாம் வரதட்சணை, பித்அத் இடம் பெற்ற திருமணங்களைப் புறக்கணிக்கிறோம்.

மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்ட காரியம்கூட அளவுக்கு அதிகமான பகட்டாகத் தென்பட்டால் அதையும் புறக்கணிக்க வேண்டும் என்பதை இதில் இருந்து புரிந்து கொள்ளலாம்.

உதாரணமாக திருமணத்தை ஒருவர் பல ஆயிரம் ரூபாய் வாடகையில் மண்டபம் பிடித்து நடத்துகிறார். வரக்கூடிய மக்களின் வசதிக்காகவே இதைச் செய்வதாகக் கூறுகிறார். இது ஹராம் என்று கூற நேரடி ஆதாரம் எதுவும் இல்லை. ஆனாலும் திருமணம் எளிமையாக நடக்க வேண்டும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வலியுறுத்திய அறிவுறைக்கு மாற்றமாக இருப்பதால் அதைப் புறக்கணிப்பது நபிவழி என்று நாம் கூறுகிறோம்.

அல்லாஹ்வும் இப்படித்தான் நமக்குக் கட்டளையிடுகிறான்.

அல்லாஹ்வின் வசனங்கள் மறுக்கப்பட்டு, கேலி செய்யப்படுவதை நீங்கள் செவியுற்றால் அவர்கள் வேறு பேச்சுக்களில் ஈடுபடும்வரை அவர்களுடன் அமராதீர்கள்! (அவர்களுடன் அமர்ந்தால்) அப்போது நீங்களும் அவர்களைப் போன்றவர்களே என்று இவ்வேதத்தில் உங்களுக்கு அவன் அருளியுள்ளான். நயவஞ்சகர்களையும், (தன்னை) மறுப்போர் அனைவரையும் அல்லாஹ் நரகில் ஒன்று சேர்ப்பான்.

திருக்குர்ஆன் 4:140

ஒரு சபையில் அல்லாஹ்வின் கட்டளை மீறப்படுகிறது. அதன் மூலம் அல்லாஹ்வின் வசனங்கள் கேலி செய்யப்படுகிறது என்றால் அந்தச் சபைகளில் நாம் அமரவே கூடாது. அவ்வாறு அமர்ந்தால் நாம் அவர்களைப் போல் இறைவனால் கருதப்படுவோம் என்ற எச்சரிக்கை காரணமாகவே சில நிகழ்ச்சிகளைப் புறக்கணிக்கச் சொல்கிறோம். அவர்கள் தரும் உணவு ஹராம் என்பதற்காக அல்ல.

صحيح مسلم

186 - حَدَّثَنَا أَبُو بَكْرِ بْنُ أَبِى شَيْبَةَ حَدَّثَنَا وَكِيعٌ عَنْ سُفْيَانَ ح وَحَدَّثَنَا مُحَمَّدُ بْنُ الْمُثَنَّى حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ جَعْفَرٍ حَدَّثَنَا شُعْبَةُ كِلاَهُمَا عَنْ قَيْسِ بْنِ مُسْلِمٍ عَنْ طَارِقِ بْنِ شِهَابٍ - وَهَذَا حَدِيثُ أَبِى بَكْرٍ - قَالَ أَوَّلُ مَنْ بَدَأَ بِالْخُطْبَةِ يَوْمَ الْعِيدِ قَبْلَ الصَّلاَةِ مَرْوَانُ فَقَامَ إِلَيْهِ رَجُلٌ فَقَالَ الصَّلاَةُ قَبْلَ الْخُطْبَةِ. فَقَالَ قَدْ تُرِكَ مَا هُنَالِكَ. فَقَالَ أَبُو سَعِيدٍ أَمَّا هَذَا فَقَدْ قَضَى مَا عَلَيْهِ سَمِعْتُ

رَسُولَ اللَّهِ -صلى الله عليه وسلم- يَقُولُ « مَنْ رَأَى مِنْكُمْ مُنْكَرًا فَلْيُغَيِّرْهُ بِيَدِهِ فَإِنْ لَمْ يَسْتَطِعْ فَبِلِسَانِهِ فَإِنْ لَمْ يَسْتَطِعْ فَبِقَلْبِهِ وَذَلِكَ أَضْعَفُ الإِيمَانِ ».

உங்களில் ஒருவர் ஒரு தீமையைக் கண்டால் அதைக் கையால் தடுக்கட்டும். அதற்கு இயலாவிட்டால் தனது நாவால் தடுக்கட்டும். அதற்கும் இயலாவிட்டால் தனது உள்ளத்தால் தடுக்கட்டும். (அதாவது அதை உள்ளத்தால் வெறுக்கட்டும்.) இதுதான் ஈமானில் கடைசி நிலையாகும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்.

நூல் : முஸ்லிம் 186

மனதால் வெறுப்பது அந்தச் சபையைப் புறக்கணிப்பதன் மூலம்தான் உறுதியாகும். அதில் கலந்து கொண்டாலோ, அங்கு போய்ச் சாப்பிட்டாலோ தீய காரியம் நடக்கும்போது செய்ய வேண்டிய குறைந்தபட்ச எதிர்ப்பைக்கூட தெரிவிக்கவில்லை என்பதே பொருளாகும். சிறிதளவும் அவருக்கு ஈமான் இல்லை என்பதுதான் இதன் அர்த்தமாகும்.

## தடை செய்யப்பட்ட பொருளாதாரம்

## பிறருக்குச் சொந்தமான பொருட்கள்

நம்பிக்கை கொண்டோரே! உங்களுக்கிடையே உங்கள் பொருட்களைத் தவறான முறையில் உண்ணாதீர்கள்! உங்களுக்கிடையே திருப்தியுடன் நடக்கும் வியாபாரத்தைத் தவிர. உங்களையே நீங்கள் கொன்று விடாதீர்கள்! அல்லாஹ் உங்கள் மீது நிகரற்ற அன்புடையோனாக இருக்கிறான்.

திருக்குர்ஆன் 4:29

உங்களுக்கிடையே (ஒருவருக்கொருவர்) உங்கள் பொருட்களைத் தவறான முறையில் உண்ணாதீர்கள்! தெரிந்து கொண்டே மக்களின் பொருட்களில் ஒரு பகுதியைப் பாவமான முறையில் சாப்பிடுவதற்காக அதிகாரிகளிடம் உங்கள் பொருட்களைக் கொண்டு செல்லாதீர்கள்!

திருக்குர்ஆன் 2 ; 188

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது இறுதிப் பேருரையில் பிறருடைய பொருட்களைப் புனிதத் தலத்துக்கும் புனித மாதத்துக்கும் நிகராக மதிக்க வேண்டும் என வலியுறுத்தியுள்ளனர்.

صحيح البخاري

67 - حَدَّثَنَا مُسَدَّدٌ، قَالَ: حَدَّثَنَا بِشْرٌ، قَالَ: حَدَّثَنَا ابْنُ عَوْنٍ، عَنِ ابْنِ سِيرِينَ، عَنْ عَبْدِ الرَّحْمَنِ بْنِ أَبِي بَكْرَةَ، عَنْ أَبِيهِ، ذَكَرَ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَعَدَ عَلَى بَعِيرِهِ، وَأَمْسَكَ إِنْسَانٌ بِخِطَامِهِ - أَوْ بِزِمَامِهِ - قَالَ: «أَيُّ يَوْمٍ هَذَا»، فَسَكَتْنَا حَتَّى ظَنَنَّا أَنَّهُ سَيُسَمِّيهِ سِوَى اسْمِهِ، قَالَ: «أَلَيْسَ يَوْمَ النَّحْرِ» قُلْنَا: بَلَى، قَالَ: «فَأَيُّ شَهْرٍ هَذَا» فَسَكَتْنَا حَتَّى ظَنَنَّا أَنَّهُ سَيُسَمِّيهِ بِغَيْرِ اسْمِهِ، فَقَالَ: «أَلَيْسَ بِذِي الحِجَّةِ» قُلْنَا: بَلَى، قَالَ: «فَإِنَّ دِمَاءَكُمْ، وَأَمْوَالَكُمْ، وَأَعْرَاضَكُمْ، بَيْنَكُمْ حَرَامٌ، كَحُرْمَةِ يَوْمِكُمْ هَذَا، فِي شَهْرِكُمْ هَذَا، فِي بَلَدِكُمْ هَذَا، لِيُبَلِّغِ الشَّاهِدُ الغَائِبَ، فَإِنَّ الشَّاهِدَ عَسَى أَنْ يُبَلِّغَ مَنْ هُوَ أَوْعَى لَهُ مِنْهُ»

...(இறுதி ஹஜ்ஜின்போது, துல்ஹஜ் 10ஆம் நாளான) நஹ்ருடைய நாளில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எங்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். அப்போது, "இது எந்த மாதம் என்பதை நீங்கள் அறிவீர்களா?" எனக் கேட்டார்கள். நாங்கள், "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிவர்" என்றோம். அவர்கள் அந்த மாதத்திற்கு வேறு பெயர் சூட்டுவார்களோ என்று நாங்கள் எண்ணுமளவிற்கு மௌனமாக இருந்துவிட்டு, "இது துல்ஹஜ் இல்லையா?" என்று கேட்டார்கள். நாங்கள், "ஆம்"

என்றோம். (பிறகு,) "இது எந்த நகரம்?" எனக் கேட்டார்கள். அதற்கு நாங்கள், "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிவர்" என்றோம். அப்போதும், அவர்கள் அதற்கு வேறு பெயர் சூட்டுவார்களோ என்று நாங்கள் எண்ணுமளவிற்கு மௌனமாக இருந்துவிட்டு, "இது (புனிதமிக்க) நகரமல்லவா?" எனக் கேட்க, நாங்கள், "ஆம்" என்றோம். மேலும், "இது எந்த நாள்?" என்று கேட்டார்கள். நாங்கள், "அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிவர்" என்றோம். அவர்கள் அதற்கு வேறு பெயர் சூட்டுவார்களோ என்று நாங்கள் எண்ணுமளவிற்கு மௌனமாக இருந்துவிட்டு, "இது நஹ்ருடைய (துல்ஹஜ் 10ஆம்) நாள் அல்லவா?" எனக் கேட்க, நாங்கள், "ஆம்" என்றோம். (பிறகு,) "உங்களது புனிதமிக்க இந்த நகரத்தில், உங்களின் புனிதமிக்க இந்த மாதத்தில் இன்றைய தினம் எந்த அளவு புனிதமானதோ அந்த அளவிற்கு உங்கள் உயிர்களும் உங்கள் உடைமைகளும், உங்கள் மானமும் உங்களுக்குப் புனிதமானவையாகும். நீங்கள் (மறுமையில்) உங்களுடைய இறைவனைச் சந்திப்பீர்கள். அப்போது அவன் உங்களிடம் உங்கள் செயல்கள் குறித்து விசாரணை செய்வான். அறிந்து கொள்ளுங்கள் : எனக்குப் பிறகு ஒருவர் மற்றவரின் கழுத்தை வெட்டி மாய்த்துக் கொள்ளும் வழி கெட்டவர்களாய் நீங்கள் மாறிவிடாதீர்கள். இதோ! இங்கு வந்தவர்கள் வராதவர்களுக்கு (நான் சொன்ன கட்டளைகளை) அறிவித்து விடுங்கள். ஏனெனில், இந்தச் செய்தி எவரிடம் தெரிவிக்கப்படுகிறதோ அவர், தாம் யாரிடமிருந்து இதைக் கேட்டாரோ அவரைவிட (அதாவது தமக்கு இதைச் சொன்னவரைவிட) நன்கு (புரிந்து) பாதுகாப்பவராயிருக்கலாம். பிறகு, நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "நான் உங்களிடம் (இறைச் செய்திகள் அனைத்தையும்) சேர்த்து விட்டேனா?" என்று இரண்டு முறை கேட்டார்கள்.

நூல் : புகாரி : 67, 105, 1741, 4406, 550, 7447

புனிதமான மாதத்தையும், புனித ஆலயத்தையும் நாம் எவ்வாறு மதித்துப் பேணுகிறோமோ அது போல் மற்றவர்களின் பொருளாதாரத்தையும் மதிக்க வேண்டும் என்பதை மேற்கண்ட நபிமொழி தெளிவுபடுத்துகிறது.

பொதுவாகக் கெட்ட செயல்களைச் சர்வ சாதாரணமாகச் செய்யும் ஒருவன், அவன் புனிதமாக மதிக்கும் இடத்தில் அந்தச் செயலைச் செய்ய மாட்டான். இது

போல் மற்றவர்களின் பொருட்கள் விஷயத்தில் கவனமாக நாம் நடந்து கொள்ள வேண்டும்.

அற்பமான பொருட்களாக இருந்தாலும் பாதுகாப்பு இல்லாமல் கிடக்கும் பொருள் என்றாலும் பிறருடைய பொருட்கள் நமக்கு ஹலால் ஆகாது என்பது குறித்தும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எச்சரித்துள்ளனர்.

صحيح البخاري

2435 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ، أَخْبَرَنَا مَالِكٌ، عَنْ نَافِعٍ، عَنْ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا: أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ: «لاَ يَحْلُبَنَّ أَحَدٌ مَاشِيَةَ امْرِئٍ بِغَيْرِ إِذْنِهِ، أَيُحِبُّ أَحَدُكُمْ أَنْ تُؤْتَى مَشْرُبَتُهُ، فَتُكْسَرَ خِزَانَتُهُ، فَيُنْتَقَلَ طَعَامُهُ، فَإِنَّمَا تَخْزُنُ لَهُمْ ضُرُوعُ مَوَاشِيهِمْ أَطْعِمَاتِهِمْ، فَلاَ يَحْلُبَنَّ أَحَدٌ مَاشِيَةَ أَحَدٍ إِلَّا بِإِذْنِهِ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஒருவரின் கால்நடையிடம் அவரது அனுமதியின்றி எவரும் பால் கறக்க வேண்டாம். தனது சரக்கு அறைக்கு ஒருவர் வந்து, தனது உணவுக் கருவூலத்தை உடைத்து, தனது உணவை எடுத்துச் சென்று விடுவதை உங்களில் எவரும் விரும்புவாரா? இவ்வாறே, அவர்களின் கால்நடைகளுடைய மடிகள் அவர்களுடைய உணவையே சேகரித்துப் பாதுகாத்து வைத்திருக்கின்றன. ஆகவே, எவரும் ஒருவரது கால்நடையிடம் அவரது அனுமதியின்றிப் பால் கறக்க வேண்டாம்.

நூல் : புகாரி 2435

صحيح البخاري

2449 - حَدَّثَنَا آدَمُ بْنُ أَبِي إِيَاسٍ، حَدَّثَنَا ابْنُ أَبِي ذِئْبٍ، حَدَّثَنَا سَعِيدٌ المَقْبُرِيُّ، عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «مَنْ كَانَتْ لَهُ مَظْلَمَةٌ لِأَخِيهِ مِنْ عِرْضِهِ أَوْ شَيْءٍ، فَلْيَتَحَلَّلْهُ مِنْهُ اليَوْمَ، قَبْلَ أَنْ لاَ يَكُونَ [ص:130] دِينَارٌ وَلاَ دِرْهَمٌ، إِنْ كَانَ لَهُ عَمَلٌ صَالِحٌ أُخِذَ مِنْهُ بِقَدْرِ مَظْلَمَتِهِ، وَإِنْ لَمْ تَكُنْ لَهُ حَسَنَاتٌ أُخِذَ مِنْ سَيِّئَاتِ صَاحِبِهِ فَحُمِلَ عَلَيْهِ»

ஒருவர், தன் சகோதரனுக்கு அவனது மானத்திலோ, வேறு (பணம், சொத்து போன்ற) விஷயத்திலோ இழைத்த அநீதி (ஏதும் பரிகாரம் காணப்படாமல்) இருக்குமாயின், அவர் அவனிடமிருந்து அதற்கு இன்றே மன்னிப்புப் பெற்றுக் கொள்ளட்டும். தீனாரோ, திர்ஹமோ (பொற்காசுகளோ, வெள்ளிக் காசுகளோ) பயன் தராத நிலை (ஏற்படும் மறுமை நாள்) வருவதற்கு முன்னால் (மன்னிப்புப் பெற்றுக் கொள்ளட்டும்.) (ஏனெனில், மறுமை நாளில்) அவரிடம் நற்செயல் ஏதும்

இருக்குமாயின் அவரது அநீதியின் அளவுக்கு அவரிடமிருந்து எடுத்துக் கொள்ளப்பட்டு (அநீதிக்குள்ளானவரின் கணக்கில் வரவு வைக்கப்பட்டு) விடும். அநீதியிழைத்தவரிடம் நற்செயல்கள் எதுவும் இல்லையென்றால் அவரது தோழரின் (அநீதிக்குள்ளானவரின்) தீய செயல்கள் (அவர் கணக்கிலிருந்து) எடுக்கப்பட்டு அநீதியிழைத்தவரின் மீது சுமத்தப்பட்டு விடும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல் : புகாரி 2449, 6534

பிறருடைய பொருளில் எதையாவது நாம் கடந்த காலத்தில் அபகரித்து இருந்தால் சம்மந்தப்பட்டவரிடம் அதைத் திருப்பிக் கொடுக்க வேண்டும். அதற்கு வசதி இல்லாவிட்டால் சம்மந்தப்பட்டவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் நாம் செய்த நன்மைகள் நம்மிடமிருந்து பிடுங்கப்பட்டு நம்மால் பாதிக்கப்பட்டவருக்கு வழங்கப்படுவதைத் தவிர்க்க இயலாது.

நாம் யாருடைய பொருளை அபகரித்தோமோ அவர் இறந்து விட்டால், அல்லது அதைத் திருப்பிக் கொடுக்கும் வாய்ப்பு இல்லாவிட்டால், அல்லது அவர் மன்னிக்க மறுத்து விட்டால் நமது மறுமை வாழ்க்கையில் நட்டம் அடைவதைத் தவிர்ப்பதற்கு ஏற்ற வகையில் அமல்களை அதிகப்படுத்திக் கொள்ள வேண்டும். நம்மிடமிருந்து சில அமல்கள் பிடுங்கப்பட்டாலும் அதன் பின்னரும் மீதமிருக்கும் வகையில் அதிகமான வணக்கங்களைச் செய்து நம்மைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும்.

صحيح البخاري

2680 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ مَسْلَمَةَ، عَنْ مَالِكٍ، عَنْ هِشَامِ بْنِ عُرْوَةَ، عَنْ أَبِيهِ، عَنْ زَيْنَبَ، عَنْ أُمِّ سَلَمَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا: أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ: " إِنَّكُمْ تَخْتَصِمُونَ إِلَيَّ، وَلَعَلَّ بَعْضَكُمْ أَلْحَنُ بِحُجَّتِهِ مِنْ بَعْضٍ، فَمَنْ قَضَيْتُ لَهُ بِحَقِّ أَخِيهِ شَيْئًا، بِقَوْلِهِ: فَإِنَّمَا أَقْطَعُ لَهُ قِطْعَةً مِنَ النَّارِ فَلاَ يَأْخُذْهَا "

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

நீங்கள் என்னிடம் வழக்குகளைக் கொண்டு வருகிறீர்கள். உங்களில் ஒருவர் மற்றொருவரைவிட வாக்குசாதுர்யம் மிக்கவராக இருக்கக்கூடும். ஆகவே, எவரது

(சாதுர்யமான) சொல்லை வைத்து அவரது சகோதரனின் உரிமையில் சிறிதை (அவருக்குரியது) என்று நான் தீர்ப்பளித்து விடுகின்றேனோ அவருக்கு நான் நரக நெருப்பின் ஒரு துண்டைத்தான் துண்டித்துக் கொடுக்கிறேன். ஆகவே, அவர் அதை எடுத்துக் கொள்ள வேண்டாம்.

நூல் : புகாரி 2680, 7169, 7181, 7185, 6967

## பொது அனுமதி அளிக்கப்பட்டவை

ஒருவர் அன்பளிப்பாகவோ, தர்மமாகவோ நமக்குத் தந்தால் அல்லது வாரிசு முறையில் கிடைத்தால் அல்லது விலை கொடுத்து வாங்கினால் இவை ஹலால் என்பதை நாம் அறிந்திருக்கிறோம்.

இவை தவிர தனிப்பட்ட முறையில் நமக்கு அனுமதிக்கப்படாமல் இருந்தாலும் பொதுவாக அனுமதி அளிக்கப்பட்டதாக இருந்தால் அந்தப் பொருள் நமக்கு ஹலால் ஆகும்.

இதனைப் பின் வரும் ஹதீஸிலிருந்து விளங்கிக் கொள்ளலாம்.

سنن الترمذي

2987 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ عَبْدِ الرَّحْمَنِ قَالَ: أَخْبَرَنَا عُبَيْدُ اللَّهِ بْنُ مُوسَى، عَنْ إِسْرَائِيلَ، عَنْ السُّدِّيِّ، عَنْ أَبِي مَالِكٍ، عَنْ البَرَاءِ، {وَلَا تَيَمَّمُوا الخَبِيثَ مِنْهُ [ص:219] تُنْفِقُونَ} [البقرة: 267] قَالَ: «نَزَلَتْ فِينَا مَعْشَرَ الأَنْصَارِ، كُنَّا أَصْحَابَ نَخْلٍ فَكَانَ الرَّجُلُ يَأْتِي مِنْ نَخْلِهِ عَلَى قَدْرِ كَثْرَتِهِ وَقِلَّتِهِ، وَكَانَ الرَّجُلُ يَأْتِي بِالقِنْوِ وَالقِنْوَيْنِ فَيُعَلِّقُهُ فِي المَسْجِدِ، وَكَانَ أَهْلُ الصُّفَّةِ لَيْسَ لَهُمْ طَعَامٌ، فَكَانَ أَحَدُهُمْ إِذَا جَاعَ أَتَى القِنْوَ فَضَرَبَهُ بِعَصَاهُ فَيَسْقُطُ مِنَ البُسْرِ وَالتَّمْرِ فَيَأْكُلُ، وَكَانَ نَاسٌ مِمَّنْ لَا يَرْغَبُ فِي الخَيْرِ يَأْتِي الرَّجُلُ بِالقِنْوِ فِيهِ الشِّيصُ وَالحَشَفُ وَبِالقِنْوِ قَدْ انْكَسَرَ فَيُعَلِّقُهُ»، فَأَنْزَلَ اللَّهُ تَبَارَكَ تَعَالَى: {يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا أَنْفِقُوا مِنْ طَيِّبَاتِ مَا كَسَبْتُمْ وَمِمَّا أَخْرَجْنَا لَكُمْ مِنَ الأَرْضِ وَلَا تَيَمَّمُوا الخَبِيثَ مِنْهُ تُنْفِقُونَ وَلَسْتُمْ بِآخِذِيهِ إِلَّا أَنْ تُغْمِضُوا فِيهِ} [البقرة: 267] قَالُوا: «لَوْ أَنَّ أَحَدَكُمْ أُهْدِيَ إِلَيْهِ مِثْلُ مَا أَعْطَى، لَمْ يَأْخُذْهُ إِلَّا عَلَى إِغْمَاضٍ أَوْ حَيَاءٍ». قَالَ: «فَكُنَّا بَعْدَ ذَلِكَ يَأْتِي أَحَدُنَا بِصَالِحِ مَا عِنْدَهُ»: " هَذَا حَدِيثٌ حَسَنٌ غَرِيبٌ صَحِيحٌ

"மட்டமான பொருளைச் செலவிட நினைக்காதீர்கள்!" (2 : 267) என்ற வசனம் பேரீச்சை மரங்களுக்குச் சொந்தக்காரர்களாகிய அன்சாரிகளாகிய எங்களுடைய விசயத்தில் இறங்கியதாகும். பேரீச்சை மரங்கள் அதிகமாக வைத்திருப்பவரும், குறைவாக வைத்திருப்பவரும் அதற்கேற்ற அளவிற்கு அதிலிருந்து கொண்டு வருவர். ஒரு மனிதர் ஒன்று அல்லது இரண்டு குலைகளைக் கொண்டு வந்து அதைப் பள்ளிவாசலில் தொங்க விடுவார். திண்ணை ஸஹாபாக்கள் எந்த

உணவும் இல்லாதவர்களாக இருந்தார்கள். அவர்களில் ஒருவருக்குப் பசித்தால் அந்தக் குலையின் பக்கம் வந்து அதை தன் கைத்தடியால் அடிப்பார். அதிலிருந்து பிஞ்சுகளும், பழங்களும் விழும் . அதை அவர் சாப்பிடுவார். நல்ல விஷயங்களில் நாட்டமில்லாத சில மனிதர்கள் இருந்தனர். அப்படிப்பட்ட ஒரு மனிதர் ஒரு குலையைக் கொண்டு வருவார். அதில் விளையாத பழங்களும் அழுகிய பழங்களும் இருந்தன. இன்னும் உடைந்த குலையையும் கொண்டு வந்து அதைத் தொங்க விடுவார். எனவே அல்லாஹ் நம்பிக்கை கொண்டோரே! நீங்கள் சம்பாதித்ததில் தூய்மையானவற்றையும், பூமியிலிருந்து உங்களுக்கு நாம் வெளிப்படுத்தியதிலிருந்தும் (நல்வழியில்) செலவிடுங்கள்! கண்ணை மூடிக்கொண்டே தவிர எதை வாங்கிக் கொள்ள மாட்டீர்களோ அத்தகைய மட்டமான பொருளைச் செலவிட நினைக்காதீர்கள்! அல்லாஹ் தேவையற்றவன்; புகழுக்குரியவன் என்பதை அறிந்து கொள்ளுங்கள்" (2 : 267) என்ற வசனத்தை அருளினான். அதற்குப் பிறகு எங்களில் ஒருவர் தன்னிடம் இருப்பதில் மிகச் சிறந்ததையே கொண்டு வரலானார்.

நூல் : திர்மிதி 2913

தேவைப்படுவோர் பயன்படுத்திக் கொள்ளலாம் என்ற நோக்கத்தில் பள்ளிவாசலில் பேரிச்சை குலைகள் தொங்கவிடப்பட்டதும் அதை நபித்தோழர்கள் சாப்பிட்டதும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலத்தில் அனுமதிக்கப்பட்டு இருந்ததை இதில் இருந்து அறியலாம்.

வேலி போடாமல் திறந்த வெளியில் ஒருவர் மரம் வளர்த்தால் அந்த மரத்தின் கனிகளை மற்றவர்கள் சாப்பிடுவது குற்றமாகாது. அவர் வேலி போடாமல் இருந்ததும் அல்லது யாரும் சாப்பிடக் கூடாது என்று அறிவிப்புப் பலகை வைக்காததும் பொது அனுமதியைக் காட்டுகிறது என்று எடுத்துக் கொள்ளப்படும்.

صحيح البخاري

2320 - حَدَّثَنَا قُتَيْبَةُ بْنُ سَعِيدٍ، حَدَّثَنَا أَبُو عَوَانَةَ، ح وَحَدَّثَنِي عَبْدُ الرَّحْمَنِ بْنُ المُبَارَكِ، حَدَّثَنَا أَبُو عَوَانَةَ، عَنْ قَتَادَةَ، عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «مَا مِنْ مُسْلِمٍ يَغْرِسُ غَرْسًا، أَوْ يَزْرَعُ زَرْعًا، فَيَأْكُلُ مِنْهُ طَيْرٌ أَوْ إِنْسَانٌ أَوْ بَهِيمَةٌ، إِلَّا كَانَ لَهُ بِهِ صَدَقَةٌ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

முஸ்லிம் ஒருவர் ஒரு மரத்தை நட்டு அல்லது விதை விதைத்து விவசாயம் செய்து, அதிலிருந்து (அதன் விளைச்சலை அல்லது காய்கனிகளை) ஒரு பறவையோ, ஒரு மனிதனோ அல்லது ஒரு பிராணியோ உண்டால் அதன் காரணத்தால் ஒரு தர்மம் செய்ததற்கான பிரதிபலன் அவருக்குக் கிடைக்கும்.

நூல் : புகாரி 2320, 6012

அனைவரும் பயன்படுத்திக் கொள்வதற்காகப் பொதுவில் வைக்கப்பட்ட பொருட்கள் எந்த நோக்கத்தில் வைக்கப்படுகிறதோ அதற்கேற்பவே அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளலாம். அதற்கு மாற்றமாகப் பயன்படுத்தக் கூடாது.

அனைவரும் குடிப்பதற்காகத் தண்ணீர்ப் பந்தல் வைத்தால் நமக்குத் தேவைப்படும்போது அதைப் பருகலாம்; ஒரு குடத்தை எடுத்துக் கொண்டு வந்து அதை நிரப்பிக் கொண்டு போகக் கூடாது. அல்லது கைகால் கழுவுதல், துணி துவைத்தல் போன்றவற்றுக்குப் பயன்படுத்தக் கூடாது. ஏனெனில் குடிப்பதற்குத்தான் அது வைக்கப்பட்டுள்ளது என்பது அனைவருக்கும் தெரியும்.

அதே நேரத்தில் ஒருவர் தண்ணீர் தொட்டியைக் கட்டினால் அல்லது கிணறை வெட்டினால் அல்லது ஒரு தண்ணீர்க் குழாய் அமைத்தால் அதைக் குடிக்கவும் பயன்படுத்தலாம்; தேவைக்கு எடுத்தும் செல்லலாம். தேவைப்படுவோர் தண்ணீரைப் பிடித்துக் கொள்ளலாம் என்பதற்காகவே இவை பொதுவில் வைக்கப்படுகின்றன என்பது அனைவருக்கும் தெரியும்.

سنن الترمذي

1289 - حَدَّثَنَا قُتَيْبَةُ قَالَ: حَدَّثَنَا اللَّيْثُ، عَنْ ابْنِ عَجْلَانَ، عَنْ عَمْرِو بْنِ شُعَيْبٍ، عَنْ أَبِيهِ، عَنْ جَدِّهِ، أَنَّ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ سُئِلَ عَنِ الثَّمَرِ المُعَلَّقِ؟ فَقَالَ: «مَنْ أَصَابَ مِنْهُ مِنْ ذِي حَاجَةٍ غَيْرَ مُتَّخِذٍ خُبْنَةً فَلَا شَيْءَ عَلَيْهِ»

தொங்கவிடப்பட்டிருக்கும் பேரிச்சம் பழத்தைப் பற்றி நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. தன்னுடைய ஆடையில் இரகசியமாக முடிந்து எடுத்துக் கொள்ளாமல் தேவையுடைய ஒருவர் அதிலிருந்து சாப்பிட்டால் அவர் மீது எந்தக் குற்றமும் இல்லை என்று கூறினார்கள்.

நூல் : திர்மிதி 1210

தேவைப்படுவோர் உண்பதற்காகவே பள்ளிவாசலில் பேரீச்சம் பழக் குலையைத் தொங்கவிடும் வழக்கம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் காலத்தில் இருந்தது. எடுத்துச் செல்வதற்காக அல்ல. அதனால்தான் எடுத்துச் செல்லக் கூடாது என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கட்டளை பிறப்பித்தார்கள்.

مسند أحمد بن حنبل

6746 - حدثنا عبد الله حدثني أبي ثنا الحسين حدثني بن أبي الزناد عن عبد الرحمن يعني بن الحرث أخبرني عمرو بن شعيب عن أبيه عن جده انه سمع رجلا من مزينة سأل رسول الله صلى الله عليه و سلم : ماذا تقول يا رسول الله في ضالة الإبل فقال رسول الله صلى الله عليه و سلم مالك ولها معها حذاؤها وسقاؤها قال فضالة الغنم قال لك أو لأخيك أو للذئب قال فمن أخذها من مرتعها قال عوقب وغرم مثل ثمنها ومن استطلقها من عقال أو استخرجها من حفش وهى المظال فعليه القطع قال يا رسول الله فالثمر يصاب في أكمامه فقال رسول الله صلى الله عليه و سلم ليس على آكل سبيل فمن أتخذ خبنة غرم مثل ثمنها وعوقب ومن أخذ شيئا منها بعد ان أوى إلى مربد أو كسر عنها بابا فبلغ ما يأخذ ثمن المجن فعليه القطع قال يا رسول الله فالكنز نجده في الخرب وفي الآرام فقال رسول الله صلى الله عليه و سلم فيه وفي الركاز الخمس

முஸைனா கோத்திரத்தைச் சார்ந்த ஒரு மனிதர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் "வழிதவறி வந்த ஒட்டகத்தை என்ன செய்வது?" என்று கேட்டார். இதைக் கேட்டவுடன் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் "உனக்கும் அதற்கும் என்ன சம்பந்தம்? அதனுடன்தான் அதன் குளம்பும் அதன் தண்ணீர்ப் பையும் உள்ளதே! நீர் நிலைகளுக்கு அது செல்கின்றது; மரத்திலிருந்து தின்கின்றது. அதைத் தேடக்கூடியவன் அதனிடம் வரும் வரை அதை நீ விட்டுவிடு" என்று கூறினார்கள். தன்னுடைய மேய்ச்சல் நிலத்திலே பாதுகாப்பாக உள்ள கால்நடைகளை (திருடுவதைப்) பற்றி கேட்கப்பட்டபோது, அதனுடைய விலையைக் போன்று இரு மடங்கு (அபராதமும்) தண்டனைக்குரிய அடியும் உண்டு என்று கூறினார்கள். தொழுவத்திலிருந்து (திருடி) எடுக்கப்பட்டது கேடயத்தின் மதிப்பிற்கு இருந்தால் அதற்கு கைவெட்டுதல் இருக்கிறது என்று கூறினார்கள். தானியங்கள் கிளைகளிலிருந்து (திருடி) எடுக்கப்பட்டால் என்னவென்று அவர் கேட்டார். யார் இரகசியமாகத் தன் ஆடையில் முடிந்து எடுத்துக் கொள்ளாமல் அந்த இடத்திலேயே சாப்பிடுகிறாரோ அவர் மீது எந்தக் குற்றமும் இல்லை. யார் கட்டிக்கொண்டு செல்கிறாரோ அவருக்கு அதனுடைய மதிப்பைப் போன்று இரு மடங்கு (அபராதமும்) தண்டனையாக அடியும் இருக்கிறது என்று கூறினார்கள். தானியக்

களஞ்சியத்திலிருந்து (திருடி) எடுக்கப்பட்டது கேடயத்தின் மதிப்பிற்கு இருந்தால் அதற்கு கைவெட்டப்படும் என்று கூறினார்கள். அல்லாஹ்வின் தூதரே மக்கள் வசிக்கும் பகுதியில் கண்டெடுக்கப்பட்ட பொருளின் நிலை என்ன? என்று அவர் கேட்டார். அதை ஒரு வருடம் அறிவிப்புச் செய். அதைத் தேடக்கூடியவன் காணப்பட்டால் ஒப்படைத்துவிடு. இல்லையென்றால் அது உனக்குரியதாகும் என்று கூறினார்கள். மக்கள் வசிக்காத பாழடைந்த இடங்களிலே பெற்றுக் கொள்ளப்படுவதைப் பற்றி கேட்டார். அதற்கு புதையலிலே ஐந்தில் ஒன்று (ஜகாத்தாக கொடுக்க வேண்டும்) என்று கூறினார்கள்.

நூல் : அஹ்மத்

## நிர்பந்தமான நிலையில் பிறர் பொருள் ஹலால்

நிர்பந்த நிலையை அடைந்தவர் பிறரது தோட்டத்தில் புகுந்து அதில் சாப்பிடுவதும் தனது குடும்பத்தின் பசியைப் போக்குவதற்காக எடுத்துக் கொள்வதும் குற்றமாகாது. இது போன்ற நிலைக்கு உள்ளானவர் பன்றி உள்ளிட்ட தடை செய்யப்பட்டவைகளை உண்பதுகூட குற்றமாகாது.

தாமாகச் செத்தவை, இரத்தம், பன்றியின் இறைச்சி, அல்லாஹ் அல்லாதோருக்காக அறுக்கப்பட்டவை ஆகியவற்றையே அவன் உங்களுக்குத் தடை செய்துள்ளான். வரம்பு மீறாமலும், வலியச் செல்லாமலும் நிர்பந்திக்கப்படுவோர் மீது எந்தக் குற்றமும் இல்லை. அல்லாஹ் மன்னிப்பவன்; நிகரற்ற அன்புடையோன்.

திருக்குர்ஆன் : 2:173

பாவம் செய்யும் நாட்டமில்லாமல், வறுமையின் காரணமாக நிர்பந்தத்துக்கு உள்ளானோரை அல்லாஹ் மன்னிப்பவன்; நிகரற்ற அன்புடையோன்.

திருக்குர்ஆன் : 5:3

தாமாகச் செத்தது, ஓட்டப்பட்ட இரத்தம், அசுத்தமாகிய பன்றியின் இறைச்சி, மற்றும் அல்லாஹ் அல்லாதோருக்காக அறுக்கப்பட்ட பாவமான(உண)வை தவிர வேறு எதுவும் மனிதர் உண்பதற்குத் தடை செய்யப்பட்டதாக எனக்கு அறிவிக்கப்பட்ட செய்தியில் நான் காணவில்லை" என்று கூறுவீராக! யாரேனும் வரம்பு மீறாமலும், வலியச் செல்லாமலும் நிர்பந்திக்கப்பட்டால் உமது இறைவன் மன்னிப்பவன்; நிகரற்ற அன்புடையோன்.

திருக்குர்ஆன் : 6:145

தாமாகச் செத்தவை, இரத்தம், பன்றியின் இறைச்சி, அல்லாஹ் அல்லாதோருக்காக அறுக்கப்பட்டவை ஆகியவற்றையே அவன் உங்களுக்குத் தடை செய்திருக்கிறான். யார் வரம்பு மீறாதவராகவும், வலியச் செல்லாதவராகவும் நிர்பந்திக்கப்படுகிறாரோ அல்லாஹ் மன்னிப்பவன்; நிகரற்ற அன்புடையோன்.

திருக்குர்ஆன் : 16:115

நிர்பந்தத்திற்கு ஆளானவர்கள் தடைசெய்யப்பட்டதை உண்ணலாம் என்பதை இவ்வசனங்கள் தெளிவாகக் கூறுகின்றன. இதை அனைவரும் அறிந்து வைத்துள்ளனர். என்றாலும் நிர்பந்தம் எந்த நிலையைக் குறிக்கும் என்பதை பெரும்பாலான மக்கள் அறியாமல் உள்ளனர்.

இதை உண்ணாவிட்டால் உன்னைக் கொன்று விடுவேன் என்று பிறரால் மிரட்டப்படுவதுதான் நிர்பந்தம் எனச் சிலர் கூறுகின்றனர்.

இதை உண்ணாவிட்டால் இறந்து விடுவோம் என்ற நிலையை ஒருவர் அடைவதுதான் நிர்பந்தம் என்று மற்றும் சிலர் கூறுகின்றனர்.

இந்த இரண்டுமே நிர்பந்த நிலைதான். இவை மட்டுமின்றி ஒருவர் அன்றாடம் தனக்கும், தன் குடும்பத்துக்கும் போதிய உணவைப் பெறாமலிருப்பதும் நிர்பந்தம்தான்.

مسند أحمد بن حنبل

17556 - حدثنا عبد الله حدثني أبي ثنا محمد بن جعفر ثنا شعبة عن أبي بشر قال سمعت عباد بن شرحبيل وكان منا من بني غبر قال : أصابتنا سنة فأتيت المدينة فدخلت حائطا من حيطانها فأخذت سنبلا ففركته واكلت منه وحملت في ثوبي فجاء صاحب الحائط فضربني وأخذ ثوبي فأتيت رسول الله صلى الله عليه و سلم فقال ما علمته إذ كان جاهلا ولا أطعمته إذ كان ساغبا أو جائعا فرد علي الثوب وأمر لي بنصف وسق أو وسق

ஓர் ஆண்டு எங்கள் பகுதியில் பஞ்சம் ஏற்பட்டது. நான் மதீனாவுக்கு வந்து ஒரு தோட்டத்திற்குச் சென்றேன். அதிலுள்ள ஒரு தானியக் கதிரை எடுத்து உதிர்த்துச் சாப்பிட்டேன். எனது ஆடையிலும் சேகரித்துக் கொண்டேன். அப்போது தோட்டத்திற்குரியவர் வந்து விட்டார். என்னை அடித்து எனது ஆடையையும் பறித்துக் கொண்டார். நான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் சென்று விபரம் கூறினேன். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தோட்டத்திற்குரியவரிடம் "இவர் பசியோடு இருந்தபோது இவருக்கு நீர் உணவளிக்கவில்லை. இவர் அறியாதவராக இருந்தபோது இவருக்குக் கற்றுக் கொடுக்கவில்லை என்றார்கள். மேலும் எனது ஆடையை என்னிடம் திருப்பித் தருமாறு அவருக்குக் கட்டளையிட்டனர். மேலும் எனக்கு ஒரு வஸக் (அறுபது ஸாவு) அல்லது அரை வஸக் உணவு தருமாறும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அவருக்குக் கட்டளையிட்டனர்.

நூல்கள் : அஹ்மத் 16865, நஸயீ 5314, அபூதாவூத் 2252, இப்னுமாஜா 2289,

பிறரது தோட்டத்தில் நுழைந்து அதிலுள்ளவற்றை உண்பதும், சேகரிப்பதும் மார்க்கத்தில் விலக்கப்பட்டிருந்தும் இந்த நபித்தோழர் தடையை மீறியதற்காக கண்டிக்கப்படவுமில்லை. தண்டிக்கப்படவுமில்லை. தோட்டத்தின் உரிமையாளரைத்தான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கண்டித்தனர். அவருக்கோ போதுமான உணவுகளைக் கொடுத்து அனுப்புகிறார்கள்.

அன்றாடம் உணவு கிடைக்காமலிருப்பதும் நிர்பந்தம்தான் என்பதற்கு இது சான்றாக உள்ளது.

سنن أبي داود

3816 - حدَّثنا موسى بنُ إسماعيل، حدَّثنا حمادٌ، عن سماك بن حربٍ عن جابر بن سَمُرَةَ، أن رجلاً نزل الحرَّةَ ومعه أهلُه وولَدُه، فقال رجل: إن ناقةً لي ضَلَّتْ، فإن وجدْتَها، فأَمْسِكْها، فوجدها، فلم يَجِدْ صاحِبَها، فمرِضَتْ، فقالت امرأتُه: انحَرْها، فأبى، فنَفَقَتْ، فقالت امرأته: اسْلَخْها حتى نُقَدِّدَ شحمَها ولحمَها ونأكلَه، فقال: حتى أسألَ رسولَ الله - صلَّى الله عليه وسلم -، فأتاه، فسأله، فقال: "هَلْ عندَكَ غِنًى يُغنيكَ؟ " قال: لا، قال: "فَكُلُوها"، قال: فجاءَ صاحبُها، فأخبره الخبَر، فقال: هَلَّا كنْتَ نحرْتَها، قال: استَحيَيتُ مِنْكَ

ஒரு மனிதர் தம் மனைவி மக்களுடன் "ஹர்ரா" எனுமிடத்தில் தங்கி இருந்தார். அவரிடம் இன்னொரு மனிதர் வந்து "எனது ஒட்டகம் காணாமல் போய் விட்டது. அதை நீர் கண்டால் பிடித்து வைத்துக் கொள்வீராக" எனக் கூறினார். (குடும்பத்துடன் தங்கியிருந்த அந்த மனிதர் அந்த ஒட்டகத்தைக் கண்டார். உரிமையாளரைக் காணவில்லை (அந்த ஒட்டகத்தைப் பிடித்து வைத்துக் கொண்டார்) அந்த ஒட்டகம் நோயுற்றது. அதை அறுப்பீராக என்று அவரது மனைவி கூறியபோது அவர் மறுத்து விட்டார். ஒட்டகம் செத்து விட்டது. அப்போது அவரது மனைவி "இதன் தோலை உரிப்பீராக! நாமும் சாப்பிட்டு, இறைச்சியையும் கொழுப்பையும் காய வைத்துக் கொள்வோம்" எனக் கூறினார். அதற்கு அம்மனிதர் "நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் கேட்காமல் செய்ய மாட்டேன்" என்று கூறிவிட்டு நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்து இது பற்றிக் கேட்டார். அவரிடம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் "பிறரிடம் தேவையாகாத அளவுக்கு உமக்கு வசதி இருக்கிறதா? எனக் கேட்டார்கள். அதற்கவர் "இல்லை" என்றார். "அப்படியானால் அதை உண்ணுங்கள்" என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது ஒட்டகத்தின் உரிமையாளர் வந்தார். அவரிடம் அந்த மனிதர் விபரத்தைக் கூறினார். இதை நீர் அறுத்திருக்கக்

கூடாதா?" என்று அவர் கேட்டார் அதற்கு அந்த மனிதர் "நான் வெட்கமடைந்தேன். (அதனால் அறுக்கவில்லை)" என விடையளித்தார்.

நூல் : அபூதாவூத், அஹ்மத்

பிறரிடம் தேவையாகும் அளவுக்குப் பொருளாதார நிலை இருந்தால் அதுவும் நிர்பந்தம் தான் என்பது இந்த ஹதீஸில் இருந்து தெரிகின்றது.

உயிர் போகும் நிலையை அடைவது மட்டுமே நிர்பந்த நிலை எனக் கூறுவது ஆதாரமற்றதும் சாத்தியமற்றதுமாகும்.

உயிர் போகும் நிலையை அடைந்தவன் விலக்கப்பட்டவற்றைத் தேடிச் செல்லும் அளவுக்குச் சக்தி பெற மாட்டான். அவனால் எழுந்து நிற்கக்கூட இயலாது. இத்தகைய நிலையில் உள்ளவனுக்கு இந்த அனுமதியால் எந்தப் பயனும் இல்லை. அல்லாஹ்வின் இந்த அனுமதி அர்த்தமற்றதாகவும் ஆகிவிடும்.

எத்தியோப்பியா, சோமாலியா ஆகிய நாடுகளின் நிலையை நாம் அறிவோம். கூழுக்கும் பாலுக்கும் வழியின்றி எலும்பும் தோலுமாக மக்கள் காட்சியளிப்பதைத் தொலைக்காட்சி வழியாகப் பார்த்து கண் கலங்காதவர்கள் இருக்க முடியாது.

இந்த மக்களுக்கு எந்த உணவும் தடுக்கப்பட்டதன்று. இதை அம்மக்கள் விளங்கி கிடைப்பதையெல்லாம் உண்டால் அந்த அவல நிலையிலிருந்து விடுபடுவார்கள். அங்குள்ளவர்களில் பெரும்பாலோர் முஸ்லிம்களாக இருந்தும் இந்தச் சலுகையை அவர்கள் புரிந்து கொள்ளாமல் உள்ளனர்.

## கண்டெடுக்கப்பட்ட பொருள்கள்

நிர்பந்தமான நிலையில் பிறரது பொருட்கள் நமக்கு அனுமதிக்கப்பட்டதாக ஆவது போல் மற்றவர்கள் தவறவிட்ட பொருள்கள் நிபந்தனைக்கு உட்பட்டு நமக்கு அனுமதிக்கப்பட்டதாகும்.

صحيح البخاري

2427 - حَدَّثَنَا عَمْرُو بْنُ عَبَّاسٍ، حَدَّثَنَا عَبْدُ الرَّحْمَنِ، حَدَّثَنَا سُفْيَانُ، عَنْ رَبِيعَةَ، حَدَّثَنِي يَزِيدُ مَوْلَى المُنْبَعِثِ، عَنْ زَيْدِ بْنِ خَالِدٍ الجُهَنِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: جَاءَ أَعْرَابِيٌّ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَسَأَلَهُ عَمَّا يَلْتَقِطُهُ، فَقَالَ: «عَرِّفْهَا سَنَةً، ثُمَّ احْفَظْ عِفَاصَهَا وَوِكَاءَهَا، فَإِنْ جَاءَ أَحَدٌ يُخْبِرُكَ بِهَا، وَإِلَّا فَاسْتَنْفِقْهَا» قَالَ: يَا رَسُولَ اللَّهِ، فَضَالَّةُ الغَنَمِ؟ قَالَ: «لَكَ أَوْ لِأَخِيكَ أَوْ لِلذِّئْبِ»، قَالَ: ضَالَّةُ الإِبِلِ؟ فَتَمَعَّرَ وَجْهُ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَقَالَ: «مَا لَكَ وَلَهَا، مَعَهَا حِذَاؤُهَا وَسِقَاؤُهَا تَرِدُ المَاءَ، وَتَأْكُلُ الشَّجَرَ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் ஒரு கிராமவாசி வந்து, (பாதையில்) கண்டெடுக்கும் பொருளைப் பற்றிக் கேட்டார். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "ஒரு வருட காலத்திற்கு அதைப் பற்றி அறிவிப்புச் செய். பிறகு, அதன் பை(உறை)யையும் அதன் முடிச்சையும் பாதுகாத்து வைத்திரு. அதைப் பற்றி (அடையாளம்) தெரிவிப்பவர் எவராவது உன்னிடம் வந்தால் (அவரிடம் ஒப்படைத்து விடு.) இல்லையென்றால் அதை உன் செலவுக்கு எடுத்துக் கொள்" என்று கூறினார்கள். அந்தக் கிராமவாசி, "அல்லாஹ்வின் தூதரே! வழிதவறி (நம்மிடம் வந்து சேர்ந்து) விட்ட ஆட்டை என்ன செய்வது?" என்று கேட்டார். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "அது உனக்குரியது; அல்லது உன் சகோதரருக்குரியது; அல்லது ஓநாய்க்குரியது" என்று கூறினார்கள். அந்தக் கிராமவாசி, "வழி தவறி வந்த ஒட்டகத்தை என்ன செய்வது?" என்று கேட்டார். இதைக் கேட்டவுடன் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் முகம் (கோபத்தால்) நிறம் மாறி விட்டது. பிறகு, "உனக்கும் அதற்கும் என்ன சம்பந்தம்? அதனுடன்தான் அதன் குளம்பும் அதன் தண்ணீர்ப்பையும் உள்ளதே! நீர் நிலைகளுக்கு அது செல்கின்றது; மரத்திலிருந்து தின்கின்றது" என்று கூறினார்கள்.

நூல் : புகாரி 2427

ஒரு பணப்பையைக் கண்டெடுத்தால் அதன் தொகையைக் குறித்து வைத்து கொள்ள வேண்டும். ஒரு வருட காலம் மக்கள் நடமாடும் இடத்தில் அதை

அறிவிப்புச் செய்ய வேண்டும். அது என்னுடைய தொகை என்று யார் கூறுகிறாரோ அவரிடத்தில் தகுந்த அடையாளங்களைக் கேட்க வேண்டும். அவர் சரியான அடையாளங்களைச் சொன்னால் அவரிடம் அதை ஒப்படைக்க வேண்டும். ஒரு வருடம் அறிவிப்புச் செய்த பின் அதைக் கேட்டு யாரும் வரவில்லையென்றால் அது கண்டெடுத்தவருக்கு ஆகுமானதாகும். அது ஹராமாக இருக்குமோ என்று கவலைப்பட வேண்டியதில்லை.

மூன்று வருடம் அறிவிப்பு செய்ய வேண்டும் என்று ஒரு ஹதீஸ் வந்துள்ளது

صحيح البخاري

2426 - حَدَّثَنَا آدَمُ، حَدَّثَنَا شُعْبَةُ، وَحَدَّثَنِي مُحَمَّدُ بْنُ بَشَّارٍ، حَدَّثَنَا غُنْدَرٌ، حَدَّثَنَا شُعْبَةُ، عَنْ سَلَمَةَ، سَمِعْتُ سُوَيْدَ بْنَ غَفَلَةَ، قَالَ: لَقِيتُ أُبَيَّ بْنَ كَعْبٍ رَضِيَ اللَّهُ عَنْهُ، فَقَالَ: أَخَذْتُ صُرَّةً مِائَةَ دِينَارٍ، فَأَتَيْتُ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَقَالَ: «عَرِّفْهَا حَوْلًا»، فَعَرَّفْتُهَا حَوْلًا، فَلَمْ أَجِدْ مَنْ يَعْرِفُهَا، ثُمَّ أَتَيْتُهُ، فَقَالَ: «عَرِّفْهَا حَوْلًا» فَعَرَّفْتُهَا، فَلَمْ أَجِدْ، ثُمَّ أَتَيْتُهُ ثَلاَثًا، فَقَالَ: «احْفَظْ وِعَاءَهَا وَعَدَدَهَا وَوِكَاءَهَا، فَإِنْ جَاءَ صَاحِبُهَا، وَإِلَّا فَاسْتَمْتِعْ بِهَا»، فَاسْتَمْتَعْتُ، فَلَقِيتُهُ بَعْدُ بِمَكَّةَ، فَقَالَ: لاَ أَدْرِي ثَلاَثَةَ أَحْوَالٍ، أَوْ حَوْلًا وَاحِدًا

உபை பின் கஅப் (ரலி) அவர்கள் கூறியதாவது :

நான் ஒரு பணப்பையைக் கண்டெடுத்தேன். அதில் நூறு தீனார்கள் இருந்தன. (அதை எடுத்துக் கொண்டு) நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்தேன். அவர்கள், "ஓராண்டுக் காலம் அதைப் பற்றி நீ (பொது) அறிவிப்புக் கொடு" என்று கூறினார்கள். நானும் அதைப் பற்றி அறிவிப்புக் கொடுத்தேன். அதை அடையாளம் புரிந்து கொள்பவர் எவரையும் நான் காணவில்லை. பிறகு, மீண்டும் நான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போதும், "ஓராண்டுக் காலம் அதைப் பற்றி அறிவிப்புக் கொடு" என்று கூறினார்கள். நானும் அதைப் பற்றி அறிவிப்புக் கொடுத்தேன். அதை அடையாளம் புரிந்து (பெற்றுக்) கொள்பவர் எவரையும் நான் காணவில்லை. பிறகு, மூன்றாவது முறையாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்தேன். அப்போது அவர்கள், "அதன் பையையும் அதன் எண்ணிக்கையையும் அதன் முடிச்சையும் பாதுகாத்து வைத்திரு. அதன் உரிமையாளர் வந்தால் அவரிடம் ஒப்படைத்து விடு. இல்லையென்றால் நீயே அதைப் பயன்படுத்திக் கொள்" என்று கூறினார்கள். ஆகவே, நானே அதைப் பயன்படுத்திக் கொண்டேன்.

அறிவிப்பாளர் ஷுஅபா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள் : அதன் பிறகு, நான் மக்காவில் வைத்து (இதை எனக்கு அறிவித்த) சலமா (ரஹ்) அவர்களைச் சந்தித்தேன். அப்போது அவர்கள், "(நான் அறிவித்த ஹதீஸில்) நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "மூன்று ஆண்டுகள் அறிவிப்புச் செய்ய வேண்டும் என்று கூறினார்களா அல்லது ஓராண்டுக் காலம் வரை மட்டும் அறிவிப்புச் செய்ய வேண்டும் என்று கூறினார்களா என்று நான் அறிய மாட்டேன்" (அதாவது எனக்கு நினைவில்லை) என்று கூறினார்கள்.

நூல் : புகாரி 2426

முன்னர் நாம் எடுத்துக் காட்டிய ஹதீஸில் ஒரு வருடம் அறிவிப்புச் செய்ய வேண்டும் என்று நாம் பார்த்தோம். ஆனால் அதற்கு மாற்றமாக மூன்று வருடமா ஒரு வருடமா என்று சந்தேகத்துடன் இந்த ஹதீஸில் கூறப்பட்டுள்ளது. எனவே சந்தேகம் இல்லாத அறிவிப்பில் ஒருவருடம் என்று கூறப்பட்டதையே நாம் எடுத்துக் கொள்ள வேண்டும்.

கண்டெடுக்கப்படும் பொருட்கள் குறித்து ஒரு வருடம் அறிவிப்புச் செய்து அதைப் பாதுகாக்க வேண்டும் என்பது பொதுவானதல்ல. இதில் விதிவிலக்குகளும் உள்ளன.

மக்கள் வாழுகின்ற அல்லது அடிக்கடி மக்கள் வந்து போகின்ற இடத்தில் கண்டெடுக்கப்பட்ட பொருட்களுக்குத்தான் இது போன்ற அறிவிப்புகள் அவசியம். மக்கள் வசிக்காத பகுதியில் அல்லது மக்கள் அடிக்கடி நடமாடாத பகுதியில் ஒரு பொருளைக் கண்டெடுத்தால் அதற்கு இந்தச் சட்டம் பொருந்தாது. அதை உடனே பயன்படுத்திக் கொள்ளலாம். ஆனால் அது புதையல் எனும் நிலையை அடைந்து விடுவதால் அதில் இருபது சதவிகிதத்தை ஜகாத்தாகக் கொடுத்து விட்டு எண்பது சதவிகிதத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

பின்வரும் ஹதீஸிலிருந்து இதை அறியலாம்

مسند أحمد بن حنبل

6746 - حدثنا عبد الله حدثني أبي ثنا الحسين حدثني بن أبي الزناد عن عبد الرحمن يعني بن الحرث أخبرني عمرو بن شعيب عن أبيه عن جده انه سمع رجلا من مزينة سأل رسول الله صلى الله عليه و سلم : ماذا تقول يا رسول الله في ضالة الإبل فقال رسول الله صلى الله عليه و سلم مالك ولها معها حذاؤها وسقاؤها قال فضالة الغنم قال لك أو لأخيك أو للذئب قال فمن أخذها من مرتعها قال عوقب وغرم مثل ثمنها ومن استطلقها من عقال أو استخرجها من حفش وهى المظال فعليه القطع قال يا رسول الله فالثمر يصاب في أكمامه فقال رسول الله صلى الله عليه و سلم ليس على آكل سبيل فمن أتخذ خبنة غرم مثل ثمنها وعوقب ومن أخذ شيئا منها بعد ان أوى إلى مربد أو كسر عنها بابا فبلغ ما يأخذ ثمن المجن فعليه القطع قال يا رسول الله فالكنز نجده في الخرب وفي الآرام فقال رسول الله صلى الله عليه و سلم فيه وفي الركاز الخمس

முஸைனா கோத்திரத்தைச் சார்ந்த ஒரு மனிதர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் "வழிதவறி வந்த ஒட்டகத்தை என்ன செய்வது?" என்று கேட்டார். இதைக் கேட்டவுடன் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் "உனக்கும் அதற்கும் என்ன சம்பந்தம்? அதனுடன்தான் அதன் குளம்பும் அதன் தண்ணீர்ப் பையும் உள்ளதே! நீர் நிலைகளுக்கு அது செல்கின்றது; மரத்திலிருந்து தின்கின்றது. அதைத் தேடக்கூடியவன் அதனிடம் வரும் வரை அதை நீ விட்டுவிடு" என்று கூறினார்கள். தன்னுடைய மேய்ச்சல் நிலத்திலே பாதுகாப்பாக உள்ள கால்நடைகளை (திருடுவதைப்) பற்றி கேட்கப்பட்டபோது, அதனுடைய விலையைப் போன்று இரு மடங்கு (அபராதமும்) தண்டனைக்குரிய அடியும் உண்டு என்று கூறினார்கள். தொழுவத்திலிருந்து (திருடி) எடுக்கப்பட்டது கேடயத்தின் மதிப்பிற்கு இருந்தால் அதற்கு கைவெட்டுதல் இருக்கிறது என்று கூறினார்கள். தானியங்கள் கிளைகளிலிருந்து (திருடி) எடுக்கப்பட்டால் என்னவென்று கேட்டார். யார் இரகசியமாகத் தன் ஆடையில் முடிந்து எடுத்துக் கொள்ளாமல் அந்த இடத்திலேயே சாப்பிடுகிறாரோ அவர் மீது எந்தக் குற்றமும் இல்லை. யார் கட்டிக்கொண்டு செல்கிறாரோ அவருக்கு அதனுடைய மதிப்பைப் போன்று இரு மடங்கு (அபராதமும்) தண்டனையாக அடியும் இருக்கிறது என்று கூறினார்கள். தானியக் களஞ்சியத்திலிருந்து (திருடி) எடுக்கப்பட்டது கேடயத்தின் மதிப்பிற்கு இருந்தால் அதற்கு கைவெட்டப்படும் என்று கூறினார்கள். அல்லாஹ்வின் தூதரே மக்கள் வசிக்கும் பகுதியில் கண்டெடுக்கப்பட்ட பொருளின் நிலை என்ன? என்று அவர் கேட்டார். அதை ஒரு வருடம் அறிவிப்புச் செய். அதைத் தேடக்கூடியவன் காணப்பட்டால் ஒப்படைத்துவிடு. இல்லையென்றால் அது உனக்குரியதாகும் என்று

கூறினார்கள். மக்கள் வசிக்காத பாழடைந்த இடங்களிலே பெற்றுக் கொள்ளப்படுவதைப் பற்றி கேட்டார். அதற்கு புதையலிலே ஐந்தில் ஒன்று (ஜகாத்தாக கொடுக்க வேண்டும்) என்று கூறினார்கள்.

நூல் : அஹ்மத்

மதிப்பு குறைந்த அற்பமான பொருட்களைக் கண்டெடுத்தால் அது பற்றி எந்த அறிவிப்பும் செய்யாமல் பயன்படுத்திக் கொள்ளலாம்.

صحيح البخاري

2431 - حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ يُوسُفَ، حَدَّثَنَا سُفْيَانُ، عَنْ مَنْصُورٍ، عَنْ طَلْحَةَ، عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: مَرَّ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ بِتَمْرَةٍ فِي الطَّرِيقِ، قَالَ: «لَوْلاَ أَنِّي أَخَافُ أَنْ تَكُونَ مِنَ الصَّدَقَةِ لَأَكَلْتُهَا»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பாதையில் கிடந்த ஒரு பேரீச்சம் பழத்தைக் கடந்து சென்றார்கள். "இது சதகா(தர்ம)ப் பொருளாக இருக்குமோ என்ற அச்சம் எனக்கில்லாவிட்டால் இதை நான் சாப்பிட்டு இருப்பேன்" என்று கூறினார்கள்.

நூல் : புகாரி 2431

தர்மமாக வழங்கப்பட்ட பொருள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கும் அவர்களின் குடும்பத்தினருக்கும் ஹராமாகும். எனவே தான் கீழே கிடந்த பேரீச்சம்பழத்தை உண்ணவில்லை என்று அவர்கள் காரணம் சொல்கிறார்கள். இந்தக் காரணம் மற்றவர்களுக்கு இல்லை. எனவே அற்பமான பொருளைக் கண்டெடுத்தால் உடனடியாக நாம் அதைப் பயன்படுத்திக் கொள்ளலாம். ஒருவருடம் அறிவிப்பு செய்ய வேண்டிய அவசியம் இல்லை.

## புதையல் கண்டெடுக்கப்பட்டால்

நமக்குச் சொந்தமான இடத்திலோ அல்லது யாருக்கும் சொந்தமில்லாத இடத்திலோ நமக்கு ஒரு புதியல் கிடைத்தால் அதைப் பற்றி எந்த அறிவிப்பும் செய்ய வேண்டியதில்லை. எடுத்த உடன் அதை நாமே பயன்படுத்திக் கொள்ளலாம். ஆனால் அதில் 20 சதவிகிதத்தை ஜகாத்தாகக் கொடுத்து விட வேண்டும்.

صحيح البخاري

1499 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ، أَخْبَرَنَا مَالِكٌ، عَنِ ابْنِ شِهَابٍ، عَنْ سَعِيدِ بْنِ المُسَيِّبِ، وَعَنْ أَبِي سَلَمَةَ بْنِ عَبْدِ الرَّحْمَنِ، عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ: أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ: «العَجْمَاءُ جُبَارٌ، وَالبِئْرُ جُبَارٌ، وَالمَعْدِنُ جُبَارٌ، وَفِي الرِّكَازِ الخُمُسُ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

புதையலில் ஐந்தில் ஒரு பங்கு வசூலிக்கப்படும்.

நூல் : புகாரி 1499,2355, 6912, 6913

## கணவன் பொருளை மனைவி எடுக்கலாம்

மனைவி மற்றும் குழந்தைகளின் அவசியத் தேவைகள் அனைத்துக்கும் கணவன் தான் பொறுப்பாளியாவான். இந்தக் கடமையைக் கணவன் சரியாகச் செய்துவந்தால் கணவனின் பணத்தை கணவனுக்குத் தெரியாமல் மனைவி எடுக்கக் கூடாது.

கணவனிடம் வசதி இருந்தும் மனைவியின் உணவு உடை போன்ற அவசியத் தேவைகளுக்குப் போதுமான அளவுக்குக் கொடுக்காமல் கஞ்சத்தனம் செய்தால் கணவனைப் பாதிக்காத வகையில் கணவனின் பணத்தை மனைவி எடுத்துக் கொள்ளலாம்.

صحيح البخاري

2460 - حَدَّثَنَا أَبُو اليَمَانِ، أَخْبَرَنَا شُعَيْبٌ، عَنِ الزُّهْرِيِّ، حَدَّثَنِي عُرْوَةُ، أَنَّ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا، قَالَتْ: جَاءَتْ هِنْدُ بِنْتُ عُتْبَةَ بْنِ رَبِيعَةَ، فَقَالَتْ: يَا رَسُولَ اللَّهِ، إِنَّ أَبَا سُفْيَانَ رَجُلٌ مِسِّيكٌ، فَهَلْ عَلَيَّ حَرَجٌ أَنْ أُطْعِمَ مِنَ الَّذِي لَهُ عِيَالَنَا؟ فَقَالَ: «لاَ حَرَجَ عَلَيْكِ أَنْ تُطْعِمِيهِمْ بِالْمَعْرُوفِ»

"அல்லாஹ்வின் தூதரே! (என் கணவர்) அபூசுஃப்யான் கருமியான ஒரு மனிதர். எனக்கும், என் குழந்தைக்கும் போதுமான(பணத்)தை அவர் தருவதில்லை. நான் அவரிடமிருந்து அவருக்குத் தெரியாமல் எடுத்துக்கொண்டாலே தவிர" என்று ஹிந்த் பின்த் உத்பா (ரலி) அவர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் கூறினார். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "உனக்கும் உன் குழந்தைக்கும் போதுமானதை நியாயமான அளவுக்கு நீ எடுத்துக்கொள்!" என்று சொன்னார்கள்.

நூல் : புகாரி 2211, 2460, 5359, 5364, 5370, 7161, 7180

எப்போது வேண்டுமானாலும் எவ்வளவு வேண்டுமானாலும் கணவனின் பொருளை மனைவி எடுத்துக் கொள்ளலாம் என்று இதைப் புரிந்து கொள்ளக் கூடாது. இது நிபந்தனைக்கு உட்பட்ட அனுமதியாகும்.

மனைவிக்கும் குழந்தைகளுக்கும் போதுமான அளவுக்கு கணவன் தராமல் இருந்தால் தான் இந்த அனுமதி.

உணவு உடை போன்ற அடிப்படைத் தேவைகளுக்கு மட்டுமே எடுக்க வேண்டும். ஆடம்பரத்துக்கும் ஊதாரித்தனம் செய்வதற்கும் எடுக்கக் கூடாது.

இவ்வாறு எடுப்பது கணவனைப் பாதிக்கக் கூடியதாக ஆகக் கூடாது. அவர் கடனாளியாகும் அளவுக்கும் அவரது தொழில் பாதிக்கும் அளவுக்கும் எடுக்கக் கூடாது.

இந்த நிபந்தனைகளை மேற்கண்ட ஹதீஸில் இருந்தே நாம் அறிந்து கொள்ள இயலும்.

கணவனுக்குத் தெரியாமல் கணவன் வீட்டுப் பொருட்களைக் களவாடி பிறந்த வீட்டுக்கு அனுப்பும் பெண்களும் உள்ளனர். மேற்கண்ட அனுமதி இவர்களின் திருட்டுக்குப் பொருந்தாது. இதைப் பின்வரும் ஹதீஸிலிருந்து அறியலாம்.

سنن أبي داود 3565 - حَدَّثَنَا عَبْدُ الْوَهَّابِ بْنُ نَجْدَةَ الْحَوْطِيُّ، حَدَّثَنَا ابْنُ عَيَّاشٍ، عَنْ شُرَحْبِيلَ بْنِ مُسْلِمٍ، قَالَ: سَمِعْتُ أَبَا أُمَامَةَ، قَالَ: سَمِعْتُ رَسُولَ اللَّهِ صلّى الله عليه [ص:297] وسلم يَقُولُ: " إِنَّ اللَّهَ عَزَّ وَجَلَّ قَدْ أَعْطَى كُلَّ ذِي حَقٍّ حَقَّهُ، فَلَا وَصِيَّةَ لِوَارِثٍ، وَلَا تُنْفِقُ الْمَرْأَةُ شَيْئًا مِنْ بَيْتِهَا إِلَّا بِإِذْنِ زَوْجِهَا، فَقِيلَ: يَا رَسُولَ اللَّهِ، وَلَا الطَّعَامَ، قَالَ: «ذَاكَ أَفْضَلُ أَمْوَالِنَا»

எந்த ஒரு பெண்ணும் தன்னுடைய கணவனின் அனுமதி இல்லாமல் கணவனின் வீட்டிலிருந்து எதையும் செலவு செய்யக்கூடாது என்று நபியவர்கள் கூறினார்கள். அல்லாஹ்வின் தூதரே உணவைக்கூட வழங்கக் கூடாதா? என்று கேட்கப்பட்டது. அதற்கு நபியவர்கள் அதுதானே நம்முடைய செல்வங்களில் மிகச் சிறந்தது என்று கூறினார்கள்.

நூல் : அபூதாவூத்

கணவன் வீட்டில் உள்ள உணவை தனது பிறந்த வீட்டுக்கு வாரி வழங்குவதைத் தான் இது குறிக்கிறது. இல்லாதாருக்கு உதவுவதற்காக கணவனின் அனுமதி இல்லாமல் அவனைப் பாதிக்காத வகையில் தானதர்மம் செய்வதை இது குறிக்காது. ஏனெனில் கணவனைப் பாதிக்காத வகையில் தான தர்மங்களைச் செய்ய மனைவிக்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அனுமதி அளித்துள்ளனர்.

صحيح البخاري

1441 - حَدَّثَنَا يَحْيَى بْنُ يَحْيَى، أَخْبَرَنَا جَرِيرٌ، عَنْ مَنْصُورٍ، عَنْ شَقِيقٍ، عَنْ مَسْرُوقٍ، عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا، عَنِ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ: «إِذَا أَنْفَقَتِ المَرْأَةُ مِنْ طَعَامِ بَيْتِهَا غَيْرَ مُفْسِدَةٍ ، فَلَهَا أَجْرُهَا، وَلِلزَّوْجِ بِمَا اكْتَسَبَ، وَلِلْخَازِنِ مِثْلُ ذَلِكَ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

ஒரு பெண், தனது வீட்டிலுள்ள உணவைப் பாழ்படுத்தாமல், (பசித்தவர்களுக்குக் கொடுத்து) செலவு செய்தால், (அப்படி) செலவு செய்ததற்காக (அவளுக்குரிய) நற்பலன் அவளுக்குக் கிடைக்கும்! (அந்த உணவைச்) சம்பாதித்தற்கான நற்பலன் அவளது கணவனுக்கு உண்டு! கருவூலப் பொறுப்பாளருக்கும் அதுபோன்ற (நற்பலன்) கிடைக்கும்! ஒருவர் மற்றவரின் நற்பலனில் எதனையும் குறைத்துவிட மாட்டார்.

நூல் : புகாரி 1441, 1437, 1425, 2065

## பிள்ளைகள் பொருளை தந்தை எடுக்கலாம்

பிள்ளைகள் தலை எடுக்கும் வரை பிள்ளைகளை வளர்த்து ஆளாக்குவது தந்தையின் பொறுப்பாகும். தந்தை தளர்ந்து போய்விட்டால் அவரைக் கவனிக்கும் கடமை பிள்ளைகளுக்கு உள்ளது.

தந்தையின் அவசியத் தேவைகளைப் பிள்ளைகள் நிறைவேற்றாவிட்டால் தனது அத்தியாவசியத் தேவைகளுக்காக பிள்ளைகள் பணத்தை தந்தை எடுக்கலாம். ஊதாரித்தனம் செய்யும் வகையிலோ பிள்ளைகளைப் பாதிக்கும் வகையிலோ எடுக்கக் கூடாது.

سنن أبي داود

3530 - حدَّثنا محمدُ بنُ المِنهال، حدَّثنا يزيدُ بنُ زُرَيع، حدَّثنا حبيبٌ المعلمُ، عن عَمرو بن شعيب، عن أبيه عن جده: أن رجلاً أتى النبي - صلَّى الله عليه وسلم - فقال: يا رسولَ اللهِ، إن لي مالاً وولداً، وإن والدي يجتاح مالي، قال: "أنت ومالُكَ لِوالدك، إنَّ أولادَكم مِن أطيبِ كَسْبِكُم، فَكُلُوا مِن كَسْبِ أولادِكم"

ஒரு மனிதர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்தார். "அல்லாஹ்வின் தூதரே எனக்குப் பிள்ளையும் செல்வமும் இருக்கின்றன. ஆனால் என்னுடைய தந்தை என் பொருளை எடுத்துக் கொள்கிறார்" என்று கூறினார். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் "நீயும், உன்னுடைய செல்வமும் உன் தந்தைக்குரியவர்களே; நீங்கள் சம்பாதித்ததில் தூய்மையானது. உங்களுடைய குழந்தைகளே என்று விளக்கமளித்தார்கள்.

நூல்கள் : அபூதாவூத், நஸாயீ,

## உறவினர்களின் வீட்டில் உள்ள உரிமை

யாசகம் கேட்கக் கூடாது என்பதை முன்னர் விளக்கியுள்ளோம். நெருங்கிய உறவினர்களாக இருந்தாலும் அவர்களிடம் யாசகம் கேட்பது கூடாது.

ஆனாலும் நெருங்கிய உறவினர்களின், நெருங்கிய நண்பர்களின் வீடுகளுக்குச் சென்று உணவு கேட்பதும் எடுத்துச் சாப்பிடுவதும் யாசகம் கேட்பதில் அடங்காது. உணவுகளை உரிமையுடன் கேட்கலாம். எடுக்கலாம்.

இது இரு தரப்பிலும் கடைப்பிடிக்க வேண்டும்.

ஒரு உறவினர் வீட்டில் நாம் உரிமையுடன் உணவு கேட்டால் அந்த உறவினர் நம் வீட்டில் அப்படி நடந்து கொள்ள அனுமதிக்க வேண்டும்.

இப்படி நண்பர்களிடமும் உறவினர்களிடமும் உரிமையுடன் உணவுப் பொருட்களை எடுத்துக் கொள்வது யாசகம் கேட்பதில் அடங்காது.

மேலும் உறவினர் மற்றும் நண்பர்களின் வீடுகளில் ஆண்கள் பெண்கள் அனைவரும் கூட்டாக அமர்ந்து உண்ணுவதும் தவறல்ல. அவ்வாறு உண்ணும் போது பெண்கள் இஸ்லாம் கூறும் முறைப்படி ஆடைகள் அணிந்திருப்பது அவசியம்.

உங்கள் வீடுகளிலோ, உங்கள் தந்தையர் வீடுகளிலோ, உங்கள் அன்னையர் வீடுகளிலோ, உங்கள் சகோதரர்கள் வீடுகளிலோ, உங்கள் சகோதரிகளின் வீடுகளிலோ, உங்கள் தந்தையின் சகோதரர்கள் வீடுகளிலோ, உங்கள் தந்தையின் சகோதரிகள் வீடுகளிலோ, உங்கள் தாயின் சகோதரர்கள் வீடுகளிலோ, உங்கள் தாயின் சகோதரிகளின் வீடுகளிலோ, அல்லது எதன் சாவிகளை நீங்கள் உடமையாக வைத்துள்ளீர்களோ அங்கேயோ, அல்லது உங்கள் நண்பரிடமோ நீங்கள் சாப்பிடுவது உங்கள் மீது குற்றமில்லை. நோயாளியின் மீதும் குற்றமில்லை. ஊனமுற்றவர் மீதும் குற்றமில்லை. குருடர் மீதும் குற்றமில்லை. நீங்கள் அனைவரும் சேர்ந்தோ, தனியாகவோ சாப்பிடுவது உங்கள் மீது குற்றமில்லை. வீடுகளில் நுழையும்போது அல்லாஹ்விடமிருந்து பாக்கியமிக்க தூய்மையான காணிக்கையாக உங்கள் மீதே ஸலாம் கூறிக் கொள்ளுங்கள்! நீங்கள் விளங்கிக்

கொள்வதற்காக இவ்வாறே உங்களுக்கு வசனங்களை அல்லாஹ் தெளிவுபடுத்துகிறான்.

திருக்குர்ஆன் 24:61

## விருந்துக்கும் கட்டுப்பாடு உண்டு

உறவினர் வீடுகளுக்கும் நன்பர்கள் வீடுகளுக்கும் சென்றால் அவர்கள் விருந்தளிக்கின்றனர். அது போல் நம்மிடம் வந்தால் நாம் விருந்தளிக்கிறோம். இதற்கு மார்க்கத்தில் வலியுறுத்தப்பட்டுள்ளது என்ற போதும் இதற்கு ஒரு எல்லை வகுக்கப்பட்டுள்ளது.

ஒரு நாள் விருந்தளிப்பது தான் கடமையாகும். மூன்று நாட்கள் வரை விரும்பினால் விருந்தளிக்கலாம். மூன்று நாட்களுக்கு மேல் எந்த வீட்டிலும் விருந்தாளியாக தங்கக் கூடாது.

ஆயினும் விருந்தாளியாக இல்லாமல் உடன்பிறந்த சகோதர சகோதரிகள் மருமகன் மருமகள்கள் போன்ற உறவினராக இருந்து அவர்கள் அதிக நாட்கள் தங்குவது வீட்டின் உரிமையாளருக்குச் சிரமமாக இல்லாவிட்டால் அதிக நாட்கள் தங்கலாம். அவர்கள் விருந்தாளியின் கணக்கில் வர மாட்டார்கள். வீட்டாருக்கு இது சிரமம் தருகிறதா என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும்.

صحيح البخاري 6019 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ، حَدَّثَنَا اللَّيْثُ، قَالَ: حَدَّثَنِي سَعِيدٌ المَقْبُرِيُّ، عَنْ أَبِي شُرَيْحٍ العَدَوِيِّ، قَالَ: سَمِعَتْ أُذُنَايَ، وَأَبْصَرَتْ عَيْنَايَ، حِينَ تَكَلَّمَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَ: «مَنْ كَانَ يُؤْمِنُ بِاللَّهِ وَاليَوْمِ الآخِرِ فَلْيُكْرِمْ جَارَهُ، وَمَنْ كَانَ يُؤْمِنُ بِاللَّهِ وَاليَوْمِ الآخِرِ فَلْيُكْرِمْ ضَيْفَهُ جَائِزَتَهُ» قَالَ: وَمَا جَائِزَتُهُ يَا رَسُولَ اللَّهِ؟ قَالَ: «يَوْمٌ وَلَيْلَةٌ، وَالضِّيَافَةُ ثَلاَثَةُ أَيَّامٍ، فَمَا كَانَ وَرَاءَ ذَلِكَ فَهُوَ صَدَقَةٌ عَلَيْهِ، وَمَنْ كَانَ يُؤْمِنُ بِاللَّهِ وَاليَوْمِ الآخِرِ فَلْيَقُلْ خَيْرًا أَوْ لِيَصْمُتْ»

அபூஷுரைஹ் அல்அதவீ (ரலி) அவர்கள் கூறியதாவது:

நபி (ஸல்) அவர்கள் பேசிய போது என் காதுகளால் கேட்டேன்; என் கண்களால் பார்த்தேன். அப்போது அவர்கள், அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் தம் அண்டை வீட்டாரைக் கண்ணியப்படுத்தட்டும். அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் தம் விருந்தாளிக்குத் தமது கொடையைக் கண்ணியமாக வழங்கட்டும் என்று கூறினார்கள். அப்போது, அல்லாஹ்வின் தூதரே! அவருடைய கொடை என்ன? என்று கேட்கப்பட்டது. அதற்கு

அவர்கள், (அவரு டைய கொடை) ஒரு பகல் ஓர் இரவு (உபசரிப்பது) ஆகும். விருந்துபசாரம் மூன்று தினங்களாகும். அதற்கு மேல் (அளிக்கும் உணவும் உபசரிப்பும்) அவருக்குத் தர்மமாக அமையும். மேலும், அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் (ஒன்று) நல்லதைப் பேசட்டும். அல்லது வாய் மூடி இருக்கட்டும் என்று கூறினார்கள்.

நூல் : புகாரி 6019

صحيح مسلم 15 - (48) حَدَّثَنَا أَبُو كُرَيْبٍ مُحَمَّدُ بْنُ الْعَلَاءِ، حَدَّثَنَا وَكِيعٌ، حَدَّثَنَا عَبْدُ الْحَمِيدِ بْنُ جَعْفَرٍ، عَنْ سَعِيدِ بْنِ أَبِي سَعِيدٍ الْمَقْبُرِيِّ، عَنْ أَبِي شُرَيْحٍ الْخُزَاعِيِّ، قَالَ: قَالَ رَسُولُ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «الضِّيَافَةُ ثَلَاثَةُ أَيَّامٍ، وَجَائِزَتُهُ يَوْمٌ وَلَيْلَةٌ، وَلَا يَحِلُّ لِرَجُلٍ مُسْلِمٍ أَنْ يُقِيمَ عِنْدَ أَخِيهِ حَتَّى يُؤْثِمَهُ»، قَالُوا: يَا رَسُولَ اللهِ، وَكَيْفَ يُؤْثِمُهُ؟ قَالَ: «يُقِيمُ عِنْدَهُ وَلَا شَيْءَ لَهُ يَقْرِيهِ بِهِ»،

அபூஷுரைஹ் அல்குஸாயீ (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "விருந்துபசாரம் மூன்று தினங்களாகும். ஒரு பகல் ஓர் இரவு (விருந்துபசாரம்) அவருடைய கொடையாகும். ஒரு முஸ்லிமான மனிதர், தம் சகோதரரிடம் அவரைப் பாவத்தில் தள்ளும் அளவுக்குத் தங்கியிருப்பதற்கு அனுமதி இல்லை" என்று கூறினார்கள். மக்கள், "அவரைப் பாவத்தில் தள்ளுதல் எப்படி, அல்லாஹ்வின் தூதரே?" என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், "அவ(ர் தம் சகோதர)ரிடம் தங்கி இருப்பார். ஆனால், விருந்துபசாரம் செய்யுமளவுக்கு அவரிடம் எதுவுமே இருக்காது" என்று கூறினார்கள்.

நூல் : முஸ்லிம் 4611

## லஞ்சம்

### லஞ்சத்துக்குத் தடை

இஸ்லாத்தில் லஞ்சம் வாங்குவது அறவே தடுக்கப்பட்டுள்ளது. யாரிடம் அதிகாரம் கொடுக்கப்பட்டுள்ளதோ அவர்களுக்கு முறையாக ஊதியம் அளிக்கப்படுகிறது. அவர்கள் எந்தப் பணியைச் செய்வதற்காக நியமிக்கப்பட்டார்களோ அந்தப் பணியைச் செய்து கொடுக்க மக்களிடம் பெறப்படும் கையூட்டுதான் லஞ்சம் எனப்படும்

குடும்ப அட்டை, பாஸ்போர்ட் போன்ற அத்தியாவசியங்களுக்குக்கூட லஞ்சம் வாங்குகிறார்கள். தொழில்களுக்கும் கட்டடங்கள் கட்டவும் அனுமதி அளிக்க லஞ்சம் வாங்குவது சர்வசாதாரணமாகி விட்டது. முஸ்லிம்கள் இது போன்ற பொறுப்புகளில் இருந்தால் அவர்கள் ஒருபோதும் லஞ்சம் வாங்கக் கூடாது.

அவர்களில் அதிகமானோர் பாவத்திற்கும், வரம்பு மீறலுக்கும், தடுக்கப்பட்டதை உண்பதற்கும் விரைந்து செல்வதை நீர் காண்பீர்! அவர்கள் செய்வது மிகவும் கெட்டது. அவர்களின் பாவமான கூற்றை விட்டும், விலக்கப்பட்டதை அவர்கள் உண்பதை விட்டும், வணக்கசாலிகளும், மேதைகளும் அவர்களைத் தடுத்திருக்க வேண்டாமா? அவர்கள் செய்வது மிகவும் கெட்டது.

திருக்குர்ஆன் 5:62,63

سنن أبي داود

3541 - حدَّثنا أحمدُ بنُ عمرو بن السَّرْحِ، حدَّثنا ابنُ وهب، عن عُمر بنِ مالك، عن عُبيد الله بنِ أبي جعفر، في خالد بن أبي عِمرانَ، عن القاسم عن أبي أُمامةَ، عن النبيَّ -صلَّى الله عليه وسلم- قال: "مَنْ شَفَعَ لأخيه شَفَاعةً، فأهدى له هديةً عليها فَقَبِلَهَا، فقد أتى باباً عظيماً من أبواب الرِّبا"

ஒருவர் தன் சகோதரருக்காகப் பரிந்துரை செய்து அதற்காக அவருக்கு ஒரு அன்பளிப்பு வழங்கப்பட்டு அதை அவர் ஏற்றுக் கொண்டால் அவர் வட்டியின் மிகப் பெரிய வாசலுக்கு வந்துவிட்டார் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்.

நூல் : அபூதாவூத்

سنن أبي داود

3580 - حدَّثنا أحمدُ بن يونسَ، حدَّثنا ابنُ أبي ذئب، عن الحارث بن عبد الرحمن، عن أبي سَلَمة عن عبدِ الله بن عمرو، قال: لَعَنَ رسولُ الله - صلَّى الله عليه وسلم - الراشِيَ والمُرْتَشِيَ

லஞ்சம் வாங்குபவன் லஞ்சம் கொடுப்பவன் ஆகிய இருவரையும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சபித்தார்கள்.

நூல்கள் : அபூதாவூத், திர்மிதி, அஹ்மத்

## பணம் கொடுத்து வேலை தேடுவது குற்றமா?

அரசு வேலை கிடைக்க வேண்டுமானால் அதிகாரிகளுக்கும், ஆட்சியாளர்களுக்கும் லஞ்சம் கொடுக்காமல் நடக்காது என்ற நிலை உள்ளது. லஞ்சம் கொடுத்து வேலை தேடுவது கூடுமா என்பது குறித்தும் நாம் அறிந்து கொள்ள வேண்டும்.

பிறர் பொருளை நம்முடையதாக ஆக்கிக் கொள்வதற்காக ஒரு பொருளை அதிகாரிகளுக்கோ நீதிபதிகளுக்கோ கொடுத்தால் அது கட்டாயம் தடுக்கப்பட்டதாகும். இப்படி கொடுப்பதுதான் லஞ்சம் எனப்படும். இவ்வாறு கொடுப்பதும் குற்றம். வாங்குவதும் மாபெரும் குற்றமாகும்.

உங்களுக்கிடையே (ஒருவருக்கொருவர்) உங்கள் பொருட்களைத் தவறான முறையில் உண்ணாதீர்கள்! தெரிந்து கொண்டே மக்களின் பொருட்களில் ஒரு பகுதியைப் பாவமான முறையில் சாப்பிடுவதற்காக அதிகாரிகளிடம் உங்கள் பொருட்களைக் கொண்டு செல்லாதீர்கள்!

திருக்குர்ஆன் 2 : 188

வரிசைப்படியும், முன்னுரிமை அடிப்படையிலும் கிடைக்க வேண்டிய உரிமைகளை முன்னரே பெற்றுக் கொள்வதற்காக கொடுக்கப்படும் தொகையும் லஞ்சம்தான். நமக்கு முன்னால் காத்திருப்பவரைப் பின்னால் தள்ளி விட்டு நாம் முன்னால் அடைந்து கொள்வது முறைகேடாகும். மற்றவரின் உரிமை பறிக்கப்படுவதற்காக கொடுக்கப்படுவதால் இதுவும் லஞ்சம்தான்.

தகுதியின் அடிப்படையில் பங்கிடப்படும் உரிமைகளில் குறைந்த தகுதி உள்ளவர் பணத்தைக் கொடுத்து அதிகத் தகுதி உள்ளவரைப் பின்னால் தள்ளிவிட்டு அந்த இடத்தை அடைந்தால் அதுவும் குற்றமாகும். நம்மை விட அதிகத் தகுதி உள்ளவர் காத்திருக்கும்போது அவரைப் பின்னால் தள்ளிவிடுவதற்காகக் கொடுக்கப்படும் பணமும் லஞ்சம்தான். இதை வாங்குவதும் கொடுப்பதும் குற்றமாகும்.

மற்றவர்களின் உரிமையைப் பாதிக்காத வகையில் நம்முடைய உரிமையைப் பெறுவதற்காக பல நேரங்களில் பணம் கொடுத்தாக வேண்டியுள்ளது.

மின் இணைப்பு பெற வேண்டும். வீடு கட்டுவதற்கு அனுமதி பெற வேண்டும். நமக்குச் சேர வேண்டிய உரிமையைப் பெற வேண்டும் என்றால் இது போன்ற காரியங்களைச் செய்து தருவதற்காக பணம் கொடுக்கும் நிலை ஏற்படுகிறது. இப்படி கொடுக்கும் பணத்தின் மூலம் நாம் யாருடைய உரிமையையும் பறிப்பதில்லை. நம்முடைய உரிமையைத்தான் அடைந்து கொள்கிறோம்.

பணம் வாங்காமல் இதைச் செய்வதற்காக அதிகாரிகளுக்கு ஊதியம் அளிக்கப்படுவதால் மக்களிடம் எதையும் பெற்றுக் கொள்ளாமல்தான் அவர்கள் செய்து கொடுக்க வேண்டும். அவர்களின் கடமையைச் செய்வதற்காக பணம் வாங்கினால் அது மார்க்கத்தில் குற்றமாகும். கடமையைச் செய்வதற்காக ஒரு முஸ்லிம் லஞ்சம் வாங்க அனுமதி இல்லை.

சாதிச் சான்றிதழ் வாங்குதல் போன்ற காரியங்களானாலும், வீடு கட்டுவதற்கு பிளான் அப்ரூவல் பண்ணுவதாக இருந்தாலும், மின் இணைப்பு பெறுவதாக இருந்தாலும், வேறு எந்தத் துறையில் எந்தக் காரியத்தை சட்டப்படி செய்து தருவதாக இருந்தாலும் இந்தியாவில் லஞ்சம் கொடுத்தே ஆக வேண்டும். இதுதான் எழுதப்படாத சட்டமாக உள்ளது.

பணம் கொடுக்காமல் காரியம் ஆகாது என்ற அளவுக்கு கேடுகெட்டவர்கள் ஆட்சி செய்வதால் அப்போது நம்முடைய உரிமையைப் பெறுவதற்காக பணம் கொடுப்பது நிர்பந்தம் என்ற அடிப்படையில் மன்னிக்கப்படும்.

பணம் கொடுக்காவிட்டால் ரேஷன் கார்டு கிடைக்காது என்றால் ரேஷன் கார்டு அவசியம் என்பதால் இது நிர்பந்த நிலையாகி விடுகிறது. இல்லாவிட்டால் நம்முடைய அடிப்படைத் தேவைகளை அடைய முடியாமல் போய் விடும்.

கடமையைச் செய்ய லஞ்சம் கேட்பவனைக் கையும் களவுமாக பிடித்துக் கொடுக்க இயலும் என்றால் அதைச் செய்ய வேண்டும். அவ்வாறு இயலாதவர்கள் குற்றம் பிடிக்கப்பட மாட்டார்கள்.

பார்க்க : திருக்குர்ஆன் 2:173, 6:119, 6:145, 16:115

## வேலைக்கு ஆட்களைச் சேர்த்து விட கமிஷன் வாங்கலாமா?

வேலைக்கு ஆட்களைச் சேர்த்தல், ஆட்களுக்கு வேலை கொடுத்தல் போன்றதை ஒருவர் செய்தால் அது ஒரு உழைப்பாகும். அந்த உழைப்புக்கு கூலி பெறுவதும், கொடுப்பதும் குற்றமாகாது.

எங்கெங்கே வேலைகள் உள்ளன என்ற விபரம் அனைவருக்கும் தெரிந்திருக்க முடியாது. அதையே தொழிலாகக் கொண்டவர்களுக்குத்தான் இது சாத்தியமாகும். எனவே இது பற்றி அறிந்தவர்கள் நமக்கு ஒரு வேலையை அறிமுகம் செய்வதற்கு கொடுக்கும் பணம் லஞ்சத்தில் சேராது. இவ்வாறு செய்யும்போது யாருடைய உரிமையையும் நாம் பறிக்கவில்லை. நியாயத்திற்கு எதிராக நாம் பணம் கொடுக்கவுமில்லை. எனவே இது தவறல்ல.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மதீனாவிற்கு ஹிஜ்ரத் செய்தபோது தமக்கு வழிகாட்டியாக ஒருவரை ஏற்படுத்தி அவருக்குக் கூலி கொடுத்தார்கள்.

صحيح البخاري

2263 - حَدَّثَنَا إِبْرَاهِيمُ بْنُ مُوسَى، أَخْبَرَنَا هِشَامٌ، عَنْ مَعْمَرٍ، عَنِ الزُّهْرِيِّ، عَنْ عُرْوَةَ بْنِ الزُّبَيْرِ، عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا: " وَاسْتَأْجَرَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ [ص:89]، وَأَبُو بَكْرٍ رَجُلًا مِنْ بَنِي الدِّيلِ، ثُمَّ مِنْ بَنِي عَبْدِ بْنِ عَدِيٍّ هَادِيًا خِرِّيتًا - الخِرِّيتُ: المَاهِرُ بِالهِدَايَةِ - قَدْ غَمَسَ يَمِينَ حِلْفٍ فِي آلِ العَاصِ بْنِ وَائِلٍ، وَهُوَ عَلَى دِينِ كُفَّارِ قُرَيْشٍ، فَأَمِنَاهُ فَدَفَعَا إِلَيْهِ رَاحِلَتَيْهِمَا، وَوَاعَدَاهُ غَارَ ثَوْرٍ بَعْدَ ثَلاَثِ لَيَالٍ، فَأَتَاهُمَا بِرَاحِلَتَيْهِمَا صَبِيحَةَ لَيَالٍ ثَلاَثٍ، فَارْتَحَلاَ وَانْطَلَقَ مَعَهُمَا عَامِرُ بْنُ فُهَيْرَةَ، وَالدَّلِيلُ الدِّيلِيُّ، فَأَخَذَ بِهِمْ أَسْفَلَ مَكَّةَ وَهُوَ طَرِيقُ السَّاحِلِ "

(மக்காவைத் துறந்து, ஹிஜ்ரத் செய்து மதீனாவுக்குச் சென்றபோது) நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் அபூபக்ர் (ரலி) அவர்களும் பனூதீல் குலத்தைச் சேர்ந்த பனூ அப்து பின் அதீ, என்பவரை (வழிகாட்டியாகக்) கூலிக்கு அமர்த்தினார்கள். அவர் தேர்ந்த வழிகாட்டியாக இருந்தார். அம்மனிதர் ஆஸ் பின் வாயிலின் குடும்பத்தாரிடம் உடன்படிக்கை செய்திருந்தார்; மேலும், அவர், குறைஷிக் காஃபிர்களின் மார்க்கத்தில் இருந்தார்.

நூல் : புகாரி 2263

இது போன்ற தரகு வேலைகளில் ஈடுபடுவோர் மற்றவர்களின் உரிமைகளைப் பறிப்பதற்கு லஞ்சம் கொடுத்து நமக்கு வேலை வாங்கித் தருகிறார்கள் என்பது தெரிய வந்தால் அப்போது அது குற்றமாகும்.

## கொடுத்த அன்பளிப்பைத் திரும்பக் கேட்கக் கூடாது

அன்பளிப்பாகக் கொடுத்த பொருளைத் திரும்பக் கேட்கக் கூடாது. அன்பளிப்பாகக் கொடுத்த பின்னர் இருவருக்கும் இடையே பிரச்சனை வந்தால் கொடுத்த அன்பளிப்பை வெட்கமில்லாமல் திரும்பக் கேட்கின்றனர். இவ்வாறு திரும்பக் கேட்க மார்க்கத்தில் அனுமதி இல்லை. அப்படி திரும்பக் கேட்டால் அதைத் திருப்பிக் கொடுக்க வேண்டிய அவசியமும் இல்லை.

صحيح البخاري

2622 - حَدَّثَنَا عَبْدُ الرَّحْمَنِ بْنُ المُبَارَكِ، حَدَّثَنَا عَبْدُ الوَارِثِ، حَدَّثَنَا أَيُّوبُ، عَنْ عِكْرِمَةَ، عَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، قَالَ: قَالَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «لَيْسَ لَنَا مَثَلُ السَّوْءِ، الَّذِي يَعُودُ فِي هِبَتِهِ كَالكَلْبِ يَرْجِعُ فِي قَيْئِهِ»

தான் அன்பளிப்பாகக் கொடுத்ததைத் திரும்பக் கேட்பவன் தன் வாந்தியைத்தானே திரும்பச் சாப்பிடும் நாயைப் போன்றவன் ஆவான். (இது போன்ற) இழிகுணம் நமக்கு முறையல்ல என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல் : புகாரி 2589, 2621, 2622, 3003, 6975

திருமணம், வீடு குடியேறுதல் போன்ற நிகழ்ச்சிகளை ஒட்டி அன்பளிப்புகள் செய்யும் வழக்கம் சமுதாயத்தில் உள்ளது. இதற்கு மார்க்கத்தில் தடை இல்லை. ஆனால் நம்முடைய வீட்டில் நடக்கும் நிகழ்ச்சிகளின் போது திரும்பத் தருவார்கள் என்று எதிர்பார்த்துத் தான் இந்த அன்பளிப்புகள் பெரும்பாலும் அமைந்துள்ளன. அவ்வாறு செய்யாவிட்டால் அதைச் சொல்லிக் காட்டி மனதைப் புன்படுத்துவதும் சமுதாயத்தில் காணப்படுகிறது. இது போன்ற போலி அன்பளிப்புகளுக்கும் மேற்கண்ட ஹதீஸின் எச்சரிக்கை பொருந்தும்.

எனவே இது போன்ற போலியான திருமண அன்பளிப்புகளைத் தவிர்க்க வேண்டும்

ஒருவருக்கு நாம் அன்பளிப்பு கொடுக்கிறோம். அவர் தனது நெருக்கடிக்காக அதை விலை பேசுவது நமக்குத் தெரிய வருகிறது. அப்போது அதை நாம் விலை கொடுத்து வாங்குவதற்குக் கூட அனுமதி இல்லை. ஏனெனில் நாம் விலைக்குக் கேட்கும் போது அவர் சந்தை மதிப்பில் விலை கூற மாட்டார். அற்பமான விலையையே கூறுவார். இதனால் நாம் கொடுத்த அன்பளிப்பில் சிறு பகுதியை திரும்பப் பெற்றவர்களாகி விடுவோம் என்பதால் இதையும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தடை செய்துள்ளார்கள்.

صحيح البخاري 1490 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ، أَخْبَرَنَا مَالِكُ بْنُ أَنَسٍ، عَنْ زَيْدِ بْنِ أَسْلَمَ، عَنْ أَبِيهِ، قَالَ: سَمِعْتُ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُ، يَقُولُ: حَمَلْتُ عَلَى فَرَسٍ فِي سَبِيلِ اللَّهِ، فَأَضَاعَهُ الَّذِي كَانَ عِنْدَهُ، فَأَرَدْتُ أَنْ أَشْتَرِيَهُ وَظَنَنْتُ أَنَّهُ يَبِيعُهُ بِرُخْصٍ، فَسَأَلْتُ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَ: «لاَ تَشْتَرِي، وَلاَ تَعُدْ فِي صَدَقَتِكَ، وَإِنْ أَعْطَاكَهُ بِدِرْهَمٍ، فَإِنَّ العَائِدَ فِي صَدَقَتِهِ كَالعَائِدِ فِي قَيْئِهِ»

உமர் (ரலி) அவர்கள் கூறியதாவது:

அல்லாஹ்வின் பாதையில் பயணம் செய்வதற்காக நான் ஒருவருக்கு குதிரையொன்றை (தர்மமாக)க் கொடுத்தேன். ஆனால் அவர் அதை (சரியாகப் பராமரிக்காமல்) வீணாக்கி விட்டார். எனவே நான் அதை விலைக்கு வாங்க நாடினேன். இன்னும் அவர் மிகக் குறைந்த பணத்திற்கே விற்றுவிடுவார் என்றும் எண்ணினேன். எனவே இதைப் பற்றி நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள், அதை வாங்காதீர்! உமது தர்மத்தை நீர் திரும்பப் பெற்றுக் கொள்ளாதீர்! அவன் அதை ஒரு திர்ஹத்திற்குத் தந்தாலும் சரியே. ஏனெனில் தர்மத்தைத் திரும்பப் பெறுபவன் தான் எடுத்த வாந்தியை உண்பவனைப் போன்றவனாவான் என்றார்கள்.

நூல் : புகாரி 1490

ஒருவருக்கு நாம் அன்பளிப்பாகக் கொடுத்த பின் அது நம்முடையது நாம் கொடுத்தது என்ற எண்ணம் கூட நமக்கு வரக் கூடாது.

## சூது

மது மற்றும் சூதாட்டம் பற்றி உம்மிடம் கேட்கின்றனர். "அவ்விரண்டிலும் பெரும் கேடும், மக்களுக்குச் சில பயன்களும் உள்ளன. அவ்விரண்டின் பயனை விட கேடு இவ்வுலகிலும், மறுமையிலும் மிகப் பெரியது" எனக் கூறுவீராக!

திருக்குர்ஆன் 2:219

நம்பிக்கை கொண்டோரே! மது, சூதாட்டம், பலிபீடங்கள், (குறி கேட்பதற்கான) அம்புகள், ஆகியவை அருவருப்பானதும், ஷைத்தானின் நடவடிக்கையுமாகும். எனவே இதிலிருந்து விலகிக் கொள்ளுங்கள்! வெற்றி பெறுவீர்கள்!

திருக்குர்ஆன் 5:90

திருக்குர்ஆனில் சூதாட்டத்தை அல்லாஹ் தடை செய்துள்ளான். சூதாட்டம் ஒரு தீயசெயல் என்பதை அதிகமான மக்கள் அறிந்து வைத்துள்ளனர். முஸ்லிமல்லாத மக்களும்கூட சூதாட்டம் ஒரு பாவச்செயல் என்று நம்புகின்றனர். ஆனால் சூதாட்டம் என்றால் என்ன என்பது குறித்து சரியான விளக்கம் அவர்களிடம் இல்லை.

தாயக்கட்டை, சீட்டாட்டம் ஆகியவைதான் சூதாட்டம் என்ற அளவில்தான் சூதாட்டம் பற்றி மக்களின் அறிவு அமைந்துள்ளது. குறிப்பிட்ட விளையாட்டுகள்தான் சூது என்று கருதுவது அறியாமையாகும்.

சூது என்றால் என்ன? சிலர் கூட்டு சேர்ந்து தலைக்கு இவ்வளவு என்று பணத்தைப் போட்டு குறிப்பிட்ட விளையாட்டில் யார் வெல்கிறார்களோ அவர்கள் அனைவரின் பணத்தையும் எடுத்துக் கொள்வதுதான் சூதாட்டமாகும்.

இந்த அம்சம் எந்த விளையாட்டில் இருந்தாலும் அது சூதாட்டத்தில் சேரும். உதாரணமாக பத்துப்பேர் தலைக்கு நூறு ரூபாய் கட்டி ஓட்டப்பந்தயம் நடத்துகின்றனர். அதில் ஜெயிப்பவர் அனைவரது பணத்தையும் எடுத்துக் கொண்டால் அது சூதாட்டத்தில் சேரும். பணம் வைக்காமல் சீட்டாடினால் அது

வீணான காரியம் என்பதற்காக கூடாது என்று கூறலாமே தவிர அது சூதாட்டமாகாது. ஏனெனில் இங்கே எந்தப் பணப்பரிவர்த்தனையும் இல்லை.

மற்றவர்கள் ஆடும் ஆட்டத்தில் யார் ஜெயிப்பார்கள் என்பதற்காகப் பணம் கட்டினால்கூட அதுவும் சூதாட்டத்தில் சேரும்.

சூதாட்டம் என்பது ஒரு குறிப்பிட்ட விளையாட்டு அல்ல. குறுக்கு வழியில் பணம் சம்பாதிக்கும் குறிப்பிட்ட மோசடிதான் சூதாட்டமாகும் என்பதை இதில் இருந்து அறிந்து கொள்ளலாம்.

பரிசளிப்பது சூதாட்டத்தில் சேராது. குறிப்பிட்ட விளையாட்டில் வெற்றி பெற்றவருக்கு பத்தாயிரம் ரூபாய் தருவேன் என்று ஒருவர் அறிவிக்கிறார். விளையாடுபவர் இதில் எந்த முதலீடும் செய்யவில்லை. ஒருவருக்குப் பரிசு கொடுத்தால் போட்டியில் உள்ள மற்றவர்களுக்கு எந்த இழப்பும் இல்லை. போட்டியில் இல்லாத ஒருவர் தனது பணத்தைப் பரிசாக அளிப்பதால் இதில் பணத்தைப் போட்டு பணத்தை எடுத்தல் இல்லை. அப்படி இருந்தால் தான் அது சூதாட்டமாகும்.

எனவே பரிசுகள் பெறுவதும் வாங்குவதும் சூதாட்டமாகாது.

அது போல் தாயக்கட்டையை உருட்டி டைமன்ட் விழுந்தால் உன் பணம் எனக்கு. கிளாவர் விழுந்தால் என் பணம் உனக்கு என்ற அடிப்படையில் இருவரும் பணத்தை வைத்து வென்றவர் எடுத்துக் கொள்வதால் இதுவும் சூதாகும்.

ஒருவரின் பணத்தை நாம் எடுப்பது என்றால் வியாபாரத்தின் மூலம் எடுக்கலாம். அன்பளிப்பு என்ற வகையில் எடுக்கலாம். வாரிசு முறையில் எடுக்கலாம். உழைத்து ஊதியமாக எடுக்கலாம். ஆனால் ஒருவன் ஒரு விளையாட்டிலோ குலுக்கலிலோ வெல்வதால் அடுத்தவனின் பொருளை எடுப்பதில் ஒரு நியாயமும் இல்லை. இதில் தோற்றவன் தன்னுடைய பணத்தை எந்தப் பிரதிபலனையும் பெறாமல் இழப்பதால் சூதாட்டம் தடை செய்யப்பட்டுள்ளது.

இன்னொரு சூது இருக்கின்றது. 10 பொருட்களை வைத்திருப்பார்கள். வை ராஜா வை என்று மக்களை கூவி அழைப்பார்கள். வட்டமாக சுற்றக்கூடிய ஒன்றை

வைத்திருப்பார்கள். அதில் 1 ல் நாம் வைப்போம். அது சுற்றி வந்து அந்த 1 ல் நின்றுவிட்டால் நமக்கு அந்த பொருள் கிடைக்கும். 7 ல் நின்றால் கிடைக்காது. இதுவும் சூதில் ஒரு வகை.

இது போல் அதிர்ஷ்டத்தை வைத்து ஒருவர் பொருளை மற்றவர் அடைவதும், ஏதெனும் ஒரு துறையில் ஒருவருக்கு இருக்கும் திறமை அடிப்படையில் ஒருவர் பொருளை மற்றவர் அடைவதும் சூதாட்டத்தில் அடங்கும்.

## வியாபாரம்

### வியாபாரத்தில் ஏமாற்றுதல் இல்லை

யாரையும் எந்த விதத்திலும் ஏமாற்றக் கூடாது என்பது வியாபாரத்துக்கு இஸ்லாம் கூறும் முக்கியமான விதியாகும். வாங்குபவராக இருந்தாலும் விற்பவராக இருந்தாலும் நாணயத்தையும், நேர்மையையும் கடைப்பிடிக்க வேண்டும்.

ஆனால் மற்ற சந்தர்ப்பங்களில் யாரையும் ஏமாற்றத் துணியாதவர்கள்கூட வியாபாரத்தில் மக்களை ஏமாற்றுவது அனுமதிக்கப்பட்டுள்ளது என்பது போல் அலட்சியமாக நடந்து கொள்கின்றனர்.

அளவு நிறுவையில் குறைவு செய்தல், ஒரு பொருளைக் காட்டி இன்னொரு பொருளை விற்றல், போலியான பொருள்களை விற்றல், ஒரு பொருளில் இல்லாத தரத்தை இருப்பதாகக் கூறுதல் மற்றும் எண்ணற்ற ஏமாற்றும் முறைகளை வியாபாரிகள் சர்வசாதாரணமாகக் கடைப்பிடிக்கின்றனர்.

இந்தப் போக்கை அல்லாஹ்வும் கண்டித்துள்ளான், நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் வன்மையாகக் கண்டித்துள்ளனர்.

மத்யன் நகருக்கு அவர்களின் சகோதரர் ஷுஐபை அனுப்பினோம். "என் சமுதாயமே! அல்லாஹ்வை வணங்குங்கள்! உங்களுக்கு அவனன்றி வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை. உங்கள் இறைவனிடமிருந்து உங்களிடம் தக்க சான்று வந்துள்ளது. எனவே அளவையும், நிறுவையையும் நிறைவாக்குங்கள்! மக்களுக்கு அவர்களின் பொருட்களைக் குறைத்து விடாதீர்கள்! பூமியில் சீர்திருத்தம் செய்யப்பட்ட பின் அதில் குழப்பம் விளைவிக்காதீர்கள்! நீங்கள் நம்பிக்கை கொண்டிருந்தால் இதுவே உங்களுக்குச் சிறந்தது" என்று அவர் கூறினார்.

திருக்குர்ஆன் 7 : 85

மத்யன் நகருக்கு அவர்களின் சகோதரர் ஷுஐபை (அனுப்பினோம்) "என் சமுதாயமே! அல்லாஹ்வை வணங்குங்கள்! உங்களுக்கு அல்லாஹ்வையன்றி

வணக்கத் திற்குரியவன் வேறு யாருமில்லை. அளவையிலும் நிறுவையிலும் குறைவு செய்யாதீர்கள்! நீங்கள் நல்ல நிலையில் இருப்பதாகவே நான் காண்கிறேன். சுற்றி வளைக்கும் நாளின் வேதனை குறித்து உங்கள் விஷயத்தில் நான் பயப்படுகிறேன்" என்றார். "என் சமுதாயமே! அளவையும், நிறுவையையும் நேர்மையாக நிறைவாக்குங்கள்! மக்களுக்கு அவர்களின் பொருட்களைக் குறைத்து விடாதீர்கள்! இப்பூமியில் குழப்பம் விளைவித்துத் திரியாதீர்கள்!"

திருக்குர்ஆன் 11 : 84,85

அளக்கும்போது நிறைவாக அளங்கள்! நேரான தராசு கொண்டு எடை போடுங்கள்! இதுவே சிறந்தது. அழகிய முடிவு.

திருக்குர்ஆன் 17 : 35

மக்களுக்கு அவர்களின் பொருட்களைக் குறைத்து விடாதீர்கள்! பூமியில் குழப்பம் விளைவித்துத் திரியாதீர்கள்!

திருக்குர்ஆன் 26 : 183

அனாதையின் செல்வத்தை அவன் பருவமடையும் வரை அழகிய முறையில் தவிர நெருங்காதீர்கள்! அளவையும், நிறுவையையும் நேர்மையாக நிறைவேற்றுங்கள்! எவரையும் அவரது சக்திக்கு மேல் சிரமப்படுத்த மாட்டோம். உறவினராகவே இருந்தாலும் பேசும்போது நீதியையே பேசுங்கள்! அல்லாஹ்வின் ஒப்பந்தத்தை நிறைவேற்றுங்கள்! நீங்கள் படிப்பினை பெறுவதற்காக அவன் இதையே உங்களுக்கு வலியுறுத்துகிறான்.

திருக்குர்ஆன் 6 : 152

அளவு நிறுவையில் குறைவு செய்வோருக்குக் கேடுதான்! அவர்கள் மக்களிடம் அளந்து வாங்கும்போது நிறைவாக வாங்கிக் கொள்கின்றனர். மக்களுக்கு அளந்தோ, நிறுத்தோ கொடுத்தால் குறைத்து விடுகின்றனர். மகத்தான நாளில் அவர்கள் உயிர்ப்பிக்கப்பட உள்ளனர் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டாமா? அந்நாளில் அகிலத்தின் இறைவன் முன்னால் மனிதர்கள் நிற்பார்கள்.

திருக்குர்ஆன் 83:1-6

3881 - وَحَدَّثَنَا أَبُو بَكْرِ بْنُ أَبِى شَيْبَةَ حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ إِدْرِيسَ وَيَحْيَى بْنُ سَعِيدٍ وَأَبُو أُسَامَةَ عَنْ عُبَيْدِ اللَّهِ ح وَحَدَّثَنِى زُهَيْرُ بْنُ حَرْبٍ - وَاللَّفْظُ لَهُ - حَدَّثَنَا يَحْيَى بْنُ سَعِيدٍ عَنْ عُبَيْدِ اللَّهِ حَدَّثَنِى أَبُو الزِّنَادِ عَنِ الأَعْرَجِ عَنْ أَبِى هُرَيْرَةَ قَالَ نَهَى رَسُولُ اللَّهِ -صلى الله عليه وسلم- عَنْ بَيْعِ الْحَصَاةِ وَعَنْ بَيْعِ الْغَرَرِ.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மோசடி வியாபாரத்தை தடை செய்தார்கள்.

நூல் : முஸ்லிம் 3881

இது வியாபாரத்தில் இஸ்லாம் வகுத்துள்ள முக்கியமான விதியாகும். எந்த வியாபாரமாக இருந்தாலும் விற்பவர் வாங்குபவரை ஏமாற்றக் கூடாது. வாங்குபவர் விற்பவரை ஏமாற்றக் கூடாது.

தனக்குச் சொந்தமாக இல்லாததை விற்பது, தண்ணீரில் உள்ள மீன்களை விலை பேசுவது, கறவை மாட்டின் மடியில் உள்ள பாலைக் கறக்காமல் மடியில் வைத்தே விற்பது, மரத்தில் இல்லாத இனிமேல் உருவாகக் கூடிய காய்களை விற்பது, கால்நடைகளின் வயிற்றில் உள்ள குட்டியை விற்பது, மொத்தமாக பொருட்களைக் காட்டி இதில் ஏதோ ஒன்றை இந்த விலைக்கு தருவேன் எனக் கூறி விற்பது போன்றவை ஏமாற்றும் வியாபாரங்களாகும்.

மோசடி வியாபாரத்தைப் பொதுவாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தடை செய்தது போல் அன்று நடைமுறையில் இருந்த மோசடி கலந்த வியாபாரங்களைக் குறிப்பாகவும் தடை செய்துள்ளனர்.

## அறியாமைக் காலத்து மோசடி வியாபாரங்கள்

இந்தக் கல் எவ்வளவு தொலைவில் விழுகிறதோ அவ்வளவு நிலத்தை இன்ன விலைக்கு விற்கிறேன் என்றும் இந்தக் கல் எந்தப் பொருளின் மீது விழுகிறதோ அந்தப் பொருளின் விலை இவ்வளவு என்றும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலத்தில் சிலர் வியாபாரம் செய்து வந்தனர். இதில் மோசடி உள்ளதால் இதை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தடை செய்தனர்.

صحيح البخاري

2144 - حَدَّثَنَا سَعِيدُ بْنُ عُفَيْرٍ، قَالَ: حَدَّثَنِي اللَّيْثُ، قَالَ: حَدَّثَنِي عُقَيْلٌ، عَنِ ابْنِ شِهَابٍ، قَالَ: أَخْبَرَنِي عَامِرُ بْنُ سَعْدٍ، أَنَّ أَبَا سَعِيدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ أَخْبَرَهُ أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ «نَهَى عَنِ المُنَابَذَةِ»، وَهِيَ طَرْحُ الرَّجُلِ ثَوْبَهُ بِالْبَيْعِ إِلَى الرَّجُلِ قَبْلَ أَنْ يُقَلِّبَهُ، أَوْ يَنْظُرَ إِلَيْهِ «وَنَهَى عَنِ المُلاَمَسَةِ»، وَالمُلاَمَسَةُ: لَمْسُ الثَّوْبِ لاَ يُنْظَرُ إِلَيْهِ

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் முனாபதா வியாபாரத்தைத் தடை செய்தார்கள்! முனாபதா என்பது, ஒருவர் தமது துணியை, வாங்குபவர் விரித்துப் பார்ப்பதற்கு முன் அதை வாங்குபவரை நோக்கி எறிந்து (விட்டால் அதை அவர் வாங்கியே ஆக வேண்டும் என்ற நிபந்தனையுடன்) அவரிடம் விற்பதாகும்! மேலும் முலாமஸா எனும் வியாபாரத்தையும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்! முலாமஸா என்பது கண்ணால் பார்க்காமல் கையால் தொட்டவுடன் வியாபாரம் உறுதியாகிவிடும் என்ற நடைமுறையாகும்.

நூல் : புகாரி 2144

காயாக இருந்தாலும் கனியாக இருந்தாலும் பிஞ்சாக இருந்தாலும் அதை உடனடியாக அந்த நிலையில் விற்பதில் குற்றமில்லை. இதில் மோசடிக்கோ ஏமாற்றுதலுக்கோ இடமில்லை.

ஆனால் காயாக இருப்பதைக் காட்டி காயின் விலைக்கு விற்காமல் இது கனியாகும்போது இன்ன விலைக்கு நான் விற்கிறேன் என்று விலை பேசி பணத்தைப் பெற்றுக் கொள்வதும், பிஞ்சாக இருப்பதைக் காட்டி இது காயாக ஆகும்போது இன்ன விலை என்று கூறி முன் கூட்டியே பணம் பெற்றுக் கொள்வதும் மார்க்கத்தில் கூடாத ஒன்றாகும்.

இது போன்ற வியாபாரங்கள் முஸாபனா என்ற பெயரில் நபிகள் நாயகம் (ஸல்) காலத்தில் நடந்து வந்தது. அதை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்.

மரத்தில் உள்ள பழங்களைக் காட்டி இதில் 100 கிலோ கிடைக்கும். இது பழமான உடன் நீ எடுத்துக் கொள். இப்போது எனக்கு 50 கிலோ கொடு என்று ஒருவர் மற்றொருவரிடம் கேட்டால் இது கூடாது. ஏனெனில் அவர் சொன்னதைப் போன்று 100 கிலோ கிடைத்தால் தவறில்லை. அப்படி இல்லாமல் மரத்தில் 90 கிலோ, அல்லது 80 கிலோ கிடைத்தால் மரத்தில் உள்ள பொருளை வாங்கியவர் பாதிக்கப்படுகிறார். அப்படி மரத்தில் 100 கிலோவிற்கு அதிகமாக இருந்தால் விற்றவர் பாதிக்கப்படுகிறார்.

صحيح البخاري

2185 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ، أَخْبَرَنَا مَالِكٌ، عَنْ نَافِعٍ، عَنْ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا: " أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ نَهَى عَنِ المُزَابَنَةِ، وَالمُزَابَنَةُ: اشْتِرَاءُ الثَّمَرِ بِالتَّمْرِ كَيْلًا، وَبَيْعُ الكَرْمِ بِالزَّبِيبِ كَيْلًا "

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் முஸாபனாவைத் தடைசெய்தார்கள்! முஸாபனா என்பது மரத்திலுள்ள பேரீச்சங்கனிகளை உலர்ந்த பேரீச்சம் பழங்களுக்கு முகத்தலளவையில் விற்பதும் கொடியிலுள்ள திராட்சையை உலர்ந்த திராட்சைக்கு முகத்தலளவையில் விற்பதுமாகும்!

நூல் : புகாரி 2185

صحيح البخاري

2194 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ، أَخْبَرَنَا مَالِكٌ، عَنْ نَافِعٍ، عَنْ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا: «أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، نَهَى عَنْ بَيْعِ الثِّمَارِ حَتَّى يَبْدُوَ صَلاَحُهَا، نَهَى البَائِعَ وَالمُبْتَاعَ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மரத்திலுள்ள கனிகள் பலன் உறுதிப்படும் நிலையை அடையாதவரை விற்பதற்குத் தடை விதித்தார்கள். இத்தடை விற்பவருக்கும் வாங்குபவருக்கும் உள்ளதாகும்.

நூல் : புகாரி 2194

صحيح البخاري

2197 - حَدَّثَنِي عَلِيُّ بْنُ الهَيْثَمِ، حَدَّثَنَا مُعَلَّى بْنُ مَنْصُورٍ الرَّازِيُّ، حَدَّثَنَا هُشَيْمٌ، أَخْبَرَنَا حُمَيْدٌ، حَدَّثَنَا أَنَسُ بْنُ مَالِكٍ رَضِيَ اللَّهُ عَنْهُ، عَنِ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «أَنَّهُ نَهَى عَنْ بَيْعِ الثَّمَرَةِ حَتَّى يَبْدُوَ صَلاَحُهَا، وَعَنِ النَّخْلِ حَتَّى يَزْهُوَ»، قِيلَ: وَمَا يَزْهُو؟ قَالَ: «يَحْمَارُّ أَوْ يَصْفَارُّ»

ஹுமைத் (ரஹ்) அவர்கள் கூறியதாவது :

பலன் உறுதிப்படும் நிலையை அடைவதற்கு முன் மரத்திலுள்ள கனிகளை விற்பதற்கும், மரத்திலுள்ள கனிகள் பக்குவம் அடையாத வரை பேரீச்சமரத்தை விற்பதற்கும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள் என்று அனஸ் (ரலி) கூறினார்கள். பக்குவம் அடைவது என்றால் என்ன? என்று அனஸ் (ரலி) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், சிவப்பாகவோ மஞ்சளாகவோ மாறுவது என்று விடையளித்தார்கள்.

நூல் : புகாரி 2197

மற்றொரு அறிவிப்பில்

صحيح البخاري

2208 - حَدَّثَنَا قُتَيْبَةُ، حَدَّثَنَا إِسْمَاعِيلُ بْنُ جَعْفَرٍ، عَنْ حُمَيْدٍ، عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ: «أَنَّ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ نَهَى عَنْ بَيْعِ ثَمَرِ التَّمْرِ حَتَّى يَزْهُوَ»، فَقُلْنَا لِأَنَسٍ: مَا زَهْوُهَا؟ قَالَ: «تَحْمَرُّ وَتَصْفَرُّ، أَرَأَيْتَ إِنْ مَنَعَ اللَّهُ الثَّمَرَةَ بِمَ تَسْتَحِلُّ مَالَ أَخِيكَ»

அல்லாஹ் மரத்திலுள்ள கனிகளை அழித்துவிட்டால் உம் சகோதரரின் பொருளை எந்த அடிப்படையில் நீர் ஹலாலாகக் கருதுவீர் என்றும் கேட்டதாகக் கூறப்பட்டுள்ளது

நூல் : புகாரி 2208

பொதுவாக எந்த வியாபாரத்தில் விற்பவரோ வாங்குபவரோ ஏமாற்றப்படுகிறாரோ, அல்லது இருவரில் ஒருவர் ஏமாற்றப்படும் வாய்ப்பு உள்ளதோ அது போன்ற அனைத்து வியாபாரங்களும் தடுக்கப்பட்டவை என்பதுதான் இஸ்லாமிய வணிகத்தின் அடிப்படையாகும். மேற்கண்ட ஹதீஸ்களில் இருந்து இதனை நாம் அறிந்து கொள்ளலாம்.

இதை நாம் புரிந்து கொண்டால் நமது காலத்தில் உருவாகியுள்ள பல்வேறு வணிகமுறைகளில் அனுமதிக்கப்பட்டதையும் தடுக்கப்பட்டதையும் நாமாகவே அறிந்து கொள்ளலாம்.

குறைகளை வெளிப்படுத்த வேண்டும்

صحيح البخاري

2079 - حَدَّثَنَا سُلَيْمَانُ بْنُ حَرْبٍ، حَدَّثَنَا شُعْبَةُ، عَنْ قَتَادَةَ، عَنْ صَالِحٍ أَبِي الخَلِيلِ، عَنْ عَبْدِ اللَّهِ بْنِ الحَارِثِ، رَفَعَهُ إِلَى حَكِيمِ بْنِ حِزَامٍ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: " البَيِّعَانِ بِالخِيَارِ مَا لَمْ يَتَفَرَّقَا، - أَوْ قَالَ: حَتَّى يَتَفَرَّقَا - فَإِنْ صَدَقَا وَبَيَّنَا بُورِكَ لَهُمَا فِي بَيْعِهِمَا، وَإِنْ كَتَمَا وَكَذَبَا مُحِقَتْ بَرَكَةُ بَيْعِهِمَا "

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

விற்பவரும் வாங்குபவரும் பிரியாமலிருக்கும் வரை வியாபாரத்தை முறித்துக்கொள்ளும் உரிமை இருவருக்கும் உண்டு! அவ்விருவரும் உண்மை பேசிக் குறைகளைத் தெளிவுபடுத்தியிருந்தால் அவர்களுடைய வியாபாரத்தில் பரக்கத் அளிக்கப்படும்! குறைகளை மறைத்துப் பொய் சொல்லியிருந்தால் அவர்களின் வியாபாரத்தில் உள்ள பரக்கத் நீக்கப்படும்!

நூல் : புகாரி 2079

سنن ابن ماجه

2246 - حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ بَشَّارٍ، حَدَّثَنَا وَهْبُ بْنُ جَرِيرٍ، حَدَّثَنَا أَبِي، سَمِعْتُ يَحْيَى بْنَ أَيُّوبَ يُحَدِّثُ عَنْ يَزِيدَ بْنِ أَبِي حَبِيبٍ، عَنْ عَبْدِ الرَّحْمَنِ بْنِ شِمَاسَةَ عَنْ عُقْبَةَ بْنِ عَامِرٍ، قَالَ: سَمِعْتُ رَسُولَ اللَّهِ - صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ - يَقُولُ: "الْمُسْلِمُ أَخُو الْمُسْلِمِ، ولَا يَحِلُّ لِمُسْلِمٍ بَاعَ مِنْ أَخِيهِ بَيْعًا فِيهِ عَيْبٌ، إِلَّا بَيَّنَهُ لَهُ"

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

ஒரு முஸ்லிம் இன்னொரு முஸ்லிமிற்கு சகோதரன் ஆவான். குறையுடைய பொருளை விற்கும்போது அதனைத் தெளிவுபடுத்தாமல் விற்பது ஒரு முஸ்லிமிற்கு ஹலால் இல்லை.

நூல் : இப்னுமாஜா 2237

صحيح مسلم

295 - وَحَدَّثَنِى يَحْيَى بْنُ أَيُّوبَ وَقُتَيْبَةُ وَابْنُ حُجْرٍ جَمِيعًا عَنْ إِسْمَاعِيلَ بْنِ جَعْفَرٍ - قَالَ ابْنُ أَيُّوبَ حَدَّثَنَا إِسْمَاعِيلُ - قَالَ أَخْبَرَنِى الْعَلاَءُ عَنْ أَبِيهِ عَنْ أَبِى هُرَيْرَةَ. أَنَّ رَسُولَ اللَّهِ -صلى الله عليه وسلم- مَرَّ عَلَى صُبْرَةِ طَعَامٍ فَأَدْخَلَ يَدَهُ فِيهَا فَنَالَتْ أَصَابِعُهُ بَلَلاً فَقَالَ « مَا هَذَا يَا صَاحِبَ الطَّعَامِ ». قَالَ أَصَابَتْهُ السَّمَاءُ يَا رَسُولَ اللَّهِ. قَالَ « أَفَلاَ جَعَلْتَهُ فَوْقَ الطَّعَامِ كَىْ يَرَاهُ النَّاسُ مَنْ غَشَّ فَلَيْسَ مِنِّى ».

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஓர் உணவு (தானிய)க் குவியலைக் கடந்து சென்றார்கள். (விற்பனைக்காக வைக்கப்பட்டிருந்த) அந்தக் குவியலுக்குள் தமது கையை அவர்கள் நுழைத்தார்கள். அப்போது (தானியக் குவியலில் இருந்த) ஈரம் அவர்களின் விரல்களில் பட்டது. உடனே அவர்கள் "உணவு (தானியத்தின்) உரிமையாளரே! என்ன இது (ஈரம்)?" என்று கேட்டார்கள். அதற்கு அவர், "இதில் மழைச்சாரல் பட்டுவிட்டது, அல்லாஹ்வின் தூதரே!" என்றார். அப்போது அவர்கள், "ஈரமானதை மக்கள் பார்க்கும் விதமாக உணவு (தானியத்து)க்கு மேலே வைத்திருக்கக் கூடாதா?" என்று கேட்டுவிட்டு, "மோசடி செய்தவர் என்னைச் சார்ந்தவர் அல்லர்" என்று கூறினார்கள்.

நூல் : முஸ்லிம் 295

கால்நடைகளை விற்பவர், பாலைக் கறக்காமல் கனத்த மடியுடையதாகக் கால்நடைகளைக் காட்டி விற்பனை செய்வது கூடாது.

صحيح البخاري

2148 - حَدَّثَنَا ابْنُ بُكَيْرٍ، حَدَّثَنَا اللَّيْثُ، عَنْ جَعْفَرِ بْنِ رَبِيعَةَ، عَنِ الأَعْرَجِ، قَالَ أَبُو هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ، عَنِ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: " لاَ تُصَرُّوا الإِبِلَ وَالغَنَمَ، فَمَنِ ابْتَاعَهَا بَعْدُ فَإِنَّهُ بِخَيْرِ النَّظَرَيْنِ بَعْدَ أَنْ يَحْتَلِبَهَا: إِنْ شَاءَ أَمْسَكَ، وَإِنْ شَاءَ رَدَّهَا وَصَاعَ تَمْرٍ " وَيُذْكَرُ عَنْ أَبِي صَالِحٍ، وَمُجَاهِدٍ، وَالوَلِيدِ بْنِ رَبَاحٍ، وَمُوسَى بْنِ يَسَارٍ، عَنْ أَبِي هُرَيْرَةَ، عَنِ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «صَاعَ تَمْرٍ»، وَقَالَ بَعْضُهُمْ عَنْ ابْنِ سِيرِينَ: «صَاعًا مِنْ طَعَامٍ، وَهُوَ بِالخِيَارِ ثَلاَثًا»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

ஒட்டகம், ஆடு ஆகியவற்றை (அவற்றின் பாலைக் கறக்காமல் விட்டுவைத்திருந்து) மடி கனக்கச் செய்யாதீர்கள்! மடி கனக்கச் செய்த இத்தகைய பிராணிகளை வாங்கியவர் விரும்பினால் பால் கறந்து பார்த்து அதை வைத்துக் கொள்ளலாம்! விரும்பாவிட்டால் ஒரு ஸாஉ பேரீச்சம் பழத்துடன் அதை விற்றவரிடமே திருப்பிக் கொடுத்து விடலாம்! இந்த இரண்டில் எதைச் செய்வதற்கும் அவருக்கு அனுமதி உண்டு!

நூல் : புகாரி 2148, 2150

صحيح مسلم

3908 - حَدَّثَنَا قُتَيْبَةُ بْنُ سَعِيدٍ حَدَّثَنَا يَعْقُوبُ - يَعْنِى ابْنَ عَبْدِ الرَّحْمَنِ الْقَارِىَّ - عَنْ سُهَيْلٍ عَنْ أَبِيهِ عَنْ أَبِى هُرَيْرَةَ أَنَّ رَسُولَ اللَّهِ -صلى الله عليه وسلم- قَالَ « مَنِ ابْتَاعَ شَاةً مُصَرَّاةً فَهُوَ فِيهَا بِالْخِيَارِ ثَلاَثَةَ أَيَّامٍ إِنْ شَاءَ أَمْسَكَهَا وَإِنْ شَاءَ رَدَّهَا وَرَدَّ مَعَهَا صَاعًا مِنْ تَمْرٍ ».

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

மடி கனக்கச் செய்யப்பட்ட ஆட்டை வாங்கியவருக்கு மூன்று நாட்கள் விருப்ப உரிமை உண்டு. அதைத் திருப்பிக் கொடுப்பதானால், ஒரு ஸாஉ உணவுப் பொருளுடன் அதைத் திருப்பிக் கொடுக்கட்டும். (உணவு என்பது) கோதுமையாகத்தான் இருக்க வேண்டும் என்பதல்ல. (பேரீச்சம் பழமாகக்கூட இருக்கலாம்.)

நூல் : முஸ்லிம் 3908

## இல்லாததை விற்கக் கூடாது

தனது கட்டுப்பாட்டில் இல்லாதவற்றையும், தனது உடைமையல்லாதவற்றையும், அளவோ தரமோ தன்மையோ தெரியாதவற்றையும், பிறக்காத உயிரினத்தையும் விற்பது கூடாது.

صحيح البخاري

2143 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ، أَخْبَرَنَا مَالِكٌ، عَنْ نَافِعٍ، عَنْ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا: أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، «نَهَى عَنْ بَيْعِ حَبَلِ الحَبَلَةِ»، وَكَانَ بَيْعًا يَتَبَايَعُهُ أَهْلُ الجَاهِلِيَّةِ، كَانَ الرَّجُلُ يَبْتَاعُ الجَزُورَ إِلَى أَنْ تُنْتَجَ النَّاقَةُ، ثُمَّ تُنْتَجُ الَّتِي فِي بَطْنِهَا

பிறக்காத உயிரினத்தை விற்பதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்; அறியாமைக் கால மக்கள் இத்தகைய வியாபாரம் செய்து வந்தனர்! இந்த ஒட்டகம் குட்டி போட்டு, அந்தக் குட்டிக்குப் பிறக்கும் குட்டியை நான் வாங்கிக் கொள்கிறேன்! (அல்லது விற்கிறேன்!) என்று செய்யப்படும் வியாபாரமே இது!

நூல் : புகாரி 2143

## வியாபாரத்தில் எவ்வளவு லாபம் வைத்து விற்கலாம்?

வியாபாரத்தில் இவ்வளவு தான் இலாபம் வைக்க வேண்டும் என்று வரைமுறை எதுவும் மார்க்கத்தில் கூறப்படவில்லை.

விற்பவரும், வாங்குபவரும் பொருந்திக் கொள்வது தான் வியாபாரம். விற்பவர் எவ்வளவு இலாபம் வைத்திருந்தாலும் அதை வாங்குபவர் பொருந்திக் கொண்டால் அது மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்ட வியாபாரம் தான்.

நமது கடையில் விலை அதிகம் என்று ஒருவருக்குத் தெரிந்தால் நிச்சயம் அவர் நம்மிடம் வாங்க மாட்டார். அதே போல் பக்கத்துக் கடைக்காரரின் விலையை விடக் குறைவாகக் கொடுக்க வேண்டும் என்று கருதி இலாபம் இல்லாமல் நாமும் விற்பனை செய்ய மாட்டோம்.

صحيح البخاري

2079 - حدثنا سليمان بن حرب، حدثنا شعبة، عن قتادة، عن صالح أبي الخليل، عن عبد الله بن الحارث، رفعه إلى حكيم بن حزام رضي الله عنه، قال: قال رسول الله صلى الله عليه وسلم: " البيعان بالخيار ما لم يتفرقا، - أو قال: حتى يتفرقا - فإن صدقا وبينا بورك لهما في بيعهما، وإن كتما وكذبا محقت بركة بيعهما "

'விற்பவரும் வாங்குபவரும் பிரியாமல் இருக்கும் வரை வியாபாரத்தை முறித்துக் கொள்ளும் உரிமை இருவருக்கும் உண்டு. அவ்விருவரும் உண்மை பேசி, குறைகளைத் தெளிவுபடுத்தி இருந்தால் அவர்களுடைய வியாபாரத்தில் பரக்கத் அளிக்கப்படும். குறைகளை மறைத்துப் பொய் சொல்லியிருந்தால் அவர்களின் வியபாரத்தில் உள்ள பரக்கத் நீக்கப்படும்' என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல்: புகாரி 2079

வியாபாரி கூறும் விலையை வாங்குபவர் ஏற்றுக் கொண்டால் பொருளை வாங்கலாம். அந்த விலையில் உடன்பாடில்லை என்றால் அந்தப் பொருளை வாங்காமல் விட்டு விடலாம். இதில் இவ்வளவு தான் விலை வைக்க வேண்டும் என்று மார்க்கம் எந்த நிபந்தனையையும் விதிக்கவில்லை. ஆனால் அதே சமயம்

மேற்கண்ட ஹதீஸில் கூறப்படுவது போல், குறைகளை மறைக்காமல், பொய் சொல்லாமல் விற்க வேண்டும்.

## வியாபாரத்தில் சத்தியம் செய்யக் கூடாது

வியாபாரிகள் சொல்வதை பெரும்பாலும் நுகர்வோர் நம்புவதில்லை. அதிக லாபம் அடைவதற்காக வியாபாரி பொய் சொல்வதாகவே மக்கள் நினைக்கிறார்கள். இதன் காரணமாக வியாபாரிகள் அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்து தாங்கள் உண்மை சொல்வதாக நம்ப வைப்பதைக் காண்கிறோம்.

தாங்கள் சொல்வது பொய்யாக இருந்தும் சர்வசாதாரணமாக அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்கின்றனர். அல்லாஹ்வின் பெயரை தங்கள் சுயநலனுக்கு பயன்படுத்துவது மாபெரும் குற்றமாகும்.

صحيح البخاري

2088 - حدثنا عمرو بن محمد، حدثنا هشيم، أخبرنا العوام، عن إبراهيم بن عبد الرحمن، عن عبد الله بن أبي أوفى رضي الله عنه: «أن رجلا أقام سلعة وهو في السوق، فحلف بالله لقد أعطى بها ما لم يعط ليوقع فيها رجلا من المسلمين» فنزلت: {إن الذين يشترون بعهد الله وأيمانهم ثمنا قليلا} [آل عمران: 77] الآية

அப்துல்லாஹ் பின் அபீஅவ்ஃபா (ரலி) அவர்கள் கூறியதாவது: ஒரு மனிதர் கடைவீதியில் விற்பனைப் பொருட்களைப் பரப்பினார்; அடக்கவிலை பற்றி இல்லாத்தைக் கூறி அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்தார். முஸ்லிம்களைக் கவர்(ந்து அவர்களிடம் தம் பொருளை விற்பனை செய்)வதற்காக இப்படிச் செய்தார்! அப்போது யார் தங்களுடைய உடன்படிக்கை மூலமும் சத்தியங்களின் மூலமும் அற்பக் கிரயத்தைப் பெற்றுக் கொள்கிறாரோ....என்னும் (3:77) இறைவசனம் இறங்கியது!

நூல் : புகாரி 2088, 2675

பொருளை விற்கும்போது அப்பொருளுக்கான விலையை வியாபாரி தீர்மாணித்துக் கொள்ளலாம். ஆனால் அடக்கவிலையே இவ்வளவுதான் என்று கூறும் அவசியம் எதுவும் இல்லாமல் இருந்தும் அதிகமான வியாபாரிகள்

அடக்கவிலையை அதிகப்படுத்திக் கூறுகின்றனர். இதை வாடிக்கையாளர் நம்ப வேண்டும் என்பதற்காக அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்து இந்தப் பொய்யைக் கூறுகின்றனர். இவர்களுக்கு மேற்கண்ட எச்சரிக்கை போதுமானதாகும்.

இப்படிச் செய்பவர்களுக்கு மறுமையில் எந்தப் பாக்கியமும் கிடைக்காது; அவர்களை அல்லாஹ் பார்க்க மாட்டான்; அவர்களைத் தூய்மைப்படுத்த மாட்டான் என்ற அளவுக்கு கடுமையான எச்சரிக்கை இவ்வசனத்தில் இருப்பதால் அடக்கவிலை குறித்தோ பொருளின் தரம் குறித்தோ பொய்யான தகவலைச் சொல்லி விற்கக் கூடாது. உண்மையான அடக்கவிலையைச் சொல்ல வேண்டும். அல்லது அடக்கவிலையைச் சொல்லாமல் என்னுடைய விலை இதுதான் என்றோ அல்லது இதுதான் எனக்கு கட்டுபடியாகும் என்றோ கூறலாம்.

உண்மையான விபரங்களைக் கூறினாலும் அல்லாஹ்வின் மீது சத்தியமாக எனக் கூறி அல்லாஹ்வின் பெயரை சொந்த ஆதாயத்துக்குப் பயன்படுத்தக் கூடாது. இவ்வாறு செய்வது இறைவன் வழங்கும் பரக்கத் எனும் பேரருளை அழித்து விடும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எச்சரித்துள்ளனர்.

صحيح البخاري

2087 - حدثنا يحيى بن بكير، حدثنا الليث، عن يونس، عن ابن شهاب، قال ابن المسيب: إن أبا هريرة رضي الله عنه، قال: سمعت رسول الله صلى الله عليه وسلم، يقول: «الحلف منفقة للسلعة، ممحقة للبركة»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

சத்தியம் செய்வது சரக்கை (சுலபமாக) விற்பனை செய்ய உதவும்; ஆனால், அது பரக்கத்தை அழித்துவிடும்!

நூல் : புகாரி 2087

## பதுக்கல் கூடாது

பதுக்கல் கூடாது என்பதை அனைவரும் அறிந்து வைத்துள்ளோம். ஆனால் பதுக்கல் என்பதன் பொருளை அதிகமான மக்கள் அறிந்து வைத்திருக்கவில்லை.

கையிருப்பில் பொருட்களை வைத்துக் கொண்டு நுகர்வோர் கேட்கும்போது இல்லை எனக் கூறுவதும் இதன் மூலம் தட்டுப்பாட்டை ஏற்படுத்தி பின்னர் அதிக விலைக்கு விற்பதும்தான் பதுக்கல் எனப்படும்.

வியாபாரிகள் அதிகமான பொருட்களை வாங்கி இருப்பு வைப்பது பதுக்கல் ஆகாது. எவ்வளவு வேண்டுமானாலும் வியாபாரத்துக்காக ஒருவர் கையிருப்பில் வைத்துக் கொள்ளலாம். ஆனால் நுகர்வோர் கேட்கும்போது விற்பனை செய்து கொண்டே இருக்க வேண்டும்.

ஒருவர் ஆயிரம் மூட்டை அரிசியை கையிருப்பில் வைத்திருக்கிறார். நுகர்வோர் கேட்கும் போதெல்லாம் அவர் இல்லை என்று சொல்வதில்லை என்றால் இவர் பதுக்கல் என்ற குற்றத்தைச் செய்தவராக மாட்டார். ஆனால் ஒருவரிடம் பத்து மூட்டை அரிசி மட்டுமே உள்ளது. ஆனால் விலை ஏறட்டும் என்பதற்காக அவர் அதை விற்க மறுக்கிறார். இவர் பதுக்கிய குற்றத்தைச் செய்தவராக ஆகிவிடுவார். இவரைப் போல் ஒவ்வொருவரும் செய்ய ஆரம்பித்தால் மக்களுக்குப் பொருட்கள் கிடைக்காமல் போய்விடும்.

அது போல் ஒருவர் தனது ஒரு வருட தேவைக்காக நூறு மூட்டை அரிசியை வாங்கி வைத்துக் கொண்டால் அவரும் பதுக்கியவராக மாட்டார். இவர் வியாபார நோக்கத்தில் இல்லாமல் சொந்தத் தேவைக்காக வாங்கி வைத்துள்ளதால் இது பதுக்கலில் சேராது.

பதுக்குவது இஸ்லாத்தில் குற்றமாகும்.

صحيح مسلم -

4206 - حدثنا عبد الله بن مسلمة بن قعنب حدثنا سليمان - يعنى ابن بلال - عن يحيى - وهو ابن سعيد - قال كان سعيد بن المسيب يحدث أن معمرا قال قال رسول الله -صلى الله عليه وسلم- من احتكر فهو خاطئ . فقيل لسعيد فإنك تحتكر قال سعيد إن معمرا الذى كان يحدث هذا الحديث كان يحتكر.

பதுக்குபவன் பாவம் செய்பவன் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சொன்னார்கள் .

நூல் : முஸ்லிம் 4206

## வியாபாரத்தை முறித்துக் கொள்ளுதல்

ஒரு பொருளை ஒருவர் விலைபேசி வாங்கிய பிறகு அப்பொருள் அவருக்குத் தேவை இல்லை என்று தோன்றினால் அந்த வியாபாரத்தை முறித்துக் கொள்வது குறித்து இஸ்லாம் சொல்வது என்ன?

صحيح البخاري 2109 - حَدَّثَنَا أَبُو النُّعْمَانِ، حَدَّثَنَا حَمَّادُ بْنُ زَيْدٍ، حَدَّثَنَا أَيُّوبُ، عَنْ نَافِعٍ، عَنِ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، قَالَ: قَالَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «البَيِّعَانِ بِالخِيَارِ مَا لَمْ يَتَفَرَّقَا، أَوْ يَقُولُ أَحَدُهُمَا لِصَاحِبِهِ اخْتَرْ»، وَرُبَّمَا قَالَ: «أَوْ يَكُونُ بَيْعَ خِيَارٍ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

விற்பவரும் வாங்குபவரும் பிரியாமலிருந்தாலும் அல்லது ஒருவர் மற்றவரிடம் (உறுதிப்படுத்துவதோ முறிப்பதோ) உமது விருப்பம் என்று கூறினாலும் முறித்துக் கொள்ளும் உரிமை பெற்றிருக்கிறார்கள்

நூல் : புகாரி 2109

ஒரு பொருளை வாங்குவதாக பேரம்பேசி முடித்த பின் அல்லது கைவசப்படுத்தி முடித்த பின் அந்த இடத்தை விட்டு இருவரும் பிரியாமல் இருந்தால் இருவருக்கும் அதை முறித்துக் கொள்ளும் உரிமை உள்ளது. பொருளுக்கான பணத்தைக் கொடுத்த பின்னர் இது தேவையில்லை; என் பணத்தைத் திருப்பித் தாருங்கள் என்று நுகர்வோர் கோரினால் வியாபாரி பணத்தை திரும்பக் கொடுத்து விட வேண்டும்.

வேறொருவருக்குப் பேசிவைத்ததை தவறாக உங்களிடம் விற்று விட்டேன்; அல்லது விலையைக் குறைத்துச் சொல்லி விட்டேன்; திருப்பித் தந்து விடுங்கள் என்று வியாபாரி கேட்டால் நுகர்வோர் அதைத் திருப்பிக் கொடுத்து விட வேண்டும். இடத்தை விட்டு இருவரும் பிரியும் வரைதான் இந்த உரிமை உள்ளது.

பொருளை வாங்கியவர் தனது இடத்துக்கு அதைக் கொண்டு சென்ற பின்னர் வியாபாரத்தை முறித்துக் கொள்வதாகக் கூறினால் வியாபாரி அதை ஏற்கும் அவசியம் இல்லை. விரும்பினால் முறிக்கலாம். அல்லது விரும்பினால் மறுக்கலாம்.

ஆயினும் காலம் கடந்த பின்னும் விற்ற பொருளை வியாபாரி பெருந்தன்மையுடன் திரும்பப் பெற்றுக் கொண்டால் அது சிறந்ததாகும்.

سنن أبي داود

3460 - حدثنا يحيى بن معين ثنا حفص عن الأعمش عن أبي صالح عن أبي هريرة قال : قال رسول الله صلى الله عليه و سلم " من أقال مسلما أقاله الله عثرته "

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

யார் ஒரு முஸ்லிமிற்கு விற்ற பொருளை திரும்பப் பெற்றுக் கொள்கிறாரோ அல்லாஹ் அவருக்கு அவருடைய தவறுகளை திரும்பப் பெற்றுக் கொள்கிறான்.

நூல்கள் : அபூதாவூத், இப்னுமாஜா

அது போல் பொருளை விற்கும்போது இதைப் பயன்படுத்திப் பார்த்து விட்டு அல்லது வீட்டில் காட்டி விட்டு பிடித்தால் வைத்துக் கொள்வேன்; இல்லாவிட்டால் திருப்பிக் கொண்டு வருவேன் என்று நுகர்வோர் கூறியதை வியாபாரி ஒப்புக் கொண்டு இருந்தால் அப்போது அந்த உறுதிமொழியைக் காப்பாற்றும் அவசியம் அவருக்கு உண்டு.

## வியாபாரத்தில் பெருந்தன்மை

விற்கும் போதும் வாங்கும் போதும் இரு தரப்பிலும் பெருந்தன்மையாக நடந்து கொண்டால் அலாஹ்வின் அருள் கிடைக்கும்.

வியாபாரிகளுக்கும் மக்களுக்கும் இடையில் பெரும்பாலும் நல்லுறவு இருப்பதில்லை. வியாபாரி நம்மைச் சுரண்டுகிறார்; ஏமாற்றுகிறார் என்ற எண்ணம் தான் அதிகமான மக்களிடம் உள்ளது. மக்கள் இவ்வாறு நினைப்பதற்கு ஏற்பவே அதிகமான வியாபாரிகள் நடந்து கொள்கிறார்கள்:

ஆனால் வியாபாரம் என்பது சம்பாதிப்பதற்கான வழிமுறையாக இருந்தாலும் அதில் பெருந்தன்மையாக நடந்து கொண்டால் அல்லாஹ்வின் அருளைப் பெற்றுத்தரும் நல்லறங்களில் ஒன்றாக அமைந்து விடுகிறது.

صحيح البخاري 2076 - حَدَّثَنَا عَلِيُّ بْنُ عَيَّاشٍ، حَدَّثَنَا أَبُو غَسَّانَ مُحَمَّدُ بْنُ مُطَرِّفٍ، قَالَ: حَدَّثَنِي مُحَمَّدُ بْنُ المُنْكَدِرِ، عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا: أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، قَالَ: «رَحِمَ اللَّهُ رَجُلًا سَمْحًا إِذَا بَاعَ، وَإِذَا اشْتَرَى، وَإِذَا اقْتَضَى»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

வாங்கும்போதும் விற்கும்போதும் வழக்காடும்போதும் பெருந்தன்மையாக நடந்துகொள்ளும் மனிதருக்கு அல்லாஹ் அருள்புரிவானாக!

நூல் : புகாரி 2076

இந்தப் பெருந்தன்மை என்பது இரு தரப்பிலும் இருக்க வேண்டும் என்பதால் தான் விற்கும் போதும், வாங்கும் போதும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

அதிகமான லாபம் வைத்தல், விற்ற பொருளை மாற்றிக் கேட்கும் போது மாற்றிக் கொடுத்தல், கடுகடுப்பாக இல்லாமல் மலர்ந்த முகத்துடன் இருப்பது போன்றவை வியாபாரிகள் கடைப்பிடிக்கும் பெருந்தன்மையில் அடங்கும்.

வியாபாரியை எதிரியாகப் பார்க்காமல் இனிமையாக அணுகுதல், பாதிப்பு இல்லாத அற்பமான குறைகளை அலட்சியப்படுத்துதல் போன்றவை நுகர்வோர் கடைப்பிடிக்க வேண்டிய பெருந்தன்மையாகும்.

## மந்தபுத்தி உள்ளவர்களிடம் வியாபாரம் செய்யும் முறை

ஏனெனில் மந்தபுத்தியுள்ளவர்கள், மனவளர்ச்சி குறைந்தவர்கள், சிறுபிள்ளைகள் போல் மாறிவிட்ட முதியவர்கள் பொருட்களின் தரத்தையும் அதன் சந்தை நிலவரத்தையும் அறிய மாட்டார்கள். எனவே தரமற்ற பொருளை அதிக விலை கொடுத்து அவர்கள் வாங்கிவிடக் கூடும்.

இது போன்றவர்கள் இப்படி ஏமாந்து விடக் கூடாது என்பதற்காக நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஒரு விதியை வகுத்துத் தந்துள்ளார்கள்.

மேற்கண்ட நிலையில் உள்ளவர்கள் பொருட்களை வாங்கும் போது எனக்கு இப்பொருளின் தரம் பற்றி ஒன்றும் தெரியாது. நீ சொல்வதை நம்பி நான் வாங்கிச் செல்கிறேன். இதில் எந்த ஏமாற்றுதலும் இருக்கக் கூடாது என்று கூறிவிட்டு பொருளை வாங்கிச் செல்ல வேண்டும். இவ்வாறு வாங்கிச் சென்ற பின்னர் வியாபாரி உறுதி அளித்தது போல் அப்பொருள் இல்லை என்பது தெரியவந்தால் எப்போது வேண்டுமானாலும் அவர் திருப்பித் தந்தால் வியாபாரி பெற்றுக் கொள்ள வேண்டும்.

வியாபாரிக்கு இதில் உடன்பாடு இல்லாவிட்டால் விபரம் தெரிந்தவர்களை வரச் சொல் என்று அவருக்கு விற்பனை செய்யாமல் இருக்கலாம்.

صحيح البخاري 2117 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ، أَخْبَرَنَا مَالِكٌ، عَنْ عَبْدِ اللَّهِ بْنِ دِينَارٍ، عَنْ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا: أَنَّ رَجُلًا ذَكَرَ لِلنَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، أَنَّهُ يُخْدَعُ فِي البُيُوعِ، فَقَالَ: «إِذَا بَايَعْتَ فَقُلْ لاَ خِلاَبَةَ»

ஒரு மனிதர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வியாபாரங்களில் தான் ஏமாற்றப்படுவதாகக் கூறினார். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "வியாபாரத்தின்போது ஏமாற்றுதல் கூடாது என்று நீ கூறிவிடு" என்று சொன்னார்கள்.

நூல் : புகாரி 6964, 2117

## இலாபத்தில் மட்டும் பங்கு பெறுதல்

முதலீடு செய்து தொழில் செய்யத் தெரியாதவர்களும் அதற்கான வாய்ப்பு இல்லாதவர்களும் மற்றவரின் தொழில் நிறுவனத்தில் முதலீடு செய்கின்றனர். ஆனால் அந்தத் தொழிலில் அவர்கள் எந்த உழைப்பும் செய்வதில்லை. இப்படி உழைக்காமல் ஸ்லீப்பிங் பார்ட்னராக இருந்து கொண்டு லாபம் அடைவது கூடுமா என்ற சந்தேகம் சிலருக்கு இருக்கிறது.

இதற்கு மார்க்கத்தில் அனுமதி உள்ளது.

صحيح البخاري 2285 - حَدَّثَنَا مُوسَى بْنُ إِسْمَاعِيلَ، حَدَّثَنَا جُوَيْرِيَةُ بْنُ أَسْمَاءَ، عَنْ نَافِعٍ، عَنْ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: " أَعْطَى رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ خَيْبَرَ اليَهُودَ: أَنْ يَعْمَلُوهَا وَيَزْرَعُوهَا، وَلَهُمْ شَطْرُ مَا يَخْرُجُ مِنْهَا

கைபர் போரில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வெற்றி பெற்ற பின்னர் அங்குள்ள நிலங்கள் இஸ்லாமிய அரசுக்குச் சொந்தமாகி விட்டது . அப்போது கைபர் பகுதியில் இருந்த யூதர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்து நிலம் உங்களுடையதாக இருக்கட்டும். நாங்கள் அதில் உழைக்கிறோம். கிடைப்பதை நமக்கிடையே பங்கு போட்டுக் கொள்வோம் என்று கோரிக்கை வைத்தனர். இதை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஏற்றுக் கொண்டு அவர்களிடம் நிலத்தை ஒப்படைத்தனர்.

நூல் : புகாரி 2286, 2329, 2331, 2338, 2499, 2720, 3152, 4248

நிலம் எனும் முதலீடு இஸ்லாமிய அரசுக்குச் சொந்தமானது உழைப்பு மற்றவர்களுக்கு உரியது என்ற நிலையில் கிடைக்கும் ஆதாயத்தில் இஸ்லாமிய அரசாங்கம் ஆதாயம் அடைந்துள்ளதே இதற்குப் போதுமான ஆதாரமாகும்.

صحيح البخاري 2630 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ، أَخْبَرَنَا ابْنُ وَهْبٍ، حَدَّثَنَا يُونُسُ، عَنِ ابْنِ شِهَابٍ، عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: لَمَّا قَدِمَ المُهَاجِرُونَ المَدِينَةَ مِنْ مَكَّةَ، وَلَيْسَ بِأَيْدِيهِمْ - يَعْنِي شَيْئًا - وَكَانَتِ الأَنْصَارُ أَهْلَ الأَرْضِ وَالعَقَارِ، فَقَاسَمَهُمُ الأَنْصَارُ عَلَى أَنْ يُعْطُوهُمْ ثِمَارَ أَمْوَالِهِمْ كُلَّ عَامٍ، وَيَكْفُوهُمُ العَمَلَ وَالمَئُونَةَ، وَكَانَتْ أُمُّهُ أُمُّ أَنَسٍ أُمُّ سُلَيْمٍ كَانَتْ أُمَّ عَبْدِ اللَّهِ بْنِ أَبِي طَلْحَةَ، «فَكَانَتْ أَعْطَتْ أُمُّ أَنَسٍ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ عِذَاقًا فَأَعْطَاهُنَّ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ أُمَّ أَيْمَنَ مَوْلاَتَهُ أُمَّ أُسَامَةَ بْنِ زَيْدٍ» - قَالَ ابْنُ شِهَابٍ: فَأَخْبَرَنِي أَنَسُ بْنُ مَالِكٍ - «أَنَّ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ لَمَّا فَرَغَ مِنْ قَتْلِ أَهْلِ خَيْبَرَ، فَانْصَرَفَ إِلَى المَدِينَةِ رَدَّ المُهَاجِرُونَ إِلَى الأَنْصَارِ مَنَائِحَهُمُ الَّتِي كَانُوا مَنَحُوهُمْ مِنْ ثِمَارِهِمْ، فَرَدَّ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ إِلَى أُمِّهِ عِذَاقَهَا، وَأَعْطَى رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ أُمَّ أَيْمَنَ مَكَانَهُنَّ مِنْ حَائِطِهِ»

முஹாஜிர்கள் (மக்காவிலிருந்து) மதீனாவுக்கு வந்தபோது அவர்களின் கையில் (செல்வம்) எதுவும் இருக்கவில்லை. அன்சாரிகள் நிலங்களையும் (பிற) அசையாச் சொத்துக்களையும் வைத்திருந்தார்கள். ஒவ்வோர் ஆண்டும் தங்கள் சொத்துக்களின் விளைச்சல்களை அவர்களுக்கு (குறிப்பிட்ட விகிதத்தில்) கொடுப்பதாகவும் "எங்களுக்குப் பதிலாக நீங்கள் அதில் சிரமப்பட்டு உழைக்க வேண்டும் என்ற நிபந்தனையின் பேரிலும் அவற்றை முஹாஜிர்களுக்கு (குத்தகை நிலங்களாகப்) பங்கிட்டுக் கொடுத்தார்கள்.

நூல் : புகாரி 2630

தொழில் என்பது எப்போதும் லாபத்தையே தரும் என்று சொல்ல முடியாது. இலாபம் வருவதற்கு வாய்ப்பு உள்ளது போல் இலாபமே இல்லாமல் போகவும் நட்டம் ஏற்படவும் வாய்ப்பு உள்ளது. மற்றவருடன் தொழிலில் பங்காளிகளாகச் சேர்பவர்கள் இலாபத்தில் உரிமை கொண்டாடுவது போல் நட்டத்திற்கும் பொறுப்பு ஏற்க வேண்டும். அவ்வாறு இல்லாவிட்டால் அது வட்டியாக ஆகிவிடும்.

மேலும் மாதம் தோறும் இவ்வளவு தொகை என்று நிர்ணயித்தால் அதுவும் வட்டியாகிவிடும். கிடைக்கும் லாபத்தில் முதலீடு செய்தவருக்கு இத்தனை சதவிகிதம்; உழைப்பவருக்கு இத்தனை சதவிகிதம் என்ற அடிப்படையில் இருந்தால்தான் அது மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்டதாக ஆகும்.

## முஸ்லிம் அல்லாதவர்களின் சந்தைகளில் முஸ்லிம்கள் வியாபாரம்

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடை காலகட்டத்தில் மக்காவில் உகாள், துல்மஜாஸ் போன்ற சந்தைகள் குறிப்பிட்ட நாட்களில் திறக்கப்படும் . இவை சந்தைகளாக மட்டும் இருக்கவில்லை. இங்கு சிலை வணக்கம் உட்பட கூத்து கும்மாளங்கள் அனைத்தும் நடைபெறும் இடமாகவும் இருந்தது.

இந்த சந்தைகளில் முஸ்லிம்களான ஸஹாபாக்கள் வியாபாரம் செய்வதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எந்தத் தடையும் விதிக்கவில்லை.

صحيح البخاري 1770 - حَدَّثَنَا عُثْمَانُ بْنُ الهَيْثَمِ، أَخْبَرَنَا ابْنُ جُرَيْجٍ، قَالَ عَمْرُو بْنُ دِينَارٍ: قَالَ: ابْنُ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا: " [ص:182] كَانَ ذُو المَجَازِ، وَعُكَاظٌ مَتْجَرَ النَّاسِ فِي الجَاهِلِيَّةِ، فَلَمَّا جَاءَ الإِسْلاَمُ كَأَنَّهُمْ كَرِهُوا ذَلِكَ، حَتَّى نَزَلَتْ: {لَيْسَ عَلَيْكُمْ جُنَاحٌ أَنْ تَبْتَغُوا فَضْلًا مِنْ رَبِّكُمْ} [البقرة: 198]

உக்காழ், மஜன்னா, துல்மஜாஸ் ஆகியன அறியாமைக் காலத்தில் கடைவீதிகளாக இருந்தன. இஸ்லாம் வந்ததும் அங்கே வியாபரம் செய்வதை மக்கள் குற்றம் எனக் கருதினர். அப்போது உங்கள் இறைவனின் அருளைத் தேடுவது உங்கள் மீது குற்றமில்லை என்ற (2:198ஆவது) வசனம் அருளப்பெற்றது.

நூல் : புகாரி 1770

பலவிதமான பாவகாரியங்கள் நடைபெற்ற உகாள், தில்மஜாஸ் போன்ற வியாபாரத் தலங்களில் இஸ்லாம் அனுமதித்தது என்பதை மேற்கண்ட செய்தியிலிருந்து தெளிவாக விளங்கிக் கொள்ளலாம்.

தீமைகள் நடக்கும் இடங்களில் நாம் ஹலாலான முறையில் வியாபாரம் செய்தாலோ அல்லது அது போன்ற இடங்களுக்குச் சென்று ஒரு பொருளை வாங்கினாலோ அது தீமைக்கு துணை செய்ததாக ஆகாது என்பதை நாம் மிகத் தெளிவாக விளங்கிக் கொள்ளலாம்.

அதே நேரத்தில் ஒருவர் தீமையான காரியங்கள் நடக்கும் இடத்தில் வியாபாரம் செய்வது தவறில்லை என்றாலும் அது போன்ற தீமைகளில் தான் வீழ்ந்து

விடாமல் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளவேண்டும். அனுமதிக்கப்பட்டது என்றால் கட்டாயம் செய்துதான் ஆக வேண்டும் என்பது கிடையாது.

நம்முடைய ஈமானிற்கு பாதிப்பு ஏற்படும் என்றால் அது போன்ற நிலைகளில் நாம் அவற்றை விட்டும் விலகிக் கொள்வதே சிறந்ததாகும்.

صحيح البخاري 52 - حَدَّثَنَا أَبُو نُعَيْمٍ، حَدَّثَنَا زَكَرِيَّاءُ، عَنْ عَامِرٍ، قَالَ: سَمِعْتُ النُّعْمَانَ بْنَ بَشِيرٍ، يَقُولُ: سَمِعْتُ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ يَقُولُ: " الحَلاَلُ بَيِّنٌ، وَالحَرَامُ بَيِّنٌ، وَبَيْنَهُمَا مُشَبَّهَاتٌ لاَ يَعْلَمُهَا كَثِيرٌ مِنَ النَّاسِ، فَمَنِ اتَّقَى المُشَبَّهَاتِ اسْتَبْرَأَ لِدِينِهِ وَعِرْضِهِ، وَمَنْ وَقَعَ فِي الشُّبُهَاتِ: كَرَاعٍ يَرْعَى حَوْلَ الحِمَى، يُوشِكُ أَنْ يُوَاقِعَهُ، أَلاَ وَإِنَّ لِكُلِّ مَلِكٍ حِمًى، أَلاَ إِنَّ حِمَى اللَّهِ فِي أَرْضِهِ مَحَارِمُهُ، أَلاَ وَإِنَّ فِي الجَسَدِ مُضْغَةً: إِذَا صَلَحَتْ صَلَحَ الجَسَدُ كُلُّهُ، وَإِذَا فَسَدَتْ فَسَدَ الجَسَدُ كُلُّهُ، أَلاَ وَهِيَ القَلْبُ "

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

அனுமதிக்கப்பட்டவையும் மிகத் தெளிவானவை. மேலும் அனுமதிக்கப்படாதவையும் தெளிவானவையாய் இருக்கின்றன. இவ்விரண்டிற்கும் இடையில் சந்தேகத்திற்கு இடமானவையும் இருக்கின்றன. அவற்றை மக்களில் அதிகம் பேர் அறிய மாட்டார்கள். எனவே எவர் சந்தேகத்திற்கு இடமானவற்றைத் தவிர்த்துக்கொள்கிறாரோ அவர் தமது மார்க்கத்தையும் காப்பாற்றிக்கொள்கிறார்; மானத்தையும் காப்பாற்றிக்கொள்கிறார். எவர் சந்தேகத்திற்கிடமானவைகளில் தலையிடுகிறாரோ அவர், (அனுமதிக்கப்படாதவைகளில் தலையிடுகிறார்.) வேலியோரங்களில் (கால்நடைகளை) மேய்ப்பவர் வேலிக்குள்ளேயே (கால்நடைகளை) மேயவிட நேரும். எச்சரிக்கை! ஒவ்வொரு மன்னனுக்கும் ஓர் எல்லை இருக்கின்றது அல்லாஹ்வின் நாட்டில் அவனது எல்லை (வேலி) அவனால் தடைவிதிக்கப்பட்டவையே. அறிக: உடலில் ஒரு சதைத் துண்டு இருக்கிறது. அது சீர் பெற்றுவிட்டால் உடல் முழுவதும் சீர் பெற்றுவிடும். அது சீர்குலைந்துவிட்டால் முழு உடலும் சீர்குலைந்துவிடும். அறிந்துகொள்ளுங்கள்: அது தான் உள்ளம்.

நூல் : புகாரி 52

நம்முடைய கால் நடை பிறருடைய வேலிக்குள் சென்று மேய்வது ஹராமானாதாகும். அதே நேரத்தில் வேலிக்கு அருகில் மேய்ந்தால் அது ஹராமானது கிடையாது.

வேலிக்குள் செல்லாமல் அருகில்தான் மேயும் என்று நாம் பாராமுகமாக இருந்தால் கால் நடை வேலியை தாண்டியும் சென்று விடும்.

அது போன்றுதான் தர்ஹா வழிபாடு போன்ற பாவமான காரியங்கள் நடக்கும் இடங்களில் நாம் எந்தத் தவறிலும் பங்கேற்காமல் வியாபாரம் செய்தால் அல்லது அங்குள்ள கடைகளில் ஒரு பொருள் வாங்கினால் அது தவறு கிடையாது. ஆனால் இது வேலிக்கு அருகில் மேய்கின்ற கால்நடையின் நிலையைப் போன்றதுதான்.

நாம் வேலிக்குள் நுழையவே முடியாத இடத்தில் நம்முடைய கால்நடையை மேயவிட்டால் அது நுழைந்துவிடும் என்பதைப் பற்றி எந்தக் கவலைப்படவேண்டிய அவசியமில்லை.

அது போன்று பாவமான காரியங்கள் நடக்கும் இடங்களை விட்டும் நாம் தவிர்ந்து கொண்டால் நம்முடைய ஈமானிற்க்கு பாதிப்பு ஏற்படுவதை விட்டும் நம்மை நாம் தற்காத்துக் கொள்ளலாம்.

## பள்ளிவாசலில் விற்பதும் வாங்குவதும்

سنن الترمذي

322 - حدثنا قتيبة حدثنا الليث عن ابن عجلان عن عمرو بن شعيب عن أبيه عن جده عن رسول الله صلى الله عليه و سلم : أنه نهى عن تناشد الأشعار في المسجد وعن البيع والاشتراء فيه وأن يتحلق الناس يوم الجمعة قبل الصلاة

பள்ளிவாசலில் விற்பதையும், வாங்குவதையும், நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்

நூல் : திர்மிதி

இந்தத் தடை பொதுவானதல்ல. தனி நபர்கள் தங்களின் ஆதாயத்துக்காக செய்து கொள்ளும் வியாபாரத்தையே குறிக்கும். பொதுநலன் சார்ந்த பள்ளிவாசல் நிர்வாகம் சார்ந்த பொருட்களை விற்பதையும் வாங்குவதையும் இது கட்டுப்படுத்தாது.

صحيح البخاري 2097 - حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ بَشَّارٍ، حَدَّثَنَا عَبْدُ الوَهَّابِ، حَدَّثَنَا عُبَيْدُ اللَّهِ، عَنْ وَهْبِ بْنِ كَيْسَانَ، عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، قَالَ: كُنْتُ مَعَ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ فِي غَزَاةٍ، فَأَبْطَأَ بِي جَمَلِي وَأَعْيَا، فَأَتَى عَلَيَّ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَ «جَابِرٌ»: فَقُلْتُ: نَعَمْ، قَالَ: «مَا شَأْنُكَ؟» قُلْتُ: أَبْطَأَ عَلَيَّ جَمَلِي وَأَعْيَا، فَتَخَلَّفْتُ، فَنَزَلَ يَحْجُنُهُ بِمِحْجَنِهِ ثُمَّ قَالَ: «ارْكَبْ»، فَرَكِبْتُ، فَلَقَدْ رَأَيْتُهُ أَكُفُّهُ عَنْ رَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، قَالَ: «تَزَوَّجْتَ» قُلْتُ: نَعَمْ، قَالَ: «بِكْرًا أَمْ ثَيِّبًا» قُلْتُ: بَلْ ثَيِّبًا، قَالَ: «أَفَلاَ جَارِيَةً تُلاَعِبُهَا وَتُلاَعِبُكَ» قُلْتُ: إِنَّ لِي أَخَوَاتٍ، فَأَحْبَبْتُ أَنْ أَتَزَوَّجَ امْرَأَةً تَجْمَعُهُنَّ، وَتَمْشُطُهُنَّ، وَتَقُومُ عَلَيْهِنَّ، قَالَ: «أَمَّا إِنَّكَ قَادِمٌ، فَإِذَا قَدِمْتَ، فَالكَيْسَ الكَيْسَ»، ثُمَّ قَالَ: «أَتَبِيعُ جَمَلَكَ» قُلْتُ: نَعَمْ، فَاشْتَرَاهُ مِنِّي بِأُوقِيَّةٍ، ثُمَّ قَدِمَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَبْلِي، وَقَدِمْتُ بِالْغَدَاةِ، فَجِئْنَا إِلَى المَسْجِدِ فَوَجَدْتُهُ عَلَى بَابِ المَسْجِدِ، قَالَ: «آلْآنَ قَدِمْتَ» قُلْتُ: نَعَمْ، قَالَ: «فَدَعْ جَمَلَكَ، فَادْخُلْ، فَصَلِّ رَكْعَتَيْنِ»، فَدَخَلْتُ فَصَلَّيْتُ، فَأَمَرَ بِلاَلًا أَنْ يَزِنَ لَهُ أُوقِيَّةً، فَوَزَنَ لِي بِلاَلٌ، فَأَرْجَحَ لِي فِي المِيزَانِ، فَانْطَلَقْتُ حَتَّى وَلَّيْتُ، فَقَالَ: «ادْعُ لِي جَابِرًا» قُلْتُ: الآنَ يَرُدُّ عَلَيَّ الجَمَلَ، وَلَمْ يَكُنْ شَيْءٌ أَبْغَضَ إِلَيَّ مِنْهُ، قَالَ: «خُذْ جَمَلَكَ وَلَكَ ثَمَنُهُ»

ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது :

நான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடன் ஒரு போரில் (பங்கு கொண்டுவிட்டுத் திரும்பி வந்து கொண்டு) இருந்தேன்; அப்போது எனது ஒட்டகம் களைத்து பலமிழந்துபோனதால் என்னைப் பின்தங்க வைத்துவிட்டது. நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் என்னிடம் வந்து, ஜாபிரா? என்று கேட்டார்கள். நான், ஆம்! என்றேன். என்ன விஷயம் (ஏன் பின்தங்கிவிட்டீர்)? என்று கேட்டார்கள். என் ஒட்டகம் களைத்து பலமிழந்துபோனதால் என்னைப் பின்தங்க வைத்துவிட்டது; அதனால் நான் பின்தங்கிவிட்டேன்! என்றேன். நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் கீழே இறங்கி

தலைப்பகுதி வளைந்த ஒரு கைத்தடியால் எனது ஒட்டகத்தைத் தட்டி(எழுப்பி)னார்கள். பிறகு (உமது வாகனத்தில்) ஏறுவீராக! என்றார்கள். நான் (வாகனத்தில்) ஏறினேன். நபிகள் நாயகம்(ஸல்) அவர்களைவிட எனது ஒட்டகம் முந்தாதவாறு அதைக் கட்டுப்படுத்தினேன். அப்போது நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள், நீர் மணமுடித்துவிட்டீரா? என்று கேட்டார்கள். நான் ஆம்! என்றேன். கன்னியையா? கன்னிகழிந்த பெண்ணையா? என்று கேட்டார்கள். கன்னிகழிந்த பெண்ணைத்தான்!என்று நான் கூறினேன். நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள், கன்னிப் பெண்ணை மணந்திருக்கக் கூடாதா? அவள் உம்முடனும் நீர் அவளுடனும் கூடிக்குலாவி மகிழலாமே! என்று கூறினார்கள். நான், எனக்குச் (சிறிய வயதுடைய) சகோதரிகள் உள்ளனர்! அவர்களை அரவணைத்து, அவர்களுக்குத் தலைவாரி, அவர்களைப் பராமரிக்கக் கூடிய ஒரு பெண்ணை மணக்க வேண்டும் என்று விரும்பினேன்! என்றேன். நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள், இப்போது ஊருக்கு செல்லப் போகிறீர்! ஊர் சென்றதும் நிதானத்துடன் நடந்துகொள்வீராக! நிதானத்துடன் நடந்துகொள்வீராக!என்று கூறிவிட்டு பின்னர், உமது ஒட்டகத்தை எனக்கு விற்றுவிடுகிறீரா? என்று கேட்டார்கள். நான், சரி (விற்று விடுகிறேன்!) என்றேன். அவர்கள் என்னிடமிருந்து, ஒரு ஊக்கியா எடை (தங்கத்து)க்குப் பகரமாக அதை வாங்கிக் கொண்டார்கள். பிறகு, எனக்கு முன்பே நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் (மதீனாவுக்கு) சென்றுவிட்டார்கள். நான் மறுநாள் சென்றடைந்தேன். நாங்கள் பள்ளிவாசலுக்கு வந்தபோது அதன் நுழைவாயிலில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நின்று கொண்டிருந்தார்கள். இப்போதுதான் வருகிறீரா? என்று அவர்கள் (என்னைப் பார்த்துக்) கேட்டார்கள். நான் ஆம்! என்றேன். உமது ஒட்டகத்தை விட்டுவிட்டு உள்ளே சென்று இரண்டு ரக்அத்கள் தொழுவீராக! என்று சொன்னார்கள். அவ்வாறே, நான் உள்ளே சென்று தொழுதேன். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எனக்காக ஒரு ஊக்கியா (தங்கத்தை) எடை போடுமாறு பிலால் (ரலி) அவர்களுக்கு உத்தரவிட்டார்கள். எனக்காக பிலால் (ரலி) அவர்கள் எடை போட்டுச்சற்று தாராளமாகவே நிறுத்தார்கள். பிறகு நான் திரும்பிச் சென்றுவிட்டேன். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், ஜாபிரை என்னிடம் அழைத்து வாரும்! என்றார்கள். நான் (மனத்திற்குள்) இப்போது என் ஒட்டகம் திருப்பித் தரப்பட்டுவிடும்; அதைவிட எனக்கு வெறுப்பானது வேறொன்றுமில்லை

என்று கூறிக் கொண்டேன். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், உமது ஒட்டகத்தை எடுத்துக்கொள்வீராக! அதனுடைய விலையையும் நீரே வைத்துக் கொள்வீராக! என்று சொன்னார்கள்.

நூல் : புகாரி 2097

ஜாபிர் (ரலி) அவர்களின் ஒட்டகத்துக்கான விலையைப் பள்ளிவாசலில் வைத்து கொடுத்து நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வாங்கியுள்ளதால் சமுதாய நன்மை சார்ந்த வியாபாரத்தை பள்ளிவாசலில் செய்யத் தடை இல்லை என்று அறிந்து கொள்ளலாம்.

## தண்ணீர் வியாபாரம்

صحيح مسلم 34 - (1565) وحَدَّثَنَا أَبُو بَكْرِ بْنُ أَبِي شَيْبَةَ، أَخْبَرَنَا وَكِيعٌ، ح وحَدَّثَنِي مُحَمَّدُ بْنُ حَاتِمٍ، حَدَّثَنَا يَحْيَى بْنُ سَعِيدٍ، جَمِيعًا عَنِ ابْنِ جُرَيْجٍ، عَنْ أَبِي الزُّبَيْرِ، عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللهِ، قَالَ: «نَهَى رَسُولُ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ عَنْ بَيْعِ فَضْلِ الْمَاءِ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தேவைக்கு மேல் எஞ்சியுள்ள தண்ணீரை விற்பதற்குத் தடை விதித்தார்கள்.

நூல் : முஸ்லிம் 3186

صحيح البخاري 2358 - حَدَّثَنَا مُوسَى بْنُ إِسْمَاعِيلَ، حَدَّثَنَا عَبْدُ الوَاحِدِ بْنُ زِيَادٍ، عَنِ الأَعْمَشِ، قَالَ: سَمِعْتُ أَبَا صَالِحٍ، يَقُولُ: سَمِعْتُ أَبَا هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ، يَقُولُ: قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: " ثَلاَثَةٌ لاَ يَنْظُرُ اللَّهُ إِلَيْهِمْ يَوْمَ القِيَامَةِ، وَلاَ يُزَكِّيهِمْ، وَلَهُمْ عَذَابٌ أَلِيمٌ، رَجُلٌ كَانَ لَهُ فَضْلُ مَاءٍ بِالطَّرِيقِ، فَمَنَعَهُ [ص:111] مِنَ ابْنِ السَّبِيلِ، وَرَجُلٌ بَايَعَ إِمَامًا لاَ يُبَايِعُهُ إِلَّا لِدُنْيَا، فَإِنْ أَعْطَاهُ مِنْهَا رَضِيَ، وَإِنْ لَمْ يُعْطِهِ مِنْهَا سَخِطَ، وَرَجُلٌ أَقَامَ سِلْعَتَهُ بَعْدَ العَصْرِ، فَقَالَ: وَاللَّهِ الَّذِي لاَ إِلَهَ غَيْرُهُ لَقَدْ أَعْطَيْتُ بِهَا كَذَا وَكَذَا، فَصَدَّقَهُ رَجُلٌ " ثُمَّ قَرَأَ هَذِهِ الآيَةَ: {إِنَّ الَّذِينَ يَشْتَرُونَ بِعَهْدِ اللَّهِ وَأَيْمَانِهِمْ ثَمَنًا قَلِيلًا} [آل عمران: 77]

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

மூன்று பேரை மறுமை நாளில் அல்லாஹ் ஏறெடுத்துப் பார்க்கவும் மாட்டான்; அவர்களைத் தூய்மைப்படுத்தவும் மாட்டான். மேலும், அவர்களுக்குத் துன்பமிக்க வேதனையும் உண்டு. ஒருவன், (மக்களின் பயணப்) பாதையில் தேவைக்கு மிஞ்சிய தண்ணீரைப் பெற்றிருந்தும் வழிப் போக்கர்கள் அதைப் பயன்படுத்த விடாமல் தடுத்து விட்டவன்.

நூல் : புகாரி 2358

தண்ணீரை வியாபாரமாக ஆக்கக் கூடாது என்றாலும் தண்ணீருடன் நம்முடைய உழைப்பும் சேருமானால் அது தண்ணீரை வியாபாரம் செய்ததாக ஆகாது.

நாம் கிணறு வெட்டுகிறோம். அந்தக் கிணற்றை விற்றால் அது தண்ணீரை விற்றதாக ஆகாது. கிணறு வெட்டுவதற்காக நாம் செலவிட்டதையும் கிணறுக்கான இடத்தையும்தான் விற்பனை செய்கிறோம்.

அதுபோல் இயற்கையாக அல்லாஹ் தரும் தண்ணீரில் உள்ள அழுக்குகளையும் கிருமிகளையும் நீக்கி சுவை கூட்டி பாட்டில்களில் அடைத்து விற்பனை செய்வதும் தண்ணீரை விற்பதில் அடங்காது. பாதுகாப்பான குடிநீராக ஆக்க உழைத்ததாலும் அதற்காக செலவிட்டதாலும்தான் விலை நிர்ணயிக்கப்படுகிறது என்பதால் இது மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்டதுதான்.

## விலைக் கட்டுப்பாடு

விவசாயிகள் உற்பத்தி செய்யும் பொருளுக்கு இவ்வளவுதான் விலை நிர்ணயிக்க வேண்டும் என்று பல நாடுகளில் சட்டங்கள் உள்ளன. நமது நாட்டிலும் இது போன்ற சட்டங்கள் உள்ளன.

இஸ்லாமிய அடிப்படையில் இதுபோல் செய்வது விவசாயிகளுக்குச் செய்யும் அநீதியாகும்.

سنن ابن ماجه

2200 - حدثنا محمد بن المثنى حدثنا حجاج حدثنا حمضاد بن سلمة عن قتادة وحميد وثابت عن أنس بن مالك قال غلا الشر على عهد رسول الله صلى الله عليه و سلم فقالوا يا رسول الله قد غلا السعر فسعر لنا فقال : - ( إن الله هو المسعر القابض الباسط الرازق إني لأرجو أن ألقى ربي وليس أحد يطلبني بمظلمة في دم ولامال

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலத்தில் அத்தியாவசியப் பொருட்களின் விலை உயர்ந்தபோது விலைக்கட்டுப்பாடு செய்யுங்கள் என்று மக்கள் கோரிக்கை வைத்தனர். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அல்லாஹ்தான் உணவளிப்பவன்; தாராளமாகவும் குறைவாகவும் வழங்குபவன்; அல்லாஹ்தான் விலையைக் கட்டுப்படுத்துபவன். அல்லாஹ்வை நான் சந்திக்கும்போது எந்த மனிதனின் உயிருக்கோ பொருளாதாரத்துக்கோ எந்த அநீதியும் செய்யாத நிலையில் சந்திக்க விரும்புகிறேன் எனக் கூறினார்கள்.

நூல்கள் : அபூதாவூத், திர்மிதி, அஹ்மத், இப்னுமாஜா

கஷ்டப்பட்டு நிலத்தில் பாடுபடுபவனுக்குத்தான் அதன் வலி தெரியும். அவன் உற்பத்தி செய்யும் பொருளுக்கு விலை நிர்ணயம் செய்யும் உரிமை அவனுக்குத் தான் உள்ளது. அதிகமாக உற்பத்தியாகும்போது விலை குறைவதும் உற்பத்தி குறையும்போது விலை உயர்வதும் இயல்பானது. அதிகமாக உற்பத்தியாகும்போது கடுமையான நட்டத்தைச் சந்திக்கும் விவசாயிகள் உற்பத்தி குறையும்போதுதான் அதை ஈடுகட்டிக் கொள்ள முடியும். இந்த நிலையில் அரசாங்கம் விலைக்கட்டுப்பாடு விதிப்பது அவர்களுக்குச் செய்யும் அநீதியாகும் என்று இஸ்லாம் கருதுகிறது.

இன்னும் சொல்லப்போனால் விவசாயம்தான் அதிக உழைப்புக்கு குறைந்த ஆதாயம் கிடைக்கும் தொழிலாக உள்ளது. அதிகமான இயற்கை இடர்பாடுகளும் இந்தத் தொழிலுக்குத்தான் உண்டு. உழுதவன் கணக்குப் பார்த்தால் உழக்குகூட மிஞ்சாது என்பார்கள். இது முற்றிலும் சரியானதுதான்.

ஆனால் கஷ்டப்படும் ஏழை விவசாயியின் கழுத்தை நெரிக்கும் ஆட்சியாளர்கள் சோப்பு, சீப்பு, பிளேடு உள்ளிட்ட பல்லாயிரம் பொருட்களுக்கு எந்த விலைக்கட்டுப்பாடும் விதிப்பதில்லை.

ஐம்பது பைசா அடக்கமாகும் சோப்புக்கு ஐம்பது ரூபாய் என்று தயாரிப்பாளர் விலை நிர்ணயிக்கும்போதும் பத்து பைசாகூட அடக்கமாகாத பிளேடுக்கு பத்து ரூபாய் என்று விலை நிர்ணயிக்கும்போதும் கட்டுப்பாடு விதித்தால் அதில் அர்த்தமிருக்கும்.

இவற்றுக்கு எந்த விலைக்கட்டுப்பாடும் செய்யாமல் கஷ்டப்பட்டு வெயிலில் காய்ந்து, மழையில் நனைந்து பாடுபடும் விவசாயிக்கு மட்டும் விலைக் கட்டுப்பாடு நிர்ணயிக்கிறார்கள். எந்த விவசாயியும் விவசாயத்தின் மூலம் கோடிகோடியாகச் சம்பாதித்ததாகப் பார்க்க முடியாது. ஒரு டூத் பேஸ்ட் கம்பெனி ஆரம்பித்தவன் ஒரு வருடத்தில் பல கோடிகளுக்கு அதிபதியாகி விடுகிறான்.

ஒரு விவசாயி விவசாயத்தின் மூலம் கோடிகளுக்கு அதிபதியாக வேண்டும். அதுதான் உண்மையான பொருளாதாரம். அதில் உழைக்கின்ற உழைப்பு வேறெதிலும் கிடையாது. விவசாயம் செய்பவன் இன்னும் அந்தக் கோவனத்தைத்தான் கட்டிக் கொண்டிருக்கின்றானே தவிர முன்னேறவே இல்லை. அவன்தான் நமக்குச் சோறு போடுகிறான். அதையெல்லாம் கவனித்துத்தான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இதை அநீதி என்று கூறுகிறார்கள்.

## பிறமதத்தினருடன் வியாபாரம்

பிறமதத்தவர்களுடன் வியாபரத்தில் கூட்டுச் சேர்வதற்கு மார்க்கத்தில் அனுமதியுள்ளது. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கைபர் பகுதியை வெற்றி கொண்டபோது அங்கிருந்த யூதர்களுடன் வியாபார ஒப்பந்தம் செய்து கொண்டார்கள்.

صحيح البخاري 2285 - حَدَّثَنَا مُوسَى بْنُ إِسْمَاعِيلَ، حَدَّثَنَا جُوَيْرِيَةُ بْنُ أَسْمَاءَ، عَنْ نَافِعٍ، عَنْ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: " أَعْطَى رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ خَيْبَرَ اليَهُودَ: أَنْ يَعْمَلُوهَا وَيَزْرَعُوهَا، وَلَهُمْ شَطْرُ مَا يَخْرُجُ مِنْهَ

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கைபரில் இருந்த யூதர்களுடன், அங்குள்ள மரங்களில் விளையும் கனிகள், நிலத்தில் விளையும் தானியங்கள் ஆகியவற்றில் பாதியைக் கொடுத்து விட வேண்டும் என்ற நிபந்தனையின் பேரில் (கைபரின் நிலங்களையும் மரங்களையும் அவர்கள் விவசாயத்திற்காகப் பயன்படுத்திக் கொள்ள அனுமதியளித்து) ஒப்பந்தம் செய்து கொண்டார்கள்.

நூல் : புகாரி 2285

எனவே பிறமதத்தவர்களுடன் சேர்ந்து வியாபாரம் செய்வது மார்க்கத்தில் தடுக்கப்படவில்லை. அனுமதிக்கப்பட்டிருக்கின்றது.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது பணியாளராக அனஸ் என்ற முஸ்லிம் இளைஞரை நியமித்திருந்தது போல் ஒரு யூத இளைஞரையும் பணியாளாக நியமித்திருந்தனர்.

صحيح البخاري 1356 - حَدَّثَنَا سُلَيْمَانُ بْنُ حَرْبٍ، حَدَّثَنَا حَمَّادٌ وَهُوَ ابْنُ زَيْدٍ، عَنْ ثَابِتٍ، عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: كَانَ غُلاَمٌ يَهُودِيٌّ يَخْدُمُ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَمَرِضَ، فَأَتَاهُ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ يَعُودُهُ، فَقَعَدَ عِنْدَ رَأْسِهِ، فَقَالَ لَهُ: «أَسْلِمْ»، فَنَظَرَ إِلَى أَبِيهِ وَهُوَ عِنْدَهُ فَقَالَ لَهُ: أَطِعْ أَبَا القَاسِمِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَأَسْلَمَ، فَخَرَجَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ وَهُوَ يَقُولُ: «الحَمْدُ لِلَّهِ الَّذِي أَنْقَذَهُ مِنَ النَّارِ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்த ஒரு யூதச் சிறுவன் திடீரென நோயுற்றான். எனவே அவனை நோய் விசாரிக்க நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அவனிடம் வந்தபோது, அவனது தலைமாட்டில் அமர்ந்துகொண்டு, "இஸ்லாத்தை ஏற்றுக்கொள்!" என்றார்கள். உடனே அவன் தன்னருகிலிருந்த தந்தையைப் பார்த்தான். அப்போது அவர், "அபுல் காசிமாகிய நபிகள் நாயகம் (ஸல்)

அவர்களின் கூற்றுக்குக் கட்டுப்படு!" என்றதும் அவன் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டான். உடனே நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "இவனை நரகத்திலிருந்து பாதுகாத்த அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்" எனக் கூறியவாறு அங்கிருந்து வெளியேறினார்கள்.

நூல் : புகாரி 1356

## தடை செய்யப்பட்டவைகளை விற்கலாமா

மார்க்கத்தில் சில பொருட்கள் உண்பதற்கோ அணிவதற்கோ பிறவகைகளில் பயன்படுத்துவதற்கோ தடை செய்யப்பட்டு இருந்தால் அதை விற்று சம்பாதிக்கக் கூடாது.

صحيح البخاري 2086 - حَدَّثَنَا أَبُو الوَلِيدِ، حَدَّثَنَا شُعْبَةُ، عَنْ عَوْنِ بْنِ أَبِي جُحَيْفَةَ، قَالَ: رَأَيْتُ أَبِي اشْتَرَى عَبْدًا حَجَّامًا، فَسَأَلْتُهُ فَقَالَ: « نَهَى النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ عَنْ ثَمَنِ الكَلْبِ وَثَمَنِ الدَّمِ، وَنَهَى عَنِ الوَاشِمَةِ وَالمَوْشُومَةِ، وَآكِلِ الرِّبَا وَمُوكِلِهِ، وَلَعَنَ المُصَوِّرَ»

நாய்களை விற்று அதன் மூலம் வருவாய் ஈட்டுவதை நபிகள் நாயகம் ஸல் அவர்கள் தடை செய்தார்கள்

நூல் : புகாரி 2086, 2237, 2238,

நாய்களை வளர்க்க இஸ்லாம் தடை செய்துள்ளதால் அதை விற்று சம்பாதிப்பது தடுக்கப்பட்டுள்ளது. ஆயினும் சில காரணங்களுக்காக நாய்களை வளர்க்க இஸ்லாம் அனுமதித்துள்ளது. அது போன்ற பணிகளுக்குப் பயன்படும் நாய்களை விற்கலாம்.

தாமாகச் செத்தவை, இரத்தம், பன்றியின் இறைச்சி, அல்லாஹ் அல்லாதோருக்காக அறுக்கப்பட்டவை ஆகியவற்றையே அவன் உங்களுக்குத் தடை செய்துள்ளான். வரம்பு மீறாமலும், வலியச் செல்லாமலும் நிர்பந்திக்கப்படுவோர் மீது எந்தக் குற்றமும் இல்லை. அல்லாஹ் மன்னிப்பவன்; நிகரற்ற அன்புடையோன்.

திருக்குர்ஆன் 2:173

இந்த வசனத்தில் நான்கு விஷயங்கள் தடுக்கப்பட்டுள்ளதாக அல்லாஹ் கூறுகிறான். இந்தத் தடை உண்பதற்கு மட்டுமல்ல. மற்றவர்களுக்கு இதை விற்பதற்கும் தான் என்பதை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தெளிவுபடுத்தியுள்ளனர்.

2236 - حَدَّثَنَا قُتَيْبَةُ، حَدَّثَنَا اللَّيْثُ، عَنْ يَزِيدَ بْنِ أَبِي حَبِيبٍ، عَنْ عَطَاءِ بْنِ أَبِي رَبَاحٍ، عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، أَنَّهُ: سَمِعَ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، يَقُولُ عَامَ الفَتْحِ وَهُوَ بِمَكَّةَ: «إِنَّ اللَّهَ وَرَسُولَهُ حَرَّمَ بَيْعَ الخَمْرِ، وَالمَيْتَةِ وَالخِنْزِيرِ وَالأَصْنَامِ»، فَقِيلَ: يَا رَسُولَ اللَّهِ، أَرَأَيْتَ شُحُومَ المَيْتَةِ، فَإِنَّهَا يُطْلَى بِهَا السُّفُنُ، وَيُدْهَنُ بِهَا الجُلُودُ، وَيَسْتَصْبِحُ بِهَا النَّاسُ؟ فَقَالَ: «لاَ، هُوَ حَرَامٌ»، ثُمَّ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ عِنْدَ ذَلِكَ: «قَاتَلَ اللَّهُ اليَهُودَ إِنَّ اللَّهَ لَمَّا حَرَّمَ شُحُومَهَا جَمَلُوهُ، ثُمَّ بَاعُوهُ، فَأَكَلُوا ثَمَنَهُ»

பன்றி, தானாகச் செத்தவை, சாராயம் மற்றும் சிலைகளை விற்பதை அல்லாஹ்வும் அவனது தூதரும் தடுத்துள்ளார்கள் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மக்கா வெற்றியின்போது கூறினார்கள்.

நூல் : புகாரி 2236

2086 - حدثنا أبو الوليد، حدثنا شعبة، عن عون بن أبي جحيفة، قال: رأيت أبي اشترى عبدا حجاما، فسألته فقال: نهى النبي صلى الله عليه وسلم عن ثمن الكلب وثمن الدم، ونهى عن الواشمة والموشومة، وآكل الربا وموكله، ولعن المصور

இரத்தத்தையும் நாயையும் விற்று சம்பாதிப்பதை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தடுத்தார்கள்.

நூல் : புகாரி 2086

سَأَلَ عَبْدَ اللَّهِ بْنَ عَبَّاسٍ عَمَّا يُعْصَرُ مِنْ الْعِنَبِ فَقَالَ ابْنُ عَبَّاسٍ إِنَّ رَجُلًا أَهْدَى لِرَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ رَاوِيَةَ خَمْرٍ فَقَالَ لَهُ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ هَلْ عَلِمْتَ أَنَّ اللَّهَ قَدْ حَرَّمَهَا قَالَ لَا فَسَارَّ إِنْسَانًا فَقَالَ لَهُ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ بِمَ سَارَرْتَهُ فَقَالَ أَمَرْتُهُ بِبَيْعِهَا فَقَالَ إِنَّ الَّذِي حَرَّمَ شُرْبَهَا حَرَّمَ بَيْعَهَا قَالَ فَفَتَحَ الْمَزَادَةَ حَتَّى ذَهَبَ مَا فِيهَا

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு ஒரு தோல்பை (நிரம்ப) மதுவை அன்பளிப்பாக வழங்கினார் ஒருவர். அவரிடம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "அல்லாஹ் மதுவைத் தடை செய்துவிட்டது உமக்குத் தெரியுமா?" என்று கேட்டார்கள். அதற்கு அவர், இல்லை என்று கூறிவிட்டு, பிறகு (தம் அருகிலிருந்த) ஒரு மனிதரிடம் இரகசியமாக ஏதோ சொன்னார். உடனே நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "அவரிடம் இரகசியமாக என்ன சொன்னீர்?" என்று கேட்டார்கள். அதற்கு அந்த மனிதர், "அதை விற்றுவிடச் சொன்னேன்" என்றார். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "மதுவை அருந்துவதற்குத் தடை விதித்த (இறை)வனே அதை விற்பதற்கும் தடை விதித்துள்ளான்" என்றார்கள். உடனே அம்மனிதர் தோல் பையைத் திறந்துவிட, அதிலுள்ளது (வழிந் தோடிப்) போனது.

நூல் : முஸ்லிம் 3220

இந்தச் செய்தியின் மூலம் மதுவை நாம் வாங்கவோ விற்கவோ கூடாது என்பது தெளிவாகிறது.

سنن أبي داود 3674 - حَدَّثَنَا عُثْمَانُ بْنُ أَبِي شَيْبَةَ، حَدَّثَنَا وَكِيعُ بْنُ الْجَرَّاحِ، عَنْ عَبْدِ الْعَزِيزِ بْنِ عُمَرَ، عَنْ أَبِي عَلْقَمَةَ، مَوْلَاهُمْ وَعَبْدِ الرَّحْمَنِ بْنِ عَبْدِ اللَّهِ الْغَافِقِيِّ، أَنَّهُمَا سَمِعَا ابْنَ عُمَرَ، يَقُولُ: قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «لَعَنَ اللَّهُ الْخَمْرَ، وَشَارِبَهَا، وَسَاقِيَهَا، وَبَائِعَهَا، وَمُبْتَاعَهَا، وَعَاصِرَهَا، وَمُعْتَصِرَهَا، وَحَامِلَهَا، وَالْمَحْمُولَةَ إِلَيْهِ»

மதுவையும் அதைக் குடிப்பவனையும் அதை ஊற்றிக் கொடுப்பவனையும் அதைவிற்பவனையும் வாங்குபனையும் அதை சுமந்து செல்பவனையும் சுமந்து செல்லப்படுபவனையும் அல்லாஹ் சபிக்கின்றான் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல் : அபுதாவூத் 3189

புகையிலைப் பொருட்கள், பீடி, சிகரெட், பான்பராக், கஞ்சா, அபின் மற்றும் எவையெல்லாம் மனிதனின் உடலுக்கும் அறிவுக்கும் கேடு விலைவிக்குமோ அவற்றை வியாபாரம் செய்வது ஹராமாகும்.

அல்லாஹ்வின் பாதையில் செலவிடுங்கள்! உங்கள் கைகளால் நாசத்தைத் தேடிக் கொள்ளாதீர்கள்! நன்மை செய்யுங்கள்! நன்மை செய்வோரை அல்லாஹ் விரும்புகிறான்.

திருக்குர்ஆன் 2:195

சுருக்கமாகச் சொல்வது என்றால் மார்க்கத்தில் எவை ஹராமாக்கப்பட்டுள்ளதோ அது போன்ற எதனையும் வியாபாரமாக பணம் சம்பாதிக்கும் வழியாக ஆக்கக் கூடாது.

விபச்சாரம் ,பச்சை குத்திவிடுதல், இசைக் கருவிகள், ஆபாசமான சினிமாக்கள் குறுந்தகடுகள், லாட்டரிச் சீட்டுக்கள் போன்ற எதனையும் பணம் சம்பாதிக்கும் வழியாக ஆக்கக் கூடாது. அவ்வாறு திரட்டப்படும் பணம் பச்சை ஹராமாகும்.

தடை செய்யப்பட்டவை இரு வகைப்படும்.

ஒன்று முற்றாகத் தடுக்கப்பட்டவை.

மற்றொன்று ஓரளவுக்கு தடுக்கப்பட்டவை.

உண்ணவோ, பருகவோ, பயன்படுத்தவோ யாருக்கும் அனுமதி இல்லை என்றால் அது தான் முழுமையாகத் தடுக்கப்பட்டது. அதை விற்பதும் கூடாது.

உண்பதற்கு தடுத்து வேறு வகையில் பயன்படுத்த அனுமதிக்கப்பட்டு இருந்தாலோ, ஒரு வகையினருக்கு தடுக்கப்பட்டு மற்றவர்களுக்கு அனுமதிக்கப்பட்டு இருந்தாலோ, ஒரு காரணத்துக்காக தடுக்கப்பட்டு அந்தக் காரணம் இல்லாத போது அனுமதிக்கப்பட்டு இருந்தாலோ அவை ஓரளவு தடுக்கப்பட்டதாகும். இவற்றை நாம் வியபாரம் செய்தால் தடுக்கப்பட்டதை விற்றதாக ஆகாது.

உதாரணமாக வீட்டுக் கழுதையை எடுத்துக் கொள்வோம். இது உண்பபதற்குத் தான் தடுக்கப்பட்டுள்ளது. ஆனால் அதில் சவாரி செய்வது தடுக்கப்படவில்லை. எனவே கழுதையை நாம் விற்கலாம்.

நாயை உண்பதற்குத் தடை உள்ளது. ஆனால் காவல் காப்பதற்காகவும் வேட்டையாடவும் பயன்படுத்த அனுமதி உள்ளது. இந்தப் பயன்பாட்டுக்குத் தகுந்த நாய்களை நாம் விற்பதும் கூடும்.

ஆயினும் சில காரணங்களுக்காக நாய்களை வளர்க்க இஸ்லாம் அனுமதித்துள்ளது. அது போன்ற பணிகளுக்குப் பயன்படும் நாய்களை விற்கலாம்.

4104 - حدثنا عبيد الله بن معاذ حدثنا أبى حدثنا شعبة عن أبى التياح سمع مطرف بن عبد الله عن ابن المغفل قال أمر رسول الله -صلى الله عليه وسلم- بقتل الكلاب ثم قال ما بالهم وبال الكلاب ثم رخص فى كلب الصيد وكلب الغنم.

ஆட்டு மந்தைகளைப் பாதுகாக்கின்ற நாய்களையும் வேட்டையாடுகின்ற நாய்களையும் நீங்கள் வைத்துக் கொள்ளலாம் என நபியவர்கள் பின்பு அனுமதியளித்தார்கள்.

நூல் : முஸ்லிம் 4104

கால்நடைகளைப் பாதுகாப்பதற்காக நாய்களை வளர்க்கலாம் என்றால் அதை விற்பனையும் செய்யலாம்.

அது போல் நாய்கள் மூலம் வேட்டையாடுவதை அல்லாஹ் அனுமதிக்கிறான்.

"தமக்கு அனுமதிக்கப்பட்டவை யாவை?" என்று அவர்கள் உம்மிடம் கேட்கின்றனர். "தூய்மையானவைகளும், வேட்டையாடும் பிராணிகளில் எவற்றுக்கு நீங்கள் பயிற்சியளித்து அல்லாஹ் உங்களுக்குக் கற்றுத் தந்தவற்றைக் கற்றுக் கொடுக்கிறீர்களோ அவை(வேட்டையாடியவை)களும் உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளன" எனக் கூறுவீராக! அவை உங்களுக்காகப் பிடித்துக் கொண்டு வந்ததை உண்ணுங்கள்! (அதை அனுப்பும் போது) அதன் மீது அல்லாஹ்வின் பெயரைக் கூறுங்கள்! அல்லாஹ்வை அஞ்சுங்கள்! அல்லாஹ் விரைந்து கணக்கெடுப்பவன்.

திருக்குர்ஆன் 5:4

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் நாய்கள் மூலம் வேட்டையாடுவதை அனுமதித்துள்ளனர். எனவே வேட்டையாடுவதற்கு ஏற்ற நாய்களை வியாபாரம் செய்து பொருள் ஈட்டலாம்.

صحيح البخاري 2322 - حَدَّثَنَا مُعَاذُ بْنُ فَضَالَةَ، حَدَّثَنَا هِشَامٌ، عَنْ يَحْيَى بْنِ أَبِي كَثِيرٍ، عَنْ أَبِي سَلَمَةَ، عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «مَنْ أَمْسَكَ كَلْبًا، فَإِنَّهُ يَنْقُصُ كُلَّ يَوْمٍ مِنْ عَمَلِهِ قِيرَاطٌ، إِلَّا كَلْبَ حَرْثٍ أَوْ مَاشِيَةٍ»، قَالَ ابْنُ سِيرِينَ، وَأَبُو صَالِحٍ، عَنْ أَبِي هُرَيْرَةَ، عَنِ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «إِلَّا كَلْبَ غَنَمٍ أَوْ حَرْثٍ أَوْ صَيْدٍ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

எவர் நாய் வைத்திருக்கின்றாரோ அவரது நற்செயல்களிலிருந்து ஒவ்வொரு நாளும் ஒரு கீராத் அளவிற்கு (அவற்றின் ஊதியம்) குறைந்து போய் விடும்; விவசாயப் பண்ணையையோ கால்நடைகளையோ (திருட்டு போகாமல்) பாதுகாப்பதற்காக வைத்திருக்கும் நாய்களைத் தவிர.

நூல் : புகாரி 2322

தடை செய்யப்பட்ட பிராணிகளின் தோல் உண்பதற்குத்தான் தடுக்கப்பட்டுள்ளது. அவற்றைப் பதப்படுத்தி செருப்பாகவோ, தண்ணீர் பிடித்து வைத்துக் கொள்ளும் பாத்திரமாகவோ, இடுப்பு பட்டையாகவோ, கைப்பையாகவோ பயன்படுத்த அனுமதி உள்ளது. எனவே பாடம் செய்யப்பட்ட தோல்களை விற்கலாம்.

உதாரணமாக, இறந்த ஆட்டை நபித்தோழர்கள் பயன்படுத்தாமல் இருந்தபோது, இந்த ஆட்டின் தோலை நீங்கள் பயன்படுத்தலாமே என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

صحيح البخاري

1492 - حَدَّثَنَا سَعِيدُ بْنُ عُفَيْرٍ، حَدَّثَنَا ابْنُ وَهْبٍ، عَنْ يُونُسَ، عَنِ ابْنِ شِهَابٍ، حَدَّثَنِي عُبَيْدُ اللَّهِ بْنُ عَبْدِ اللَّهِ، عَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، قَالَ: " وَجَدَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ شَاةً مَيِّتَةً، أُعْطِيَتْهَا مَوْلاَةٌ لِمَيْمُونَةَ مِنَ الصَّدَقَةِ، فَقَالَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «هَلَّا انْتَفَعْتُمْ بِجِلْدِهَا؟» قَالُوا: إِنَّهَا مَيْتَةٌ: قَالَ: «إِنَّمَا حَرُمَ أَكْلُهَا»

மைமூனா (ரலி) அவர்களுக்குச் சொந்தமான அடிமைப் பெண் ஒருவருக்கு ஓர் ஆடு அன்பளிப்புச் செய்யப்பட்டது. அது இறந்து விட்டது. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அதைக் கடந்து சென்றபோது, அதனுடைய தோலை எடுத்து, அதைப் பதப்படுத்தி அதிலிருந்து நீங்கள் பயன் பெற்றிருக்கலாமே? என்று கேட்டார்கள். அதற்கு, அது செத்தது என்று (தோழர்கள்) பதிலளித்தனர். அதைச் சாப்பிடுவதுதான் உங்களுக்குத் தடுக்கப்பட்டுள்ளது என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள்.

நூல் : புகாரி 1492

صحيح مسلم

840 - حَدَّثَنِى إِسْحَاقُ بْنُ مَنْصُورٍ وَأَبُو بَكْرِ بْنُ إِسْحَاقَ قَالَ أَبُو بَكْرٍ حَدَّثَنَا وَقَالَ ابْنُ مَنْصُورٍ أَخْبَرَنَا عَمْرُو بْنُ الرَّبِيعِ أَخْبَرَنَا يَحْيَى بْنُ أَيُّوبَ عَنْ يَزِيدَ بْنِ أَبِى حَبِيبٍ أَنَّ أَبَا الْخَيْرِ حَدَّثَهُ قَالَ رَأَيْتُ عَلَى ابْنِ وَعْلَةَ السَّبَئِىِّ فَرْوًا فَمَسِسْتُهُ فَقَالَ مَا لَكَ تَمَسُّهُ قَدْ سَأَلْتُ عَبْدَ اللَّهِ بْنَ عَبَّاسٍ قُلْتُ إِنَّا نَكُونُ بِالْمَغْرِبِ وَمَعَنَا الْبَرْبَرُ وَالْمَجُوسُ نُؤْتَى بِالْكَبْشِ قَدْ ذَبَحُوهُ وَنَحْنُ لاَ نَأْكُلُ ذَبَائِحَهُمْ وَيَأْتُونَا بِالسِّقَاءِ يَجْعَلُونَ فِيهِ الْوَدَكَ.

அபுல்கைர் மர்ஸத் பின் அப்தில்லாஹ் அல்யஸனீ கூறுகிறார்

அப்துர் ரஹ்மான் பின் வஅலா அஸ்ஸபஇய்யீ அவர்கள் தோலாடை ஒன்றை அணிந்திருப்பதைக் கண்டேன். அதைத் தடவிப் பார்த்தேன். அப்போது அவர்கள்,

"ஏன் இதைத் தடவிப் பார்க்கிறீர்கள்? நான் இதை (அணிவது) பற்றி அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்களிடம், "நாங்கள் மேற்கே வசித்து வருகிறோம். எங்களுடன் (ஆப்பிரிக்கர்களான) பர்பர் இன மக்களும் அக்னி ஆராதகர்(களான மஜூசி)களும் வசித்து வருகின்றனர். அவர்கள் அறுத்த ஆடுகள் எங்களிடம் கொண்டு வரப்படுவதுண்டு. ஆனால், அவர்கள் அறுத்ததை நாங்கள் சாப்பிடுவதில்லை. மேலும், அவர்கள் தோல் பைகளில் கொழுப்புகளை வைத்து எங்களிடம் கொண்டு வருகின்றனரே (அந்தத் தோலை நாங்கள் பயன்படுத்தலாமா?) என்று கேட்டேன். அதற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், "நாங்கள் இது குறித்து நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வினவினோம். அதற்கு அவர்கள், "அதைப் பதனிடுவதே அதைத் தூய்மையாக்கி விடும் என்று பதிலளித்தார்கள்" என்றார்கள்.

நூல் : முஸ்லிம் 840

செத்த ஆட்டின் தோல் மட்டுமின்றி ஹராமாக்கப்பட்ட எந்தப் பிராணியின் தோலாயினும் பாடம் செய்யப்பட்டால் அது தூய்மையாகிவிடும். பாடம் செய்யப்பட்ட தோல்களால் செய்யப்பட்ட ஆடைகள், கைப்பைகள், தண்ணீர் துறுத்திகள், இடுப்பு பட்டைகள், காலணிகள் போன்றவற்றைப் பயன்படுத்திக் கொள்ளலாம். அது எந்தப் பிராணியின் தோலால் செய்யப்பட்டது என்பதற்கு முக்கியத்துவம் இல்லை.

صحيح مسلم

838 - حَدَّثَنَا يَحْيَى بْنُ يَحْيَى أَخْبَرَنَا سُلَيْمَانُ بْنُ بِلاَلٍ عَنْ زَيْدِ بْنِ أَسْلَمَ أَنَّ عَبْدَ الرَّحْمَنِ بْنَ وَعْلَةَ أَخْبَرَهُ عَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَبَّاسٍ قَالَ سَمِعْتُ رَسُولَ اللَّهِ -صلى الله عليه وسلم- يَقُولُ « إِذَا دُبِغَ الإِهَابُ فَقَدْ طَهُرَ ».

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

தோல் பதனிடப்பட்டுவிட்டால் தூய்மை அடைந்துவிடும்.

நூல் : முஸ்லிம் 838

தோல் பதனிடப்பட்டால் அது தூய்மையாகி விடும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியது ஹராமாக்கப்பட்ட பிராணிகளின் தோலைப் பற்றியதாகத்

தான் இருக்க முடியும். முறையாக அறுக்கப்பட்ட ஹலாலான பிராணிகளைப் பொருத்த வரை மலஜலம் தவிர அதன் அனைத்து பாகங்களுமே தூய்மையானவை தான். அதனால் தான் அதை நாம் உண்ணுகிறோம்.

உண்ண அனுமதிக்கப்படாத பிராணிகள் தூய்மையற்றவையாக உள்ளதால் அதன் தோலும் தூய்மையற்றதாக இருக்குமோ என்ற சந்தேகம் ஏற்படும். எனவேதான் தோல் பதனிடப்பட்டால் அது தூய்மையாகி விடும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் விதிவிலக்கு அளிக்கின்றனர்.

4241 - أخبرنا قتيبة وعلي بن حجر عن سفيان عن زيد بن أسلم عن بن وعلة عن بن عباس قال قال رسول الله صلى الله عليه و سلم : أيما إهاب دبغ فقد طهر

எந்தத் தோலாக இருந்தாலும் பதனிடப்பட்டால் அது தூய்மையடைந்து விடும் என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறனார்கள்.

நூல்கள் : நஸாயீ, அஹ்மத், திர்மிதி, இப்னுமாஜா

السنن الكبرى للبيهقي

(اخبرنا) أبو القاسم عبد الرحمن بن عبيدالله بن عبد الله بن الحربى من أهل الحربية ببغداد انا أبو بكر محمد بن عبد الله الشافعي انا ابراهيم بن الهيثم ثنا على بن عياش ثنا محمد بن مطرف عن زيد بن اسلم عن عطاء بن يسار عن عائشة عن النبي صلى الله عليه وسلم قال طهور كل اهاب دباغه ، رواته كلهم ثقات.

பதனிடப்பட்ட எல்லா தோல்களும் தூய்மையானவை என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல் : பைஹகீ

மேற்கண்ட இரண்டு ஹதீஸ்களிலும் பயன்படுத்தப்பட்டுள்ள சொற்கள் கூடுதலாகக் கவனத்தில் கொள்ளப்பட வேண்டும். முதல் ஹதீஸில் எந்தத் தோலாயினும் பாடம் செய்யப்பட்டால் அது தூய்மையாகி விடும் எனக் கூறுகிறார்கள். இரண்டாவது ஹதீஸில் ஒவ்வொரு தோலும் பாடம் செய்யப்பட்டால் தூய்மையாகி விடும் என்று கூறுகிறார்கள். பாடம் செய்யப்பட்ட எந்தத் தோலாக இருந்தாலும் அது தூய்மையாகிவிடும் என்ற கருத்தை மேற்கண்ட சொற்கள் தெளிவாகக் குறிப்பிடுகின்றன.

பட்டாடை, தங்க மோதிரம் போன்றவை பொதுவாகத் தடை செய்யப்பட்டவை அல்ல! அவற்றை முஸ்லிம் ஆண்கள் பயன்படுத்துவதற்கு மட்டுமே தடை உள்ளது.

இது போன்று பொதுவாகத் தடை செய்யப்படாமல் குறிப்பிட்ட சாராருக்கு மட்டும் தடுக்கப்பட்ட பொருட்களை விற்பனை செய்யலாம். இதற்கு மார்க்கத்தில் தெளிவான அனுமதி உள்ளது.

صحيح البخاري

948 - حَدَّثَنَا أَبُو اليَمَانِ، قَالَ: أَخْبَرَنَا شُعَيْبٌ، عَنِ الزُّهْرِيِّ، قَالَ: أَخْبَرَنِي سَالِمُ بْنُ عَبْدِ اللَّهِ، أَنَّ عَبْدَ اللَّهِ بْنَ عُمَرَ، قَالَ: أَخَذَ عُمَرُ جُبَّةً مِنْ إِسْتَبْرَقٍ تُبَاعُ فِي السُّوقِ، فَأَخَذَهَا، فَأَتَى بِهَا رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَقَالَ: يَا رَسُولَ اللَّهِ، ابْتَعْ هَذِهِ تَجَمَّلْ بِهَا لِلْعِيدِ وَالوُفُودِ، فَقَالَ لَهُ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «إِنَّمَا هَذِهِ لِبَاسُ مَنْ لاَ خَلاَقَ لَهُ» فَلَبِثَ عُمَرُ مَا شَاءَ اللَّهُ أَنْ يَلْبَثَ، ثُمَّ أَرْسَلَ إِلَيْهِ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ بِجُبَّةِ دِيبَاجٍ، فَأَقْبَلَ بِهَا عُمَرُ، فَأَتَى بِهَا رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَقَالَ يَا رَسُولَ اللَّهِ: إِنَّكَ قُلْتَ: «إِنَّمَا هَذِهِ لِبَاسُ مَنْ لاَ خَلاَقَ لَهُ» وَأَرْسَلْتَ إِلَيَّ بِهَذِهِ الجُبَّةِ، فَقَالَ لَهُ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «تَبِيعُهَا أَوْ تُصِيبُ بِهَا حَاجَتَكَ»

உமர் (ரலி) அவர்கள் கடைவீதியில் விற்பனை செய்யப்பட்ட தடித்த பட்டு நீளங்கி ஒன்றை விலை பேச முற்பட்டார்கள். அதை எடுத்துக் கொண்டு நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்து, அல்லாஹ்வின் தூதரே! இதைத் தாங்கள் வாங்கி, பெருநாளிலும் தூதுக்குழுக்கள் தங்களிடம் வரும்போதும் (அணிந்து) அலங்கரித்துக் கொள்ளலாமே! என்று கூறினார்கள். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், இது (மறுமையில்) எந்தப் பேறும் இல்லாத (ஆட)வர்களின் (இவ்வுலக) ஆடையாகும் என்று கூறினார்கள். உமர் (ரலி) அவர்கள் அல்லாஹ் நாடிய நாட்கள் வரை (இது பற்றி ஏதும் கேட்காமல்) பொறுமையாக இருந்தார்கள். பிறகு (ஒருநாள்) நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உமர் (ரலி) அவர்களுக்கு அலங்காரப் பட்டாலான நீள அங்கி ஒன்றைக் கொடுத்தனுப்பினார்கள். அதைப் பெற்றுக் கொண்ட உமர் (ரலி) அவர்கள் அதை எடுத்துக் கொண்டு நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்து, அல்லாஹ்வின் தூதரே! இது (மறுமையில்) எந்தப் பேறும் இல்லாத (ஆட)வர்களின் (இவ்வுலக) ஆடை என்று நீங்கள் குறிப்பிட்டீர்கள். (பிறகு) நீங்களே இந்த அங்கியை என்னிடம் கொடுத்தனுப்பி உள்ளீர்களே என்று கேட்டார்கள். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், இதை நீங்கள் விற்று விடலாம்; அல்லது இதன் மூலம்

உங்களது (வேறு ஏதேனும்) தேவையைப் பூர்த்தி செய்து கொள்ளலாம் (என்பதற்காகவே வழங்கினேன்) என்று கூறினார்கள்.

நூல் : புகாரி 948

தடுக்கப்பட்ட பட்டாடையை விற்று பயன்படுத்திக் கொள்ள நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அனுமதி அளித்துள்ளதை இந்த ஹதீஸில் இருந்து அறியலாம்.

صحيح البخاري

886 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ، قَالَ: أَخْبَرَنَا مَالِكٌ، عَنْ نَافِعٍ، عَنْ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ: أَنَّ عُمَرَ بْنَ الخَطَّابِ، رَأَى حُلَّةَ سِيَرَاءَ عِنْدَ بَابِ المَسْجِدِ، فَقَالَ: يَا رَسُولَ اللَّهِ لَوِ اشْتَرَيْتَ هَذِهِ، فَلَبِسْتَهَا يَوْمَ الجُمُعَةِ وَلِلْوَفْدِ إِذَا قَدِمُوا عَلَيْكَ، فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «إِنَّمَا يَلْبَسُ هَذِهِ مَنْ لاَ خَلاَقَ لَهُ فِي الآخِرَةِ» ثُمَّ جَاءَتْ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ مِنْهَا حُلَلٌ، فَأَعْطَى عُمَرَ بْنَ الخَطَّابِ رَضِيَ اللَّهُ عَنْهُ، مِنْهَا حُلَّةً، فَقَالَ عُمَرُ: يَا رَسُولَ اللَّهِ، كَسَوْتَنِيهَا وَقَدْ قُلْتَ فِي حُلَّةِ عُطَارِدٍ مَا قُلْتَ؟ قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «إِنِّي لَمْ أَكْسُكَهَا لِتَلْبَسَهَا» فَكَسَاهَا عُمَرُ بْنُ الخَطَّابِ رَضِيَ اللَّهُ عَنْهُ، أَخًا لَهُ بِمَكَّةَ مُشْرِكًا

(ஒரு முறை) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசல் நுழைவாயிலருகே கோடு போட்ட பட்டு அங்கி ஒன்று விற்கப்படுவதைக் கண்டார்கள். உடனே, அல்லாஹ்வின் தூதரே! இதைத் தாங்கள் வாங்கிக் கொண்டால் ஜுமுஆ நாளிலும் தூதுக் குழுக்கள் தங்களிடம் வரும்போதும் அணிந்து கொள்ளலாமே என்று சொன்னார்கள். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், மறுமையில் எந்தப் பேறும் இல்லாதவர்தாம் (இம்மையில்) இதை அணிவார் என்று கூறினார்கள். பின்னர் அதே வகையைச் சேர்ந்த சில பட்டு அங்கிகள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு வந்தன. அவற்றில் ஒன்றை உமர் (ரலி) அவர்களுக்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கொடுத்தார்கள். அப்போது உமர் (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதரே! எனக்கு இதை அணிந்து கொள்ளக் கொடுக்கிறீர்களே! (பனூ தமீம் குலத்து நண்பர்) உதாரித் அவர்கள் வழங்கிய கோடுபோட்ட பட்டு அங்கி விஷயத்தில் வேறு விதமாகச் சொன்னீர்களே என்று கேட்டார்கள். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், அதை நீங்கள் அணிந்து கொள்ள வேண்டுமென்பதற்காக உமக்கு நான் கொடுக்கவில்லை! (அதன் மூலம் வேறு ஏதேனும் வகையில் நீங்கள் பயன்பெற்றுக் கொள்ளவே நான் வழங்கினேன்) என்று கூறினார்கள். ஆகவே, உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள்

மக்காவிலிருந்த இணைவைப்பாளரான தம் சகோதரர் ஒருவருக்கு அதை அணியக் கொடுத்து விட்டார்கள்.

நூல் : புகாரி 886, 2612

இதன் மூலம் உங்களது (வேறு ஏதேனும்) தேவையைப் பூர்த்தி செய்து கொள்ளலாம் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கொடுத்த அனுமதியில் அடிப்படையில்தான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அன்பளிப்பாகக் கொடுத்த பட்டாடையை முஸ்லிம் அல்லாத தனது சகோதரருக்கு உமர் (ரலி) அவர்கள் அன்பளிப்புச் செய்துள்ளனர்.

பட்டாடை ஆண்களுக்குத் தடுக்கப்பட்டிருந்தாலும் பெண்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளது என்பதால் அதை விற்கலாம். அன்பளிப்புச் செய்யலாம். அது போல் அதைப் பெற்றுக் கொள்பவர் தனது குடும்பத்துப் பெண்களுக்குக் கொடுக்கலாம். அல்லது அதை விற்றும் பயன்படுத்திக் கொள்ளலாம்.

صحيح البخاري

2104 - حَدَّثَنَا آدَمُ، حَدَّثَنَا شُعْبَةُ، حَدَّثَنَا أَبُو بَكْرِ بْنُ حَفْصٍ، عَنْ سَالِمِ بْنِ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ، عَنْ أَبِيهِ، قَالَ: أَرْسَلَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ إِلَى عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُ بِحُلَّةِ حَرِيرٍ، أَوْ سِيَرَاءَ، فَرَآهَا عَلَيْهِ فَقَالَ: «إِنِّي لَمْ أُرْسِلْ بِهَا إِلَيْكَ لِتَلْبَسَهَا، إِنَّمَا يَلْبَسُهَا مَنْ لاَ خَلاَقَ لَهُ، إِنَّمَا بَعَثْتُ إِلَيْكَ لِتَسْتَمْتِعَ بِهَا» يَعْنِي تَبِيعَهَا

கோடு போடப்பட்ட (மேலங்கியும் கீழங்கியும் அடங்கிய) ஒரு ஜோடிப் பட்டாடையை உமர் (ரலி) அவர்கள் அணிந்திருப்பதைப் பார்த்த நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், இதை நீர் அணிவதற்காக நான் உம்மிடம் அனுப்பவில்லை! (மறுமையின்) பாக்கியமற்றவர்கள் தாம் இதை அணிவார்கள்! நீர் இதில் பயன்பெற்றுக்கொள்ள வேண்டும்; அதாவது விற்க வேண்டும் என்பதற்காகவே உமக்குக் கொடுத்தனுப்பினேன்! என்று கூறினார்கள்.

நூல் : புகாரி 2104

5632 قَالَ كَانَ حُذَيْفَةُ بِالْمَدَايِنِ فَاسْتَسْقَى فَأَتَاهُ دِهْقَانٌ بِقَدَحِ فِضَّةٍ فَرَمَاهُ بِهِ فَقَالَ إِنِّي لَمْ أَرْمِهِ إِلَّا أَنِّي نَهَيْتُهُ فَلَمْ يَنْتَهِ وَإِنَّ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ نَهَانَا عَنْ الْحَرِيرِ وَالدِّيبَاجِ وَالشُّرْبِ فِي آنِيَةِ الذَّهَبِ وَالْفِضَّةِ وَقَالَ هُنَّ لَهُمْ فِي الدُّنْيَا وَهِيَ لَكُمْ فِي الْآخِرَةِ رواه البخاري

ஹுதைஃபா பின் யமான் (ரலி) அவர்கள் (இராக்கில் உள்ள) "அல்மதாயின் (தைஃபூன்) நகரத்தில் இருந்தார்கள். அப்போது பருகுவதற்குத் தண்ணீர் கேட்டார்கள். உடனே (மஜூஸியான) ஊர்த் தலைவர் வெள்ளிப் பாத்திரம் (ஒன்றில் தண்ணீர்) கொண்டு வந்தார். ஹுதைஃபா (ரலி) அவர்கள் அதை அவர் மீது வீசியெறிந்துவிட்டு, (அங்கிருந்தவர்களிடம்) "நான் இவரை(ப் பல முறை) தடுத்தும் இவர் (வெள்ளிப் பாத்திரத்தைத்) தவிர்த்துக் கொள்ளாததால்தான் நான் இதை அவர் மீது வீசியெறிந்தேன். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சாதாரணப் பட்டையோ அலங்காரப் பட்டையோ அணியக் கூடாதென்றும் தங்கம் மற்றும் வெள்ளிப் பாத்திரங்களில் பருக வேண்டாமென்றும் தடை விதித்தார்கள். மேலும் அவர்கள், "அவை இம்மையில் (இறைமறுப்பாளர்களான) அவர்களுக்கும், மறுமையில் (இறைநம்பிக்கையாளர்களான) உங்களுக்கும் உரியனவாகும்" என்று கூறினார்கள் எனத் தெரிவித்தார்கள்.

நூல் : புகாரி 5632

பட்டு, தங்கம், வெள்ளி இவை அனைத்தையும் வியபாரம் செய்யலாம்.

## பூஜிக்கப்பட்ட நிலத்தில் பயிரிடப்பட்டதை விற்கலாமா

முஸ்லிமல்லாதவர்கள் குறிப்பாக இந்து மதத்தவர்கள் விவசாயம் செய்தாலும், கட்டடம் கட்டினாலும், ஒரு கடை திறந்தாலும் பூஜை செய்யாமல் துவக்க மாட்டார்கள். அல்லாஹ் அல்லாதவர்களுக்கு படையல் செய்யப்பட்டதை நாம் சாப்பிடக் கூடாது என்பதால் இதைச் சாப்பிடலாமா? விற்கலாமா என்ற சந்தேகம் எழலாம்.

பூஜை செய்து விட்டு அவர்கள் விவசாயம் செய்வதால் அவர்கள் உற்பத்தி செய்து விற்பனை செய்யும் அரிசி, கோதுமை, இன்னபிற விளை பொருட்களை நாம் உண்ணலாமா? அவர்கள் பூஜை செய்துவிட்டு கட்டிய கட்டடங்களை விலைக்கு வாங்கலாமா? அல்லது வாடகை கொடுத்து அதில் குடியிருக்கலாமா? கடையைத் துவக்கும் நாளிலிலும் அன்றாடம் கடைகளைத் திறக்கும் போதும் பூஜை செய்துவிட்டுத் தான் ஆரம்பிப்பார்கள். எனவே அவர்களின் கடைகளில் பொருட்களை வாங்கலாமா? என்றெல்லாம் கூட சந்தேகம் வரும்.

மேலோட்டமாகப் பார்க்கும் போது இந்தச் சந்தேகம் சரியானது போல் தோன்றினாலும் சிந்தித்துப் பார்க்கும் போது இந்தச் சந்தேகத்துக்கு அவசியம் இல்லை என்பதை நாம் புரிந்து கொள்ளலாம்.

ஒரு பொருளையே சிலைகளுக்குப் படைப்பதும் அந்தப் பொருளின் நன்மைக்காக சிலைகளிடம் வேண்டுவதும் வெவ்வேறானவை. குறிப்பிட்ட ஒரு உணவை கடவுளுக்கு படைக்கிறோம் என்று சொல்லி பூஜை போடுபவர்கள் அந்தப் பொருளில் தங்களுக்கு உள்ள உரிமையை விட்டு விடுவார்கள். அதைப் பிரசாதமாக வழங்கி விடுவார்கள்.

ஆனால் ஒரு வயலில் பூஜை போடுபவர்கள் அந்த வயலைக் கடவுளுக்குப் படைப்பதில்லை. பூஜை செய்த பின்னர் அந்த வயலில் தங்கள் உரிமையை விட்டு விடுவதில்லை. பூஜைக்குப் பின் அந்த வயலைப் பலருக்கும் பங்கு போட்டுக் கொடுப்பதில்லை. எனவே அவர்கள் வயலைக் கடவுளுக்குப்

படைக்கவில்லை என்று இதன் மூலம் தெரிகிறது. வயலில் விளைச்சல் கிடைப்பதற்காக அவர்கள் வேண்டுதல் தான் செய்கிறார்கள்.

ஒரு ஆட்டைக் கடவுளுக்குப் படைப்பதாகச் சொல்பவர்கள் அதன் பின்னர் அந்த ஆட்டில் தங்களுக்கான உரிமையைக் கோர மாட்டார்கள். அதை வெட்டி பங்கிட்டு விடுவார்கள். இது போன்றவை தான் நமக்கு ஹராமாகும்.

வயலை, கட்டடத்தை அவர்கள் கடவுளுக்காக ஆக்குவதில்லை. தமக்குரியதாகவே வைத்துக் கொள்வதால் அது படையலில் சேராது.

பூஜை செய்து விட்டு உற்பத்தி செய்த விளைபொருட்களை இலவசமாகவோ விலைகொடுத்தோ வாங்கி பயன்படுத்தலாம். பூஜைகள் செய்து கட்டப்பட்ட கட்டடத்தில் குடியிருக்கலாம். விலைக்கு வாங்கலாம்.

ஆனால் கடவுளுக்குப் படைக்கும் நம்பிக்கையில் படைக்கப்பட்ட பொருளாக இருந்தால் அதை இலவசமாகவோ விலை கொடுத்தோ வாங்கியோ பயன்படுத்துவது கூடாது.

## முன்பேர வணிகம்

எந்தப் பொருளையும் அன்றைய மார்க்கெட் நிலவரப்படி விற்பதும் வாங்குவதும் தான் யாருக்கும் பாதிப்பு ஏற்படுத்தாத வியாபாரமாகும். நாளைக்கு நமக்கு வரக்கூடிய பொருளுக்கு இன்று விலை நிர்ணயித்துக் கொண்டால் அதில் விற்பவர் அல்லது வாங்குபவர் பாதிக்கப்பட வாய்ப்பு உள்ளது. இத்தகைய வியாபாரம் தான் முன்பேர வணிகம் என்று கூறப்படுகிறது.

ஒரு விவசாயி தனது வயலில் விளையும் நெல்லை ஒரு மூட்டை 500 ரூபாய்க்குத் தருவதாக வியாபாரியிடம் ஒப்பந்தம் செய்கிறார். அறுவடை நாளில் நெல் விலை 600 ஆகி விட்டால் விவசாயிக்கு அநியாயமாக 100 நூறு ரூபாய் நட்டம். அவரது வயிறு எரிய இது காரணமாக ஆகி விடும். நாம் இப்படி ஒப்பந்தம் செய்யாமல் இருந்தால் நமக்கு நூறு நூறு ரூபாய் அதிகம் கிடைத்திருக்குமே என்று என்று ஏக்கம் கொள்வார்.

அது போல் ஒரு மூட்டை நெல் 400 ஆக குறைந்து விட்டால் விவசாயிக்கு நூறு ரூபாய் அதிகம் கிடைத்தாலும் வியாபாரிக்கு நூறு ரூபாய் இழப்பாகிறது.

இது தங்கம் டாலர் இன்னும் அனைத்துப் பொருட்களிலும் நடைமுறைபடுத்தப்படுகிறது.

இது போன்ற வியாபாரம் சிறந்ததல்ல என்றாலும் அன்றைக்கு நபித்தோழர்களுக்கு இருந்த வறுமை காரணமாக செல்வந்தர்களிடம் முன் கூட்டியே பணம் பெற்றுக் கொண்டு இது போல் வியாபாரம் செய்ய அனுமதி அளித்தார்கள்.

صحيح البخاري

2239 - حدثنا عمرو بن زرارة، أخبرنا إسماعيل بن علية، أخبرنا ابن أبي نجيح، عن عبد الله بن كثير، عن أبي المنهال، عن ابن عباس رضي الله عنهما، قال: قدم رسول الله صلى الله عليه وسلم المدينة، والناس يسلفون في الثمر العام والعامين، أو قال: عامين أو ثلاثة، شك إسماعيل، فقال: «من سلف في تمر، فليسلف في كيل معلوم، ووزن معلوم»، حدثنا محمد، أخبرنا إسماعيل، عن ابن أبي نجيح، بهذا: «في كيل معلوم، ووزن معلوم»

நபி (ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வந்த போது, மக்கள் ஒரு வருடம், இரண்டு வருடங்களில் (பொருளைப்) பெற்றுக் கொள்வதாக, பேரீச்சம் பழத்திற்காக முன்பணம் கொடுத்து வந்தனர். நபி (ஸல்) அவர்கள், ஒருவர், (குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு பெற்றுக் கொள்வதாக) பேரீச்சம் பழத்திற்காக முன்பணம் கொடுத்தால் குறிப்பிட்ட எடைக்காகவும் குறிப்பிட்ட அளவுக்காகவும் கொடுக்கட்டும்! என்று கூறினார்கள்.

நூல் : புகாரி 2239, 2240, 2241

வெறும் நிலமாக இருக்கும் போதும் பயிர்கள் முற்றாத நிலையிலும் முன்பணம் வாங்கக் கூடாது. பிஞ்சாக இருக்கும் போதும் முன்பணம் பெறக் கூடாது. இன்னும் சில நாட்களில் அறுவடை செய்யலாம் என்ற அளவுக்கு பயிர்கள் வளர்ந்திருந்தால், இன்னும் சில நாட்களில் காயாக ஆகிவிடும், கனியாக ஆகிவிடும் என்ற அளவுக்கு காய்கள் முற்றி இருந்தால் மட்டுமே முன்பணம் பெறலாம்.

صحيح البخاري 2246 - حَدَّثَنَا آدَمُ، حَدَّثَنَا شُعْبَةُ، أَخْبَرَنَا عَمْرٌو، قَالَ: سَمِعْتُ أَبَا البَخْتَرِيِّ الطَّائِيَّ، قَالَ: سَأَلْتُ ابْنَ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، عَنِ السَّلَمِ فِي النَّخْلِ، قَالَ: «نَهَى النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، عَنْ بَيْعِ النَّخْلِ حَتَّى يُوكَلَ مِنْهُ، وَحَتَّى يُوزَنَ» فَقَالَ الرَّجُلُ: وَأَيُّ شَيْءٍ يُوزَنُ؟ قَالَ رَجُلٌ إِلَى جَانِبِهِ: حَتَّى يُحْرَزَ، وَقَالَ مُعَاذٌ، حَدَّثَنَا شُعْبَةُ، عَنْ عَمْرٍو، قَالَ أَبُو البَخْتَرِيِّ: سَمِعْتُ ابْنَ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا: نَهَى النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ مِثْلَهُ

அபுல் புக்தரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

பேரீச்சம் பழத்திற்காக முன்பணம் கொடுப்பது பற்றி இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கவர்கள், பேரீச்ச மரத்திலுள்ள கனிகள் உண்ணும் பக்குவத்தை அடையும் முன்பும் அதை எடை போடுவதற்கு முன்பும் அவற்றை விற்பதற்கு நபி (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்! என்று கூறினார்கள். அப்போது ஒரு மனிதர், (மரத்திலுள்ளதை) எவ்வாறு எடைபோடுவது? என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் கேட்டார். அவர்களுக்கு அருகிலிருந்த மற்றொரு மனிதர் எடை போடுவதன் கருத்து (அதன் எடை இவ்வளவு இருக்கும் என்று) மதிப்பிடுவதாகும்! என்றார்.

நூல் : புகாரி 2246

## மல்டிலெவல் மார்க்கெட்டிங் கூடுமா?

எம்.எல்.எம் (மல்டிலெவல் மார்க்கெட்டிங்) சங்கிலித்தொடர் வியாபாரம் என்பதில் பல வகைகள் உள்ளன. அனைத்து முறைகளிலும் ஏமாற்றுதல், மோசடி, பிறர் பொருளை அநியாயமாக அபகரித்தல் போன்றவைதான் நிறைந்து காணப்படுகின்றன. இதனை சங்கிலித் தொடர் வியாபாரம் என்று கூறுவதை விட சங்கிலித் தொடர் பித்தலாட்டம் என்று சொல்வதுதான் மிகப் பொருத்தமானதாகும்.

சாதரணமான ஒரு படுக்கையை இது அதிஅற்புதமான சக்திவாய்ந்த மூலிகைப் படுக்கை அல்லது காந்தப் படுக்கை. இதில் படுத்தால் குறுக்கு வலி குணமாகிவிடும். மலட்டுத் தன்மை நீங்கி விடும். கேன்சர் குணமாகி விடும். இது போன்ற ஒரு கண்டுபிடிப்பை யாரும் இதுவரை கண்டுபிடிக்கவில்லை. இந்த ஆராய்ச்சி மையம் இதற்கு சர்ட்டிஃபிகேட் வழங்கியுள்ளது என்று பலவிதமான பொய்களைக் கூறி நம்பவைத்து மிக அதிகமான விலைக்கு விற்பனை செய்து விடுவார்கள்.

நீங்கள் ஒரு ஐந்து உறுப்பினர்களிடம் இந்தப் படுக்கையை வாங்க வைத்தால் ஒவ்வொரு படுக்கையை விற்பதற்கும் உங்களுக்கு ஐந்தாயிரம் ரூபாய் கிடைக்கும் என்பார்கள். ஐந்து உறுப்பினர்களை நாம் சேர்த்தால் நமக்கு இருபத்தைந்தாயிரம் ரூபாய் கிடைத்துவிடும்.

இதனைப் பட்டாணி அளவில் வைத்தாலே அதிக நுரை வரும். இதில் பல நோய் எதிர்ப்பு சக்தி உள்ளது என்றெல்லாம் பொய் கூறி நம்பவைத்து அதிகமான விலையில் சாதாரணப் பற்பசையை விற்பனை செய்வார்கள்.

இந்த வியாபாரத்தைப் பற்றி விளக்குகிறோம் என்ற பெயரில் ஸ்டார் ஹோட்டலில் கூட்டம் கூட்டி லேப்டாப்பில் பல விதமான காட்சிகளைக் காட்டுவார்கள். நான் மிகவும் ஏழையாக இருந்தேன். இந்த வியாபாரத்தில் சேர்ந்தவுடன் மிகப் பெரும் பணக்காரனாகி விட்டேன் என்றெல்லாம் சிலர் பேசும் காட்சிகளைக் காட்டுவார்கள்.

இந்தப் பணத்தை அடைவதற்காக கம்பெனி தன்னிடம் எதையெல்லாம் கூறி ஏமாற்றி விற்பனை செய்ததோ அது போன்று இவரும் தனக்கு கீழ் உள்ளவர்களிடம் கூறி வியாபாரம் செய்வார். இவருக்குக் கீழ் உள்ள ஐந்து பேரும் தங்களுக்குக் கீழ் தலா ஐந்து நபர்களைச் சேர்த்தால் இவருக்கு ஒரு இலட்சத்தி இருபத்தைந்தாயிரம் ரூபாய் இலாபமாகக் கிடைக்கும். இதிலிருந்து ஒரு குறிப்பிட்ட சதவிகிதத்தை தனக்குக் கீழ் உள்ளவர்களுக்கு இவர் இலாபமாக வழங்குவார்.

தான் யாரிடம் பொருள் வாங்கினோம் என்பதை மட்டும்தான் ஒவ்வொருவரும் அறிவார்கள். யாரும் கம்பெனியோடு நேரடியாகத் தொடர்பு வைத்துக் கொள்ள முடியாது.

இது போன்ற பொருட்களை எந்தக் கடையிலும் வைத்து விற்பனை செய்ய மாட்டார்கள். ஏனென்றால் இதனை வாங்கிய மக்கள் உரிய பலன் கிடைக்காமல் ஏமாறும்போது இதனை விற்பனை செய்யும் மூலத்தைக் கண்டுபிடித்துவிடக் கூடாது என்பதற்காக இது போன்ற உறுப்பினர்கள் மூலமாக மட்டுமே வியாபாரம் செய்வார்கள்.

நாம் உதாரணத்திற்குத்தான் பொருட்களையும் அதற்கு வழங்கப்படும் இலாபத்தையும் குறிப்பிட்டுள்ளோமே தவிர பல கம்பெனிகள் பல பொருட்களைப் பலவிதமான இலாப சதவிகிதத்தில் ஏமாற்றி விற்பனை செய்கின்றன.

இவ்வாறு பலவிதமான பொய்களைக் கூறி ஏமாற்றி செய்யப்படும் வியாபாரம் எப்படி ஹலாலான வியாபாரமாக இருக்க முடியும்.?

இதில் இன்னொரு வகையும் உள்ளது. தங்கள் கம்பெனியின் தயாரிப்புகளை விற்பதற்கு உறுப்பினராகச் சேர வேண்டும். நாங்கள் தயாரிக்கும் பொருளை நீங்கள் விற்க வேண்டும் என்று கூறுவார்கள். பொருளின் தயாரிப்புச் செலவை விட பன்மடங்கு அதிகமாக விலை நிர்ணயம் செய்வார்கள். முப்பதாயிரம் பணம் கட்டி இந்த நிறுவனத்தில் நாம் உறுப்பினராகச் சேர்ந்து இவர்களின்

தயாரிப்புகளை விற்று பெரிதாக சம்பாதிக்க முடியாது. ஆயிரக்கணக்கான கம்பெனிகளின் தயாரிப்புகளை குறைந்த விலையில் விற்கும் வியாபாரிகளுக்கே வியாபாரம் நடப்பதில்லை. ஒரு பற்பசையையும் ஒரு தைலத்தையும் மட்டும் விற்கும் முகவர்களாக இருந்தால் தினமும் தேநீர் குடிப்பதற்குக் கூட சம்பாதிக்க முடியாது.

அப்படி இருந்தும் இதில் எப்படி பணம் கட்டி உறுப்பினராகிறார்கள்? அங்கு தான் சங்கிலித் தொடர் பித்தலாட்டம் துவங்குகிறது. நீங்கள் இந்த வியாபாரத்தின் மூலம் மட்டும் பெரிதாக சம்பாதிக்க முடியாது. எனவே உங்களைப் போல் முப்பதாயிரம் கட்டக் கூடிய அதிக உறுப்பினர்களைப் பிடித்துத் தந்தால் உங்களுக்கு கமிஷன் கிடைக்கும். அதன் மூலம் நீங்கள் செலுத்திய கட்டணத்தை விட பலமடங்கு சம்பாதிக்கலாம் என்று வலை விரிப்பார்கள்.

அதில் சேர்பவர்களும் வீடுவீடாக அலைந்து பொருட்களை விற்பதற்காகச் சேர்வதில்லை. மாறாக ஏமாளிகளை உறுப்பினர்களாக ஆக்கி அவர்களிடமிருந்து பணத்தைப் பிடுங்க துணைபோவதன் மூலம் சம்பாதிக்கலாம் என்பதால் தான் இதில் உறுப்பினராக சேர்கிறார்கள்.

பொருளை விற்பது இதன் நோக்கமில்லை. மாறாக மோசடி நிறுவனத்தில் ஏமாறுவதற்காக இன்னும் பல ஏமாளிகளைப் பிடித்துக் கொடுத்து அவர்களுக்கு ஏமாற்றும் கலையைக் கற்றுக் கொடுப்பது தான் இதில் உள்ளது. நல்ல மனிதர்களை அயோக்கியர்களாக மாற்றி அதன் மூலம் லாபம் அடைவது ஒருக்காலும் ஹலாலாக முடியாது.

தான் இழந்த தொகையை எப்படியாவது சம்பாதிக்க வேண்டும் என்ற நோக்கத்தில் முதலில் பணம் கட்டியவர் மற்றவர்களிடம் பலவிதமான பொய்களைச் சொல்லி உறுப்பினராக ஆக்குவார்.

உறுப்பினர்களைச் சேர்த்து விடுவதற்காக மட்டும் நமக்கு ஆதாயம் கிடைப்பதில்லை. நாம் சேர்த்துவிடுகின்ற உறுப்பினர்கள் மூலம் விற்பனை

செய்யப்படும் பொருட்களுக்கும் கமிஷன் தரப்படும் என்பதால் இது கூடுதல் ஆதாயமாகக் கிடைக்கிறது.

இத்தோடு நில்லாமல் நம்மால் சேர்த்து விடப்பட்டவர்கள் இன்னும் சிலரைச் சேர்த்து விடுவார்கள். அவர்கள் செய்யும் விற்பனையிலிருந்தும் நமக்கு ஒரு குறிப்பிட்ட விகிதாச்சாரம் இலாபமாகக் கிடைக்கும்.

இவ்வாறு தொடர்ந்து சங்கிலி போன்று செல்லும்போது ஒவ்வொரு மட்டத்தினர் செய்கின்ற வியாபாரத்திலிருந்தும் முதலாமவருக்கு ஒரு குறிப்பிட்ட அளவு பங்கு கிடைக்கும். இப்படி ஒவ்வொரு நிலையில் உள்ளவர்களுக்கும் அவர்களுக்கு அடுத்த நிலையில் உள்ளவர்கள் செய்கின்ற வியாபாரத்தின் இலாபத்திலிருந்து ஒரு குறிப்பிட்ட பங்கு கிடைக்கும்.

சில நேரங்களில் 100 பேர், 200 பேர் என்று அதிகமான நபர்கள் சங்கிலித் தொடராகச் சேரும்போது முதல் நிலையில் உள்ளவருக்கு இலட்சக்கணக்கில் வருமானம் கிடைக்கும்.

நம்முடைய எந்த முதலீடும் இல்லாமல் மற்றவர்கள் செய்கின்ற உழைப்பிற்கு நமக்கு லாபம் கிடைப்பது எப்படி மார்க்க அடிப்படையில் ஹலாலான சம்பாத்தியமாக இருக்க முடியும்?

நாம் ஒருவரை உறுப்பினாராகச் சேர்த்து விட்டதால் அவர் செய்யும் வியாபாரத்தில் நாம் லாபம் பார்ப்பது சுரண்டல் என்பதில் சந்தேகம் இல்லை. நம்மால் சேர்த்து விடாமல் மற்றவர்களால் சேர்த்து விடப்பட்டவர்களின் வியாபாரத்திலும் நாம் லாபம் பார்ப்பது சுரண்டலுக்கு மேல் சுரண்டலாகும்.

பொதுவாக எந்தெந்த வியாபாரங்களில் எல்லாம் ஏமாற்றுதல், மோசடி, பொய் போன்றவை காணப்படுகிறதோ அவை அனைத்துமே ஹராமான வியாபாரங்கள்தான்.

## தீமைக்குப் பயன்படும் பொருளை விற்கலாமா?

தீமையான காரியத்திற்கு உதவி செய்யக் கூடாது என்று அல்லாஹ் கூறுகிறான். எந்தத் தீய காரியத்திற்கும் ஒரு முஸ்லிம் துணை போகக்கூடாது என்று இஸ்லாம் கூறுகின்றது.

நீங்கள் நல்ல காரியங்களிலும், இறையச்சத்திலும், ஒருவருக்கொருவர் உதவிக் கொள்ளுங்கள்! தீய காரியத்திலும் வரம்பு மீறலிலும் ஒருவருக்கொருவர் உதவிக் கொள்ளக் கூடாது.

திருக்குர்ஆன் 5:2

தீமையான காரியங்களுக்கு உதவக் கூடாது என்பதில் எந்தக் கருத்து வேறுபாடும் இல்லை. ஆனால் தீமையான காரியங்களுக்கு உதவுவது என்பதைப் புரிந்து கொள்வதில்தான் கருத்து வேறுபாடு உள்ளது.

தீமைக்குத் துணை போகக்கூடாது என்று கூறும் மேற்கண்ட வசனத்தில் நன்மைக்கு உதவுமாறும் கூறப்படுகிறது. நன்மைக்கு உதவுதல் என்பதை எவ்வாறு புரிந்து கொள்கிறோமோ அவ்வாறுதான் தீமைக்குத் துணை செய்தல் என்பதையும் புரிந்து கொள்ள வேண்டும்.

ஒருவர் பள்ளிவாசல் ஒன்றைக் கட்ட எண்ணுகிறார். அதற்கான வேலையிலும் ஈடுபடுகிறார். பள்ளிவாசல் கட்டுவது நல்ல காரியம் என்பதில் சந்தேகம் இல்லை. இந்தக் கட்டடத்திற்குத் தேவையான பொருட்களை ஒரு வணிகரிடம் அவர் வாங்குகிறார். பள்ளிவாசல் கட்டும் நல்ல பணிக்காக அந்த வணிகர் தமது சரக்குகளை விற்றதால் அவர் நன்மைக்குத் துணை செய்தவராக முடியாது. இவர்தான் பள்ளிவாசல் கட்ட உதவியவர் என்று அவரைப் பற்றி நாம் குறிப்பிடுவதில்லை. அந்த வணிகர் இலவசமாக அவற்றை வழங்கினால் அல்லது பள்ளிவாசல் கட்டும் பணி என்பதற்காக மற்ற எவருக்கும் விற்பதை விட சலுகை விலைகளில் வழங்கினால் மட்டுமே அவர் பள்ளிவாசல் கட்டுமானப் பணிக்கு உதவினார் என்போம்.

மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்ட பொருளை நாம் விற்பனை செய்கிறோம். நம்மிடம் அப்பொருளை வாங்கியவர் தீய காரியத்துக்குப் பயன்படுத்துகிறார் என்று வைத்துக் கொள்வோம். இது தீமைக்குத் துணை புரிவதாக ஆகாது. ஒரு சிலை நிறுவுவதற்காக அதே வணிகரிடம் கட்டுமானப் பொருட்களை வாங்குகின்றனர். அந்த வணிகர் இலவசமாக அப்பொருளைக் கொடுத்தாலோ அது சிறந்த பணி என்று கருதி விலையில் சலுகை அளித்தாலோ அப்போது அவர் தீமைக்குத் துணை செய்தவராவார். அவ்வாறு இல்லாமல் மற்ற பணிகளுக்கு விற்பது போல் அவர் விற்பனை செய்தால் அவர் தீமைக்குத் துணை போனவராக மாட்டார்.

நன்மையான காரியத்துக்கு உதவுதல் என்பதில் உதவுதல் என்பதை எந்தப் பொருளில் நாம் விளங்குகிறோமோ அதே பொருளில்தான் தீமையான காரியங்களுக்கு உதவுதல் என்பதிலும் உதவுதல் என்பதற்குப் பொருள் கொள்ள வேண்டும். ஏனெனில் தீமைக்கு உதவக் கூடாது என்று சொல்வதற்கு ஆதாரமாகச் சமர்ப்பிக்கப்படும் 5:2 வசனம்தான் நன்மைக்கு உதவ வேண்டும் எனவும் கூறுகின்றது. இரண்டிலும் ஒரே வார்த்தைதான் பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஆனால் முக்கியமான நிபந்தனையை நாம் கவனத்தில் கொள்ள வைக்க வேண்டும். விற்பனை செய்யப்படும் பொருள் இஸ்லாத்தில் அனுமதிக்கப்பட்டதாக இருக்க வேண்டும். பூவைப் பயன்படுத்துவதற்கு இஸ்லாம் தடை விதிக்கவில்லை. எனவே பூவை நாம் எவருக்கும் விற்கலாம். வாங்குபவர் அதைத் தவறாகப் பயன்படுத்துவதற்கு நாம் பொறுப்பாளியாக மாட்டோம்.

இலவசமாகவோ, மற்ற காரியங்களை விட சலுகை விலையிலோ வழங்கும்போதுதான் எந்தக் காரியங்களுக்குப் பயன்படுகிறது என்பதைக் கவனிக்க வேண்டும்.

ஒரு ஜவுளிக் கடையில் துணி விற்பனை செய்யும்போது வாங்கும் மனிதன் அதனைக் கற்சிலைக்கு அணிவிப்பதற்காக பயன்படுத்துவானோ வேறு

எதற்கும் பயன்படுத்துவானோ என்றெல்லாம் நாம் கவனிக்கத் தேவையில்லை. தேங்காய் வியாபாரி, தன்னிடம் வாங்கப்படும் தேங்காய்கள் சிலைகள் முன்னே உடைக்கப்படுமோ என்றெல்லாம் புலன் விசாரணை செய்ய வேண்டியதில்லை.

ஆனால் தேங்காயின் விலை பத்து ரூபாய் என்று நாம் சொன்ன பிறகு சாமிக்கு உடைக்க வேண்டும் விலை குறைத்து தாருங்கள் என்று கேட்கப்படும்போது அதற்காக விலை குறைத்து கொடுத்தால் அல்லது இலவசமாகக் கொடுத்தால் அது தீமைக்குத் துணை போன குற்றத்தில் சேரும். அனைவருக்கும் கொடுக்கக் கூடிய விலையில் கொடுத்தால் தீமைக்குத் துணை போன்ற குற்றம் வராது.

صحيح البخاري 2068 - حَدَّثَنَا مُعَلَّى بْنُ أَسَدٍ، حَدَّثَنَا عَبْدُ الوَاحِدِ، حَدَّثَنَا الأَعْمَشُ، قَالَ: ذَكَرْنَا عِنْدَ إِبْرَاهِيمَ، الرَّهْنَ فِي السَّلَمِ، فَقَالَ: حَدَّثَنِي الأَسْوَدُ، عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا: «أَنَّ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ اشْتَرَى طَعَامًا مِنْ يَهُودِيٍّ إِلَى أَجَلٍ، وَرَهَنَهُ دِرْعًا مِنْ حَدِيدٍ»

போர்க்களத்தில் அணிந்து கொள்ளும் தமது கவசத்தை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஒரு யூதரிடம் அடகு வைத்துள்ளார்கள்.

நூல் : புகாரி : 2068, 2096, 2200, 2251, 2252, 2386, 2509, 2513, 2916, 4467

அந்தக் கவசம் அந்த யூதரால் தவறாகப் பயன்படுத்தப்படலாம் என்றெல்லாம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கவனிக்கவில்லை.

மனிதனுக்குக் கேடு விளைவிக்கும் என்பதற்காக தடுக்கப்பட்ட மதுபானம் போன்றவற்றை முஸ்லிம் அல்லாதவருக்கும் நாம் விற்கக் கூடாது. இஸ்லாமிய ஆட்சியில் முஸ்லிமல்லாதவருக்கும் மதுபானம் அருந்த அனுமதிக்கப்படாது. ஆனால் பட்டாடை, தங்கம் போன்றவைகளை முஸ்லிம் அல்லாதவர் பயன்படுத்த இஸ்லாமிய அரசு தடுக்காது.

உண்ணவும், பருகவும், பயன்படுத்தவும், வைத்திருக்கவும் எப்பொருட்களுக்கு இஸ்லாம் தடை விதித்து விட்டதோ அவற்றை மட்டுமே விற்கலாகாது. நன்மை தீமை இரண்டு வழிகளிலும் பயன்படுத்தும் வகையில் அமைந்துள்ள பொருட்களை நாம் விற்க எந்தத் தடையும் இல்லை. வாங்குபவன் தீமைக்குப் பயன்படுத்துவதற்கு நாம் பொறுப்பாளியாக முடியாது.

## ஆல்கஹால் கலந்த ஸ்ப்ரே விற்கலாமா

ஆல்கஹால் போதையூட்டக்கூடிய பானமாக இருப்பதால் பொதுவாக இதை எந்த வகையிலும் பயன்படுத்தக் கூடாது என்று சிலர் கூறுகின்றனர். ஆனால் இது சம்பந்தமான ஹதீஸ்களை நாம் ஆராய்ந்தால் போதையூட்டக் கூடிய வகையில் இதைப் பயன்படுத்துவது மட்டுமே தவறு. போதை ஏற்படாத வகையில் இதைப் பயன்படுத்தினால் தவறில்லை என்ற முடிவுக்கு வரலாம்.

போதை ஏற்படுத்தக் கூடிய ஒவ்வொன்றும் ஹராம் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

صحيح البخاري 6124 - حَدَّثَنِي إِسْحَاقُ، حَدَّثَنَا النَّضْرُ، أَخْبَرَنَا شُعْبَةُ، عَنْ سَعِيدِ بْنِ أَبِي بُرْدَةَ، عَنْ أَبِيهِ، عَنْ جَدِّهِ، قَالَ: لَمَّا بَعَثَهُ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ وَمُعَاذَ بْنَ جَبَلٍ، قَالَ لَهُمَا: «يَسِّرَا وَلاَ تُعَسِّرَا، وَبَشِّرَا وَلاَ تُنَفِّرَا، وَتَطَاوَعَا» قَالَ أَبُو مُوسَى: يَا رَسُولَ اللَّهِ، إِنَّا بِأَرْضٍ يُصْنَعُ فِيهَا شَرَابٌ مِنَ العَسَلِ، يُقَالُ لَهُ البِتْعُ، وَشَرَابٌ مِنَ الشَّعِيرِ، يُقَالُ لَهُ المِزْرُ؟ فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «كُلُّ مُسْكِرٍ حَرَامٌ»

அபூமூசா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

நான், "அல்லாஹ்வின் தூதரே! எங்கள் யமன் நாட்டில் தேனில் "அல்பித்உ' எனப்படும் ஒரு வகை பானமும் வாற்கோதுமையில் "மிஸ்ர்' என்று கூறப்படும் ஒரு வகை பானமும் தயாரிக்கப்படுகிறது (அவற்றின் சட்டம் என்ன?)" என்று கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "போதை தரக் கூடிய ஒவ்வொன்றும் தடை செய்யப்பட்டது (ஹராம்) ஆகும்" என்று பதிலளித்தார்கள்.

நூல்: புகாரி 6124

سنن الترمذي 1865 - حَدَّثَنَا قُتَيْبَةُ قَالَ: حَدَّثَنَا إِسْمَاعِيلُ بْنُ جَعْفَرٍ، ح وَحَدَّثَنَا عَلِيُّ بْنُ حُجْرٍ قَالَ: أَخْبَرَنَا إِسْمَاعِيلُ بْنُ جَعْفَرٍ، عَنْ دَاوُدَ بْنِ بَكْرِ بْنِ أَبِي الفُرَاتِ، عَنْ ابْنِ المُنْكَدِرِ، عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللَّهِ، أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ: «مَا أَسْكَرَ كَثِيرُهُ فَقَلِيلُهُ حَرَامٌ»

"அதிகம் (சாப்பிட்டால்) போதை தரக் கூடிய பொருளில் குறைவானதும் தடுக்கப்பட்டது (ஹராம்) தான்" என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல்: திர்மிதீ 1788, நஸயீ 5513

صحيح مسلم 63 - (977) حَدَّثَنَا أَبُو بَكْرِ بْنُ أَبِي شَيْبَةَ، وَمُحَمَّدُ بْنُ الْمُثَنَّى، قَالَا: حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ فُضَيْلٍ، قَالَ أَبُو بَكْرٍ: عَنْ أَبِي سِنَانٍ، وقَالَ ابْنُ الْمُثَنَّى: عَنْ ضِرَارِ بْنِ مُرَّةَ، عَنْ مُحَارِبٍ، عَنِ ابْنِ بُرَيْدَةَ، عَنْ أَبِيهِ، ح وحَدَّثَنَا مُحَمَّدُ بْنُ عَبْدِ اللهِ بْنِ

نُمَيْرٍ، حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ فُضَيْلٍ، حَدَّثَنَا ضِرَارُ بْنُ مُرَّةَ أَبُو سِنَانٍ، عَنْ مُحَارِبِ بْنِ دِثَارٍ، عَنْ عَبْدِ اللهِ بْنِ بُرَيْدَةَ، عَنْ أَبِيهِ، قَالَ: قَالَ رَسُولُ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «نَهَيْتُكُمْ عَنِ النَّبِيذِ إِلَّا فِي سِقَاءٍ، فَاشْرَبُوا فِي الْأَسْقِيَةِ كُلِّهَا، وَلَا تَشْرَبُوا مُسْكِرًا»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

தோல் பையில் தவிர வேறெதிலும் பழச் சாறுகளை ஊற்றிவைக்க வேண்டாம் என உங்களுக்குத் தடை விதித்திருந்தேன். இனி, நீங்கள் எல்லாப் பாத்திரங்களிலும் பருகுங்கள். ஆனால், போதை தரக் கூடிய எதையும் பருகாதீர்கள்.

நூல்: முஸ்லிம் 5325

صحيح مسلم 70 - (1733) وحَدَّثَنَا قُتَيْبَةُ بْنُ سَعِيدٍ، وَإِسْحَاقُ بْنُ إِبْرَاهِيمَ، وَاللَّفْظُ لِقُتَيْبَةَ، قَالَا: حَدَّثَنَا وَكِيعٌ، عَنْ شُعْبَةَ، عَنْ سَعِيدِ بْنِ أَبِي بُرْدَةَ، عَنْ أَبِيهِ، عَنْ أَبِي مُوسَى، قَالَ: بَعَثَنِي النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ أَنَا وَمُعَاذَ بْنَ جَبَلٍ إِلَى الْيَمَنِ، فَقُلْتُ: يَا رَسُولَ اللهِ، إِنَّ شَرَابًا يُصْنَعُ بِأَرْضِنَا يُقَالُ لَهُ الْمِزْرُ مِنَ الشَّعِيرِ، وَشَرَابٌ يُقَالُ لَهُ الْبِتْعُ مِنَ الْعَسَلِ، فَقَالَ: «كُلُّ مُسْكِرٍ حَرَامٌ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் தேனிலிருந்து தயாரிக்கப்படும் பானம் (பித்உ) குறித்துக் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "போதை தரும் ஒவ்வொரு பானமும் தடை செய்யப்பட்டதாகும்" என்று பதிலளித்தார்கள்.

நூல்: முஸ்லிம் 5329

மேற்கண்ட ஹதீஸ்களில் போதை ஏற்படுத்துதல் என்ற காரணத்துக்காகவே இத்தகைய தன்மையுள்ள பானங்கள் தடை செய்யப்படுகின்றன. ஆல்கஹாலைப் பொறுத்த வரை அதைப் பருகினால் தான் போதை ஏற்படும். எனவே அதைப் பருகுவது கூடாது. உடலில், ஆடையில் பட்டால் நுகர்ந்தால் போதை ஏற்படாது.

மேலும் நறுமணத்தை வெளியில் கொண்டு வந்து ஆடையில் சேர்ப்பிக்கும் வேலையைத் தான் வாசனைத் திரவியங்களில் ஆல்கஹால் செய்கின்றது. பாட்டிலிலிருந்து வெளியே வந்தவுடன் இந்த ஆல்கஹால் காற்றில் பட்டு ஆவியாகி விடுகின்றது. ஆடையில் ஒட்டிக் கொண்டிருப்பதில்லை. நறுமணம் மட்டுமே ஆடையில் தங்குகிறது.

எனவே ஆல்கஹால் கலந்த வாசனைத் திரவியங்களைப் பயன்படுத்துவதையும் விற்பதையும் மார்க்கம் தடை செய்யவில்லை.

## ஆல்கஹால் கலந்த மருந்துகள் விற்கலாமா

## போதைப் பொருள் கலந்த மருந்துகளைச் சாப்பிடலாமா?

இந்த விஷயத்தில் கிடைக்கும் ஆதாரங்கள் மேலோட்டமாகப் பார்க்கும் போது முரண்பட்டதாக உள்ளதால் இது குறித்து அறிஞர்கள் மத்தியில் கருத்து வேறுபாடு உள்ளது.

صحيح مسلم 12 - (1984) حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ الْمُثَنَّى، وَمُحَمَّدُ بْنُ بَشَّارٍ، وَاللَّفْظُ لِابْنِ الْمُثَنَّى، قَالَا: حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ جَعْفَرٍ، حَدَّثَنَا شُعْبَةُ، عَنْ سِمَاكِ بْنِ حَرْبٍ، عَنْ عَلْقَمَةَ بْنِ وَائِلٍ، عَنْ أَبِيهِ وَائِلٍ الْحَضْرَمِيِّ، أَنَّ طَارِقَ بْنَ سُوَيْدٍ الْجُعْفِيَّ، سَأَلَ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ عَنِ الْخَمْرِ، فَنَهَاهُ - أَوْ كَرِهَ - أَنْ يَصْنَعَهَا، فَقَالَ: إِنَّمَا أَصْنَعُهَا لِلدَّوَاءِ، فَقَالَ: «إِنَّهُ لَيْسَ بِدَوَاءٍ، وَلَكِنَّهُ دَاءٌ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் தாரிக் பின் சுவைத் அல்ஜுஅஃபீ (ரலி) அவர்கள் மது (தயாரிப்பதைப்) பற்றிக் கேட்டார்கள். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அ(வ்வாறு மது தயாரிப்ப)தைத் தடை செய்தார்கள்; அல்லது அதை வெறுத்தார்கள். அப்போது தாரிக் (ரலி) அவர்கள், "மருந்துக்காகவே அதைத் தயாரிக்கிறேன்" என்று கூறினார்கள். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "அது மருந்தல்ல; நோய்" என்றார்கள்.

நூல் : முஸ்லிம் 5256

இந்த ஹதீஸையும் இதே போல் அமைந்த வேறு சில ஹதீஸ்களையும் ஆதாரமாகக் கொண்டு ஹராமான பொருள் கலந்த மருந்துகளைப் பயன்படுத்தக் கூடாது என்று அதிகமான அறிஞர்கள் கூறுகின்றனர்.

ஆனால் இந்த ஹதீஸில் பயன்படுத்தப்பட்டுள்ள வாசகம் அவர்களின் வாதத்தை நிறுவப் போதுமானதாக இல்லை. மதுவையே மருந்தாகப் பயன்படுத்துவதற்கும் மதுவையும் மற்றும் சில பொருட்களையும் கலந்து மருந்து தயாரிப்பதற்கும் பெரிய வித்தியாசம் உள்ளது. இந்த ஹதீஸில் அந்த மனிதர் மருந்து தயாரிப்பதாகக் கூறவில்லை. மருந்துக்காக மதுவைக் காய்ச்சுகிறேன் என்று தான் கூறுகிறார். இதைத் தான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தடுக்கிறார்கள். சில நோய்களுக்கு மதுவை அருந்தினால் அதில் குனம் கிடைக்கும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் தான் அவரது செயல் அமைந்துள்ளது.

எந்த நோய்க்கும் மது மருந்து அல்ல என்ற முடிவைத்தான் இந்த ஹதீஸில் இருந்து எடுக்க முடியும். மது என்ற பெயரை இழந்து மருந்து என்ற நிலையை அடையும் போது அதைத் தடுக்க இது ஆதாரமாக ஆகாது.

தடை செய்யப்பட்டவைகளைக் கொண்டு மருந்து செய்யலாம் என்ற கருத்துக்குத் தான் வலுவான ஆதாரங்கள் உள்ளன.

மார்க்கத்தில் தடை செய்யப்பட்டவைகளை நிர்பந்த நிலையில் ஒருவர் செய்தால் அது குற்றமாகாது என்பது இஸ்லாத்தின் அடிப்படைகளில் ஒன்றாகும்.

நிர்பந்தத்துக்கு ஆளானவர்கள் தடை செய்யப்பட்டதைச் செய்தால் அவர்கள் மீது குற்றம் இல்லை என்று 2:173, 5:3, 6:119, 6:145, 16:115 அல்லாஹ் இவ்வசனங்களில் கூறுகிறான்.

மேற்கண்ட வசனங்களில் இரத்தம் மார்க்கத்தில் தடுக்கப்பட்டுள்ளது என்று கூறப்பட்டுள்ளது. ஆனாலும் நிர்பந்தம் காரணமாக ஒரு மனிதனின் இரத்தத்தை இன்னொரு மனிதனுக்குச் செலுத்தலாம் என்று அனைத்து அறிஞர்களும் கூறுகின்றனர்.

நிர்பந்தம் என்பதன் குறைந்தபட்ச அளவையும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பினவருமாறு விளக்கியுள்ளனர்.

مسند أحمد 21901 - حَدَّثَنَا الْوَلِيدُ بْنُ مُسْلِمٍ (1) ، حَدَّثَنَا الْأَوْزَاعِيُّ، حَدَّثَنَا حَسَّانُ بْنُ عَطِيَّةَ، عَنْ أَبِي وَاقِدٍ اللَّيْثِيِّ: أَنَّهُمْ قَالُوا: يَا رَسُولَ اللهِ، إِنَّا بِأَرْضٍ تُصِيبُنَا بِهَا الْمَخْمَصَةُ، فَمَتَى تَحِلُّ لَنَا الْمَيْتَةُ؟ قَالَ: إِذَا لَمْ تَصْطَبِحُوا، وَلَمْ تَغْتَبِقُوا، وَلَمْ تَحْتَفِئُوا، فَشَأْنُكُمْ بِهَا "

அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் வசிக்கும் பகுதியில் எங்களுக்குப் பஞ்சம் ஏற்படுகிறது. எந்த நிலையில் தாமாகச் செத்தவை எங்களுக்கு ஹலாலாகும்?" என்று நபித் தோழர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் கேட்டனர். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலையில் அருந்தும் பால், மாலையில் அருந்தும் பால் உங்களுக்குக் கிடைக்காவிட்டால் அதை உண்ணலாம் என்றனர்.

நூல்கள்: அஹ்மத் 20893, 20896, தாரமி 1912

ஒரு நாள் உணவு கிடைக்காவிட்டாலே ஒருவன் நிர்பந்த நிலையை அடைந்து விடுகிறான் என்பதை இந்த நபிமொழியில் இருந்து நாம் அறிந்து கொள்கிறோம்.

ஒரு நாள் பசியை விட நோயில் விழுந்து கிடப்பது அதிக நிர்பந்தம் என்பதை அறிவுடயோர் மறுக்க மாட்டார்கள். எனவே நோய் நிவாரணம் கிடைக்கும் என்றால் தடை செய்யப்பட்டவைகளை மருந்தாக உட்கொள்ள மார்க்கத்தில் தடை இல்லை.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலத்தில் ஒரு கூட்டத்தினர் நோயுற்ற போது அவர்களை ஒட்டகத்தின் சிறுநீரை அருந்துமாறு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அதை அருந்திய உடன் அவர்கள் குணமடைந்தார்கள் என்று ஹதீஸ்களில் காணப்படுகிறது.

صحيح البخاري 1501 - حَدَّثَنَا مُسَدَّدٌ، حَدَّثَنَا يَحْيَى، عَنْ شُعْبَةَ، حَدَّثَنَا قَتَادَةُ، عَنْ أَنَسٍ رَضِيَ اللَّهُ عَنْهُ: أَنَّ نَاسًا مِنْ عُرَيْنَةَ اجْتَوَوْا المَدِينَةَ «فَرَخَّصَ لَهُمْ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ أَنْ يَأْتُوا إِبِلَ الصَّدَقَةِ، فَيَشْرَبُوا مِنْ أَلْبَانِهَا، وَأَبْوَالِهَا»، فَقَتَلُوا الرَّاعِيَ، وَاسْتَاقُوا الذَّوْدَ، فَأَرْسَلَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَأُتِيَ بِهِمْ، فَقَطَّعَ أَيْدِيَهُمْ وَأَرْجُلَهُمْ، وَسَمَرَ أَعْيُنَهُمْ، وَتَرَكَهُمْ بِالحَرَّةِ يَعَضُّونَ الحِجَارَةَ

அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

உக்ல்' அல்லது உரைனா' குலத்தாரில் சிலர் (மதீனாவிற்கு) வந்தனர். அவர்களுக்கு மதீனாவின் தட்ப வெப்பநிலை ஒத்துக் கொள்ளவில்லை. எனவே பால் ஒட்டகங்களைச் சென்றடைந்து, அவற்றின் சிறுநீரையும் பாலையும் பருகிக்கொள்ளுமாறு அவர்களை நபியவர்கள் பணித்தார்கள். அவ்வாறே அவர்களும் (ஒட்டகங்களை நோக்கி) நடந்தனர். (அவற்றின் சிறுநீரையும் பாலையும் பருகி) அவர்கள் உடல் நலம் தேறியதும் நபி (ஸல்) அவர்களின் ஒட்டகப் பராமரிப்பாளரைக் கொன்றுவிட்டனர்; ஒட்கங்களை ஓட்டிச் சென்றனர். முற்பகல் வேளையில் இந்தச் செய்தி நபி (ஸல்) அவர்களிடம் வரவே அவர்களுக்குப் பின்னால் (அவர்களைப் பிடித்து வர ஒரு) படைப் பிரிவை அனுப்பிவைத்தார்கள். நண்பகல் நேரத்தில் அவர்களை(ப் பிடித்து)க் கொண்டு வரப்பட்டது. அவர்களுடைய கைகளையும் கால்களையும் துண்டிக்கச் செய்தார்கள். அவர்களுடைய கண்களில் பழுக்கக் காய்ச்சிய ஆணிகளால் சூடிடப்பட்டது. பிறகு

(மதீனா புறநகரான பாறைகள் மிகுந்த) ஹர்ரா' பகுதியில் அவர்கள் போடப்பட்டனர். அவர்கள் (நா வறண்டு) தண்ணீர் கேட்டும் அவர்களுக்கு தண்ணீர் புகட்டப்படவில்லை.

அறிவிப்பாளர் அபூகிலாபா (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்:

இவர்கள் (பொது மக்களுக்குரிய ஒட்டகங்களைத்) திருடினார்கள்; (ஒட்டகப் பராமரிப்பாளரைக்) கொலை செய்தார்கள்; நம்பிக்கை கொண்ட பின்னர் நிராகரிப்பாளர்களாய் மாறினார்கள்; அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் எதிர்த்துப் போரிட்டனர். (இத்தகைய கொடுஞ்செயல் புரிந்ததனால்தான் அவர்களுக்கு இவ்வளவு பெரிய தண்டனை அளிக்க நேர்ந்தது.)

புகாரி 1501, 3018, 4192, 4610, 5658, 5686, 5727, 6802, 6804, 6805

சிறுநீர் அசுத்தமானது என்பதை நாம் அனைவரும் அறிந்து வைத்துள்ளோம். 7:157 வசனத்தின் மூலமும் இதை நாம் அறிய முடியும்.

அதை மருத்துவத்துக்காக நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அருந்தச் சொல்லியுள்ளதில் இருந்து தடை செய்யப்பட்ட காரியங்களை மருத்துவத்துக்காக செய்யலாம் என்பதை அறிந்து கொள்கிறோம்.

பெரும்பாலான மருத்துவ முறைகள் தடை செய்யப்பட்ட முறைகளாகத் தான் இருக்கும். அது போல் பெரும்பாலான மருந்துகளும் தடை செய்யப்பட்ட பொருள்களாகவே இருக்கும். இது சாதாரண உண்மையாகும்.

ஒருவரின் வயிற்றை அல்லது உடலின் ஒரு பகுதியை அறுப்பது மார்க்கத்தில் தடை செய்யப்பட்டது தான். ஒருவரின் உடலில் ஊசியால் குத்துவதும் தடுக்கப்பட்டது தான். ஒருவரை வேதனைப்படுத்துவதும் மார்க்கத்தில் தடுக்கப்பட்டது தான்.

ஆனாலும் மருத்துவம் என்று வரும்போது ஆபரேசனுக்காக உறுப்புகள் அறுக்கப்படுகின்றன. அகற்றப்படுகின்றன. இஞ்சக்ஷன் மூலம் குத்தப்படுகிறது. இவை பொதுவாகத் தடுக்கப்பட்டுள்ளதால் மருத்துவத்தின் போதும் தடுக்கப்பட்டவை என்று கூற முடியாது.

அது போல் பல்வேறு ரசாயனங்கள் மூலம் தான் எல்லா மாத்திரைகளும் தயாரிக்கப்படுகின்றன. அவை அனைத்துமே சாதாரண நிலையில் மனிதனுக்குக் கேடு விளைவிப்பவை தான். சாதாரணமான நேரத்தில் நோய் தீர்க்கும் மாத்திரைகளைச் சாப்பிடுவது நிச்சயம் கேடு விளைவிக்கும். கேடு விளைவிப்பவை ஹராம் என்பதால் மருத்துவத்தின் போது இவற்றைப் பயன்படுத்தக் கூடாது என்று யாருமே சொன்னதில்லை.

இன்னும் சொல்லப் போனால் உயிர் காக்கும் பல மருந்துகள் விஷத்தில் இருந்து தான் தயாரிக்கப்படுகின்றன. குறிப்பாக அறுவை சிகிச்சையின் போதும் மற்ற நேரங்களிலும் இரத்தம் அதிகம் வெளியேறுவதைத் தடுக்கப் பயன்படுத்தப்படும் மருந்துகள் விஷத்தில் இருந்து தான் தயாரிக்கப்படுகின்றன. சாதாரண நேரத்தில் விஷத்தை உட்கொள்ள அனுமதி இல்லை என்றாலும் மருத்துவம் என்று வரும் போது அது அனுமதிக்கப்பட்டதாகவும் சில நேரங்களில் கட்டாயக் கடமையாகவும் ஆகிவிடுகிறது.

பட்டாடை ஆண்களுக்கு ஹராம் என்ற போதும் மருத்துவ நோக்கத்தில் அப்துர்ரஹ்மான் பின் அவ்ப் (ரலி) அவர்கள் அதை அணிய நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அனுமதி கொடுத்தார்கள்.

صحيح البخاري 2919 - حَدَّثَنَا أَحْمَدُ بْنُ المِقْدَامِ، حَدَّثَنَا خَالِدُ بْنُ الحَارِثِ، حَدَّثَنَا سَعِيدٌ، عَنْ قَتَادَةَ، أَنَّ أَنَسًا حَدَّثَهُمْ: «أَنَّ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ رَخَّصَ لِعَبْدِ الرَّحْمَنِ بْنِ عَوْفٍ، وَالزُّبَيْرِ فِي قَمِيصٍ مِنْ حَرِيرٍ، مِنْ حِكَّةٍ كَانَتْ بِهِمَا»

அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி), ஸுபைர் (ரலி) ஆகியோருக்கிருந்த சிரங்கு நோயின் காரணத்தால் அவர்களுக்கு (மட்டும்) பட்டாடை அணிந்து கொள்ள நபி (ஸல்) அவர்கள் அனுமதி கொடுத்தார்கள்.

புகாரி 2919, 2920, 5839

இவை அனைத்தும் நிர்பந்தம் என்ற காரணத்தினால் மருந்துக்காக மட்டும் அனுமதிக்கப்பட்டுள்ளது. நிர்பந்தம் இல்லாத் போது சாதாரணமாக இவற்றையோ இவை கலந்த பொருளையோ உட்கொள்ள அனுமதி இல்லை.

## உண்டியல் மூலம் பணம் அனுப்புவது கூடுமா?

ஒருவர் வெளிநாட்டிலிருந்து நமது நாட்டிற்குப் பணம் அனுப்பினால் அந்தப் பணத்துக்கு அரசாங்கம் வரி வாங்குகிறது. இந்த வரியைச் செலுத்தாமல் இருப்பதற்காக அரசுக்குத் தெரியாத வகையில் மறைமுகமாக பணத்தை அனுப்புவதற்கு உண்டியல் முறை என்று சொல்லப்படுகின்றது. இவ்வாறு செய்வதும் இதையே தொழிலாகச் செய்வதும் மார்க்கத்தில் கூடுமா?

நாம் சம்பாதிக்கும் பணத்தை நாம் விரும்பும் வகையில் பயன்படுத்த இஸ்லாம் அனுமதிக்கிறது. இஸ்லாமியச் சட்டப்படி அமைந்த அரசாங்கத்தில் உண்டியல் போன்ற செயல்கள் சட்ட விரோதமாகக் கருதப்படாது.

உண்டியல் மூலம் ஒருவர் தனது சொந்தப் பணத்தை அனுப்பினால் அதற்காக மறுமையில் இறைவன் கேள்வி கேட்க மாட்டான். இறைவனிடம் குற்றவாளியாக ஆக மாட்டோம்.

ஆனால் நாம் வாழும் நாட்டில் அது குற்றமாக அறிவிக்கப்பட்டுள்ளதால் அதனால் ஏற்படும் விளைவுகளைச் சுமக்க வேண்டியது வரும். இது போன்ற தொழில்களைச் செய்யும் போது ஏதோ கொலைகாரனைப் போல் அரசாங்கம் நம்மை அடையாளப்படுத்தும். நமது கௌரவத்துக்குப் பங்கம் ஏற்படும். சுயமரியாதை இழந்து குற்றவாளிகள் போல் நிற்கும் நிலை ஏற்படும். மேலும் இது போன்ற தொழில் செய்பவர்களின் குடும்பத்துப் பெண்களும் சொல்லொணாத துன்பங்களுக்கு உள்ளாக்கப்படுவார்கள். சமூகத்தில் ஏதோ கேடிகளைப் போல் நம்மை ஆக்கி விடுவார்கள் என்பதைக் கவனிப்பது நல்லது.

சட்டப்படி பணம் அனுப்பாமல் உண்டியல் மூலம் அனுப்புவதற்கு அரசாங்கத்தின் வரிவிதிப்பு முறையும் காரணமாக உள்ளது. கொள்ளைக்காரர்களுக்கு நிகராக அநியாய வரி விதிக்கும் நாடுகளில் இந்தியா முதலிடத்தில் உள்ளது. நாற்பது சதவிகிதம் அறுபது சதவிகிதம் வரி விதித்தால் எல்லோரும் அதில் இருந்து தப்பிக்கவே நினைப்பார்கள்.

அதுவும் பல வகையான வரிகள் விதிக்கப்படும் நாடுகளில் இந்தியா தான் முன்னனியில் உள்ளது.

நமது நாட்டில் எல்லாச் சட்டமும் மீறப்படுவதற்குக் காரணமே இது போன்ற அரசாங்கத்தின் அநியாயக் கொள்ளைதான். உண்டியல் மூலம் மக்கள் பணம் அனுப்புவதற்கும், கள்ளக் கணக்கு எழுதுவதற்கும் அரசாங்கமே முழுப் பொறுப்பு என்பதையும் மறுக்க முடியாது.

## ஆன்லைன் வணிகம்

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் காலத்தில் இல்லாத புது வகை வணிகமாக ஆன்லைன் வணிகள் அமைந்துள்ளது. எனவே இதற்கு நேரடி ஆதாரங்கள் இல்லாவிட்டாலும் இது குறித்து நாம் என்ன முடிவு எடுக்கலாம் என்பதற்கான அடிப்படைகள் இஸ்லாத்தில் தெளிவாக உள்ளன.

صحيح البخاري 2166 - حَدَّثَنَا مُوسَى بْنُ إِسْمَاعِيلَ، حَدَّثَنَا جُوَيْرِيَةُ، عَنْ نَافِعٍ، عَنْ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: «كُنَّا نَتَلَقَّى الرُّكْبَانَ، فَنَشْتَرِي مِنْهُمُ الطَّعَامَ فَنَهَانَا النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ أَنْ نَبِيعَهُ حَتَّى يُبْلَغَ بِهِ سُوقُ الطَّعَامِ

நாங்கள் (சரக்கு கொண்டுவரும்) வணிகர்களை எதிர்கொண்டு அவர்களிடம் உணவுப் பொருட்களை வாங்குவோம். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அதைக் கடைவீதிக்குக் கொண்டு செல்லாமல் (அதே இடத்தில்) விற்பதைத் தடை செய்தார்கள்.

நூல் : புகாரி 2166

எந்தப் பொருளையும் அதற்கான சந்தைக்கு வருவதற்கு முன்னர் இடைமறித்து வாங்கக் கூடாது என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தடை செய்துள்ளதை இதிலிருந்து நாம் அறியலாம்.

பொருளை உற்பத்தி செய்பவர் அப்பொருளை அதற்கான சந்தைக்கு கொண்டு வந்தால்தான் சந்தை நிலவரம் அவருக்குத் தெரியவரும். அதற்கேற்ப அவர் விலை நிர்ணயம் செய்து அதற்கேற்ற பயனை அவர் அடைய முடியும். ஆனால் சந்தைக்கு வருவதற்கு முன் இடைமறித்து உற்பத்தியாளர்களிடம்

பணமுதலைகள் கொள்முதல் செய்வதால் உற்பத்தியாளருக்கு சந்தை நிலவரம் தெரியாமல் போகும். குறைந்த விலைதான் அவருக்குக் கிடைக்கும்.

அது மட்டுமின்றி உற்பத்தியாகும் பொருட்கள் சந்தைக்கு வருவதற்கு முன் கொள்முதல் செய்பவர்கள் விரும்பியவாறு அதிக இலாபம் வைத்து கொள்ளை அடிக்கும் நிலையும் ஏற்படும்.

இதனால் உற்பத்தி செய்தவருக்கும் நட்டம் ஏற்படுகிறது. நுகர்வோருக்கும் நட்டம் ஏற்படுகிறது. இதன் காரணமாகவே சந்தைக்கு வருவதற்கு முன்னர் பொருட்களை இடைமறித்து வாங்கக் கூடாது என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்.

உலகின் எங்கோ ஒரு மூலையில் இருந்து கொண்டு அனைத்துப் பொருட்களையும் ஒருவர் ஆன்லைன் மூலம் பதிவு செய்து கொள்ளும்போதும் இதைவிட மோசமான விளைவுகள் ஏற்படுகின்றன.

இந்த வகையில் ஆன்லைன் வர்த்தகம் ஒரு மோசடியாக அமைகின்றது.

மக்களுக்கு எதுவும் நேரடியாகக் கிடைக்கக் கூடாது; தன்மூலமாக மட்டுமே கிடைக்க வேண்டும் என்பதற்காக ஆன்லைனில் பதிவு செய்துகொள்கின்றனர். இதன் நோக்கம் செயற்கைத் தட்டுப்பாட்டை ஏற்படுத்தி அதன் மூலம் தாறுமாறாகக் கொள்ளை லாபம் அடிப்பதுதான்.

ஆன்லைனில் பொருட்களை விலை பேசிவிட்டு அதைப் பதுக்கி வைக்கிறார்கள். அதற்குத் தட்டுப்பாடு வந்த உடன் அதற்குரிய விலையைவிட அதிக விலைக்கு விற்கிறார்கள். இப்படி ஒவ்வொரு பொருளுக்கும் தட்டுப்பாடு வந்த உடன் விலையை அதிகப்படுத்தி விற்கிறார்கள். இதுவே விலைவாசி உயர்வதற்கு காரணமாக இருக்கிறது. உள்ளூர்வாசி வெளியூர்வாசிக்கு விற்கக்கூடாது என்கிற ஹதீஸின் அடிப்படையில் இந்த வகையான வியாபாரம் தடை செய்யப்பட்டதாக அமைகிறது.

صحيح البخاري 2133 - حَدَّثَنِي أَبُو الوَلِيدِ، حَدَّثَنَا شُعْبَةُ، حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ دِينَارٍ، قَالَ: سَمِعْتُ ابْنَ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، يَقُولُ: قَالَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «مَنِ ابْتَاعَ طَعَامًا فَلاَ يَبِعْهُ حَتَّى يَقْبِضَهُ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

ஒருவர் ஓர் உணவுப் பொருளை வாங்கினால், அது அவரது கைக்கு (முழுமையாக) வந்து சேராதவரை அதை அவர் விற்கக்கூடாது!

நூல் : புகாரி 2133, 2132, 2137

எந்தப் பொருளை ஒருவர் விற்பதாக இருந்தாலும் அதைத் தன் பொறுப்பில் அவர் கையகப்படுத்த வேண்டும். அதன் பின்னரே விற்க வேண்டும். ஆனால் ஆன்லைன் மூலம் ஒரு டன் தங்கத்துக்கு பணம் செலுத்தி ஒருவர் பதிவு செய்து கொள்கிறார். அதை அவர் தன் வசப்படுத்துவதில்லை. தனது பொறுப்பில் எடுத்துக் கொள்வதில்லை. மாறாக பெயரை மட்டும் பதிவு செய்து கொள்கிறார். யாரிடமிருந்து பொருளை வாங்குவதாக பதிவு செய்தாரோ அவரது பொறுப்பில்தான் அந்தத் தங்கம் இருக்கும்.

இதைத்தான் மேற்கண்ட ஹதீஸ் தடுக்கின்றது.

வியாபாரத்தின் மூலம் கோடிக்கணக்கான மக்கள் பிழைக்க வேண்டும். அதிகமான மக்கள் வியாபாரிகளாக இருக்கும்போதுதான் இஷ்டத்துக்கு விலை நிர்ணயம் செய்வது தடுக்கப்படும். ஒவ்வொரு வியாபாரியும் தன் பொறுப்பில் பொருளைக் கையகப்படுத்த வேண்டும் எனும்போது ஒரு அளவுக்கு மேல் இது சாத்தியப்படாது. அனைத்தையும் ஒரு சிலர் கையகப்படுத்த முடியாது. இதனால் ஏராளமான வியாபாரிகள் களத்தில் இருப்பார்கள்.

ஆனால் கையகப்படுத்தாமல் பதிவு செய்து கொள்ளும்போது உலகில் உள்ள அனைத்து தங்கத்தையும் அனைத்து வெள்ளியையும் ஒருவரோ அல்லது மிகச்சிலரோ பதிவு செய்து வைத்துக்கொண்டு மற்ற வியாபாரிகளுக்குக் கிடைக்காமல் செய்துவிட முடியும். இதனால் நுகர்வோருக்குப் பாதிப்பு ஏற்படும் என்பதால் இஸ்லாம் இதை தடை செய்கிறது.

## பங்கு வர்த்தகம்

ஷேர் மார்க்கெட் எனும் பங்குச்சந்தை உண்மையில் வியாபாரமே அல்ல. அது ஒரு சூதாட்டமும் மோசடியுமாகும். இது பற்றி நாம் விபரமாக அறிந்து கொள்ள வேண்டும்.

ஷேர் மார்க்கெட் என்பது என்ன? ஒரு குறிப்பிட்ட நிறுவனம் ஒரு கோடி ரூபாய் மூலதனத்தில் இயங்கி வருவதாக வைத்துக் கொள்வோம். இந்த ஒரு கோடி ரூபாயில் முப்பது லட்சம் ரூபாய் பங்குகளை அந்தக் கம்பெனி சந்தையில் விற்பனை செய்யும். மீதி எழுபது இலட்சம் ரூபாய் மதிப்புடைய பங்குகளைத் தன்வசத்தில் வைத்துக் கொள்ளும். தனது நிறுவனத்தில் பாதிக்கும் குறைவான பங்குகளை சந்தையில் விற்பதால் இது பங்குச் சந்தை எனப்படுகிறது. ஒரு பங்கு என்பது பத்து ரூபாய் என்ற அளவைத் தாண்டக் கூடாது என்பது விதி. ஒருவர் ஆயிரம் ரூபாய்க்கு பங்கு வாங்க நினைத்தால் பத்து ரூபாய் மதிப்பில் நூறு பங்குகளை வாங்க வேண்டும்.

இதை மட்டும் பார்க்கும் போது இதில் எந்தத் தவறும் இல்லாதது போல் தோன்றும். ஆனால் இதற்குள் ஏராளமான அயோக்கியத்தனங்களும் மோசடிகளும் மறைந்து கிடக்கின்றன.

ஒரு கோடி ரூபாய் மதிப்புள்ள நிறுவனத்தில் முப்பது லட்சம் ரூபாய் மதிப்புள்ள பங்குகளை ஒருவர் வாங்கி அதை மற்றவரிடம் அதே விலைக்கு விற்றால் அதில் எந்தப் பிரச்சனையும் இல்லை. ஆனால் முப்பது லட்சம் ருபாய்க்கு பங்குகளை வாங்கியவர் அதை அறுபது லட்சம் ரூபாய்க்கு விற்பனை செய்கிறார். அறுபது லட்சத்துக்கு வாங்கியவர் அதை ஒரு கோடிக்கு விற்கிறார். ஒரு கோடிக்கு வாங்கியவர் இரண்டு கோடிக்கு விற்கிறார். இப்படி பல கைகள் மாறுகின்றன. முப்பது லட்சம் ரூபாய்க்கு விற்கப்பட்ட பங்கு முகமதிப்பு என்றும் இப்போது இரண்டு கோடியாக உயர்ந்து விட்ட மதிப்பு சந்தை மதிப்பு என்றும் கூறப்படுகிறது.

அந்த நிறுவனத்தின் உண்மையான மதிப்பு ஒரு கோடி தான். அந்தக் கம்பெனியில் உள்ள இருப்புக்களை ஆய்வு செய்தால் ஒரு கோடி தான் தேறும். ஆனால் அந்தக் கம்பெனியின் முப்பது சதவிகித பங்குகள் மட்டுமே சந்தை மதிப்பில் இரண்டு கோடியாக ஆக்கப்பட்டுள்ளது. உண்மையில் முப்பது லட்சம் ரூபாய்தான் அந்தக் கம்பெனியில் நமக்கு உள்ளது. அந்தக் கம்பெனி லாபம் தரும் போது முகமதிப்புக்குத் தான் அதாவது முப்பது லட்சம் ரூபாய்க்குத்தான் லாபம் தருவார்கள். இரண்டு கோடிக்கு லாபம் தரமாட்டார்கள். முப்பது லட்சம் ரூபாய்தான் அதன் மதிப்பாக இருக்கும் போது பொய்யான மாயையை ஏற்படுத்தி இரண்டு கோடி ரூபாய்க்கு விற்பதற்கு நிகரான மோசடி வேறு ஒன்றும் இருக்க முடியாது.

பங்குகளின் மதிப்பை ஏற்றிவிடுவதற்காக பல மோசடிகள் செய்யப்படும். அதாவது முப்பது லட்சம் ரூபாய்க்கு பங்குகளை வெளியிட்ட அந்த நிறுவனம் இதற்கென உள்ள புரோக்கர்கள் மூலம் இந்த நிறுவனத்தின் பங்குகள் பங்குச்சந்தையில் நூறு மடங்கு உயரப் போகிறது என்றெல்லாம் பரப்பிவிடுவார்கள். தாங்கள் விற்ற பங்குகளை பினாமிகளின் பெயரால் தாங்களே வாங்கி வைத்துக் கொண்டு தட்டுப்பாட்டை ஏற்படுத்துவார்கள். இந்தக் கம்பெனியின் பங்குகள் உத்தரவாதமானவை. பாதுகாப்பானவை. எனவே அதை வாங்கியவர்கள் விற்க மாட்டார்கள் என்றும் பிரச்சாரம் செய்யப்படும். இப்போது முப்பது லட்சம் ரூபாய் பங்குகளை பத்து கோடி ரூபாய்க்கும் கிடைத்தாலும் வாங்குவதற்கு சூதாடிகள் தயாராக இருப்பார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில் பினாமி பெயரில் வாங்கிய பங்குகளை மீண்டும் விற்பனை செய்து அந்தக் கம்பெனி கொள்ளை அடித்து விடும்.

அதாவது ஒரு கோடி ரூபாய் மட்டுமே மதிப்புடைய அந்தக் கம்பெனி முப்பது சதவிகித்தை மட்டும் பத்து கோடிக்கு விற்று விடும். புரிவதற்கு எளிதாக சிறிய தொகையைக் குறிப்பிடுகிறோம். ஆயிரம் கோடி முதலீடு என்றால் அதில் முப்பது சதவிகிதம் 300 கோடி தான். 300 கோடி முகமதிப்புள்ள பங்குகள் ஒரு லட்சம் கோடிக்கு விற்கப்பட்டால் இது எவ்வளவு பெரிய கொள்ளை?

நாங்கள் பத்து கோடிக்கு பங்குகளை வாங்கியுள்ளதால் அந்த அளவுக்கு எங்களுக்கு அந்தக் கம்பெனியில் உரிமை வேண்டும் என்று கேட்டால் பிடரியைப் பிடித்து தள்ளிவிடுவார்கள். இதன் மதிப்பு முப்பது லட்சம் தான் என்பார்கள்.

ஏன் இப்படி பங்குகளை வாங்குகின்றனர்? மக்கள் ஒன்றும் ஏமாளிகள் அல்ல. கம்பெனிகள் பெரிய அயோக்கியர்கள் என்றால் இவர்கள் சிறிய அயோக்கியர்கள். முப்பது லட்சம் பங்குகளை நாம் ஒரு கோடிக்கு வாங்கினாலும் அதை இரண்டு கோடிக்கு விற்கலாம். மதிப்பு ஏறப்போகிறது என்று பில்டப் கொடுக்கும் போது கூடுதல் விலைக்கு அடுத்தவன் தலையில் கட்டலாம் என்ற மோசடி புத்தியின் காரணமாகவே இப்படி வாங்குகிறார்கள். அந்தக் கம்பெனியில் பங்குதாரராக சேர்வதற்காக அல்ல.

இது மோசடி என்பதால் இது அப்பட்டமான ஹராமாகும். யாரையும் ஏமாற்றி பொருளீட்டுவது இஸ்லாத்தில் தடுக்கப்பட்டுள்ளது.

இந்தக் கம்பெனியில் நாம் சேர்ந்தால் நம்முடைய பங்கு ஹலாலான தொழிலில் இடப்பட்டுள்ளதா? அல்லது ஹராமான தொழிலில் இடப்பட்டுள்ளதா? என்பது தெரியாது. ஆகுமான தொழில் என்று உறுதியாகத் தெரியாத வரை அதில் நாம் முதலீடு செய்வது கூடாது.

ஒரு வியாபாரத்தில் கூட்டுச் சேர்பவர்கள் அந்த வியாபாரத்தின் மொத்தக் கணக்கு வழக்குகளைப் பார்ப்பதற்கு உரிமை பெற்றவர்கள். ஆனால் பங்குகளை வாங்கி கூட்டு சேர்ந்தவர்களுக்கு இந்த உரிமை வழங்கப்படாது. எந்தத் தொழிலில் முதலீடு செய்யப்பட்டது? எவ்வளவு செலவானது,? எவ்வளவு இலாபம் வந்தது? என்ற எந்த விபரத்தையும் இவர்களால் அறிந்து கொள்ள முடியாது.

தானும் ஏமாந்து அடுத்தவனையும் ஏமாற்றும் இந்த மோசடியில் முஸ்லிம்கள் அறவே ஈடுபடக் கூடாது.

## தரகுத் தொழில் கூடுமா?

பொதுவாக தரகு என்பது தவிர்க்க முடியாததாக உள்ளது. நமக்கு ஒரு வீடு வாடகைக்கோ விலைக்கோ தேவை என்றால் அதற்கேற்ற வீடுகள் எங்கெங்கே உள்ளன என்பதை நாம் அறிந்து வைத்திருக்க முடியாது. நாம் நமது வீட்டை அல்லது ஏதாவது சொத்தை விற்க நினைத்தால் யார் வாங்கும் எண்ணத்தில் தேடிக் கொண்டிருக்கிறார்கள் என்பதையும் நாம் அறிய முடியாது. இதற்காகவே சிலர் முயற்சித்து தகவல்களைத் திரட்டித் தருவதை தமது முழு நேரத் தொழிலாகச் செய்து வருகின்றனர். தரகர்கள் இல்லாவிட்டால் இது போன்ற பல வியாபாரங்கள் தடைபட்டு விடும்.

மனித வாழ்க்கையில் தவிர்க்க முடியாத அவசியமானதாக ஆகிவிட்ட தரகுத் தொழிலை முழுமையாக ஆகும் எண்றும் சொல்ல முடியாது. முற்றிலும் கூடாது என்றும் சொல்ல முடியாது.

இதில் ஹராமானதும் உண்டு. ஹலாலானதும் உண்டு. ஒரு தரப்புக்கு மட்டும் விசுவாசமாக உழைத்து அவருக்கு வேண்டிய தகவலைக் கொடுத்து அதற்காக கமிஷன் பெற்றால் அது ஹலாலான தொழிலாகும்.

ஒரு வீட்டை நீங்கள் வாங்க விரும்புகிறீர்கள். தரகரைத் தொடர்பு கொண்டு இது குறித்த தகவலும் ஒத்துழைப்பும் வேண்டும் எனக் கோருகிறீர்கள். அவர் உங்களுக்கு மட்டும் விசுவாசமாக உழைத்து உங்களுக்கு நன்மை செய்யும் வகையில் ஒத்துழைக்க வேண்டும்.

அவ்வாறு இல்லாமல் உங்களுக்கு சொத்தை விற்க விரும்பும் நபரிடம் போய் அதிக விலைக்கு தலையில் கட்டி விடுகிறேன்; எனக்கு ஒரு சதவிகிதம் தரவேண்டும் என்று அங்கேயும் பேரம் பேசி உங்களிடம் வந்து குறைந்த விலையில் அமுக்கி விடுகிறேன் எனக்கு ஒரு சதவிகிதம் தர வேண்டும் எனக் கூறினால் இது வடிகட்டிய அயோக்கியத்தனமும் மோசடியுமாகும்.

இப்படி இரு தரப்புக்கும் சாதகமாக உழைப்பதாக சொல்லி ஏமாற்றாமல் ஏதாவது ஒரு தரப்புக்கு மட்டும் விசுவாசமாக நடந்தால் அதில் மோசடி ஏதும் இல்லாததால் அதற்குத் தடை போட முடியாது.

ஆனால் நடைமுறையில் இரு பக்கமும் கமிஷன் வாங்கி இருவரையும் ஏமாற்றுவது தான் தற்போது தரகுத் தொழிலின் இலக்கணமாக உள்ளது. இது ஹராமாகும்.

ஒருவரிடம் நாம் கமிஷன் வாங்கும் போது அவரது பிரதிநிதி என்ற முறையில் செயல்பட வேண்டும். அவருக்கு ஆதாயம் தேடித்தரும் வகையில் அவருக்காக உழைக்க வேண்டும். அப்படி இல்லாமல் இரு பக்கமும் நாடகம் நடத்தினால் இருவரையும் ஏமாற்றியதாக அமையும். இந்த வருவாய் ஹராமாகும்.

மேலும் தொகைக்கு ஏற்ப கமிஷன் வாங்கினால் அது வாங்குபவருக்கு நட்டத்தை ஏற்படுத்தும். அவருக்கு விசுவாசமாக நடப்பதற்குப் பதிலாக அவருக்கு நட்டத்தை ஏற்படுத்தி விட்டு அவரிடமே கமிஷன் வாங்குவதை இஸ்லாம் அனுமதிக்காது.

உதாரணமாக ஒருமாத வடகையைக் கமிஷனாகத் தர வேண்டும் என்று பேரம் பேசி தரகு வேலை பார்த்தால் அதிகக் கமிஷன் கிடைப்பதற்காக அதிக வாடகைக்குப் பேசும் நிலை ஏற்படும்.

இடத்தின் உரிமையாளர் சார்பில் பேசினால் அதில் உரிமையாளருக்கு லாபம் கிடைக்கும்.

ஆனால் வாடகைக்கு இடம் தேடுபவர் சார்பில் பேசினால் இடம் தேடுபவருக்கு இது நட்டத்தையே ஏற்படுத்தும்.

விற்பவர் சார்பில் கமிஷன் அடிப்படையில் பேசி தரகு வேலை பார்த்து அவரிடம் மட்டும் கமிஷன் வாங்கலாம். வாங்குபவரிடம் கமிஷன் அடிப்படையில் பேசாமல் இடத்தை முடித்துத் தந்தால் இவ்வளவு ரூபாய் என்று பேசினால் அவருக்கு லாபம் தரும் வகையில் குறைத்து பேசி அவருக்கு விசுவாசமாக இருக்க முடியும்.

விலை விஷயத்திலும் வாடகை விஷயத்திலும் தலையிட்டு விலையை ஏற்றிவிடுவது தான் புரோக்கர்களின் பணியாக உள்ளது. வீடுகள் நிலங்கள் போன்றவற்றின் தாறுமாறான விலை உயர்வுக்கு புரோக்கர்கள் தான் காரணமாக உள்ளனர். விலையை ஏற்றிவிடுவதற்காக கமிஷன் வாங்குவதற்கு மார்க்கத்தில் தடை உள்ளது.

இடைத் தரகர் வேலை பார்க்கும் போது விலையை அல்லது வாடகையை சந்தை நிலவரத்தை விட அதிகமாகக் கூட்டுவதற்கு முயற்சி செய்தால் அது ஹராமாகும்.

2160 - حَدَّثَنَا المَكِّيُّ بْنُ إِبْرَاهِيمَ، قَالَ: أَخْبَرَنِي ابْنُ جُرَيْجٍ، عَنِ ابْنِ شِهَابٍ، عَنْ سَعِيدِ بْنِ المُسَيِّبِ، أَنَّهُ سَمِعَ أَبَا هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ، يَقُولُ: قَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، «لاَ يَبْتَاعُ المَرْءُ عَلَى بَيْعِ أَخِيهِ، وَلاَ تَنَاجَشُوا، وَلاَ يَبِعْ حَاضِرٌ لِبَادٍ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

ஒருவர் வியாபாரம் செய்து கொண்டிருக்கும் போது தாம் வியாபாரம் செய்வதற்காக எவரும் குறுக்கிடக் கூடாது! (வாங்கும் நோக்கமின்றி) விலையை உயர்த்த வேண்டும் என்பதற்காகவே விலை கேட்காதீர்கள்! (விலையை உயர்த்துவதற்காக ஆளமர்த்தி அதிக விலை கேட்கச் செய்வதும் கூடாது!) கிராமவாசிக்காக நகரவாசி விற்றுக் கொடுக்கக் கூடாது!

நூல்: புகாரி 2160 2158 2140

صحيح البخاري 2166 - حَدَّثَنَا مُوسَى بْنُ إِسْمَاعِيلَ، حَدَّثَنَا جُوَيْرِيَةُ، عَنْ نَافِعٍ، عَنْ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: «كُنَّا نَتَلَقَّى الرُّكْبَانَ، فَنَشْتَرِي مِنْهُمُ الطَّعَامَ فَنَهَانَا النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ أَنْ نَبِيعَهُ حَتَّى يُبْلَغَ بِهِ سُوقُ الطَّعَامِ

நாங்கள் (சரக்கு கொண்டுவரும்) வணிகர்களை எதிர்கொண்டு அவர்களிடம் உணவுப் பொருட்களை வாங்குவோம். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அதைக் கடைவீதிக்குக் கொண்டு செல்லாமல் (அதே இடத்தில்) விற்பதைத் தடை செய்தார்கள்.

நூல் : புகாரி 2166

விலையில் தலையிடுவதாக இருந்தால் விலையை ஏற்றிவிடாமல் ஒரு தரப்பில் மட்டும் கமிஷன் வாங்கிக் கொண்டு சந்தை விலையை ஏற்றிவிடாமல் அந்தத் தரப்புக்கு உழைக்கலாம்.

புரோக்கர் தலையிடாமல் இருவரும் பேசிக் கொள்ளுங்கள் என்று தொடர்பை மட்டும் ஏற்படுத்தி. என்ன விலைக்கு படிந்தாலும் இவ்வளவு ரூபாய் எனக்குக் கமிஷனாகத் தர வேண்டும் என்ற அடிப்படையில் பேசிக் கொண்டால் அப்போது இவரது வேலை தொடர்பு ஏற்படுத்திக் கொடுப்பது மட்டும் தான். எனவே இரு தரப்பிலும் கமிஷன் வாங்கலாம்.

## இரவல் மற்றும் அமானிதப் பொருள் காணாமல் போனால்

மற்றவரிடம் நாம் இரவலாகப் பெற்ற பொருள் அல்லது மற்றவர்கள் நம்மிடம் அமானிதமாக ஒப்படைத்த பொருள் காணாமல் போய்விட்டால் அதற்கு யார் பொறுப்பு என்பதையும் நாம் அறிந்து கொள்ள வேண்டும்.

காணாமல் போகும் பொருள்களில் இரவலுக்கும் அமானிதத்துக்கும் ஒரே நிலைப்பாட்டை எடுக்க முடியாது. இரண்டுக்கும் அடிப்படையில் வேறுபாடு உள்ளது.

ஒருவர் தனது பொருளைப் பாதுகாப்பாக வைப்பதற்காக நம்பிக்கையான மனிதரிடம் கொடுத்து வைக்கிறார். இது அமானிதம் எனப்படும். அமானிதம் பெற்றவருக்கு இதில் ஆதாயம் ஏதும் இல்லை. அவர் உதவி செய்யும் நோக்கில்தான் அமானிதப் பொருளை வாங்கி வைத்துக் கொள்கிறார்.

இந்த நிலையில் அப்பொருள் திருடப்பட்டாலோ, தீப்பிடித்து எரிந்து போனாலோ, அல்லது காணாமல் போனாலோ அமானிதமாக வாங்கி வைத்தவர் அதற்குப் பொறுப்பாளராக மாட்டார். அவர் கூறுவது உண்மைதான் என்று ஆய்வு செய்து உண்மை எனத் தெரியவந்தால் அமானிதம் கொடுத்தவர் அதை மன்னித்து விட்டுவிட வேண்டும். நம் கைவசத்தில் அப்பொருள் இருக்கும்போது காணாமல் போனால் அதை எப்படி எடுத்துக் கொள்வோமோ அப்படியே இதையும் எடுத்துக் கொள்ள வேண்டும்.

ஆனால் இரவல் என்பது இரவல் பெற்றவருடைய தேவைக்காக மற்றவரிடம் கேட்டுப் பெறுவதாகும். அதைப் பயன்படுத்தும் அனுமதியோடு அப்பொருள் அவர் கைவசத்தில் தரப்படுவதால் அதற்கு ஏற்படும் இழப்புகளுக்கு அவர்தான் பொறுப்பாளியாவார். இரவல் பெற்ற பொருள் காணாமல் போனால் அல்லது திருட்டு போனால் அப்பொருளுக்கான நட்ட ஈடு கொடுக்கும் கடமை இரவல் வாங்கியவருக்கு உண்டு.

سنن الترمذي

1265 - حدثنا هناد و علي بن حجر قالا حدثنا إسماعيل بن عياش عن شرحبيل بن مسلم الخولاني عن أبي أمامة قال : سمعت النبي صلى الله عليه و سلم يقول في الخطبة عام حجة الوداع العارية مؤداة والزعيم غارم والدين مقضي قال أبو عيسى وفي الباب عن سمرة و صفوان بن أمية و أنس قال وحديث أبي أمامة حديث حسن غريب وقد روي عن أبي أمامة عن النبي صلى الله عليه و سلم أيضا من غير هذا الوجه

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது இறுதிப் பேருரையில் இரவல் பொருட்கள் திரும்ப ஒப்படைக்கப்பட வேண்டும். இன்னொருவனின் கடனுக்குப் பொறுப்பேற்றவர் கடனாளியாவார். (அந்தக் கடனை அவரே தீர்க்க வேண்டும்) கடன்கள் திருப்பிச் செலுத்தப்பட வேண்டும் என்று குறிப்பிட்டார்கள்.

நூல்கள் : திர்மிதி, அபூதாவூத்

## கால்நடைகளால் ஏற்படும் இழப்புகளுக்கு யார் பொறுப்பு

எந்த இழப்பாக இருந்தாலும் பொறுப்புகளில் யார் தவறு செய்துள்ளார்கள் என்ற அடிப்படையில்தான் இழப்பீட்டுக்கு பொறுப்பாளர் யார் என்பது தீர்மானிக்கப்படும்.

سنن أبي داود

3570 - حدثنا محمود بن خالد ثنا الفريابي عن الأوزاعي عن الزهري عن حرام بن محيصة الأنصاري عن البراء بن عازب قال : كانت له ناقة ضارية فدخلت حائطا فأفسدت فيه فكلم رسول الله صلى الله عليه و سلم فيها فقضى أن حفظ الحوائط بالنهار على أهلها وأن حفظ الماشية بالليل على أهلها وأن على أهل الماشية ما أصابت ماشيتهم بالليل

பர்ரா இப்னு ஆஸிப் அவர்களின் ஒட்டகம் ஒருவருடைய தோட்டத்தில் நுழைந்து அதை நாசப்படுத்தியது. அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பொருளுக்குரியவர்கள் பகலில் அதைப் பாதுகாக்க வேண்டுமென்றும்,

கால்நடைக்குரியவர்கள் இரவில் கால்நடைகளைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்றும் தீர்ப்பு வழங்கினார்கள்.

நூல் : அபூதாவுத் 3098

பகல் நேரத்தில் கால்நடைகளால் சேதம் ஏற்படாமலிருக்கும் வகையில் தோட்டத்தின் சொந்தக்காரர்கள் விழிப்போடு இருக்க வேண்டும். பகலில் கால்நடைகள் மற்றவர்களின் பயிர்களைச் சேதப்படுத்தினால் கால்நடைகளின் உரிமையாளர்கள் எந்த நட்டஈடும் கொடுக்கத் தேவை இல்லை. ஏனெனில் தோட்டத்தின் உரிமையாளர் பகலில் தனது தோட்டத்தைப் பாதுகாக்கும் கடமையில் தவறியுள்ளார்.

இரவில் தோட்டங்களை அதன் உரிமையாளர்கள் கண்காணித்துக் கொண்டிருக்க முடியாது என்பதால் கால்நடைகளின் உரிமையாளர்களுக்கு அவற்றைக் கட்டிப்போட்டு மற்றவர்களின் தோட்டங்களில் மேயாமல் தடுக்கும் கடமை உண்டு. எனவே இரவில் கால்நடைகள் பயிர்களைச் சேதப்படுத்தினால் கால்நடைகளின் உரிமையாளர்கள் அதற்கான இழப்பீட்டை தோட்டத்தின் உரிமையாளருக்கு அளிக்க வேண்டும்.

## சிகிச்சையின்போது ஏற்படும் பாதிப்புகளுக்கு இழப்பீடு

மருத்துவ சிகிச்சையின்போது உயிரிழப்புகள் ஏற்படுவதுண்டு. அல்லது உறுப்புகள் ஊனமாவதுண்டு. இதற்காக மருத்துவரைப் பொறுப்பாளியாக்கி இழப்பீடு பெற முடியுமா என்பதையும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பின்வருமாறு தெளிவுபடுத்தியுள்ளனர்.

سنن النسائي

4830 - أخبرني عمرو بن عثمان ومحمد بن مصفي قالا حدثنا الوليد عن بن جريج عن عمرو بن شعيب عن أبيه عن جده قال قال رسول الله صلى الله عليه و سلم : من تطبب ولم يعلم منه طب قبل ذلك فهو ضامن

யார் மருத்துவம் தெரியாமல் மருத்துவம் பார்க்கிறாரோ அதற்கு அவர்தான் பொறுப்பு என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சொன்னார்கள்.

நூல்கள் : நஸாயி, இப்னுமாஜா

மருத்துவம் செய்பவர் எந்த நோய்க்கு சிகிச்சை அளிக்கிறாரோ அந்த நோய்க்கான சிகிச்சையைச் சரியாக அறிந்தவராக இருந்து சிகிச்சையின்போது ஏதேனும் விபரீதம் ஏற்பட்டால் அவர் அதற்கு பொறுப்பாளியாக மாட்டார். அவர் எந்த இழப்பீடும் அளிக்கத் தேவையில்லை. ஆனால் மருத்துவம் தெரியாமல் ஒருவர் சிகிச்சை செய்து அதனால் நோயாளியின் உயிருக்கோ, உறுப்புக்களுக்கோ பாதிப்பு ஏற்பட்டால் மருத்துவம் அறியாமல் சிகிச்சை செய்த மருத்துவர் அதற்கான இழப்பீட்டை வழங்க வேண்டும்.

மருத்துவத்தை அறிந்தவர் என்பதன் பொருள் அவர் மருத்துவ பட்டம் படித்திருக்க வேண்டும் என்பதல்ல. அவர் செய்யும் சிகிச்சை சரியானதாக இருக்க வேண்டும் என்பதுதான்.

நன்கு படித்த மருத்துவர் கையில் செய்ய வேண்டிய அறுவை சிகிச்சைக்குப் பதிலாக காலில் அறுவை சிகிச்சை செய்தால், அல்லது வலது கண்ணுக்குப் பதிலாக இடது கண்ணில் அறுவை சிகிச்சை செய்தால் அவரது பட்டம் அவரைக் காப்பாற்றாது. ஒரு நோய்க்கு என்ன சிகிச்சை செய்ய வேண்டும் என்று அறியாமல் தேவை இல்லாத ஒரு அறுவை சிகிச்சை செய்கிறார். அதனால் நோயாளிக்கு பாதிப்பு ஏற்படுகிறது. இந்த நோய்க்கு இது தேவையற்றது சம்மந்தமற்றது என்று கண்டுபிடிக்கப்பட்டால் அப்போதும் அவர் இழப்பீடு வழங்க வேண்டும்.

நோய்க்குள் சம்மந்தமில்லாத மருந்துகளை அவர் எழுதிக் கொடுத்து அதனால் பாதிப்பு ஏற்பட்டாலும் அதற்கு மருத்துவர் தான் பொறுப்பாளியாவார்.

## பிறரது பொருளைச் சேதப்படுத்துவதன் இழப்பீடு

பிறரது பொருளை ஒருவர் சேதப்படுத்தி விட்டால் அந்தப் பொருளின் மதிப்புக்கு ஏற்க இழப்பீடு வழங்க வேண்டும்.

صحيح البخاري 5225 - حَدَّثَنَا عَلِيٌّ، حَدَّثَنَا ابْنُ عُلَيَّةَ، عَنْ حُمَيْدٍ، عَنْ أَنَسٍ، قَالَ: كَانَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ عِنْدَ بَعْضِ نِسَائِهِ، فَأَرْسَلَتْ إِحْدَى أُمَّهَاتِ المُؤْمِنِينَ بِصَحْفَةٍ فِيهَا طَعَامٌ، فَضَرَبَتِ الَّتِي النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ فِي بَيْتِهَا يَدَ الخَادِمِ، فَسَقَطَتِ الصَّحْفَةُ فَانْفَلَقَتْ، فَجَمَعَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ فِلَقَ الصَّحْفَةِ، ثُمَّ جَعَلَ يَجْمَعُ فِيهَا الطَّعَامَ الَّذِي كَانَ فِي الصَّحْفَةِ، وَيَقُولُ: «غَارَتْ أُمُّكُمْ» ثُمَّ حَبَسَ الخَادِمَ حَتَّى أُتِيَ بِصَحْفَةٍ مِنْ عِنْدِ الَّتِي هُوَ فِي بَيْتِهَا، فَدَفَعَ الصَّحْفَةَ الصَّحِيحَةَ إِلَى الَّتِي كُسِرَتْ صَحْفَتُهَا، وَأَمْسَكَ المَكْسُورَةَ فِي بَيْتِ الَّتِي كَسَرَتْ

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது ஒரு மனைவியிடம் இருக்கும் போது இன்னொரு மனைவி உணவுப் பண்டமுள்ள தட்டு ஒன்றைக் கொடுத்தனுப்பினார்கள். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் யாருடைய வீட்டில் தங்கியிருந்தார்களோ அந்த மனைவி (ரோஷத்தில்) பணியாளின் கையைத் தட்டிவிட்டார். அந்தத் தட்டு (கீழே விழுந்து) உடைந்துவிட்டது. உடனே நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அந்த உடைந்த தட்டின் துண்டுகளை ஒன்று சேர்த்தார்கள். பிறகு தட்டிலிருந்த உணவை (மீண்டும்) அதிலேயே ஒன்று சேர்க்கலானார்கள். மேலும், (அங்கிருந்த தோழர்களை நோக்கி), உங்கள் தாயார் ரோஷப்பட்டு விட்டார் என்று சொன்னார்கள். பின்னர் அந்தப் பணியாளை (அங்கேயே) நிறுத்திவிட்டு (சேதப்படுத்திய) மனைவியின் வீட்டிலிருந்து ஒரு தட்டைக் கொண்டு வரச்செய்து, உடைபட்ட தட்டுக்குரியவரிடம் நல்ல தட்டைக் கொடுத்து அனுப்பிவிட்டார்கள். உடைந்த தட்டை அந்த வீட்டிலேயே வைத்துவிட்டார்கள்.

நூல் : புகாரி 5225

## சொத்து தகராறைத் தீர்க்கும் வழிமுறை

ஒரு சொத்து யாருக்கு உரியது என்ற பிரச்சனை வந்தால் அதைத் தீர்ப்பதற்காக நீதிமன்றங்களுக்குச் சென்று பல வருடங்கள் அலைந்து பொருளாதாரத்தை மேலும் இழந்து ஓட்டாண்டியாகி விடுவதைக் காண்கிறோம். இஸ்லாத்தில் இதற்கான தீர்வு மிகவும் எளிமையானது.

ஒரு சொத்துக்கு இருவர் சொந்தம் கொண்டாடினால் அந்தச் சொத்து யாராவது ஒருவரின் கைவசத்தில்தான் இருக்கும். யாருடைய கைவசத்தில் அது உள்ளதோ அவர் தன்னுடையது என்பதற்கு எந்த ஆதாரத்தையும் காட்டத் தேவையில்லை. அவர் கைவசத்தில் சொத்து இருப்பதே ஒரு வகையான ஆதாரம்தான்.

யாருடைய கைவசத்தில் சொத்து இல்லையோ அவர் அந்தச் சொத்துக்கு உரிமை கொண்டாடினால் அது தன்னுடையதுதான் என்பதற்கு ஆவணங்களை அல்லது சாட்சிகளைக் கொண்டு வந்து நிரூபித்து விட்டால் எதிரியிடமிருந்து அந்தச் சொத்தைப் பிடுங்கி அவரிடம் ஒப்படைக்க வேண்டும். இப்படி ஆதாரம் காட்டாவிட்டால் சொத்துக்கு உரிமை கொண்டாடுபவர் உண்மையில் உரிமையாளராக இருந்தால்கூட அவருக்குச் சாதகமாக தீர்ப்பு அளிக்கப்படாது.

ஆதாரங்களைத் திரட்டுவதும் அதைப் பாதுகாப்பதும் இவர் மீதுள்ள கடமையாகும். அந்தக் கடமையில் அவர் தவறி விட்டு எவ்வித ஆதாரத்தையும் காட்டாமல் என்னுடையது என்று கூறுவது அர்த்தமற்றதாகும்.

ஒருவர் கைவசத்தில் உள்ள சொத்துக்கு மற்றவர் உரிமை கொண்டாடி வழக்கு தொடுத்தால் அந்த வழக்குக்கும் இஸ்லாம் ஓரளவு மதிப்பளிக்கிறது. சொத்தை யார் கைவசம் வைத்துள்ளாரோ அவர் இது அல்லாஹ்வின் மீது சத்தியமக என்னுடைய சொத்துதான் எனக் கூற வேண்டும். அவ்வாறு அவர் கூறிவிட்டால் அவருக்கு எதிரான வழக்கு தள்ளுபடி செய்யப்படும்.

இது என்னுடையதுதான் என்று சத்தியம் செய்யும் உரிமை யார் தன் கைவசத்தில் பொருளை வைத்துள்ளாரோ அவருக்கு மட்டும் உள்ளதாகும்.

سنن الترمذي 1341 - حَدَّثَنَا عَلِيُّ بْنُ حُجْرٍ قَالَ: حَدَّثَنَا عَلِيُّ بْنُ مُسْهِرٍ، وَغَيْرُهُ، عَنْ مُحَمَّدِ بْنِ عُبَيْدِ اللَّهِ، عَنْ عَمْرِو بْنِ شُعَيْبٍ، عَنْ أَبِيهِ، عَنْ جَدِّهِ، أَنَّ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ فِي خُطْبَتِهِ: «البَيِّنَةُ عَلَى المُدَّعِي، وَاليَمِينُ عَلَى المُدَّعَى عَلَيْهِ

சத்தியம் செய்யும் உரிமை யாருக்கு எதிராக வழக்கு தொடுக்கப்பட்டுள்ளதோ அவருக்குத் தான் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தீர்ப்பளித்தார்கள்.

நூல் திர்மிதி

இவ்வாறு சத்தியம் செய்யக் கோரும்போது அவர் சத்தியம் செய்ய மறுத்தால் அந்தச் சொத்து தன்னுடையது அல்ல என்று அவரே ஒப்புக் கொள்கிறார் என்பதால் வழக்கு தொடுத்தவருக்கு சத்தியம் செய்யும் உரிமை வழங்கப்படும். இவர் அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்தால் அவரே அப்பொருளுக்கு உரிமையாளர் என முடிவு செய்யப்படும்.

ஒரு வீடு இருக்கின்றது. இருவர் சேர்ந்து பணம் கொடுத்து அதை வாங்கியிருக்கின்றார்கள். இருவருமே அந்த வீட்டில் வசிக்கின்றனர். இப்போது யாருடைய கைவசத்தில் அந்த வீடு உள்ளது என்று சொல்ல முடியாது. இருவரும் சமநிலையில் உள்ளனர்.

இது போன்ற சூழ்நிலையில் மட்டும் இதற்கு ஒரு முடிவு கட்ட வேண்டும் என்பதற்காக இருவரில் ஒருவருக்கு சத்தியம் செய்ய வாய்ப்பு அளிக்கப்படும். அந்த வாய்ப்பு யாருக்கு என்பது சீட்டுக் குலுக்கிப் போட்டு முடிவு செய்யப்படும்.

இதில் ஒருவர் பாதிக்கப்படுவார் என்பது உண்மைதான். ஆனால் ஏதாவது ஒரு தீர்ப்பு சொல்லியாக வேண்டும். இல்லையென்றால் அந்தச் சண்டை இருந்து கொண்டே இருக்கும். காலமெல்லாம் அவர்களுக்குள் பூசல் இருந்து கொண்டே இருக்கும். எனவேதான் இந்த ஏற்பாடு.

صحيح البخاري 2674 - حَدَّثَنَا إِسْحَاقُ بْنُ نَصْرٍ، حَدَّثَنَا عَبْدُ الرَّزَّاقِ، أَخْبَرَنَا مَعْمَرٌ، عَنْ هَمَّامٍ، عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ: «أَنَّ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ عَرَضَ عَلَى قَوْمٍ اليَمِينَ، فَأَسْرَعُوا فَأَمَرَ أَنْ يُسْهَمَ بَيْنَهُمْ فِي اليَمِينِ أَيُّهُمْ يَحْلِفُ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஒரு கூட்டத்தாரை சத்தியப் பிரமாணம் அளிக்கும்படி அழைத்தார்கள். அவர்கள் (ஒருவரையொருவர்) முந்திக் கொண்டு

வந்தார்கள். அவர்களில் யார் சத்தியம் செய்வதென்று அவர்களிடையே (முடிவு செய்வதற்காகச்) சீட்டுக் குலுக்கிப் போடும்படி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள்.

நூல் : புகாரி 2674

## சீட்டுக் குலுக்கி தீர்வு காண்பது

صحيح البخاري 2688 - حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ مُقَاتِلٍ، أَخْبَرَنَا عَبْدُ اللَّهِ، أَخْبَرَنَا يُونُسُ، عَنِ الزُّهْرِيِّ، قَالَ: أَخْبَرَنِي عُرْوَةُ، عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا، قَالَتْ: «كَانَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ إِذَا أَرَادَ سَفَرًا أَقْرَعَ بَيْنَ نِسَائِهِ، فَأَيَّتُهُنَّ خَرَجَ سَهْمُهَا خَرَجَ بِهَا مَعَهُ، وَكَانَ يَقْسِمُ لِكُلِّ امْرَأَةٍ مِنْهُنَّ يَوْمَهَا وَلَيْلَتَهَا، غَيْرَ أَنَّ سَوْدَةَ بِنْتَ زَمْعَةَ وَهَبَتْ يَوْمَهَا وَلَيْلَتَهَا لِعَائِشَةَ زَوْجِ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، تَبْتَغِي بِذَلِكَ رِضَا رَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வெளியூர் செல்லும்போது ஒரு மனைவியை அழைத்துச் செல்வார்கள். மனைவியர் அனைவரும் சமமானவர்கள் என்பதால் ஒருவருக்கு மட்டும் முன்னுரிமை கொடுப்பது அநீதியாகி விடும். எனவே எல்லா மனைவியரின் பெயர்களையும் எழுதி சீட்டு குலுக்குவார்கள். யார் பெயர் வருகிறதோ அவரை அழைத்துச் செல்வார்கள்.

இது புகாரி 2688 ,2879, 4750 ஆகிய ஹதீஸ்களில் கூறப்பட்டுள்ளது.

صحيح البخاري 2687 - حَدَّثَنَا أَبُو اليَمَانِ، أَخْبَرَنَا شُعَيْبٌ، عَنِ الزُّهْرِيِّ، قَالَ: حَدَّثَنِي خَارِجَةُ بْنُ زَيْدٍ الأَنْصَارِيُّ، أَنَّ أُمَّ العَلاَءِ - امْرَأَةً مِنْ نِسَائِهِمْ - قَدْ بَايَعَتِ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، أَخْبَرَتْهُ أَنَّ عُثْمَانَ بْنَ مَظْعُونٍ طَارَ لَهُ سَهْمُهُ فِي السُّكْنَى، حِينَ أَقْرَعَتْ الأَنْصَارُ سُكْنَى المُهَاجِرِينَ، قَالَتْ أُمُّ العَلاَءِ: فَسَكَنَ عِنْدَنَا عُثْمَانُ بْنُ مَظْعُونٍ، فَاشْتَكَى، فَمَرَّضْنَاهُ حَتَّى إِذَا تُوُفِّيَ وَجَعَلْنَاهُ فِي ثِيَابِهِ، دَخَلَ عَلَيْنَا رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَقُلْتُ: رَحْمَةُ اللَّهِ عَلَيْكَ أَبَا السَّائِبِ، فَشَهَادَتِي عَلَيْكَ لَقَدْ أَكْرَمَكَ اللَّهُ، فَقَالَ لِي النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «وَمَا يُدْرِيكِ أَنَّ اللَّهَ أَكْرَمَهُ؟»، فَقُلْتُ: لاَ أَدْرِي بِأَبِي أَنْتَ وَأُمِّي يَا رَسُولَ اللَّهِ، فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «أَمَّا عُثْمَانُ فَقَدْ جَاءَهُ وَاللَّهِ اليَقِينُ، وَإِنِّي لَأَرْجُو لَهُ الخَيْرَ، وَاللَّهِ مَا أَدْرِي وَأَنَا رَسُولُ اللَّهِ مَا يُفْعَلُ بِهِ»، قَالَتْ: فَوَاللَّهِ لاَ أُزَكِّي أَحَدًا بَعْدَهُ أَبَدًا، وَأَحْزَنَنِي ذَلِكَ، قَالَتْ: فَنِمْتُ، فَأُرِيتُ لِعُثْمَانَ عَيْنًا تَجْرِي، فَجِئْتُ إِلَى رَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَأَخْبَرْتُهُ، فَقَالَ: «ذَاكِ عَمَلُهُ»

மக்காவாசிகள் நாடு துறந்து மதீனா வந்தபோது மதீனாவில் உள்ள ஒரு முஸ்லிம் குடும்பம் மக்காவில் இருந்து வந்த ஒருவரை தமது பொறுப்பில் எடுத்துக் கொள்ள வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது. ஒருவருக்கு வசதியில்லாதவரின் வீடு, மற்றவருக்கு வசதி படைத்தவரின் வீடு என்பது போன்ற எண்ணம் நாடு துறந்த மக்களுக்கும் வரக் கூடாது; உள்ளூர் மக்களுக்கும் வரக்கூடாது என்பதற்காக சீட்டுக் குலுக்கி போட்டு யாருக்கு எந்த வீடு என்பதை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் முடிவு செய்தார்கள்.

இது பற்றி புகாரி 2687, 1243, 3929, 7004, 7018 ஆகிய ஹதீஸ்களில் கூறப்பட்டுள்ளது.

இரு சமூகத்தினர் கப்பலில் பயணம் செய்து போகின்றனர். கப்பலில் மேல்தளம் கீழ்தளம் என்று இரு தளங்கள் உள்ளன. இருவருமே நாங்கள்தான் மேல் தளத்தில் இருப்போம். அல்லது நாங்கள்தான் கீழ்த்தளத்தில் இருப்போம் எனப் போட்டியிடுகின்றனர். இப்போது சீட்டுக் குலுக்கி போட்டு முடிவு எடுக்கலாம் என்பதை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தெளிவுபடுத்துகிறார்கள்.

صحيح البخاري 2686 - حَدَّثَنَا عُمَرُ بْنُ حَفْصِ بْنِ غِيَاثٍ، حَدَّثَنَا أَبِي، حَدَّثَنَا الأَعْمَشُ، قَالَ: حَدَّثَنِي الشَّعْبِيُّ، أَنَّهُ سَمِعَ النُّعْمَانَ بْنَ بَشِيرٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، يَقُولُ: قَالَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: " مَثَلُ المُدْهِنِ فِي حُدُودِ اللَّهِ، وَالوَاقِعِ فِيهَا، مَثَلُ قَوْمٍ اسْتَهَمُوا سَفِينَةً، فَصَارَ بَعْضُهُمْ فِي أَسْفَلِهَا وَصَارَ بَعْضُهُمْ فِي أَعْلاَهَا، فَكَانَ الَّذِي فِي أَسْفَلِهَا يَمُرُّونَ بِالْمَاءِ عَلَى الَّذِينَ فِي أَعْلاَهَا، فَتَأَذَّوْا بِهِ، فَأَخَذَ فَأْسًا فَجَعَلَ يَنْقُرُ أَسْفَلَ السَّفِينَةِ، فَأَتَوْهُ فَقَالُوا: مَا لَكَ، قَالَ: تَأَذَّيْتُمْ بِي وَلاَ بُدَّ لِي مِنَ المَاءِ، فَإِنْ أَخَذُوا عَلَى يَدَيْهِ أَنْجَوْهُ وَنَجَّوْا أَنْفُسَهُمْ، وَإِنْ تَرَكُوهُ أَهْلَكُوهُ وَأَهْلَكُوا أَنْفُسَهُمْ "

அல்லாஹ்வின் சட்டங்களில் விட்டுக் கொடுப்பவருக்கும், அதை மீறுபவருக்கும் உதாரணம் ஒரு கூட்டத்தாரின் நிலையாகும். அவர்கள் ஒரு கப்பலில் இடம் பிடிப்பதற்காக சீட்டுக் குலுக்கிப் போட்டார்கள். அவர்களில் சிலருக்குக் கப்பலின் கீழ்த் தளத்திலும் சிலருக்குக் கப்பலின் மேல்தளத்திலும் இடம் கிடைத்தது. கப்பலின் கீழ்த்தளத்தில் இருந்தவர்கள் தண்ணீரை எடுத்துக் கொண்டு மேல்தளத்தில் இருந்தவர்களைக் கடந்து சென்று கொண்டிருந்தார்கள். அதனால் மேல் தளத்திலிருந்தவர்கள் துன்பமடைந்தார்கள். ஆகவே, கீழ்த்தளத்தில் இருந்த ஒருவன் ஒரு கோடரியை எடுத்து, கப்பலின் கீழ்த்தளத்தைத் துளையிடத் தொடங்கினான். மேல் தளத்திலிருந்தவர்கள் அவனிடம் வந்து, "உனக்கு என்ன நேர்ந்தது?" என்று கேட்டார்கள். அவன், "நீங்கள் என்னால் துன்பத்திற்குள்ளானீர்கள். எனக்குத் தண்ணீர் அவசியம் தேவைப்படுகின்றது. (அதனால், கப்பலின் கீழ்த்தளத்தில் துளையிட்டு அதில் வரும் தண்ணீரைப் பயன்படுத்திக் கொள்வேன்)" என்று கூறினான். (துளையிட விடாமல்) அவனது இரு கைகளையும் அவர்கள் பிடித்துக் கொண்டால் அவர்கள் அவனையும் காப்பாற்றுவார்கள்; தங்களையும் காப்பாற்றிக் கொள்வார்கள். அவனை அவர்கள் (கப்பலில் துளையிட) விட்டு விட்டால் அவனையும் அழித்து விடுவார்கள்; தங்களையும் அழித்துக் கொள்வார்கள்.

நூல் : புகாரி 2686

பாங்கு சொல்வது போன்ற நல்ல காரியங்களில் பலர் போட்டியிட்டால் அனைவரும் சமநிலையிலும் இருந்தால் சீட்டுக் குலுக்கி ஒருவரைத் தேர்வு செய்யலாம்.

صحيح البخاري 615 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ، قَالَ: أَخْبَرَنَا مَالِكٌ، عَنْ سُمَيٍّ مَوْلَى أَبِي بَكْرٍ، عَنْ أَبِي صَالِحٍ، عَنْ أَبِي هُرَيْرَةَ: أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ: «لَوْ يَعْلَمُ النَّاسُ مَا فِي النِّدَاءِ وَالصَّفِّ الأَوَّلِ، ثُمَّ لَمْ يَجِدُوا إِلَّا أَنْ يَسْتَهِمُوا عَلَيْهِ لاَسْتَهَمُوا، وَلَوْ يَعْلَمُونَ مَا فِي التَّهْجِيرِ لاَسْتَبَقُوا إِلَيْهِ، وَلَوْ يَعْلَمُونَ مَا فِي العَتَمَةِ وَالصُّبْحِ، لَأَتَوْهُمَا وَلَوْ حَبْوًا»

பாங்கு சொல்வதிலும், (கூட்டுத் தொழுகையில்) முதல் வரிசையிலும் இருக்கும் நன்மையை மக்கள் அறிவார்களாயின் (அதை அடைந்துகொள்ள) சீட்டுக் குலுக்கிப் போடுவதைத் தவிர வேறு வழியில்லாமல் போனால் நிச்சயம் சீட்டுக் குலுக்கிப் போடுவார்கள். தொழுகைக்கு அதன் ஆரம்ப வேளையில் விரைந்து செல்வதில் உள்ள நன்மையை மக்கள் அறிவார்களாயின் அதற்கு முந்திக் கொள்வார்கள். இஷாத் தொழுகையிலும். ஃபஜ்ர் தொழுகையிலும் உள்ள நன்மையை மக்கள் அறிவார்களாயின் அதற்குத் (தரையில்) தவழ்ந்தாவது வந்து (சேர்ந்து)விடுவார்கள்.

நூல் : புகாரி 615, 654 ,721, 2689

## மக்களின் அறியாமையைப் பயன்படுத்தி சம்பாதிப்பது

மதத்தின் பெயராலோ, ஜோதிடம், ஜாதகம், சகுனம் போன்ற மூடநம்பிக்கையின் பெயராலோ மக்களை ஏமாற்றி பிழைப்பதும் மார்க்கத்தில் தடுக்கப்பட்டுள்ளது.

நம்பிக்கை கொண்டோரே! மத குருமார்களிலும், பாதிரிகளிலும் அதிகமானோர் மக்களின் செல்வங்களைத் தவறான முறையில் உண்ணுகின்றனர். அல்லாஹ்வின் வழியை விட்டும் (மக்களைத்) தடுக்கின்றனர். "அல்லாஹ்வின் பாதையில் செலவிடாமல் தங்கத்தையும், வெள்ளியையும் சேர்த்து வைப்போருக்கு துன்புறுத்தும் வேதனை உண்டு" என்று எச்சரிப்பீராக!

திருக்குர்ஆன் 9:34

மதகுருமார்கள் மார்க்கத்தில் தடுக்கப்பட்ட பொருட்களை வியாபாரம் செய்து கொண்டிருக்கவில்லை. அவர்கள் எந்த வியாபாரத்தையும் செய்து சம்பாதிக்கவில்லை. எந்த வியாபாரமும் செய்யாமல் மூட நம்பிக்கைகளை மக்கள் மத்தியில் விதைத்து அதன் மூலம் சம்பாதித்து வந்தனர் என்பதைத்தான் அல்லாஹ் இங்கே குறிப்பிடுகிறான்.

மார்க்கத்தை வைத்து வயிறு வளர்ப்பது என்றால் என்ன? கூடாத ஒன்றை, பணம் வாங்கிக் கொண்டு கூடும் என்று பத்வா கொடுப்பது, குடும்பப் பிரச்சனைகளில் ஒரு தரப்புக்கு ஏற்ப பத்வா கொடுத்து பணம் பண்ணுவது, குற்றம் செய்தவனுக்கு என்ன தண்டனை மார்க்கத்தில் உள்ளதோ அதைச் சொல்லாமல் கொடுக்கும் காசுக்கு ஏற்ப மார்க்கத்தை வளைப்பது ஆகிய காரியங்களைத் தான் யூத மதகுருமார்கள் செய்து வந்தனர். அதைத் தான் அல்லாஹ் கண்டிக்கிறான்.

தாயத்து, தட்டு, கத்தம், பாத்திஹா போன்ற மார்க்கத்தில் இல்லாத விஷயங்களை மார்க்கம் போல் சித்தரித்துக் காட்டி இதன் மூலம் மக்களிடம் பணம் பறிப்பதும் இதில் அடங்கும்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மதீனா சென்றபோது அங்குள்ள யூதர்கள் இதுபோல் மார்க்கத்தை வளைத்து ஆதாயம் அடைந்து கொண்டிருந்தார்கள்.

இஸ்லாத்தில் உள்ள குற்றவியல் சட்டங்கள் போலவே தவ்ராத் எனும் யூதர்களின் வேதத்திலும் எழுதப்பட்டு இருந்தது. ஆனால் அந்தச் சட்டங்களை சாமானிய மக்களுக்கு மட்டும் பயன்படுத்துவார்கள். செல்வாக்குள்ளவர்களும் வசதி படைத்தவர்களும் அதே தவறைச் செய்தால் அவர்களுக்கு எளிதான இவர்களாக உருவாக்கிக் கொண்ட தீர்ப்பை வழங்குவார்கள்.

صحيح البخاري 3635 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ، أَخْبَرَنَا مَالِكُ بْنُ أَنَسٍ، عَنْ نَافِعٍ، عَنْ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، أَنَّ اليَهُودَ جَاءُوا إِلَى رَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَذَكَرُوا لَهُ أَنَّ رَجُلًا مِنْهُمْ وَامْرَأَةً زَنَيَا، فَقَالَ لَهُمْ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «مَا تَجِدُونَ فِي التَّوْرَاةِ فِي شَأْنِ الرَّجْمِ». فَقَالُوا: نَفْضَحُهُمْ وَيُجْلَدُونَ، فَقَالَ عَبْدُ اللَّهِ بْنُ سَلاَمٍ: كَذَبْتُمْ إِنَّ فِيهَا الرَّجْمَ فَأَتَوْا بِالتَّوْرَاةِ فَنَشَرُوهَا، فَوَضَعَ أَحَدُهُمْ يَدَهُ عَلَى آيَةِ الرَّجْمِ، فَقَرَأَ مَا قَبْلَهَا وَمَا بَعْدَهَا، فَقَالَ لَهُ عَبْدُ اللَّهِ بْنُ سَلاَمٍ: ارْفَعْ يَدَكَ، فَرَفَعَ يَدَهُ فَإِذَا فِيهَا آيَةُ الرَّجْمِ، فَقَالُوا: صَدَقَ يَا مُحَمَّدُ، فِيهَا آيَةُ الرَّجْمِ، فَأَمَرَ بِهِمَا رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ فَرُجِمَا، قَالَ عَبْدُ اللَّهِ: فَرَأَيْتُ الرَّجُلَ يَجْنَأُ عَلَى المَرْأَةِ يَقِيهَا الحِجَارَةَ "

யூதர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் சென்று அவர்களிடம், தம் சமுதாயத்தாரிடையே ஓர் ஆணும் ஒரு பெண்ணும் விபசாரம் செய்துவிட்டதாகக் கூறினார்கள். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், நீங்கள் கல்லெறி தண்டனை குறித்து தவ்ராத்தில் என்ன காண்கிறீர்கள்? என்று கேட்டார்கள். அதற்கவர்கள், அவர்களை நாம் கேவலப்படுத்திட வேண்டும் என்றும், அவர்கள் கசையடி கொடுக்கப்படுவார்கள் என்றும் அதில் கூறப்பட்டுள்ளது என்று பதிலளித்தார்கள். உடனே (யூதமத அறிஞராயிருந்து இஸ்லாத்தை ஏற்ற) அப்துல்லாஹ் பின் சலாம் (ரலி) அவர்கள் நீங்கள் பொய் சொன்னீர்கள். (விபசாரம் செய்தவர்களை சாகும்வரை) கல்லால் அடிக்க வேண்டுமென்றுதான் அதில் கூறப்பட்டுள்ளது என்று சொன்னார்கள். உடனே, அவர்கள் தவ்ராத்தைக் கொண்டு வந்து அதை விரித்தார்கள். அவர்களில் ஒருவர் விபசாரிகளுக்கு கல்லெறிந்து கொல்லும் தண்டனை தரப்படவேண்டும் என்று கூறும் வசனத்தின் மீது தனது கையை வைத்து மறைத்துக் கொண்டு, அதற்கு முன்பும் பின்பும் உள்ள வசனத்தை ஓதினார். அப்போது அப்துல்லாஹ் பின் சலாம் (ரலி) அவர்கள், உன் கையை எடு என்று சொல்ல, அவர் தனது கையை எடுத்தார். அப்போது அங்கே (விபசாரக் குற்றத்திற்கு) கல்லெறி தண்டனை தரும்படி கூறும் வசனம் இருந்தது. உடனே யூதர்கள், அப்துல்லாஹ் பின் சலாம் உண்மை சொன்னார். முஹம்மதே! தவ்ராத்தில் கல்லெறி தண்டனையைக் கூறும் வசனம் இருக்கத்தான் செய்கிறது என்று சொன்னார்கள். உடனே, அவ்விரண்டு பேரையும் சாகும்வரை கல்லால் அடிக்கும்படி

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உத்திரவிட்டார்கள். அவ்வாறே அவ்விருவருக்கும் கல்லெறி தண்டனை வழங்கப்பட்டது. அப்போது அந்த ஆண், அப்பெண்ணைக் கல்லடியிலிருந்து பாதுகாப்பதற்காக தன் உடலை (அவளுக்குக் கேடயம் போலாக்கி) அவள் மீது கவிழ்ந்து (மறைத்துக்) கொள்வதை நான் பார்த்தேன்.

நூல் : புகாரி 3635

விவாகரத்து, குலா போன்ற குடும்பப் பிரச்சனைகளில் காசு வாங்கிக் கொண்டு அதற்கேற்ப தீர்ப்புகள் கூறும் மார்க்க அறிஞர்களும் ஷரீஅத் கோர்ட்டுகளும் இருக்கின்றனர். இவர்களின் இந்தக் கேடுகெட்ட செயலும் இந்த எச்சரிக்கையில் அடங்கும்.

அல்லாஹ் அருளிய வேதத்தை மறைத்து அதை அற்ப விலைக்கு விற்போர்,445 தமது வயிறுகளில் நெருப்பைத் தவிர (வேறு எதையும்) சாப்பிடுவதில்லை. கியாமத் நாளில் அல்லாஹ் அவர்களுடன் பேச மாட்டான். அவர்களைத் தூய்மைப்படுத்தவும் மாட்டான். அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையும் உண்டு.

திருக்குர்ஆன் 2:174

அல்லாஹ்விடம் செய்த உறுதி மொழியையும், தமது சத்தியங்களையும் அற்பமான விலைக்கு விற்றோருக்கு மறுமையில் எந்த நற்பேறும் இல்லை. கியாமத் நாளில்1 அவர்களுடன் அல்லாஹ் பேசவும் மாட்டான். அவர்களைப் பார்க்கவும் மாட்டான். அவர்களைத் தூய்மைப் படுத்தவும் மாட்டான். அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனை உண்டு.

திருக்குர்ஆன் 3:77

மார்க்கத்தை மறைத்து எதைச் சம்பாதிக்கின்றார்களோ அவர்கள் சோறு உண்ணவில்லை. நரக நெருப்பைத்தான் உண்கின்றார்கள். அல்லாஹ் மறுமையில் இந்த தொழிலைச் செய்பவர்களுடன் பேசமாட்டான். அவர்களைப் பரிசுத்தப்படுத்த மாட்டான். அவர்களுக்குப் பயங்கரமான வேதனை இருக்கின்றது என்று அல்லாஹ் கடுமையாக எச்சரிப்பதைப் பார்த்து இவர்கள் தம்மைத் திருத்திக் கொள்ள வேண்டும்.

## மார்க்கப் பணிக்கு கூலி வாங்கலாமா?

வணக்கம் என்பது அல்லாஹ்வின் திருப்தியை மட்டுமே நோக்கமாகக் கொண்டு செய்யப்பட வேண்டும். அதற்காக மனிதர்களிடம் கூலி கேட்கக் கூடாது. இதில் இரண்டாவது கருத்துக்கு இடம் இல்லை.

யார் உங்களிடம் கூலியைக் கேட்கவில்லையோ அவர்களைப் பின்பற்றுங்கள் அவர்கள்தான் நேர்வழியில் இருப்பவர்கள்.

திருக்குர்ஆன் 36:21

என்னுடைய கூட்டமே நான் உங்களிடம் கூலி கேட்கவில்லை என்னுடைய கூலி என்னைப் படைத்த அல்லாஹ்விடமே தவிர இல்லை நீங்கள் இதை சிந்திக்க மாட்டீர்களா?

திருக்குர்ஆன்11 : 51)

ஆனால் ஒருவர் மார்க்கப் பணிக்காகத் தனது முழு நேரத்தையும் செலவிடுகிறார். அதன் காரணமாக அவரால் தொழில் செய்யவோ பொருளீட்டவோ இயலவில்லை. அத்துடன் அவர் வசதி படைத்தவராகவும் இருக்கவில்லை. இந்த நிலையில் அவரது வணக்கத்துக்குக் கூலியாக இல்லாமல் அவரது தேவையைக் கருத்தில் கொண்டு அவருக்கு உதவித் தொகை வழங்கலாம். இத்தகையோருக்கு வழங்குவதற்குத் தான் முதலிடம் அளிக்க வேண்டும்.

அப்படி வழங்கப்படும் உதவித் தொகை அவர் செய்யும் வணக்கத்துக்குக் கூலியாகாது.

மார்க்கப் பணிகளுக்காகத் தங்களை அர்ப்பணித்துக் கொண்ட ஏழைகளுக்கு உதவிகள் வழங்குவதற்கு மார்க்கத்தில் அனுமதி உள்ளது மட்டுமல்லாமல் வலியுறுத்தப்பட்டும் உள்ளது.

(பொருள் திரட்டுவதற்காக) பூமியில் பயணம் மேற்கொள்ள இயலாதவாறு அல்லாஹ்வின் பாதையில் தம்மை அர்ப்பணித்துக் கொண்ட ஏழைகளுக்கு

(தர்மங்கள்) உரியது. (அவர்களைப் பற்றி) அறியாதவர், (அவர்களின்) தன்மான உணர்வைக் கண்டு அவர்களைச் செல்வந்தர்கள் என்று எண்ணிக் கொள்வார். அவர்களின் அடையாளத்தை வைத்து அவர்களை அறிந்து கொள்வீர்! மக்களிடம் கெஞ்சிக் கேட்க மாட்டார்கள். நல்லவற்றில் நீங்கள் எதைச் செலவிட்டாலும் அல்லாஹ் அதை அறிந்தவன்.

திருக்குர்ஆன் 2:273

பொதுவாக ஏழ்மை நிலையில் உள்ளவர்களுக்குத் தர்மம் செய்யலாம் என்பதை அனைவரும் அறிவர். ஒருவர் ஏழையாக இருப்பதுடன் மார்க்கப் பணிக்காகத் தன்னை அர்ப்பணித்துள்ளார். மார்க்கப் பணியில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டது தான் அவர் ஏழையாக இருப்பதற்கே காரணமாகவும் உள்ளது. இதன் காரணமாக அவரால் பொருளீட்டவும் இயலவில்லை.

இத்தகையவர் ஏழையாக இருக்கிறார் என்பதற்காக மட்டுமின்றி மார்க்கப் பணியிலும் ஈடுபடுகிறார் என்பதையும் கவனத்தில் கொண்டு தர்மங்கள் வழங்குவது தவறில்லை என்று இவ்வசனத்திலிருந்து தெரிகிறது.

ஒருவர் பொருளீட்டுவதற்கான முயற்சி எதனையும் மேற்கொள்ளாமல் முழுக்க முழுக்க மார்க்கப் பணிக்காக அர்ப்பணித்துக் கொள்வதைக் குறை கூறக் கூடாது; மாறாக இது பாராட்டப்பட வேண்டிய சேவை என்பதை இவ்வசனத்திலிருந்து அறியலாம்.

அதே சமயத்தில் இவ்வாறு மார்க்கப் பணிகளில் தம்மை அர்ப்பணித்துக் கொள்வோர் வேறு வருமானத்திற்கு வழியில்லை என்பதால் மற்றவர்களிடம் யாசிப்பதோ, சுய மரியாதையை இழப்பதோ கூடாது.

எந்த நிலையிலும் எவரிடமும் கேட்பதில்லை என்பதில் உறுதியாக அவர்கள் நிற்க வேண்டும். அவ்வாறு சுயமரியாதையைப் பேணுபவர்களுக்குத் தான் மார்க்கப் பணியைக் காரணம் காட்டி உதவியும் செய்ய வேண்டும். அவர்கள் யாசிக்க ஆரம்பித்து விட்டால் இந்தத் தகுதியை இழந்து விடுகிறார்கள் என்பதையும் இவ்வசனத்திலிருந்து அறியலாம்.

யாசிப்போருக்கும், ஏழைகளுக்கும், அதை வசூலிப்போருக்கும், உள்ளங்கள் ஈர்க்கப்பட வேண்டியவர்களுக்கும், அடிமை(களை விடுதலை செய்வதற்)கும், கடன்பட்டோருக்கும், அல்லாஹ்வின் பாதையிலும், நாடோடிகளுக்கும் தர்மங்கள் உரியனவாகும். இது அல்லாஹ் வின் கடமை. அல்லாஹ் அறிந்தவன்; ஞானமிக்கவன்

திருக்குர்ஆன் 9 : 60

எட்டுவகையினருக்கு ஜகாத் கொடுக்குமாறு அல்லாஹ் கூறுகிறான்.

இவர்களில் ஒரு வகையினர் ஜகாத்தை வசூலிப்பவர்கள் என்று அல்லாஹ் கூறுகிறான். ஜகாத் என்பது ஒரு வணக்கமாகும். அதை வசூலிப்பதும் ஒரு வணக்கம்தான். ஆனாலும் வசூலிப்பதற்காக தன்னை அர்ப்பணிப்பவர் தனது நேரத்தைச் செலவிடுகிறார் என்பதால் அவருக்கு ஜகாத் நிதியில் இருந்து உதவலாம் என்று அல்லாஹ் அனுமதிக்கிறான்

அது போல்தான் மார்க்கத்துக்காக தம்மை அர்ப்பணித்துக் கொண்டவர்கள் பிறரிடம் கையேந்தாதவாறு அவர்களின் தேவைகள் நிறைவேறுமளவுக்கு உதவித் தொகை வழங்குவது சமுதாயத்தின் கடமையாகும். அப்போதுதான் அவர்கள் உண்மையான மார்க்கத்தைச் சொல்வார்கள் என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும்

மக்களுக்காக ஒருவர் தனது முழு நேரத்தையும் செலவிடும்போது பொதுநிதியில் இருந்து அவரது தேவைக்கு பெற்றுக் கொள்ளலாம் என்பதால்தான் அபூபக்ர் ரலி அவர்கள் பொதுநிதியில் இருந்து குடும்பத் தேவைக்கு எடுத்துக் கொள்வேன் என்று வெளிப்படையாக அறிவித்தார்கள்.

صحيح البخاري 2070 - حَدَّثَنَا إِسْمَاعِيلُ بْنُ عَبْدِ اللَّهِ، قَالَ: حَدَّثَنِي ابْنُ وَهْبٍ، عَنْ يُونُسَ، عَنِ ابْنِ شِهَابٍ، قَالَ: حَدَّثَنِي عُرْوَةُ بْنُ الزُّبَيْرِ، أَنَّ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا، قَالَتْ: لَمَّا اسْتُخْلِفَ أَبُو بَكْرٍ الصِّدِّيقُ، قَالَ: «لَقَدْ عَلِمَ قَوْمِي أَنَّ حِرْفَتِي لَمْ تَكُنْ تَعْجِزُ عَنْ مَئُونَةِ أَهْلِي، وَشُغِلْتُ بِأَمْرِ المُسْلِمِينَ، فَسَيَأْكُلُ آلُ أَبِي بَكْرٍ مِنْ هَذَا المَالِ، وَيَحْتَرِفُ لِلْمُسْلِمِينَ فِيهِ»

அபூபக்ர் (ரலி) கலீஃபாவாக ஆனபோது எனது தொழில் என் குடும்பத்தாரின் செலவுக்குப் போதுமானதாக இருந்தது என்பதை என் சமுதாயத்தினர் அறிவர்; இப்போது நான் முஸ்லிம்களின் (தலைமைப்) பொறுப்பில்

ஈடுபடுத்தப்பட்டுள்ளேன்; இனி அபூபக்ரின் குடும்பத்தினர் இந்தப் பொதுநிதியிலிருந்து உண்பார்கள். இதில் முஸ்லிம்களுக்காக நான் உழைப்பேன் என்று கூறினார்கள்.

நூல் : புகாரி 2070

பொதுவாகவே மார்க்கப் பணிகளில் ஈடுபடுவோருக்கு எந்த உதவியும் செய்யக் கூடாது, அவர்கள் தரித்திரர்களாகவே எப்போதும் இருக்க வேண்டும் என்ற கருத்து பரவலாக உள்ளது.

மவ்லிது, ஃபாத்திஹா போன்ற பித்அத்துக்கள் உருவானதற்கும், மார்க்கத்தின் பெயரால் பொருளீட்டும் நிலை தோன்றியதற்கும் சமுதாயத்தில் நிலவுகின்ற இந்த மன நிலையும் ஒரு காரணம் என்றால் மிகையல்ல!

மார்க்கத்தில் தடுக்கப்பட்ட எந்த வணக்க வழிபாடுகளில் மார்க்கத்தை நாம் எப்படி பேணி நடக்கிறோமோ அது போல் பொருளாதாரத்தை திரட்டுவதிலும் பேணுதலாக நாம் நடந்தால் தான் மறுமையில் நாம் வெற்றி பெற முடியும். இதை உணர்ந்து நடக்கும் நன்மக்களாக அல்லாஹ் நம்மை ஆக்கி அருள்புரிவானாக.